தமிழ் வெளியீட்டுக் கழக வரிசை எண் — 187

# அரசியலமைப்புச் சட்ட ஆய்வுக்கு ஓர் அறிமுகம் - II

(Introduction to the Study of the Law of the Constitution—II)

ஆசிரியர்
ஏ. வி. டைசி

தமிழாக்கம்
பா. சூர்யநாராயணன், எம்.ஏ., எம்.ஏ., எம்.லிட்.,
அரசியல் - வரலாற்றுத்துறைப் பேராசிரியர்,
அழகப்பா கல்லூரி, காரைக்குடி.

கி. ர. அநுமந்தன், எம்.ஏ., எம்.எஸ். (விஸ்கான்ஸின்),
பேராசிரியர், வரலாற்றுத்துறை,
மாநிலக் கல்லூரி, சென்னை.




தமிழ் வெளியீட்டுக் கழகம்
தமிழக அரசு

First Edition—December, 1968

B.T.P. No. 187



**Introduction to the Study of the Law of the Constitutions—II**

A. V. DICEY

*Translation*

P. SURIANARAYANAN

K. R. HANUMANTHAN

**Price Rs. 6-00**

This Tamil edition of the work 'Introduction to the Study of the Law of the Constitution', by A. V. Dicey is published by arrangement with Messrs Macmillan and Company, Ltd. London.

Printed By

**WELDUN PRESS**

146, Thiruvotriyur High Road,

Washermanpet, Madras-21.

# அணிந்துரை

(திரு. இரா. நெடுஞ்செழியன், தமிழகக் கல்வி-தொழில் அமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கி ஏழு ஆண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி.ஏ., வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்று வருகின்றனர். தொடக்கத்தில் இருந்த இடர்ப்பாடுகள் மெல்லமெல்ல மறைந்துவருகின்றன. நாடு முழுதும் பரந்துள்ள மாணவர்களின் ஆர்வம், 'தமிழிலேயே கற்பிப்போம்' என முன்வந்துள்ள கல்வி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டுசெய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மனநிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்றுவருகிறது.

பல துறைகளில் பணிபுரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், புவியியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், தத்துவம் ஆகிய பல துறைகளில் தனி நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இருவகையிலும் தமிழ் வெளியீட்டுக் கழகம் நூல்களை வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றான 'அரசியலமைப்புச் சட்ட ஆய்வுக்கு ஓர் அறிமுகம்—II' என்ற இந் நூல் தமிழ் வெளியீட்டுக் கழகத்தின் 187ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இதுவரை 222 நூல்கள் வெளிவந்துள்ளன.

கணக்கிலடங்காத் தடைகளை எல்லாம் அகற்றித் தமிழன்னை கல்லூரிக் கலை மண்டபத்தில் கொலு வீற்றிருக்கிறாள். எனவே, இவ்வன்னையை வாழ்த்துவோமாக! உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை; ஆதலின், உழைத்து வெற்றி காண்போம். தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெற வேண்டும்; அதுவே, தமிழன்னையின் குறிக்கோளுமாகும். சென்னைப் பல்கலைக்கழகத்தின் பலவகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரித்தாகுக.

இரா. நெடுஞ்செழியன்

# பொருளடக்கம்

பாகம் I

# பாராளுமன்றத்தின் இறைமை

## 1. பாராளுமன்ற இறைமையின் இயல்பு (The Nature of Parliamentary Sovereignty)

நமது எல்லா அரசியல் நிறுவனங்களையும் சட்டத்தின் கோணத்திலிருந்து பார்க்கும்போது, அவற்றின் தலையாய இயல்பாக நமக்குக் காணப்படுவது என்னவென்றால், அது பாராளுமன்றத்தின் இறைமை அல்லது ஆதிபத்தியம் என்பதே ஆகும்.

### இந்த இயலின் நோக்கம்

இந்த இயலில், முதற்கண் பாராளுமன்ற இறைமையின் இயல்பை விளக்கி, அது இங்கிலாந்தின் சட்டத்தினால் முழுமையாக ஒப்புக் கொள்ளப்பட்டுச் சட்டபூர்வமாக இருந்துவருகிறதென்பதை எடுத்துக் காட்டுவதும், அடுத்து, பாராளுமன்றத்தின் இறைமைக்கு வரம்புகளாகக் கூறப்படுபவையனைத்தும், உண்மையில் வரம்புகள் அல்ல என்று காட்டுவதும், இறுதியாக, 'பிரிட்டிஷ் அரசியலமைப்பில் பாராளுமன்றமே முழு இறைமையுடைய சட்டமன்றம்' என்ற கோட்பாட்டை ஏற்றுக்கொள்ளுவதில் தடையாக எழுப்பப்படும் கருத்துகளுக்கு விடை கூறுவதும் எனது நோக்கம் ஆகும்.

### பாராளுமன்ற இறைமையின் இயல்பு

**A. பாராளுமன்ற இறைமையின் இயல்பு:** சாதாரணப் பேச்சு வழக்கில் பாராளுமன்றம் என்ற சொல் வேறு பொருளில் வழங்கப்பட்டாலும், அதற்குச் சட்ட அறிஞர் கூற்றுப்படி, 'அரசியும், பிரபுக்கள் சபையும், பொதுமக்கள் சபையும் சேர்ந்த ஒன்று' என்பதே பொருள் ஆகும். இம் மூன்று உறுப்புகளும் இணைந்து செயல்படுவதையே பொருத்தமாகப் 'பாராளுமன்றத்தில் அரசி' (Queen in Parliament) என்றும் இவையே பாராளுமன்றமாக ஆகின்றன என்றும் கூறலாம்.

இவ்வாறு இலக்கணம் வகுக்கப்பட்ட பாராளுமன்றமானது, ஆங்கில அரசியலமைப்பிலே எந்தச் சட்டத்தையும் செய்வதற்கோ அல்லது நீக்குவதற்கோ உரிமை உடையது; மேலும், பாராளுமன்றத்தால் செய்யப்பட்ட சட்டம் ஏதனையும் மீறுவதற்கோ, புறக்கணிப்பதற்கோ, எந்தத் தனி ஆளுக்கும் சரி பலர் சேர்ந்த குழுவுக்கும் சரி, இங்கிலாந்து நாட்டின் சட்டப்படி உரிமை கிடையாது; பாராளுமன்றத்தின் இறைமை என்ற கொள்கைக்கு இதுவே பொருள்; இதையன்றி வேறு பொருள் இல்லை.[1]

இங்கு நாம் எடுத்துக்கொண்ட நோக்கத்திற்கு இணங்க, 'சட்டம்' என்பதற்கு, 'நீதிமன்றங்களால் செயல்படுத்தப்படும் எந்த விதியும் சட்டம் ஆகும்' என்று இலக்கணம் கூறலாம். எனவே, பாராளுமன்ற இறைமை என்ற கோட்பாட்டிற்கு, உடன்பாட்டு முறையை ஒட்டிக் (positive side) கீழ்வருமாறு விளக்கம் கூறலாம்: 'ஏதேனும் ஒரு புதிய சட்டத்தைச் செய்யவோ, அல்லது நடைமுறையில் இருக்கும் ஒரு சட்டத்தை மாற்றவோ அல்லது நீக்கவோ கூடிய பாராளுமன்றச் சட்டம் எதுவும், அல்லது பாராளுமன்றச் சட்டத்தின் எப் பகுதியும் நீதிமன்றங்களால் ஏற்றுக்கொள்ளப்படும்'. இதே கொள்கையை எதிர்மறை வகையாக (negative side) நோக்கிப் பின்வருமாறு விளக்கலாம்; 'எந்தப் பாராளுமன்றச் சட்டத்தையும் மீறக்கூடிய, அல்லது அதைத் தாழ்த்தி இழிவாக்கக்கூடிய விதிகளைச் செய்வதற்கு எந்தத் தனி மனிதனும், அல்லது பலர் சேர்ந்த குழுவும் ஆங்கில அரசியலமைப்பின்படி கிடையாது; பாராளுமன்றச் சட்டத்துக்கு முரணான வகையில், நீதிமன்றங்களால் செயல்படுத்தப் படக்கூடிய விதிகளைச் செய்வதற்கு எவரும் ஆங்கில அரசியலமைப்பில் கிடையாது.' இந்த விதிக்கு 'விலக்காகச்' சில கருத்துகள் கூறப் படலாம். எடுத்துக்காட்டாகப் பாராளுமன்றச் சட்டங்களை நீக்கி விடுதற்குரிய விதிகளை உயர்நீதிமன்ற நீதிபதிகள் செய்வதைச் சுட்டிக் காட்டலாம்; ஆயினும் நேரடியாகவும், மறைமுகமாகவும், கீழதிகாரிகள் சட்டம் செய்தலை (subordinate legislation) பாராளுமன்றம் ஒப்புக் கொண்டு, அவ்வதிகாரத்தை அளிக்கிறதென்பதை நாம் கவனிக்கும் போது, அவ்வதிகாரத்தில் இவ் 'விதிவிலக்கும்' அடங்கிவிடுகிறது.[2] நீதிபதிகள் சட்டம் இயற்றுவதைப்பற்றிய விவரங்களை இங்கு நாம்

[1] இந்த இயல்பு இந்த நாட்டிற்கு மட்டும் உரியது அன்று. ஃபிரான்சிலும் பெல்ஜியத்திலும், சட்டசபைகளின் அதிகாரங்களெல்லாம் அரசியலமைப்புகளால் வரையறுக்கப்பட்டுள்ளபோதிலும், நடைமுறையில் அந்நாடுகளில் நீதிமன்றங்கள், சட்டமன்றங்களால் செய்யப்படும் சட்டங்கள் அரசியலமைப்பின்படி ஏற்றுக்கொள்ளப்படத் தக்கவையா என ஆராய்ச்சி செய்வதில்லை.—பதிப்பாசிரியர்.

[2] நீதிமன்றங்களின் விதிகளெல்லாம் நீதிபதிகள், பாரிஸ்டர்கள், சட்ட வல்லுநர்கள் ஆகியோர் அடங்கிய சட்டக்குழுவினால் ஆக்கப்படுகின்றன. —பதிப்பாசிரியர்.

குறிப்பிட வேண்டுவதில்லை; பாராளுமன்ற இறைமையை ஒப்புக் கொள்ளுவதில், ஒருசில ஆராய்ச்சியாளருக்கு மிகவும் தெளிவாகத் தோன்றக்கூடிய ஓர் தடையை நீக்குவதற்காகவே இச்செய்தி இங்குக் குறிப்பிடப்பட்டது. இந்த விரிவுரைகளின் போக்கிலே பாராளுமன்ற இறைமையைப்பற்றி மேலும் கூறப்படவேண்டிய செய்திகள் நிறைய இருக்கின்றன. எனினும், இப்போதைக்கு மேலே கூறப்பட்ட சுருக்கமான விளக்கம் போதுமானது. பாராளுமன்ற இறைமை என்ற கோட்பாடானது உடன்பாட்டு வகையாகவும், எதிர்மறை வகையாக வும் இங்கிலாந்தின் சட்டத்தினால் முழுமையும் ஒப்புக்கொள்ளப்பட்ட ஒன்று என்பதைத் தெளிவுபடுத்துவதுதான் இங்கு முக்கியமானது.

1. பாராளுமன்றத்தின் வரையறையற்ற, சட்டமியற்றும் அதிகாரம் (Unlimited legislative authority of Parliament): இந்தக் கருத்தைப்பற்றி, எக்காலத்தவராலும் மேற்கோளாகக் காட்டப்படுகிற கீழ்க்கண்ட பகுதி, பிளாக்ஸ்ட்டன் (Blackstone) என்பவர் எழுதிய 'விளக்கங்கள்' (Commentaries) என்ற நூலிலிருந்து எடுக்கப் பட்டதாகும்.

"சர் எட்வர்ட் கோக் என்பவர், பாராளுமன்றத்தின் அதிகாரமும், நீதி அதிகாரமும் மற்ற எல்லா அரசியல் நிறுவனங்களினுடையதையும் விட உயர்ந்ததாகவும் வரம்பற்றும் இருப்பதால், எவ்வகையான காரணங்களினலுமோ, அல்லது ஆட்களினுலுமோ, அதனுடைய அதிகா ரங்களை எவ்வித வரம்புகளுக்குள்ளும் அடைக்கமுடியாது என்று கூறுகிறர். சமயத்துறை, உலகியல், சிவில்துறை, இராணுவத்துறை, கடல் போக்குவரவு, குற்றவழக்குத் துறை ஆகிய எல்லாத் துறை களையும் பற்றிய சட்டங்களை யெல்லாம் செய்யவும், உறுதி செய்யவும், விவரிக்கவும், தடைசெய்யவும், நீக்கிவிடவும், மீண்டும் நடைமுறைக்குக் கொண்டுவரவும், விளக்கமாகக் கூறவும் கூடிய உயர்தரமான, வரம் பற்ற அதிகாரம் அதற்கு இருக்கிறது. மற்ற அரசாங்க முறைகளி லெல்லாம் இத்தகைய உயர்தர வரம்பற்ற அதிகாரம் வெவ்வேறு நிறுவனங்களில் காணப்படவும், இந்த அரசுகளின் அரசியலமைப்பு களிலோ, அது பாராளுமன்றத்திலேயே ஒப்படைக்கப்பட்டிருக்கிறது. சாதாரணச் சட்ட முறைகளுக்கு அடங்காமல், அப்பாற்பட்டதான எல்லாவகையான குற்றங்களும், குறைகளும், செயல்களும், காப்பு முறைகளும் மிக உயர்தரமான நீதிமன்றமாகிய பாராளுமன்றத்தி னுலேயே தீர்க்கப்படுகின்றன. எட்டாம் ஹென்றியின் ஆட்சியிலும், மூன்றும் வில்லியம் அரசரின் ஆட்சியிலும் செய்ததுபோல், பாராளுமன்ற மானது, அரசுரிமையை ஏற்கும் முறையை ஒழுங்குபடுத்தவும், புதிய முறையில் அமைக்கவும் முடியும். எட்டாம் ஹென்றி, அவருடைய மூன்று பிள்ளைகள் ஆகியோரின் ஆட்சிக் காலங்களில் செய்ததுபோல், நாட்டில் வெகுகாலமாக இருந்துவந்த சமயநெறியை மாற்றி அமைப்

பதற்குப் பாராளுமன்றத்தால் முடியும். அது நாட்டினுடைய அரசியமைப்பையும், பாராளுமன்றங்களின் அமைப்பையுமே மாற்றவும், புதிதாக அமைக்கவும் ஆற்றல் பெற்றிருக்கிறது ; எடுத்துக்காட்டாக அது இணைப்புச் சட்டத்தையும் (Act of the Union), மூன்றாண்டுத் தேர்தல், ஏழாண்டுத் தேர்தல் முதலியவை நடைபெறுவதற்காகப் பல சட்டங்களையும் செய்தது. சுருங்கச் சொல்லுமிடத்து, இயல்பாகச் செய்யப்படுவதற்குரிய எதனையும் அது செய்யக்கூடிய ஆற்றல் உடையது. ஆகையால்தான், அதனுடைய அதிகாரத்தைப் 'பாராளுமன்றத்தின் அனைத்து வல்லமை' (omnipotence of Parliament) என்ற ஓர் உருவகமாகத் துணிந்து சிலர் கூறுகின்றனர். பாராளுமன்றத்தால் செய்யப்படும் எதனையும் இவ்வுலகில் எந்த அரசாங்கமும் அழிக்க முடியாது என்பதைக் காணும்போது, இது உண்மைதான். எனவே, அறிவுக் கூர்மையிலும், மன உறுதியிலும், அறிவிலும் சிறந்தவர்களையே இந்த முக்கியமான பொறுப்புள்ள நிலையத்துக்கு உறுப்பினர்களாகத் தேர்ந்தெடுத்து அனுப்புவது, இந்நாட்டினரின் உரிமைகளுக்கு மிகவும் உகந்ததாக இருக்கிறது ; ஏனென்றால், இந்நாட்டின் உயர்தரக் கருவூலப் பிரபுவான பர்லே (Burleigh) முன்பொருகால் சுருங்கக் கூறியதுபோல், 'இங்கிலாந்து தனது பாராளுமன்றத்தினாலன்றி, வேறெதனாலும் ஒருபோதும் அழிக்கப்பட முடியாதது ;' இந்த நாட்டில் இதற்கும் மேலான நீதி அதிகாரம் எவரிடத்தும் இல்லை என்ற நிலையில், இதுவே ஓர் உயர்தரமான பெரிய நீதிமன்றமாக இருக்கிறது ; ஆகையால், இந்த நாட்டில் ஏதாவதொரு வழியில் கொடுங்கோலாட்சி ஏற்பட்டுவிடுமானால், அதனின்றும் தங்களைக் காத்துக்கொள்ளுவதற்கு இந்நாட்டின் குடிமக்களுக்கு எந்த வழியும் இல்லாமற்போய்விடுகிறது என சர் மாத்யூ ஹேல் என்பவர் கூறுகிறார். இந்நிலையே எதிர்காலத்தில் ஏற்பட்டுவிடுமென்பதாக மான்ட்டஸ்க்யூ தலைவர் கூறுகிறார் ; அவர் கூற்றை நான் விரைவாக ஏற்றுக்கொள்ளுகிறேன் ; எவ்வாறு பண்டைய ரோம், ஸ்பார்ட்டா, கார்த்தேஜ் முதலிய அரசுகள் தங்களுடைய உரிமைகளை இழந்து மறைந்துபோயினவோ, அதேபோல இங்கிலாந்தின் அரசியலமைப்பும் உரிமை இழந்து மறைந்துபோகுமென்றும், இங்கிலாந்தின் சட்டமன்றமானது, நிர்வாகத் துறையைவிட ஊழல்மிக்கதாக மாறிவிடுமானால், அதன் அரசியலமைப்பும் நாளடைவட்டத்தில் உரிமை இழந்து மறைந்துவிடும் என்றும் அவர் கூறுகிறார்.[1]

இக்காலத்தில் ஒரு பழமொழி வடிவத்தில் வரக்கூடிய அளவுக்கு, பாராளுமன்றத்தின் இறைமை அதிகாரத்தை விசித்திரமான ஒரு முறையில் பின்வருமாறு சுருக்கி டி லோல்மே (De Lolme) என்பவர் கூறுகிறார் ;

[1] 'A Discourse on the Commonwealth of England', by Sir Thomas Smith.

'ஆங்கில வழக்கறிஞர்களிடையே காணப்படுகிற ஓர் அடிப்படையான கருத்தின்படி, ஆங்கிலப் பாராளுமன்றத்தினால், ஒரு பெண்ணை ஆணாகவும், ஓர் ஆணைப் பெண்ணாகவும் மாற்றமுடியாது என்பதைத் தவிர மற்றெல்லாவற்றையும் செய்ய இயலும்.'

**பாராளுமன்ற இறைமைக்கு வரலாற்றுச் சான்றுகள்: செட்டில் மென்ட் சட்டம்**

பாராளுமன்றத்திற்கு இருக்கிற இத்தகைய உயர்தரமான சட்டமியற்றும் அதிகாரத்தை, வரலாற்றிலே பல்வேறு நிகழ்ச்சிகளிலும் நாம் காணலாம்,

ஆங்கிலநாட்டின் முடியானது முதலில் பல்வேறு வகையான தாயமுறையின் உரிமைகளை உடையோருக்குக் கிடைத்துவந்தது; கடைசியில் அவ்வுரிமையானது செட்டில்மென்ட் சட்டத்தின் பிரிவுகளின்படி, முடிவாக வரையறை செய்யப்படவும், அதற்குப்பின் வந்த ஒவ்வோர் அரசரும் பாராளுமன்றச் சட்டத்தின் மூலமாகவே அரியணை ஏறுவதற்கு உரிமை பெற்றவராயினர்; எனவே, ஆட்சி செய்வதற்கு அரசருக்கு உள்ள உரிமையானது, பாராளுமன்றச் சட்டத்தையே சார்ந்தும், அதனால் தோன்றியதாகவும் இருந்துவரலாயிற்று. இக் காலத்தில் எவராலும் ஒப்புக்கொள்ளப்படவோ அல்லது மறுக்கப்படவோ இல்லாத நிலையில், நடைமுறையில் இருந்துவரும் விதி ஆகும் இது; ஆனால், பாராளுமன்றச் சட்டங்களடங்கியுள்ள புத்தகத்தை நாம் படித்தால், இருநூறு ஆண்டுகட்கு முன்னர், பாராளுமன்றமானது சட்டப்படி தனக்கு உயர்தர அதிகாரம் உரிமையாயுள்ளது என்ற கொள்கையை மிகவும் வலியுறுத்திக் கூறவேண்டிய நிலையிலிருந்தது என்பதைக் காண்கிறோம். ஆன் அரசியின் ஆட்சியின் ஆறாவது சட்டத்தில், முதல் பிரிவில் பல்வேறு செயல்களைப் பற்றிக் குறிப்பிடுகையில் கீழ்க்கண்டவாறு கூறப்பட்டுள்ளது :

'எந்தத் தனி ஆளாவது, அல்லது பலர் சேர்ந்தாவது, தவறான நோக்கத்துடனும், பிறருடைய ஆலோசனையின்பேரிலும், தானாகவோ, எழுத்தின் மூலமாகவோ, அச்சிடப்பட்ட வெளியீடுகளின் மூலமாகவோ இப்பொழுது நமக்கு அரசியாக இருந்துவருகிற பெண், சட்டப்படியாக நாட்டின் அரசியாக இருத்தற்கு உரியவள் அல்லள் என்பதாகவோ, அல்லது இப்பொழுது தன்னைத்தானே கிரேட்பிரிட்டனின் அரசன் என்றும், இங்கிலாந்தின் மூன்றாம் ஜேம்ஸ் அரசனென்றும் அல்லது ஸ்காட்லாந்தின் எட்டாம் ஜேம்ஸ் அரசனென்றும் கூறிக்கொள்ளுகிற பொய்யனான வேல்ஸ் இளவரசனுக்கு, இந்நாட்டின் முடிக்கு உரிமை இருக்கிறது என்பதாகவோ எடுத்துக்காட்டி உறுதிகூறினாலும் அவ்வாறு சொல்பவரெல்லாம் பெரும் துரோகக் குற்றம் செய்தவராவார்; அதற்

காக அவர்கள் சட்டப்படி குற்றவாளிகளென்று தீர்மானிக்கப்பட்டு, பெரும் துரோகக் குற்றத்தைப்போல், மரணதண்டனை, பறிமுதல், அபராதம் முதலியவற்றை ஏற்கவேண்டும்:

'புகழ்மிக்க அரசர் வில்லியம், அரசி மேரி ஆகியோரின் ஆட்சியின் முதலாம் ஆண்டில் செய்யப்பட்டதும், குடிமக்களின் உரிமைகளை வெளியிட்டு, நாட்டின் முடியை ஏற்கும் மரபுவழி உரிமையை வரையறை செய்வதுமான பாராளுமன்றச் சட்டமொன்று இருக்கிறது. நாட்டின் முடியின் அதிகாரங்களை வரையறை செய்தும், குடிமக்களின் உரிமைகளுக்கு மேலும் பாதுகாப்பு அளித்தும், மேற்படி காலஞ்சென்ற மூன்றும் வில்லியம் அரசருடைய ஆட்சியின் பன்னிரண்டாம் ஆண்டில் வேறொரு சட்டம் செய்யப்பட்டது; இங்கிலாந்தையும் ஸ்காட்லாந்தையும் இணைப்பதற்காக அவ்விரு நாடுகளிலும் அண்மையில் சட்டங்கள் செய்யப்பட்டன; இம் மூன்று சட்டங்களையும் ஒட்டிய வகையாக அல்லாமல், வேறு வகையாக எந்த ஆளுக்கும் அல்லது ஆட்களுக்கும் அந்நாட்டின் முடியை ஏற்க உரிமை உண்டு என, எந்த ஓர் ஆளும் அல்லது பலரும் எடுத்துக் காட்டி உறுதி கூறினாலும், அவ்வாறு சொல்பவரெல்லாம் பெரும் துரோகக் குற்றம் செய்தவராவார்; அதற்காக அவர் சட்டப்படி குற்றவாளிகளெனத் தீர்மானிக்கப்பட்டு, பெரும் துரோகக் குற்றத்துக்கு உள்ளதைப்போல மரணதண்டனை, பறிமுதல், அபராதம் முதலியவைகளை ஏற்கவேண்டியவராவார்.'

'இந்நாட்டின் முடியின் அதிகாரத்தை வரையறை செய்தும், கட்டுப்படுத்தியும் அதனை ஏற்கும் மரபுவழி உரிமையைக் கட்டுப்படுத்தியும், இவ்வகையில் செல்லுபடியாகத்தக்க சட்டங்களைச் செய்வதற்குப் பாராளுமன்றத்தினுடைய அதிகாரத்தோடு, இந்நாட்டின் அரசர்களுக்கோ அல்லது அரசிகளுக்கோ இயலாது என்று ஒருவரோ, பலரோ உறுதிசெய்து கூறுவாராயின், அவ்வாறு சொல்பவரெல்லாம், பெரும் துரோகக் குற்றம் செய்தவராவார். அதற்காக அவர்கள் சட்டப்படி குற்றவாளிகளெனத் தீர்மானிக்கப்பட்டு, பெருந்துரோகக் குற்றத்துக்கு உள்ளதைப்போல் மரணதண்டனை, பறிமுதல், அபராதம் முதலியவற்றை ஏற்கவேண்டியவராவர்.'[1]

## இணைப்புச் சட்டங்கள் (Acts of Union)

பிளாக்ஸ்டனால் சுட்டிக் காட்டப்படுகின்ற இணைப்புச் சட்டங்கள், பாராளுமன்ற அதிகாரம் கையாளப்படுவதை விளக்கக்கூடிய சிறந்த எடுத்துக்காட்டுகள் ஆகும். ஆயினும், கொள்கையளவிலும் நடைமுறையளவிலும், அரசியலமைப்புச் செயல்படுவதைப் பொருள்

[1] இந்தச் சட்டமானது திருத்தமான மூன்றும் பதிப்பிலுள்ள மற்றச் சட்டங்களோடு இன்றும் நடைமுறையில் இருந்து வருகிறது.

விளங்கக்கூடிய வகையில் எடுத்துக் காட்ட வல்ல தனித்த சட்டம், ஏழாண்டுச் சட்டத்தைவிட (Septennial Act) வேறெதுவும் இல்லை. எனவே, இந்தச் சட்டம் செய்யப்பட்ட சூழ்நிலைகளையும் இதன் இயல்பையும் பற்றியே நாம் சிறப்பாகக் கவனிக்க வேண்டும்.

### ஏழாண்டுச் சட்டம்

1694ஆம் ஆண்டின் ஓர் சட்டப்படி பாராளுமன்றத்தின் அமர்வுக் காலம் மூன்றாண்டுகளாக வரையறுக்கப்பட்டிருந்தபடியால், 1716-ல் அதனுடைய அமர்வுக் காலம் முடிவடைந்தது; எனவே, 1717ஆம் ஆண்டிற்குப் பின்னர் ஓர் பொதுத் தேர்தலை ஒத்திப் போட முடியாத நிலைமை ஏற்பட்டது. ஆயினும், வாக்காளர்களில் பெரும்பாலோர் ஜேக்கோபைட்டுகளாக (Jacobites) இருந்த அந்நிலையில் பொதுத்தேர்தல் நடத்தினால், நாட்டின் அமைதிக்கும் அரசாங்கத்துக்கும் பெரும் கேடு உண்டாகுமென்று, தக்க காரணங்களோடு அரசரும் அமைச்சரவையும் உணர்ந்தனர். எனவே, அப்பொழுது செயல்பட்டுவந்த பாராளுமன்றத்தை ஏழாண்டுச் சட்டத்தை நிறைவேற்றும்படி அமைச்சரவை கேட்டுக்கொண்டது; இச்சட்டமானது, பாராளுமன்றத்தின் சட்டப்படியான அமர்வுக் காலத்தை (legal duration) மூன்றாண்டிலிருந்து ஏழாண்டுக் காலத்துக்கு நீடித்துவைத்து, அப்பொழுது செயல்பட்டுவந்த பொதுமக்கள் மன்றத்தின் (House of Commons) அதிகாரங்களை, அம்மன்றமானது தேர்ந்தெடுக்கப்பட்ட அமர்வுக் காலத்துக்கும் கூடுதலாக நான்கு ஆண்டுகளுக்கு நீடித்திருக்கும்படி செய்தது.[1] எதிர்காலத்தில் பாராளுமன்றங்களை மூன்று ஆண்டுகளுக்குப் பதிலாக ஏழாண்டுகளுக்குப் பொதுத்தேர்தல் எதுவும் நடத்த வேண்டிய அவசியமில்லாமலே தொடர்ந்து இருக்கும்படி செய்யக்கூடிய ஓர் சட்டத்தைவிட, மேலே குறிப்பிட்ட ஏழாண்டுச் சட்டமே பாராளுமன்றத்தின் கடுமையாகச் செயலாற்றும் இயல்பைக் காட்டுகிறது. சூழ்நிலையையும் அரசியல் அடிப்படையிலும் நோக்க இச்சட்டம் நியாயமானதே. ஏழாண்டுச் சட்டத்தின் இவ்வடிப்படைக் காரணமானது அறிவாராய்ச்சியோடு கூடிய எவருக்கும் ஒப்புக்கொள்ளக் கூடியதாக இருத்தல் வேண்டும்; எனினும், பாராளுமன்றத்தின் சட்டமியற்றும் அதிகாரத்தை மிக உயர்தரமானதாக

[1] இதுபோலவே 1910 டிசம்பரில் தேர்ந்தெடுக்கப்பட்ட பாராளுமன்றமும் அதனுடைய சட்டங்களின் மூலமாகவே 1918ஆம் ஆண்டு நவம்பர் மாதம் வரை தன்னுடைய அமர்வுக் காலத்தை நீடித்து வைத்துக்கொண்டது; மேலும் இந்தப் பாராளுமன்றம், 1911 ஆம் ஆண்டின் பாராளுமன்றச் சட்டத்தின்மூலம், பாராளுமன்றத்தின் சட்டப்படியான அமர்வுக் காலத்தை ஐந்து ஆண்டுகள் அளவிற்குக் குறைத்தது; 1940—1944 பாராளுமன்ற நீடிப்புச் சட்டங்கள் (Prolongation of Parliament Acts) என்ற வரிசை நூல்களைப் பார்க்கவும்.—பதிப்பாசிரியர்.

வெளிப்படுத்தும் இந்தச் சட்டத்தின் முக்கியத்துவத்தை, நேர்மையுடனும், சட்ட உணர்வுடனும் ஆராய்ந்து எழுதக்கூடிய ஹாலம் (Hallam) ஸ்டான்ஹோப் பிரபு (Lord Stanhope) ஆகியோர்கூட, சரிவர எடுத்துக் காட்டாமல் விட்டுவிடுவதைக் காணும்போது நமக்கு வியப்பு உண்டாகிறது. 'சட்டசபையானது இந்தச் சட்டத்தைச் செய்ததனால், அது தனக்குள்ள உரிமைகளுக்கும் அப்பாற்பட்ட ஒரு செயலைச் செய்ததாக ஆயிற்று என்றும், அல்லது இக்கருத்து சட்டப்படியானதாக அமைந்த ஒன்று அன்று என்று வைத்துக்கொண்டாலும், இச்செயலைச் செய்ததன் விளைவாகச் சட்டசபையானது தன்னிடத்துக் குடிமக்கள் வைத்துள்ள நம்பிக்கையை மீறி நடந்து, பண்டைய அரசியலமைப்பைத் தகர்த்தெறிந்துவிட்டது என்றும் ஆராய்ச்சியில்லாதவர் கூறுவது பொருத்தமற்றது' என்றும் ஹாலம் எழுதுகிறார். அவர் தனது இந்தக் கருத்துக்கு ஆதாரமாகப் பின்வரும் கருத்தைக் கூறுகிறார்: 'மூன்றாண்டுகளுக்குப் பாராளுமன்றங்களை அமைக்கும் சட்டமானது இருபது ஆண்டுகளுக்கு மேலாக ஒரு சிறிதும் தொடர்ந்து இருந்ததில்லை. அப்பொழுது எடுத்துக் கூறப்பட்டது போல் அது ஒரு சோதித்துப் பார்க்கப்பட்ட வெற்றியாக இல்லாமற் போன சட்டமாகும்; வேறு எந்தச் சட்டத்தையும் போல அது சூழ்நிலைக்குத் தக்கவாறு முழுவதும் நீக்கப்படவேண்டிய, அல்லது மாற்றப்பட வேண்டிய ஒன்று ஆகும்.'[1]

'.....பாராளுமன்றமானது தனது அமர்வுக் காலத்தை நீடித்து வைத்ததனால், தனக்குச் சட்டப்படியாகவுள்ள அதிகாரத்தின் வரம்பையும் மீறி நடந்தது என்று கூறப்படுகிற பொருந்தாக் காரணத்தை நாம் புறக்கணித்துவிடலாம்; இந்தக் கருத்து அக்காலத்தில் நிலவிய கட்சி மனப்பான்மையினால் தூண்டப்பட்டதாகும்: இக்கருத்து எதிர்காலத்தில் உணர்ச்சிமிக்க கூட்டத்தினரால் ஏற்றுக்கொள்ளப்படலாம்; எனினும், இக்கருத்து சிறந்த அரசியலமைப்பு நூலாசிரியர்களால் வெறுத்துத் தள்ளப்பட்டது' என்று ஸ்டான்ஹோப் பிரபு கூறுகிறார்.[2]

### ஏழாண்டுச் சட்டத்தினுடைய அரசியல் அமைப்புபற்றிய முக்கியத்துவம் (Constitutional importance of Septennial Act)

மேற்கூறப்பட்ட கருத்துகள், ஏழாண்டுச் சட்டத்தின் மீது கூறப்படும் குறைகளிலுள்ள உட்கருத்தை எடுத்துக்காட்டவில்லை; மேலும் அவை அந்தச் சட்டத்தினுடைய அரசியல் முக்கியத்துவத்தையும் எடுத்துக் காட்டவில்லை. இந்தச் சட்டத்துக்கு எதிர்ப்புத் தெரிவித்த

[1] Hallam, 'Constitutional Hist or of England' (1884 ed.), vol. iii, p. 236.
[2] Lord Mahon, 'History of England' (2nd ed., 1839), vol. i,p.

முப்பத்தொரு பிரபுக்கள் எடுத்துக்கூறிய காரணங்களே கொள்கையி னளவில் இதற்கு இருக்கக்கூடிய எதிர்ப்பைத் தெளிவாக எடுத்துக் காட்டுகின்றன. அவர்கள் எடுத்துக் காட்டிய பல காரணங்களுள் கீழ்க்காணும் காரணமும் ஒன்று: 'பொதுமக்கள் மன்றமானது மக்களால் தேர்ந்தெடுக்கப்படுதல் வேண்டுமென்பது யாவராலும் ஒப்புக் கொள்ளப்பட்டதாகும்; அவ்வாறு அம்மன்றத்தினர் தேர்ந்தெடுக்கப் படும்போது, அவர்கள் மக்களுடைய உண்மையான பிரதிநிதிகள் ஆவர்; அத்தகையோர், தாங்கள் எவ்வளவு காலத்துக்குத் தேர்ந்தெடுக்கப் பட்டனரோ, அவ்வளவு காலத்துக்கும் கூடுதலாக நீடித்து இருக்கும் போது, அவர்கள் மக்களுடைய உண்மையான பிரதிநிதிகளாக இருக்க முடியாது; ஏனெனில், நீடித்த காலத்துக்கு அவர்கள் தங்களைப் பிரதி நிதிகளாக வைத்துக்கொண்டால், அப்பொழுது அவர்கள் பாராளு மன்றத்தாலேயே தேர்ந்தெடுக்கப்பட்டவர்களேயல்லாமல், மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவரல்லர்; இவ்வாறு செய்வதனுல், அறியாமை யினுலும், ஊழல் முறையினுலும் பாராளுமன்றத்தவரால் தங்களுக்கு நேரக்கூடிய இடையூறுகளினின்றும் தங்களைக் காத்துக்கொள்ளக் கூடிய ஒரே தற்காப்பையும் மக்கள் இழந்தவராகிறார்கள்; அப்பொழுது பாராளுமன்றத்திலுள்ள உறுப்பினர்களுக்குப் பதிலாக வேறு புதிய நல்ல உறுப்பினர்களைத் தேர்ந்தெடுப்பதற்கு மக்களுக்கு இருக்கும் உரிமையே அவர்களுடைய தற்காப்பு முறை ஆகும்.' பிரபுக்கள் சிலர் எதிர்த்ததற்குக் காரணம் இதுவாக இருப்பினும், இந்த ஏழாண்டுச் சட்டத்திலுள்ள புதுமை என்னவென்றால், இது பாராளுமன்றத்தின் சட்டப்படியான அமர்வுக்காலத்தை மாற்றவோ அல்லது அப்போது நடைமுறையிலிருந்த மூவாண்டுச் சட்டத்தை நீக்கவோ செய்யவில்லை என்பதாம்; 1716 ஆம் ஆண்டில் ஏழாண்டுச் சட்டத்தை நிறைவேற்றிய செயலானது 1694-ல் மூவாண்டுச் சட்டத்தை நிறைவேற்றிய செயலைவிட, அதிர்ச்சிக்கு உரிய தென்றே அல்லது குறை கூறப்படுதற்கு உரியதென்றோ சொல்ல முடியாது; நடைமுறையில் இருந்துவந்த ஓர் பாராளுமன்றமானது, சட்டப்படியான தனது அமர்வுக் காலத்தைத் தனது சொந்த அதிகா ரத்தின் மூலமாகவே நீடித்து வைத்துக்கொண்டது என்பதுதான் அதிர்ச்சியைத் தருவதாகும். 'ஏழாண்டுப் பாராளுமன்றங்கள் மக்க ளுடைய உரிமைகளை உரிமையின்றிக் கைப்பற்றிய செயலாகும்; எவ்வாறெனில், ஓர் பாராளுமன்றமானது தனது அதிகாரத்தை ஏழாண்டுகளுக்கு நீடித்து வைப்பதற்குக் கையாளும் அதிகாரத்தைக் கொண்டே, அம் மன்றத்தவர் தமது அதிகாரத்தை ஏழாண்டுகளைப் போல் இருமடங்குக் காலத்துக்கோ, அல்லது 1641ஆம் ஆண்டில் பாராளுமன்றம் செய்ததுபோலத் தங்களை எப்போதும் அதிகாரத்தில் நிலைத்திருக்கக் கூடியவராகவோ செய்தல்கூடும்' என எதிர்ப்புத்

தெரிவித்த பிரபுக்களும் பிரிஸ்ட்லி[1] என்ற ஆசிரியரும் கருத்துத் தெரிவித்தனர் : 'ஏழாண்டுச் சட்டமானது பாராளுமன்றத்தின் முந்திய அமர்வுக் காலத்தை நீடித்துவைத்தது' என்று இவரெல்லாம் 'அறியாமற்' கூறுவதனுல், இவர்களுடைய கருத்துத் தவருனது என்று நாம் கொள்ளுவதும் சரி அன்று.[2] மூன்று ஆண்டுகளுக்குத் தேர்ந்து எடுக்கப்பட்ட உறுப்பினர்கள், அரசியலமைப்பின்படி தங்களுடைய தொகுதியாளர்களினுடைய (constituents) ஆட்பேர் உரிமை பெற்றவர் (delegates—டெலிகேட்டுகள்) அல்லது செயலாளர் (Agents) ஆவர்; எனவே, அவர்கள், அரசியலமைப்பை மீருதவகையில், தங்களைத் தேர்ந்தெடுத்த வாக்காளர்களால் தங்களுக்குக் கொடுக்கப்பட்ட அமர்வுக் காலத்துக்கும் கூடுதலாகத் தங்களுடைய அதிகாரத்தை நீடித்து வைக்க இயலாது : இதுவே பிரிட்ஸ்லியும் மற்றவரும் கூறும் எதிர்ப்பின் சாரம் ஆகும். ஏழாண்டுச் சட்டத்தைப் போன்றதொரு சட்டமானது, வேறு நாடுகளில், முக்கியமாக அமெரிக்க ஐக்கிய நாட்டில் சட்டப்படி செல்லத் தக்கது அன்று என்று கொள்ளப்படும் : ஓர் அரசாங்கத்தையோ, கட்சியையோ அலுவலில் இருக்கும்படி செய்வதற்காக இக் காலத்தில் எந்த ஆங்கிலப் பாராளுமன்றமும் ஒரு பத்தாண்டுச் சட்டத்தைச் செய்து, அதன் மூலமாகத் தனது அமர்வுக்காலத்தை நீடித்துவைக்கத் துணிந்து முன்வராது : இவ்வகையாகப் பார்க்கும்போது, ஏழாண்டுச் சட்டத்தை நிறைவேற்றிவைத்த வால்போலும் அவருடைய கட்சியாளரும் அரசியலமைப்பின்படி உறுப்பினர்களுக்கு உரிய கடமைகளை மீறினுர்களென்ற குற்றச்சாட்டில் தவறு ஏதும் இல்லை. பாராளுமன்றமானது இச் செயலைச் செய்தபோது, தனது அதிகாரங்களைச் சட்டத்துக்கு ஏற்பவே கையாண்டது; ஆனுல், இச் செயலைச் செய்வதற்காக அது முன்பு எப்பொழுதும் இவ்வகையாகத் தனது அதிகாரத்தைக் கையாண்டது இல்லை. இந்த அதிகாரத்தைக் கையாளுதலைத் தவறு எனக் குறைகூறுதல், ஏழாண்டுச் சட்டத்தின் அரசியல் அமைப்பு முக்கியத்துவத்தை (constitutional importance) மறுப்பதாகும். சட்டத்தின் கோணத்திலிருந்து பார்க்கையில் பாராளுமன்றமானது தொகுதியாளர்களுடைய பொறுப்பாளியும் (trustee), வாக்காளர்களுடைய செயலாளரும் அன்று; இந்தக் கருத்தைத்தான் இந்த ஏழாண்டுச் சட்டமானது செயல்விளக்கமாகக் (demonstrates) காட்டுகிறது. சட்டப்படியாகப் பாராளுமன்றம் நாட்டில் இறைமையான சட்ட அதிகாரம் உடையதாக இருக்கிறது; எனவே, ஏழாண்டுச் சட்டமானது இத்தகைய பாராளுமன்ற இறைமையினின்றும் தோன்றிய ஓர் விளைவாகவும், அவ்விறைமையை எப்போதும் எடுத்துக் காட்டும் சான்ருகவும் இருக்கிறது.

1 Priestley, 'Essay on Government' (1771).

2 Hallam

**தனிவாழ்வு உரிமையில் பாராளுமன்றத்தின் தலையீடு (Interference of Parliament with private rights)**

பொதுவாழ்வுபற்றிய உரிமைகளிலெல்லாம் பாராளுமன்றமே சட்டப்படியாக மிக்க ஆற்றல் வாய்ந்தது என்பதை நாம் இதுவரை பார்த்தோம். நாகரிகமுள்ள நாடுகளிலெல்லாம் மிகவும் பாதுகாப்பாகவும், புனிதமாகவும் கருதப்படுகின்ற தனிவாழ்வுபற்றிய உரிமைகளைப் பொறுத்தவரை (private rights) பாராளுமன்றத்தின் நிலைமை என்ன என்பதை நாம் இப்பொழுது ஆராய்வோம். தனிவாழ்வு உரிமைகளில் பாராளுமன்றம் தலையிடுதலைக் காட்டும் நிகழ்ச்சிகளெல்லாம் அதனுடைய அதிகாரத்தைக் காட்டுவனவாக வுள்ளன என்று எட்வர்ட் கோக் என்னும் நீதிபதி சுட்டிக் காட்டுகிறார். அவர் கூறுவதாவது :

'பாராளுமன்றத்தின் அதிகாரம், தனிவாழ்வு உரிமைகளிலும் செல்லுபடியாகுமென்பதைச் சில எடுத்துக்காட்டுகள் விளக்குகின்றன. ஒரு மனிதருடைய அல்லது பெண்ணினுடைய பெண் குழந்தைகளும், மரபுரிமையாளரும் (heirs apparent), பாராளுமன்றச் சட்டத்தின்படி (Act of Parliament) தங்களுடைய மூதாதையின் வாழ்நாளிலேயே அவருடைய உடைமையை மரபுரிமையாகப் பெறலாம்.'

'ஓர் குழந்தையை அல்லது இளையவரை வயது வந்தவராக அது (பாராளுமன்றம்) தீர்ப்புக் கூறலாம்.'

'ஒருவனுடைய இறப்புக்குப் பின்னரும் அவனை அது அரசாங்கத்துக் கெதிரான துரோகம் செய்தவராகக் குற்றம் சாட்டி அவரைத் தண்டிக்கலாம்.'

'அது, ஓர் அயல்நாட்டவரைத் தன் நாட்டினராகவும், தன் நாட்டில் பிறந்த குடியாகவும் ஆக்கலாம். சட்டப்படியாக முறையாகப் பிறந்த ஓர் குழந்தையை, அதாவது நான்கு கடல் எல்லைகளுக்கும் நடுவேயுள்ள இந்த நாட்டில் ஓர் குடும்பத் தலைவனுக்கு முறைகேடான ஒழுக்கத்தின் மூலமாகப் பிறந்த ஓர் குழந்தையைப் பாராளுமன்றச் சட்டமானது, முறைதவறிப் பிறந்த குழந்தை என ஆக்கலாம்.'

'முறைதவறான வழியிலும், திருமணத்துக்கு முன்னரும் பிறந்தவரை அது முறையாகப் பிறந்தவராக ஆக்கலாம். And to legitimate *Secundum quid* but not *simpliciter*.'[1]

இத்தகைய எடுத்துக்காட்டுகளைத் தேர்ந்தெடுப்பதில் கோக் மிகவும் நடுநிலைமையோடு இருக்கிறார். தனி ஆட்களினுடைய மிக முக்கியமான உரிமைகளில் பாராளுமன்றம் தலையிடும் அதிகாரமே அது பொதுவாழ்வு உரிமைகளில் தலையிடும் அதிகாரத்தைவிட, அதனுடைய

[1] Coke, 'Fourth Institute', p. 36.

வரம்பற்ற, முழுமையான அதிகாரத்தை மிகவும் தெளிவாக எடுத்துக் காட்டுகிறது: தனது நாட்டின் அரசியலமைப்பைத் தகர்த்தெறிந்துவிட ஆர்வமுள்ள ஆட்சியாளரும், தனிக் குடியாட்களினுடைய உடைமைகளைப் பறிக்கவோ, அல்லது அவர்களுடைய ஒப்பந்தங்களையெல்லாம் மீறவோ செய்வதற்கு மிகவும் தயங்குவார். எனினும், பாராளுமன்றமானது, பொதுமக்கள் நலனுக்காகத் தனிவாழ்வு உரிமைகளில் தலையிட்டுக் குறைப்பதை வழக்கமாகச் செய்துவருகிறது. சமுதாயத்தின் நலனுக்காக இவ்வாறு அது தலையிடுதல் என்பது இப்பொழுது ஓர் முறையான செயலாக வந்துவிட்டமையினால், இதை எவரும் குறை கூறுவதில்லை; இது பாராளுமன்றத்தின் உயர் அதிகாரத்தைக் காட்டும் அடையாளம் ஆகுமோ எனவும் எவரும் ஆராய்வதில்லை. சில குறிப்பிட்ட ஆட்களுக்கு உரிமைகளை அல்லது சலுகைகளை வழங்கியும், வேறு சில ஆட்களுக்குச் சில கடமைகளை விதித்தும் உள்ள பாராளுமன்றச் சட்டங்கள், சட்டநூலில் நிறையக் காணப்படுகின்றன. ஒவ்வோர் இரயில்வேச் சட்டத்தின் உண்மையும் இதுவே ஆகும்: பாராளுமன்ற இறைமையின் முழுச் செயலையும், அதாவது மக்களுக்கு நன்மை பயக்கும் செயலையும் எவரும் நன்றாக உணர்தல் வேண்டுமாயின், உள்ளூர்ச் சட்டங்களும், தனிவாழ்வுச் சட்டங்களும் (Local and Private Acts) என்ற பகுதியின் ஓரிரண்டு பிரிவுகளைப் பார்த்தால் தான் விளங்கும். இந்தச் சட்டங்களெல்லாம் நாட்டின் எந்தச் சட்டங்களையும் போலப் பாராளுமன்றச் சட்டங்களேயாம். இவையெல்லாம் இரயிவேக்கள், துறைமுகங்கள், தனியார் நிலஉரிமைத் தீர்ப்பு ஆகியவை போன்ற எல்லாப் பொருள்களையும்பற்றிக் கூறுகின்றன. ஒரு சில சடங்குகள் பிழைபடச் செய்யப்பட்டதனால் சரிவரச் செய்யப்படாத மணமுறைகளைச் சரியானவையாக ஆக்கும் சட்டங்களையும், மணம் செய்துகொண்டவர்களை மணமுறிவு செய்துகொண்டவர்களாக ஒரு காலத்தில் செய்த சட்டங்களையும் (இத்தகைய சட்டங்கள் இப்பொழுது செய்யப்படமாட்டா) மேற்கூறிய சட்டங்களோடு சேர்த்துக் கொள்ளுதல் வேண்டும்.

இந்தச் சூழ்நிலையில் வேறுவகைப்பட்ட சில சட்டங்களையும் நாம் அவை இதுவரை கவனிக்கப்படாத அளவுக்கு நுட்பமாகக் கவனித்தல் வேண்டும். அவையே இழப்பீட்டுச் சட்டங்கள் (Acts of Indemnity) ஆகும்.

## இழப்பீட்டுச் சட்டங்கள் (Acts of Indemnity)

ஓர் சட்டத்தை மீறுவதனாலுண்டாகும் தண்டனையினின்றும் தனி ஆட்களை விடுவிப்பதற்கு வழிசெய்கிற சட்டம் அல்லது சில செயல்முறைகள் நடைபெறுங்காலத்து முறையற்றவையாக, அல்லது சட்டத்துக்கு மாறானவையாக இருக்க, அவற்றைச் சட்டப்படி

யானவையென ஆக்கும் சட்டம் இழப்பீட்டுச் சட்டம் ஆகும். இத்தகைய சட்டங்கள் இடைவிடாமல் ஒழுங்காக ஓர் நூற்றாண்டிற்கும் (1727—1828) மேலாக ஒவ்வோர் ஆண்டிலும் நிறைவேற்றப்பட்டு வந்துள்ளன; இங்கிலாந்தின் திருச்சபையின் சடங்குகளுக்கு ஏற்பச் சமயச் சடங்கை ஏற்று அதன் மூலம் தங்களைத் தகுதி ஆக்கிக்கொள்ளாமல், மறுப்புக் கிறித்தவர்கள் (Dissenters), நகர ஆட்சிக் கழக அலுவல்களை ஏற்றிருந்தனர்; இவ்வாறு அவர்கள் தகுதி இல்லாமல் அலுவலை ஏற்றதற்கான தண்டனையினின்று அவர்களை விடுவிப்பதற்காக இந்த இழப்பீட்டுச் சட்டங்கள் நிறைவேற்றப்பட்டன. இழப்பீட்டுச் சட்டங்களைப்பற்றிப் பின்வரும் இயல் ஒன்றில் மீண்டும் நாம் கூறுவோம். இத்தகைய இழப்பீட்டுச் சட்டங்களெல்லாம் சட்டத்துக்கு மாறானவற்றைச் சட்டத்துக்கு ஏற்றவையாகச் செய்தமையால், அவை இறைமை அதிகாரம் கையாளப்பட்டதைக் காட்டுகின்ற மேலான சான்றுகளாக இருக்கின்றன என்பதே இங்கு நாம் காண வேண்டிய குறிப்பு ஆகும்.

இதுவரை பாராளுமன்ற இறைமையை உடன்பாட்டு வகையாக ஆராய்ந்தோம்; இதே கோட்பாட்டை நாம் இப்பொழுது எதிர்மறை வாயிலாகக் காண்போம்.

**வேறு போட்டி சட்டமியற்றும் அதிகாரி இன்மை (No other competing legislative authority)**

II. **போட்டியாகச் சட்டம் இயற்றும் அதிகாரி வேறு இல்லாமை:** அரசியும், பாராளுமன்றத்தின் ஒவ்வொரு மன்றமும், ஒவ்வொரு வாக்காளர் தொகுதியும், நீதிமன்றங்களும், தனித்து நின்று சட்டம் செய்யும் அதிகாரத்துக்கு இதற்கு முன் எக்காலத்திலும் உரிமை கொண்டாடியதுமில்லை, இனி எதிர்காலத்திலும் உரிமை கொண்டாடப் போவதுமில்லை. இதனை மேலும் ஆராய்ந்தால், இத்தகைய உரிமை இவற்றுள் எதற்கும் கிடையாது என்பது தெரியவரும்.

**அரசி**

(i) அரசி: சட்டம் செய்யும் அதிகாரமானது முற்காலத்தில் ஆலோசனை மன்றத்திலுள்ள அரசரிடமே (King in Council) இருந்தது; பாராளுமன்றமானது சட்டமியற்றும் தொழிலைச் செய்யத் தொடங்கிய காலத்துக்குப் பின்னரும்கூட, பாராளுமன்றத்தின் தொழிலோடு, ஆணைகள் (Ordinances)[1] என்ற வடிவத்திலும், பிற்காலத்தில் பிரகடனம் (Proclamations) என்ற வடிவத்திலும் அரசருடைய சட்டம் இயற்றும் தொழிலும் இருந்துவந்தது.

[1] Stubbs, 'Constitutional History of England.' vol. i (1874), and vol. ii (1875).

**பிரகடனங்களின் சட்டம் (Statute of Proclamations)**

அரசருடைய பிரகடனங்கள் சட்டங்களின் ஆற்றலை உடையவை; 1539-ல் செய்யப்பட்ட எட்டாம் ஹென்றியின் 31ஆம் சட்டம், c. 8, பிரகடனங்களின் மூலமாகச் சட்டம் செய்யும் அதிகாரத்தை அரசருக்கு முறையாகக் கொடுத்தது. இந்தப் பிரகடனங்களின் சட்டமானது மிகவும் சுருக்கமானது, மிகவும் முக்கியமானது; எனவே, இதை இங்கு விரிவாக மேற்கோளாகக் காட்டுவது நல்லது. 'தற்காலத்துக்கு அரசர், தனது ஆலோசனை மன்றத்தின் ஆலோசனையின் உதவியோடு, அவருக்கும், மன்றத்துக்கும் தேவையானதாகத் தோன்றக்கூடிய தண்டனைகளோடு கூடிய பிரகடனங்களை வெளியிடுதல் செய்யலாம்; இவையெல்லாம் பாராளுமன்றச் சட்டத்தினால் செய்யப்பட்டவைபோல யாவராலும் கடைப்பிடிக்கப்பட வேண்டியவை; ஆயினும் இவை எந்த ஓர் ஆளின் உடைமை மரபு உரிமைக்கும், அலுவல்களுக்கும், உரிமைகளுக்கும், உடைமைகளுக்கும், தட்டுமுட்டுச் சாமான்களுக்கும், உயிர் வாழ்வுக்கும் முரணாக இருத்தல் கூடாது; இந்தப் பிரகடனங்களின் எந்தப் பிரிவையும் யாராவது மனமறிந்து மீறி நடப்பார்களாயின், அவர் அந்தப் பிரகடனத்தில் கூறப்பட்ட காலத்துக்குச் சிறை செய்யப் படவோ அல்லது அபராதம் செலுத்தவோ வேண்டும்; இவ்வாறு மீறி நடப்பவர் இக் குற்றச்சாட்டுக்கு விடைசொல்ல மறுக்கும் நோக்கத்தோடு நாட்டைவிட்டு வெளியேறிச் செல்லுவாராயின், அவர் நாட்டுத் துரோகி என்ற தீர்ப்புக்கு உள்ளாவார்.

அரசருடைய சட்டப்படியான அதிகாரத்தின் மிக உயரிய நிலையை இந்தப் பிரகடனச் சட்டம் குறிப்பதாகும்; இது ஆங்கிலச் சட்ட அமைப்பின் போக்குக்கே மாறுபாடாக இருந்த காரணத்தால், இது ஆறும் எட்வர்டின் ஆட்சியில் நீக்கப்பட்டது.[1] இந்தச் சட்டமானது இப்பொழுது நடைமுறையில் இருக்குமானால், இதனுடைய விளைவுகள் எவ்வளவு புரட்சியானவையாக இருக்குமென்பதை எண்ண நமக்கு ஆர்வம் உண்டாகிறது. அவ்வாறாயின் அதனால் இரு விளைவுகள் தோன்றி இருக்கும். ஆங்கில அரசர் ஃபிரெஞ்சு அரசரைப்போல ஓர் சர்வாதிகாரியாக ஆகியிருப்பார். மேலும் இச் சட்டமானது சட்டமன்றத்தால் செய்யப்பட்டுப் பொருத்தமாகச் 'சட்டங்கள்' என அழைக்கப் படுபவைகளுக்கும், சட்டமன்றத்தால் செய்யப்படாமல், நிர்வாகத்தினரால் செய்யப்பட்டு ஆனால் சட்டத்தின் ஆற்றலைப் பெற்றுள்ள 'ஆணைகளுக்கும்' அல்லது 'கட்டளைகளுக்கும்' உள்ள வேறுபாட்டையும் நிறுவி இருக்கும். இத்தகைய வேறுபாடானது மற்ற ஐரோப்பிய நாடுகளிலெல்லாம் ஏதேனும் ஓர் வடிவத்தில் காணப்படுகிறது. இந்த வேறுபாட்டினால் நடைமுறையில் நல்ல பயனுமில்லாமல் இல்லை.

[1] Holdsworth, 'History of English Law', vol. iv (1924)—இக் கருத்துக்கு இப்போது ஆதரவு இல்லை.—பதிப்பாசிரியர்.

அயல்நாடுகளில் சட்டமன்றமானது ஏதேனும் ஒரு சட்டத்தைச் செய்யும்போது, அதனுடைய பொதுப்படையான கொள்கைகளை வரையறை செய்வதோடு நின்றுவிடுகிறது; இக் கொள்கைகளுக்குத் துணையாகக் கட்டளைகளை அல்லது விதிகளை நிர்வாகமானது (executive) பொது மக்களுடைய நலனுக்கு உகந்தமுறையில் செய்யும்படி அது விட்டுவிடுகிறது. ஆங்கிலச் சட்டமானது விரிவாகவும், அளவிற் பெரியதாகவும் இருப்பதற்குக் காரணம், மிகப்பெரிய சட்ட மாறுதல்களினுடைய எல்லா விவரங்களையும் தானே குறிப்பிடுவதற்காக ஆங்கிலப் பாராளுமன்றம் மேற்கொள்ளும் முயற்சியே ஆகும். இக் குறைபாடு மிகவும் தெளிவாகத் தெரிந்துவிட்டது; எனவே, எந்த ஓர் சட்டத்திலும் பாராளுமன்றத்தால் குறிப்பிடப்படாத விவரங்களையெல்லாம் தீர்மானிக்கக்கூடிய விதிகளைச் செய்யும் அதிகாரத்தைப் பிரிவி கவுன்சிலுக்கும், நீதிபதிகளுக்கும் அல்லது இது போன்ற வேறொரு குழுவுக்கும் அளிக்கும் பிரிவுகள் இக் காலத்திய பாராளுமன்றச் சட்டங்களில் காணப்படுகின்றன. ஆயினும் இது, யாவராலும் ஒப்புக்கொள்ளப்பட்ட குறைபாட்டை நீக்குவதற்காகச் செய்யப்படும் ஓர் அருவருக்கத்தக்க செயலேயாகும் (an awkward mitigation of an acknowledged evil).[1] இங்கிலாந்து அரசாங்கத்தின் நிர்வாகப் பிரிவானது, ஃபிரான்சிலிருப்பதைப் போல, சட்டத்தின் ஆற்றலையுடைய கட்டளைகள், ஆணைகள், பிரகடனங்கள் ஆகியவற்றை விடுத்து, அவற்றின் மூலமாகச் சட்டமன்றத்தின் சட்டங்களிலுள்ள பொதுவான கொள்கைகளை நுட்பமாகச் செயல்படுத்துவதற்கு உரிய விவரங்களையெல்லாம் செய்யுமானால், சட்டத்தின் பொருளும் வடிவமும் மிகவும் சீராக அமையும் என்பது

[1] இந் நூலாசிரியருடைய கருத்துகளை ஆராய்பவருள் ஒருவர், 'யாவராலும் ஒப்புக்கொள்ளப்பட்ட குறைபாட்டை நீக்குவதற்காகச் செய்யப்படும் ஓர் அருவருக்கத்தக்க செயல்' என்ற தொடருக்கு எதிர்ப்புத் தெரிவித்துள்ளார். ஏனெனில், இங்கிலாந்தில் இருந்துவருவதும் வேறு நாடுகளிலுள்ளதைப் போன்று பயனுடையதாகக் கொள்ளப்படுவதுமான ஓர் முறையை இத்தொடர் கண்டனம் செய்வதாக அமைகிறது. இந்நூலாசிரியருடைய கருத்தின்படி இத்தொடரானது பொருத்தமானது ஆகும். 'ஆங்கில முறைப்படி, மிகவும் விரிவாக விவரங்கள் நிறைந்த சட்டங்கள் நிறைவேற்றப்படுகின்றன; ஆலோசனைக் குழுவின் ஆணைமூலமாகவோ வேறு எதன் மூலமாகவோ விதிகளைச் செய்வதற்குரிய அதிகாரம் சட்டத்தின் கீழ் கையாளப்படுவது எப்பொழுதென்றால், சட்டத்தில் விதிகளைச் சேர்ப்பது பொருத்தமில்லாமலும் இயலாமலும் இருக்கும் போதுதான். வேறு நாடுகளில், முக்கியமாக ஃபிரெஞ்சு நாட்டு முறையில், எந்தச் சட்டமும், கட்டளைகள் அல்லது ஆணைகளின் துணை கொண்டுதான் இயங்கும் என்பதனால், சட்டங்களின் வடிவமானது இவ்வகையாக மாறுதலுக்கு உள்ளாகும் என்பது அச்சட்டமன்றத்தினருக்கும், சட்டங்களை வரைபவருக்கும் தெரியும். அயல்நாட்டுச் சட்டங்களெல்லாம், ஒவ்வொரு சட்டமும் இருக்கவேண்டிய முறைப்படி, பொதுவான கொள்கைகளைக் கூறும் அறிக்கைகளாகவே இருக்கின்றன.' U K நாட்டில் விதிகளின் மூலமாகச் சட்டத்தை மறுபரிசீலனை செய்யும் இயல்புகளைப்பற்றித் தெரிந்து கொள்ளுவதற்காக, "Report of the Committee on Ministers' Powers" (Cmd. 4060, 1932) என்ற நூலையும், Willis என்பவர் எழுதிய The Parliamentary Powers of the English Government Departments' (1933) என்ற நூலையும் பார்க்கவும்.—பதிப்பாசிரியர்.

உண்மையே. மற்றெல்லாச் செயல்களிலும்போல, இச்செயலிலும், அரசருடைய அதிகார வளர்ச்சியைக் கட்டுப்படுத்தும் பொருட்டு நமது முன்னோர் அறிவுக் கூர்மையோடு ஏற்படுத்தியிருந்த தடைகளெல்லாம் இக்காலத்தில் அரசாங்கத்தின் நிர்வாகத்துறையின் செயல் ஆற்றலைத் தேவையில்லாத வகையில் கட்டுப்படுத்தக் காரணமாக அமைகின்றன. எட்டாம் ஹென்றியின் 31ஆம் சட்டம் (c. 8) பிற்காலத்தில் நீக்கப் பட்டமையினால், பல நன்மைகளையும் குறைகளையும் தோற்றுவிக்கக் கூடிய, அரசாங்கத்தின் சட்டம் செய்யும் அதிகாரமானது செயல் படாமல் போய்விட்டது : மேலும் இச்சட்டம் நீக்கப்பட்டமையினால், பொதுச் சட்டங்களுக்கு (common law) உள்ள மதிப்பே பிரகடனங் களுக்கு உண்டு என்ற நிலையை உண்டாக்கிற்று. பிரகடனம் செய்யும் அதிகாரத்தின் அளவு சில காலத்துக்குக் குறிப்பிடப்படாமல் இருந்தது. எனினும் 1610ஆம் ஆண்டில், ‘அரசருடைய பிரகடனங்களுக்கு எவ் வகையிலும் சட்டத்தின் ஆற்றல் கிடையாது’ என்ற தற்காலக் கருத்தை நிறுவக்கூடிய முறையில், நீதிபதிகள், தங்களுடைய ஆர்ந்தமைந்த கருத்தை அல்லது எதிர்ப்பைத் தெரிவித்தனர்.[1] இந்த நீதிபதிகள், இவ்வகையில் பொது மக்களுடைய கவனத்தைச் சட்டத்தின்பால் திருப்புகின்றனர் ; எனினும் அவர்கள் தாமாகவே, பாராளுமன்றச்

[1] இங்கிலாந்தின் அரசர் உயர் அதிகாரியென்ற சொல்லுக்கு உரிய பொருளில் பழங்காலத்தில் இருந்துவந்த நிலைமையானது, சில சந்தர்ப்பங்களில் இப்பொழுதும் சிற்சில சமயங்களில் காணப்படுகிறது ; அப்பொழுது அரசர் தனக்குரிய விசேட அதிகாரத்தின் மூலமாகச் சட்டமியற்றும் அதிகாரத்தைக் கையாளுகிறார். இவ்வாறு ஒரு புதிதாக வென்று கொள்ளப்பட்ட நாட்டிற்காக அரசர் சட்டம் செய்யலாம். (காமபெல்-ஹால் வழக்கு 1774) ; ஆலோசனைக் குழுவின் ஆணைகளின் மூலமாகக் கால்வாய்த் தீவுகளுக்காகச் (Channel Islands) சட்டமியற்றும் உரிமையை அரசர் கோரியிருக்கிறார் ; எனினும், இவ்வுரிமை செல்லுபடியாகுமா என்பது ஐயப்பாட்டிற்குரியது. ‘கால்வாய்த் தீவுகள் உண்மையில் இங்கிலாந்தை வென்று கொண்டதாக உரிமை கோருகின்றன ; ஆங்கில அரசோடு இணைக்கப்பட்டுள்ள இவை நார்மாண்டி மான்யத்தினுடைய துண்டுகளாகும். இந்தக் காரணத்திற்காகவேதான் எல்லா பிரிட்டிஷ் நாடு களிலும் இந்தத் தீவுகளில் மட்டுமே ஏகாதிபத்தியப் பாராளுமன்றச் சட்டம் எதுவும் சட்டமாகக் கட்டுப்படுத்த இயலுமா என்ற ஐயம் எழுகிறது. எனவே, நடைமுறையில் செய்யப்படுவது என்னவென்றால் ஏதேனும் ஒரு சட்டமானது இந்தத் தீவுகளில் செயல்படுத்தப்படும்போது, அச் சட்டத்தில் அதனை இத் தீவுகளிலும் கையாளும்படியாக ஓர் ஆணையைத் தனது ஆலோசனைக் குழுவல் விடுக்கும்படி அரசருக்கு அதிகாரம் அளிக்கும் ஒரு பிரிவையும் சேர்க்கின்றனர் ; இந்த ஆணையை இந்தத் தீவுகளில் பதிவு செய்யும்படியும், அப்பிரிவு கூறுகிறது ; அதன்படியே ஆலோசனைக் குழுவின் ஆணை அரசரால் செய்யப்படுகிறது. அது தீவுகளிலும் பதிவு செய்யப்படுகிறது’ என ஸர் எச். ஜென்கின்ஸ் என்பவர் British Rule and Jurisdiction beyond the Seas (1902) என்ற தனது நூலில் கூறுகிறார். ஆயினும் கால்வாய்த் தீவுகளைப்பற்றி எந்தவிதமான ஐயப்பாடு தோன்றினாலும், பாராளுமன்றத்தின் எந்தச் சட்டமும் கால்வாய்த் தீவுகளில் செயல்படுத்தப்படுதல் வேண்டுமென்று அதில் கூறப்பட்டிருக்கும்போது, அது அத்தீவுகளில் பதியப்பட்டாலும் சரி, அவற்றில் அது நடைமுறையில் இருந்து வரும் என்பதை எந்த ஆங்கில நீதிமன்றமும் ஒப்புக்கொள்ளும். கால்வாய்த் தீவுகளில் சட்டம் செய்வதனைப் பற்றிய முழு விவரமும் Renouf v. Attorney-General for Jersey (1936) வழக்கைப் பார்க்கவும். சுய ஆட்சியில்லாத பிரிட்டிஷ் குடியேற்ற நாடுகளில் சட்டம் செய்வதற்கு அரசருக்குள்ள அதிகாரத்தைப் பற்றிய விவரங்களை Jenkins எழுதிய நூலிலும், Jennings என்பவர் எழுதிய Constitutional Laws of the Commonwealth (1957) என்ற நூலிலும் பார்க்கவும்.

சட்டத்திஞலோ, பொதுச் சட்டத்திஞலோ விதிக்கப்படாத ஏதேனும் ஓர் கடமையை அல்லது பொறுப்பை எவர்மீதும் விதித்தல் இயலாது. 1766ஆம் ஆண்டில் ஓர் பிரகடனத்தின் மூலமாக, சாதாம் பிரபு, கோதுமை ஏற்றுமதி செய்யப்படுவதைத் தடுத்தார்; இவருடைய செயலின் விளைவாக நிறைவேற்றப்பட்ட இழப்பீட்டுச் சட்டமே, பிரகடனத்தின் மூலமாகச் சட்டம் செய்வதற்கு அரசர் கோரிய உரிமையை, சட்டத்தின் மூலமாக ஓர் முடிவுக்குக் கொண்டுவந்தது எனலாம்.

அரசர் பாராளுமன்றத்தைப் பிரகடனத்தின் மூலமாகக் கூட்டுவதென்பது, அவருடைய நிர்வாக ஆற்றலைப் பொதுச் சட்டத்தின்படி வெளிப்படுத்துகின்ற ஓர் ஒழுங்கான முறையே தவிர, அது ஓர் சட்டம் ஆகாது; அதேபோல் ஆலோசனைக் குழுவில் செய்யப்படும் ஆணைகள் (orders in council) பாராளுமன்றச் சட்டத்தால் ஆற்றல் கொடுக்கப் பெறுகின்றன; எனவே இவ்வகையான நிகழ்ச்சிகளில்தான் இக்காலத்தில் பிரகடனங்களுக்கும், ஆலோசனைக்குழுவின் ஆணைகளுக்கும் ஆற்றல் இருக்கிறது.

### பாராளுமன்றத்தின் மன்றங்கள் (Houses of Parliament)

(ii) **பாராளுமன்றத்தின் எந்த மன்றத்திலும் செய்யப்படும் தீர்மானங்கள்:** பொதுமக்கள் மன்றமானது அவ்வப்போது, தனது தீர்மானங்களுக்குச் சட்ட ஆற்றல் அல்லது அதிகாரம் உண்டென உரிமை கொண்டாடி வந்திருப்பதாகத் தெரிகிறது. இத்தகைய உரிமைக்கு ஆதரவு இல்லை என்பது தெளிவு; என்றாலும் அதனுடைய எந்த மன்றத்தின் தீர்மானத்துக்கும் எத்துணை மதிப்பு நீதிமன்றங்களால் அளிக்கப்படுகிறதென்பதைத் துல்லியமாக வரையறை செய்வதில் சிறிது இடர்ப்பாடு உண்டாகிறது.

எனினும், இதனைப் பொறுத்தவரையில் இரண்டு செய்திகள் தெளிவாகத் தெரிகின்றன.

### மன்றத்தினுடைய தீர்மானங்கள்

ஒன்று, எந்த மன்றத்தின் தீர்மானமும் ஓர் சட்டம் ஆகாது.

இந்நிலைமையானது, ஸ்டாக்டேல்—ஹான்சர்ட் வழக்கினின்று தோன்றிய ஓர் விளைவு ஆகும்.[1] 'அவதூறு விளைக்கக்கூடிய ஓர் பிடிபாடு (document) பொதுமக்கள் மன்றத்தின் ஆணையின் பேரில் வெளியிடப்பட்டது' என்ற ஓர் காரணத்திஞலோ, அல்லது, 'அவதூறு அடங்கிய

[1]. Stockdale v. Hansard (1839) 9 A. & E. 1; K. & L. 127: Case of the Sheriff of Middlesex (1840) 11 A. & E. 273; K. & L. 140; Bradlaugh v. Gossett (1884) 12 Q.B.D. 271. K. & L. 144; Burdett v. Abbott (1811) 14 East 1.

ஓர் அறிக்கையை வெளியிடக்கூடிய அதிகாரமானது பாராளுமன்ற அமைப்பினுள் அடங்கியது என்ற ஓர் தீர்மானத்தைப் பொதுமக்கள் மன்றம் பின்னர் செய்துள்ளது என்ற ஓர் காரணத்தினாலோ, அவதூறான அந்தப் பிடிபாடு அவதூறாக அல்லாமற்போகாது :' இதுவே மேற்குறிப் பிடப்பட்ட வழக்கில் அளிக்கப்பட்ட தீர்ப்பின் சாரம் ஆகும்.

இரண்டாவது, பாராளுமன்றத்தின் ஒவ்வொரு மன்றத்துக்கும், தனது செயல்முறைகளைப் (proceedings) பொறுத்தவரையில் முழுக் கட்டுப்பாட்டு அதிகாரம் உண்டு: மேலும், மன்றத்துக்கு இகழ்ச்சி அளித்தும் இடையூறு செய்தும் வரும் எவரையும் மன்றப் பழிப்புக் குற்றத்துக் குட்படுத்தித் தன்னைப் பாதுகாத்துக் கொள்ளவும் ஒவ்வொரு மன்றத்துக்கும் உரிமை உண்டு ; சட்டப்படியாக ஒவ்வொரு மன்றத்துக்கும் உரிய இந்த அதிகாரங்களை, அது கையாளும் வகை சரியா அல்லது தவறா என்று எந்த நீதிமன்றமும் ஆய்வு செய்யாது.

இதில் முதலாவதாகக் கூறப்பட்ட கருத்துரையையும், இரண்டா வதாகக் கூறப்பட்ட கருத்துரையையும் ஒன்றுக்கொன்று முரண்படாத வகையில் இணைப்பதுதான் மிகவும் இடர்ப்பாடு தோன்றுகிறது ; பொது மக்கள் மன்றத்தால் செய்யப்பட்ட ஓர் தீர்மானத்துக்கும், மேல் முறையீடு (appeal) செய்துகொள்ள முடியாமல் அளிக்கப்பட்ட ஓர் நீதிமன்றத்தின் தீர்ப்புக்கும் ஓர் ஒப்புமை கூறுகிறார் மிஸ்டர் ஸ்டீபன் என்ற நீதிபதி : இந்த ஒப்புமையை மேற்கோளாகக் கொண்டு மேலே குறிப்பிடப்பட்ட இடர்ப்பாட்டை அல்லது தடையை நாம் நீக்கிக் கொள்ளலாம்.

இந்த நீதிபதி தனது தீர்ப்பில் கூறுவதாவது : 'சட்டமன்றத்தின் தீர்மானமானது ஓர் நீதிமன்றத்தின் தீர்ப்பு என்றோ, நம்மால் (நீதி மன்றத்தால்) அத்தீர்மானம் மாற்றப்படுவதற்கு உரியது அன்று என்றோ நாம் கூறவில்லை; எனினும் அத்தீர்மானம் ஓர் தீர்ப்பைப் பெரிதும் ஒத்து இருக்கிறது. பொதுமக்கள் மன்றமானது ஓர் நீதிமன்றம் ஆகாது, என்றாலும், பாராளுமன்றச் சட்டங்களின் பிரிவுகளைச் சில குறிப்பிட்ட நிலைமைகளுக்கும் பொருந்துமாறு பொதுமக்கள் மன்றம் செயல்படுத்தும்போது, தனது சொந்த அலுவல்களை ஒழுங்கு செய் வதற்கு உள்ள உரிமையின் மூலமாக, அம்மன்றத்துக்கு ஓர் நீதிமன்றத் தின் இயல்புகள் அல்லது தன்மைகள் வந்து அடைகின்றன. அது தனது அலுவல்களை ஒழுங்கு செய்துகொள்ளும் உரிமையைச் சரிவர நிறைவேற்றுகிறது என்றும், அது அவ்வாறு செய்யும்போது, தன்னால் நிறைவேற்றப்படும் சட்டத்தை ஒட்டியே நடந்துகொள்ளுகிறது என்றும் நாம் கொள்ளுதல் வேண்டும். அது எடுக்கும் முடிவு, சட்டத் துக்கு ஒத்ததாக இல்லாவிட்டால், அப்பொழுது, அது, மேல் முறை யீடு செய்ய முடியாத தீர்ப்பை வழங்கும் நீதிபதியின் தவற்றை (error)

ஒத்து இருக்கிறது. இத்தகையதொரு தவற்றைப் பொதுமக்கள் மன்றம் செய்யக்கூடுமென்பதை நாம் ஒப்புக்கொள்ளத் தயங்கவோ அதிர்ச்சி அடையவோ வேண்டியதில்லை. எடுத்துக் காட்டாக ஓர் குற்றவழக்கில், தீர்ப்புச் சான்றுளர் குழுவினர் (Jury) வேண்டுமென்றே தவறானதொரு தீர்ப்பை வழங்கினால், இதனைத் தடுத்துக்கொள்ளும் வகையில் சட்டமானது எந்தத் தடையும் (remedy) அளிக்கவில்லை. 'கழுவாய்க்கு அல்லது தடுப்புக்கு (remedy) உட்படாத குற்றம் எதுவும் கிடையாது' என்று சொல்லப்படும் முதுமொழிக்குப் பலர் கூறுவது போல், 'ஒவ்வோர் ஒழுக்கக் குற்றத்துக்கும் அல்லது அரசியல் சார்பான குற்றத்துக்கும். ஒரு சட்டப்படியான தடை அல்லது கழுவாய் உண்டு' என்பது பொருள் அன்று. அவ்வாறான பொருள் இருக்குமாயின், இம்முதுமொழி உண்மைக்குப் புறம்பானதென்பது தெளிவு. ஆராய்ச்சி இல்லாமல் செய்யப்பட்ட, அரசாங்கத்தாரின் ஒப்புதல் முத்திரை இல்லாமல் செய்யப்பட்ட, ஆர்ந்தமைந்த ஓர் வாக்குறுதியை மீறினால், அவ்வாறு மீறிய செயலுக்குச் சட்டப்படியான தடுப்பு ஏதும் கிடையாது; வாயால் சொல்லப்படும் இழிவுச் சொற்களுக்கும், மிகவும் அழிவைத் தரக்கூடியதாக இருந்தாலும், சட்டப்படியான தடுப்புக் கிடையாது; மக்களை அடிமையாக்குகின்ற கொடிய சட்டங்களுக்கு எதிராகவும் சட்டப்படி தடுப்புக் கிடையாது; மக்களுக்கும் உடைமைக்கும் கொடிய போரினால் விளையும் கடுமையான அழிவுக்கு எதிராகவும் சட்டப்படியான தடுப்புக் கிடையாது. சட்டப்படியாக எழுகின்ற குற்றத்துக்குச் சட்டப்படியான தடுப்பு உண்டு என்பதே மேற்குறிப்பிடப்பட்ட முதுமொழிக்குப் பொருளாகும்; 'சட்டப்படியான தடுப்புக்கு வழி இல்லாத எதுவும் சட்டப்படியான குற்றம் ஆகாது' என்பதாக இம்முதுமொழியை மாற்றி அமைத்தால் அது மிகவும் பொருத்தமாக இருக்கும்.'[1]

### பாராளுமன்றத்தின் தீர்மானத்துக்கும் சட்டத்துக்குமுள்ள தொடர்பு

எனவே, சட்டத்தினுடைய நிலை இத்தகையது ஆகும். பாராளுமன்றத்தினுடைய எந்த மன்றத்துக்கும் தனது செயல்முறைகளைப் பொறுத்தவரை முழு அதிகாரமும் உண்டு; மேலும் மன்றத்தினுடைய கருத்தின்படி, அதற்கு இகழ்ச்சி செய்த குற்றத்துக்கு ஆளான எவரையும், அது, ஓர் நீதிமன்றம் செய்வதைப்போல, அவதூறு செய்த குற்றவாளி என்று தீர்ப்புக் கூறலாம். மிடில்செக்ஸின் ஷெரிப் அதிகாரியைப் பற்றி எழுந்த ஓர் வழக்கானது, பாராளுமன்றத்தின் இவ்வுரிமையை (The Case of the Sheriff of Middlesex) மிக விளக்கமான நிலையில் எடுத்துக்காட்டிற்று. இந்த ஷெரிப் அதிகாரி பாராளுமன்றத்தை இகழ்ந்ததாக, மன்றத்தின் தலைவரால் (Speaker) விடுத்த ஆணையின்படி சிறை

[1] Bradlaugh v. Gossett, 1940.

செய்யப்பட்டார். ஸ்டாக்டேல்—ஹான்சர்ட் வழக்கில் அரசியின் நீதி மன்றமானது (Court of Queen's Bench) அளித்த தீர்ப்புக்கு ஷெரீப் அதிகாரி கீழ்ப்படிந்து அதன்படி, பிரதிவாதியாகிய ஹான்சர்டின் உடைமைகளைக் கைப்பற்றினர், இந்தக் காரணத்துக்காகத்தான் பாராளுமன்றத்தால் ஷெரிப் சிறைப்படுத்தப்பட்டார். நீதிமன்றத்தின் தீர்ப்புக்குக் கீழ்ப்படிந்ததைத் தவிர பாராளுமன்றத்துக்கு எதிராக வேறு இகழ்ச்சிக் குற்றம் எதுவும் ஷெரிப் செய்யவில்லை; இது யாவருக்கும் தெரியும். இவ்வாறு இருப்பினும், ஹபியஸ் கார்ப்பஸ் (habeas corpus) என்ற ஆள் சுதந்திர உரிமைச் சட்டத்தின் மூலமாக ஷெரிப் விடுவிக்கப்பெற்று, அரசியின் நீதிமன்றத்தின் முன்னர் கொண்டுவரப் பட்டபோது, பாராளுமன்றத்தால் ஷெரிபின்மீது சாட்டப்பட்ட அவதூறுக் குற்றம் அல்லது இகழ்ச்சிக் குற்றம் என்ன என்பதை ஆய்வு செய்வதற்குத் தங்களுக்கு அதிகாரம் கிடையாது என்று அந்த நீதி மன்றத்து நீதிபதிகள் கருத்துத் தெரிவித்தார்கள், வேறுவகையாகக் கூறினல், நீதிமன்றங்களின் ஆணைகளுக்குக் கீழ்ப்படிதலையன்றி வேறொரு வகையிலும் இகழ்ச்சிக் குற்றம் எதையும் பொதுமக்கள் மன்றத்துக்கு எதிராக நீதிமன்றங்களின் அலுவலர்கள் செய்யாவிட்டாலும், நீதிமன்றங் களின் அலுவலர்களையே பொதுமக்கள் மன்றமானது அவதூறுக் குற்றம் சாட்டிச் சிறைப்படுத்தும்போது, அவர்களைக் காப்பாற்றுவதற்கு உரிமை எதனையும் நீதிமன்றங்கள் கோருவது இல்லை. மாருகப் பாராளுமன்றத் தின் எந்த மன்றத்தாலும் செய்யப்படும் தீர்மானமானது எவ்வகையிலும் ஓர் சட்டம் ஆகாது. பொதுமக்கள் A என்பவரை அவர் மன்றத்தில் செய்த எச்செயலுக்கும் தொடர்பில்லாமல், அல்லது, அவர்மீது அவதூறுக் குற்றம் சாட்டும் ஆணையெதுவுமில்லாமல் இருக்கையில் அவரை X என்பவர் பொதுமக்கள் மன்றத்தின் ஆணையின்பேரில் மன்றக் கட்டடத்தைவிட்டு வெளியில் அடித்து விரட்டிவிடுகிருர் என்று வைத்துக்கொள்ளுவோம்; அல்லது X என்பவர் ஒரு குற்றத்தைச் செய்ய, அதனுல் அவர் ஏதேனும் ஒரு பாராளுமன்றச் சட்டத்தின்படி ஓர் அபராதம் கட்டவேண்டி வருகிறது என்றும், அவ்வபராதத்தை A என்பவர் வாங்கவேண்டி வருகிறது என்றும் வைத்துக்கொள்வோம். இச்சூழ்நிலையில் பொதுமக்கள் மன்றமானது X என்பவருடைய செயலைத் தான் ஆணையிட்டதாகவும் அல்லது ஒப்புக்கொண்டதாகவும் கூறி ஒரு தீர்மானத்தைச் செய்யுமானல், அந்தத் தீர்மானத்தை ஆதாரமாக வைத்துக்கொண்டு X என்பவர் தன்மீது எடுக்கப்படும் ஸிவில் அல்லது கிரிமினல் வழக்கு நடவடிக்கைகளுக்கு எதிராகத் தான் குற்றவாளியல்லவென்று சட்டப்படியாக வழக்காட முடியாது.[1] இதனை எடுத்துக் காட்டுவதற்குச் சான்றுகள் வேண்டுமானல், அவை 1840ஆம் ஆண்டின் பாராளுமன்ற அறிக்கைகள் சட்டம் (Parliamentary Papers Act, 1840) என்பதில் நிறையக் காணக் கிடைக்கின்றன.

1 Attorney-General *v.* Bradlaugh (1885), 14 Q.B.D. 667.

ஸ்டாக்டேல்—ஹான்ஸர்ட் வழக்கில் எழுந்த ஒரு பெரும் கருத்து மாறுபாட்டின் விளைவாக இச்சட்டம் செய்யப்பட்டது; பாராளுமன்ற அறிக்கைகளைப் பாராளுமன்றத்தினுடைய எந்த மன்றத்தின் ஆணையின் பேரிலும் சில குறிப்பிட்ட ஆள்கள் வெளியிடுவதனால், அவ்வாறு வெளி யிடும் அலுவலில் அமர்த்தப்பட்ட ஆட்களுக்கு, நேரடியாகப் பாது காப்புக் கொடுக்கும் பொருட்டு இச்சட்டமானது செய்யப்பட்டது. பாராளுமன்றச் செய்திகளை இச்சட்டமானது செய்யப்படுவதற்கு முந்திய காலத்தில் வெளியிடுவதென்பது அவதூறான செயல் ஆகை யினாலும், அவ்வாறு வெளியிட்டால் தோன்றும் அவதூறுக் குற்றச் சாட்டுக்கு எதிராகப் பாராளுமன்றத்தின் ஆணை ஒன்றே சட்டப்படி சரியான தற்காப்பு அளிக்காது ஆகையினாலும், இந்தச் சட்டமானது செய்யப்படவேண்டிய அவசியம் உண்டாயிற்று. இந்தச் சட்டத்தைச் செய்யும்போது பொதுமக்கள் மன்றம், 'தான் ஸ்டாக்டேல்—ஹான்சர்ட் வழக்கில் வெற்றியாக எடுக்க முயன்று தோற்றுப்போன நடவடிக்கை யானது, சட்டத்திற்கு ஒத்ததே என்று கூறி, அதற்குச் சட்டத்திற்கு உள்ள ஆற்றலைக் கொடுக்கும்படியாகச் சட்டமன்றத்தின் அதிகாரம் முழுவதையும் கோரிற்று; மேற்கூறப்பட்ட வழக்கில் அளிக்கப்பட்ட அரசியின் நீதிமன்றத்துத் தீர்ப்பு அம்மன்றத்துக்கு எதிராக இருந் தாலும், அத்தீர்ப்புக்கு எதிராக அது மேல்முறையீடு எதுவும் செய்யாமல், தீர்ப்புச் சரியானதே என ஒப்புக்கொண்டு, அத்தீர்ப்பிற்கு அடிப்படை யான கொள்கையையும் உறுதி செய்தது; சட்டமன்றத்தினுடைய எந்தக் கிளைமன்றமும் தனது உரிமைகளை வலியுறுத்தி, அவற்றின் மூலமாக, நாட்டில் யாவராலும் ஏற்றுக்கொள்ளப்பட்ட எச்சட்டத் தையும் மாற்றவோ, நிறுத்திவைக்கவோ, அல்லது அச்சட்டத்தினால் அளிக்கப்பட்ட பாதுகாப்பின் மூலமாகத் தனது உரிமையைக் காத்துக் கொள்ளுவதினின்றும் எந்த ஆங்கிலேயனையும் தடுக்கவோ முடியாது; இதுவே அக்கொள்கை ஆகும்.'[1]

[1] Arnould, 'Memoir of Thomas, first Lord Denman (1873); 'உரிமை' என்ற தலைப்பின் கீழ் பாராளுமன்றத்தின் ஒவ்வொரு மன்றத்தினுடைய வரை யறையற்ற அதிகாரங்களின் எல்லையையும், அல்லது அளவையும் அல்லது பாராளுமன்றத்தின் சட்டம், வழக்கம் ஆகியவற்றின் அளவையும் தீர்மானித் தலைப்போல இடர்ப்பாடானது வேறொன்றுமில்லை. பாராளுமன்றத்தின் இரு மன்றங்களாலும், சிறப்பாகப் பொதுமக்கள் மன்றத்தினால் கையாளப்படுகின்ற அதிகாரங்கள் (powers) நாட்டின் சாதாரணச் சட்டத்திற்குள்ள வலிமையைப் (authority) பெரிதும் ஒத்திருக்கின்றன. பாராளுமன்ற உரிமை என்பதற்கு, அதனுடைய இயல்பைப் பொறுத்த அளவில், திட்டவட்டமாகச் சட்டப்படியான வரையறை அல்லது இலக்கணம் எதுவும் வகுக்கப்படவில்லை. ஓரிரண்டு செய்திகள் இதனைப்பற்றி விளக்கமாக நிறுவப்பட்டுள்ளன; அவற்றை இங்குக் குறிப்பிடுவோம்.

(1) பாராளுமன்றத்தின் எந்த மன்றமும் எவர்மீதும் அவதூறுக் குற்றம் சாட்டலாம்; இவ்வாறு அக்குற்றம் சாட்டப்பட்டதற்குக் காரணம் காட்டப்படாம லிருந்தால், அக்குற்றத்தைப் பற்றிய எல்லா விவரங்களையும் நீதிமன்றங்கள் ஆய்வு செய்யுமே தவிர, அக்குற்றச்சாட்டுக்குரிய காரணம் கூறப்பட்டிருந்தால், அதனுடைய விவரங்களை நீதிமன்றங்கள் ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளமாட்டா; மே என்பவர் எழுதிய 'Parliamentary Practice' (16 ஆம் பதிப்பு, 1957), (பக்கங்கள்

## தொகுதிகள் (Constituencies)

(iii) **பாராளுமன்ற வாக்காளர்கள் அளிக்கும் வாக்கு** (The Vote of the Parliamentary Electors.)[1]: 'பாராளுமன்ற உறுப்பினர்களைத் தேர்ந்தெடுப்பதற்கு உரிமையுள்ள வாக்காளர்கள் அடங்கிய தொகுதிக்கு ஆங்கில அரசியலமைப்பில் சட்டம் இயற்றும் அதிகாரம் ஒரு சிறிதாயினும் உண்டு' என்ற கருத்து அரசியல் ஆய்வுகள் சிலவற்றில் குறிப்பாக அவ்வப்போது வெளியிடப்படுகிறது. இத்தகையதொரு கருத்துக்கு ஓரளவு உண்மை இருக்கிறது என்பதை நாம் காண்போம்; தொகுதியாளர்களுடைய விருப்பங்கள் பாராளுமன்றத்தின் செயலை உருவாக்குகின்றன என்ற முக்கியமான கருத்தைத்தான் மேற்கூறிய கருத்துச் சுட்டிக்காட்டுகிறது. ஆயினும் சட்டம் இயற்றும் செயலில் பாராளுமன்ற வாக்காளர்களுக்குச் சட்டப் படியாக ஓர் பங்கு உண்டு எனக் கூறும் எந்தக் கருத்தும், சட்டத்தில் ஓர் வாக்காளருக்கு உரிய நிலையைப்பற்றிய கருத்துக்கு மிகவும் முரண்பாடு உடையதாகும். ஆங்கில அரசியலமைப்பின்படி, வாக்காளர்களுக்குச் சட்டப்படி உரிய ஒரே உரிமையாவது, பாராளுமன்ற உறுப்பினர்களைத் தேர்ந்தெடுத்தலே ஆகும். வாக்காளர்கள் பாராளுமன்றச் சட்டங்களைத் தாமே ஆக்கவும், அவற்றுக்கு ஒப்புதல் கொடுக்கவும், அவற்றை நீக்கவும், சட்டப்படியாக அதிகாரம் எதனையும் பெற்றிருக்கவில்லை. 'ஓர் சட்டமானது வாக்காளர்களுடைய கருத்துக்கு மாறான

[1] ஆங்கில அரசாங்கத்தில் மக்களுடைய பங்கு வளர்ச்சியைப்பற்றிய விவரங்களை எம்டன் என்பவர் எழுதிய 'The People and the Constitution' (1956) என்ற நூலில் பார்க்கவும்.

---

94—98). எனவே, இரு மன்றங்களுள் எதுவும், தனக்கு எவராவது அவதூறுக் குற்றம் செய்ததாகக் கருதினால், அவரை அக்குற்றத்துக்குச் சிறைப்படுத்தும் பொருட்டு நடவடிக்கை எடுக்கலாம்; (Burdett v. Abbott வழக்கு, 1811; மிடில் செக்ஸ் ஷெரிபின் வழக்கு, 1840.) அவ்வாறு சிறைப்படுத்துவதற்காக விடுக்கப்படும் ஆணையில் (Writ) சிறைப்படுத்துவதற்காகக் கூறப்பட்டுள்ள காரணமானது, சட்டப்படி பொருந்தாததாக இருக்குமானால், அப்பொழுது, சிறைப்படுத்தப்பட்டுள்ள ஆளுக்கு விடுதலை அளிக்கும் பொருட்டு, அதற்குரிய ஆள் விடுதலை ஆணை (Writ of Habeas Corpus) விடுப்பதற்கு வழி உண்டு (Paty's Case, 1704).

(2) தனக்குக் குற்றம் செய்தவரை, ஓர் குறிப்பிட்ட காலத்துக்கோ அல்லது தான் கூடியிருக்கும் காலத்துக்கும் அதிகமாகவோ, சிறைப்படுத்துவதற்குப் பிரபுக்கள் மன்றத்துக்கு அதிகாரம் உண்டு. (May, 'Parliamentary Practice', 1957, p. 100, 101). பொது மன்றமானது குற்றவாளியை ஓர் குறிப்பிட்ட காலத்துக்குச் சிறைப்படுத்த இயலாது; அதனால் சிறைப்படுத்தப்பட்டவர்கள், மன்றத்தின் கூட்டம் ஒத்திப் போடப்படுதற்கு முன் விடுதலை செய்யப்படாவிட்டால், அது ஒத்திப் போடப்படும்போது விடுதலை செய்யப்படுகின்றனர்.

(3) பாராளுமன்றத்தின் எந்த மன்றத்தின் மீதாயினும், அல்லது, மன்ற உறுப்பினர் என்ற முறையில், அதனுடைய உறுப்பினர் எவர்மீதாயினும் அவதூறு விளைவிக்கப்பட்டால், அச்செயல் அவதூறுக் குற்றமாக (contempt) எடுத்துக் கொள்ளப்படும்.

(4) மன்றங்களுக்கும், அவற்றின் எல்லா உறுப்பினர்களுக்கும், தங்களுடைய கடமைகளைச் செய்வதற்குத் தேவையான எல்லா உரிமைகளும் உண்டு.

தாக இருப்பதால், அச்சட்டம் செல்லுபடி ஆகாது' என்ற வாதத்தை (argument) எந்த நீதிமன்றமும் எக்காலத்தும் ஒப்புக்கொள்ளாது; வாக்காளர்களுடைய கருத்துப் பாராளுமன்றத்தின் மூலமாக மட்டுந் தான் சட்டப்படி தெரிவிக்கப்பட வேண்டியதாகும். இந்த ஓர் நிலைமை யானது பிரதிநிதித்துவ அரசாங்க முறையினால் தோன்றிய இயல்பு அன்று. சுவிட்சர்லாந்து நாட்டில், அரசியலமைப்பில் எந்த மாறு தலும் அல்லது திருத்தமும், வயதுவந்த எல்லா ஆண் குடி மக்களுடைய ஒப்புதலுக்கோ, அல்லது மறுப்புக்கோ விடப்பட்ட பின்னரே நிறை வேறும்; அரசியலமைப்பில் எந்த மாறுதலையும் செய்யாத ஓர் சாதாரணச் சட்டமுங்கூட, பெடரல் சட்டமன்றத்தில் அது நிறைவேற்றப்பட்ட பின்னர், குடிமக்களுடைய வாக்குக்கு விடப்படவேண்டுமென்பதாக ஓர் குறிப்பிட்ட எண்ணிக்கையுள்ள குடிமக்கள் கோரினால், அவ்வாறு குடிமக்கள் வாக்குக்கு விடப்பட்டு, அதில் அதற்குச் சாதகமாக வாக்குகள் கிடைக்காவிட்டால், அது செல்லுபடியாகாததாகிவிடும்.

### நீதிமன்றங்கள்

(iv) சட்ட நீதிமன்றங்கள் (The Law Courts): ஆங்கிலச் சட்டத்தின் பெரும்பகுதி உண்மையில் நீதிபதிகளாலேயே செய்யப் படுகின்றன; இங்கிலாந்தில் நீதிமன்றங்களுடைய சட்டமியற்றும் ஆற்றலின் விரிவையும் தன்மையையும் அறிந்துகொள்ள விரும்புபவர், ஆசிரியர் போலாக் (Pollock) எழுதியுள்ள வழக்குச் சட்டத்தின் இயல் (Science of Case Law) என்ற வியத்தகு கட்டுரையைப் படிக்க வேண்டும்.[1] என்னுடைய இவ்விரிவுரைகளில் நன்றாக இதனை ஆராய் வதற்கு அடங்காத அளவுக்கு இப்பொருள் மிகவும் விரிவுடையதாகும். இங்கு நாம் குறிப்பிட வேண்டுவது ஒன்றுதான்; அதாவது பழைய மேற்சான்றுகளை அல்லது முன் நிகழ்வுகளை (precedent) நமது நீதிபதி கள் பின்பற்றுவதனால், காலாவட்டத்தில், தவிர்க்க முடியாத வகையில், நீதிமன்றங்களே முன் நிகழ்வுகளிலிருந்து தீர்ப்பளிப்பதற்கு உதவும் நிலையான விதிகளைச் செய்கின்றன: இந்த விதிகளும் நடைமுறையில் சட்டங்களாக அமைகின்றன; முந்தியதொரு வழக்கைத் தீர்ப்பதற்குக் கையாளப்பட்ட கொள்கையை ஒட்டியே, ஒரு வழக்கைத் தீர்க்கின்ற நீதிபதிகளின் பழக்கத்துக்குத்தான் மேற்சான்று அல்லது முன் நிகழ்வு என்று பெயர். இத்தகைய நீதிமன்றத்தின் சட்டம் இயற்றும் ஆற்றல், மேலாகப் பார்க்குமிடத்துப் பாராளுமன்றத்தின் இறைமைக்கு ஏற்காத, முரண்பாடு உடையதாகத் தோன்றும். ஆனால், உண்மை இது அன்று. எந்தச் சட்டத்தையும் நீக்குவதற்கு அதிகாரத்தை ஆங்கில நீதிபதிகள் கோரியதுமில்லை, கையாண்டதுமில்லை; இதற்கு மாறாக, நீதிபதிகளினால் செய்யப்பட்ட சட்டங்களைப் பாராளுமன்றச் சட்டங்கள் நீக்க

[1] Pollock, 'Essays in Jurisprudence and Ethics', (1882).

முடியும், அவை அவ்வப்போது நீக்கியும் இருக்கின்றன. சுருங்கச் சொன்னால், நீதிபதிகள் இயற்றும் சட்டமானது, பாராளுமன்றத்தின் ஒப்புதலோடும், அதனுடைய மேற்பார்வைக்கு உட்பட்டும் செய்யப் படுகின்ற கீழ்நிலையிலுள்ள சட்டமாகும் (subordinate legislation).

பாராளுமன்ற இறைமைக்கு வரம்புகளாகக் கூறப்படுபவை

**B.** **பாராளுமன்றத்தின் சட்டமியற்றும் இறைமைக்குக் காட்டப் படும் சட்ட வரம்புகள் (Alleged legal limitations on the legislative sovereignty of Parliament):** இறைமைக்கு வரம்பு களை ஏற்படுத்தக் கூடியனவாகக் கூறப்படும் கருத்துகளுக் குரிய மறுப்புகளையெல்லாம் ஆஸ்டின் என்னும் ஆசிரியரும், ஹாலண்ட் என்னும் பேராசிரியரும் கூறியுள்ளனர்.[1] இம் மறுப்பு களைப்பற்றி நாம் இங்கு ஏதும் கூறவேண்டியதில்லை. மேலும், 'ஒவ்வோர் அரசிலும் (state), அதனுடைய அரசியலமைப்பின் தன்மை எவ்வாறாயினும், அதன்படி, எந்தச் சட்டத்தையும், சட்டப்படியாக மாற்றக்கூடிய ஒருவரோ அல்லது பலரோ இருந்து, அவ்வழியாக, அவரே அந்நாட்டின் சட்டப்படியான உயர்தர அதிகாரியா இருப்பார்' என்பது உண்மையா, இல்லையா என்பதையும் நாம் இங்கு ஆராய வேண்டுவதில்லை 'ஆஸ்டினும் மற்றச் சட்டவல்லுநரும் கொண்டுள்ள கருத்துப்படி ஒவ்வொரு நாகரிகமான அரசிலும் காணப்படுவதைப் போல, ஆங்கில அரசியலமைப்பிலும், பாராளுமன்றமே, மேற்கூறிய இயல்புகளோடு கூடிய, உயர்தர சட்ட அதிகாரியாகவும், அல்லது இறைமை அதிகாரியாகவும் அமைந்துள்ளது' என்பதைக் காட்டக் கூடிய மேலுமொரு சான்றைச் சுட்டிக் காட்டுவதுதான் நமது நோக்கமாகும்; இந்நோக்கத்தை நிறைவேற்றும் வாயிலாகப் பாராளு மன்ற அதிகாரத்திற்கு வரம்புகளாக இருப்பதாகக் கூறப்படுபவை உண்மையில் அவ்வாறு இருக்கின்றனவா என்று ஆராய்ந்து, கடைசி யில் அவை எதுவும் ஆங்கிலச் சட்டத்தில் ஒப்புக்கொள்ளப்பட்டவை அல்ல என்றும் நாம் எடுத்துக் காட்டுவோம். வரம்புகளாகக் கூறப் படுபவை எண்ணிக்கையில் மூன்று ஆகும்.[2]

[1] Austin, 'Jurisprudence' (1879), Holland. 'Jurisprudence', (1906), இறைமையைப்பற்றிச் சுருக்கமாகவும், தெளிவாகவும் Lewis என்பவர் 'Remarks on the Use and Abuse of some Political Terms, (1832) என்ற நூலிலும், Bryce என்பவர், 'Studies in History and Jurisprudence' (1901), என்ற நூலிலுள்ள Obedience, 'The Nature of Sovereignty' என்ற கட்டுரைகளிலும் கூறியுள்ளனர்.

[2] கோக் போன்ற நீதிபதிகளால் இன்னொரு வரம்பும் சுட்டிக் காட்டப்படு கிறது. (Benham's Case, 1610, Case of Proclamations, 1610; Hearn எழுதிய 'Government of England', 1887); பொதுச் சட்டத்தின் (Common law) கோட்பாடுகளைப் பாராளுமன்றச் சட்டம் எதுவும் மீறமுடியாது எனக் கூறப்படு கிறது. இந்தக் கோட்பாடு முன்னொரு காலத்தில் பொருளுள்ளதாக இருந்தது (Maine, 'Early History of Institutions', 1905); ஆனால் அதற்கு நீதிமன்றத்தின் முறையான ஒப்புதல் கொடுக்கப்படவில்லை; அது இப்பொழுது வழக்கற்றுப் போயிற்று.

. சர்வதேசச் சட்டத்தினுடைய கோட்பாடுகளுக்கும் அல்லது ஒழுக்கக் கோட்பாடுகளுக்கும், முரண்பாடாகப் பாராளுமன்றச் சட்டங்கள் இருக்குமானால், அவை செல்லுபடியாக மாட்டா என்று கூறப்படுகிறது.

## ஒழுக்கச் சட்டம் (Moral Law)

தனிவாழ்வுபற்றிய ஒழுக்க விதிகளுக்கோ அல்லது பொது வாழ்வு பற்றிய ஒழுக்க விதிகளுக்கோ முரண்பாடாகப் பாராளுமன்றம் உண்மையில் எந்தச் சட்டத்தையும் செய்யமுடியாது என்பதாகவும் கூறப்படுகிறது. இந்தக் கருத்தைப் பின்வருமாறு பல சொற்களில் பிளாக்ஸ்டன் என்பவர் எடுத்துக் கூறுகிறார்: ‘இயற்கையின் சட்டமானது (Law of Nature) மனித இயல்போடேயே ஒட்டி அமைந்திருப்பதனாலும், அது கடவுளாலேயே அருளிச் செய்யப்பட்டமையினாலும், அதனுடைய கட்டளையானது மற்றெதனுடைய கட்டளையையும் விட உயர்வானது ஆகும். அது உலகம் முழுவதையும், எல்லா நாடுகளையும், எல்லாக் காலங்களிலும் கட்டுப்படுத்துவதாகும்; மனிதனால் உண்டாக்கப்பட்ட சட்டங்கள் எவையும், இதற்கு மாறுபாடாக இருந்தால் அவை செல்லுபடியாக மாட்டா; மனிதனுடைய சட்டங்களுள்ளும் செல்லுபடியாகத் தக்கவையெல்லாம், தங்களுடைய ஆற்றலையும் அதிகாரத்தையும், நேரடியாகவோ அல்லது மறைமுகமாகவோ இந்த மூலாதாரமான இயற்கைச் சட்டத்திலிருந்தே பெறுகின்றன.[1] ‘மேலும் பாராளுமன்றத்தினுடைய அதிகாரத்திற்குரிய எல்லைகளையும் மீறிய சட்டங்களை, நீதிமன்றங்கள் செயல்படுத்துவதற்கு மறுக்கும்’ என்று பொருள்படும்படியாகத் தற்கால நீதிபதிகள் சில சமயங்களில் கூறுகின்றனர்.[2] ஆனால், பிளாக்ஸ்டனின் சொற்களுக்கும் நீதிபதிகளால் சில சமயங்களில் சொல்லப்பட்ட கருத்துகளுக்கும் நாம் ஒரு வரையறைக்குள் அடங்கிய விளக்கம்தான் கொடுக்க வேண்டும். ‘நீதிபதிகள் ஒழுக்க விதிகளை எடுத்து விளக்கும்போது பாராளுமன்றச் சட்டங்களை மீறலாம்’ என்ற கருத்துக்குச் சட்டப்படியான ஆதாரம் எதுவும் கிடையாது. இத்தகையதோர் ஆதாரம் இருப்பதாகக் கூறுவதனுடைய பொருள் உண்மையில் என்னவென்றால், ‘நீதிபதிகள் ஒரு பாராளுமன்றச் சட்டத்துக்குக் கொடுக்கப்படவேண்டிய பொருள் அல்லது அர்த்தம் என்ன என்பதைத் தீர்மானிக்கும்போது, அவர்கள், சாதாரண ஒழுக்க விதிகளையோ அல்லது சர்வதேசச் சட்டத்தின் கொள்கைகளையோ மீறும் நோக்கம் பாராளுமன்றத்துக்கு இல்லை என்று அனுமானித்துக் கொண்டு, அதற்கேற்ப, பொருத்தமான இடங்களில்

[1] Hearn என்பவர் எழுதிய ‘Government of England’, 1887 என்ற நூலையும், Blockstone's ‘Commentaries’, 41ஐயும் பார்க்கவும்.

[2] Colquhoun v. Brooks, 1888.

தனிவாழ்வுபற்றிய ஒழுக்கக் கோட்பாடுகளுக்கும் சர்வதேச ஒழுக்கக் கோட்பாடுகளுக்கும் பொருந்தக்கூடிய வகையில் பாராளுமன்றச் சட்டத்திற்கு விளக்கம் கொடுத்தல் வேண்டும்' என்பதேயாகும். இக்காலத்தில் எந்த வழக்கறிஞராவது, ஒரு பாராளுமன்றச் சட்டம் ஒழுக்க விதிக்கு முரணானது என்று, அல்லது அது பாராளுமன்ற அதிகாரத்தின் எல்லைகளுக்கும் அப்பாற்பட்டது என்று கூறி, அதனால் அச்சட்டம் செல்லுபடியாகாது என்று கூறுவாரானால் அவருடைய இக்கருத்தை நீதிபதி ஏற்றுக்கொள்ளமாட்டார். இதில் எவருக்கும் விளங்கக்கூடிய வகையில் சாதாரணமாகத் தெரிகின்ற உண்மை என்ன வென்றால், ஒரு சட்டமானது 'தீய சட்டம் என்று கூறப்பட்டாலும், அது ஒரு சட்டமாகவே இருப்பதால், அதனை நீதிமன்றங்கள் ஏற்றுக் கொண்டு அதற்குக் கீழ்ப்படிதல் வேண்டும்' என்ற கொள்கையை ஒட்டியே நமது நாட்டிலுள்ள எல்லா நீதிமன்றங்களும் ஒருமித்துச் செயல்படுகின்றன.

இரண்டாவதாக, தனிச்சிறப்பு அதிகாரத்தை மாற்றுவதற்குப் பாராளுமன்றத்துக்கு அதிகாரம் கிடையாது என்று பொருள்படும் அளவுக்குக் கருத்துகள் அவ்வப்போது கூறப்பட்டுள்ளன.[1]

### தனிச்சிறப்பு அதிகாரம் (Prerogative)

ஸ்டுவர்ட் அரசர்களுடைய ஆட்சிக் காலத்தில், அரசர்களாலும், அரசருடைய அதிகார வளர்ச்சியை விரும்பிய வழக்கறிஞர்களாலும், பேக்கன் போன்ற அரசியல் வல்லுநராலும் மேற்கூறிய இந்தக் கருத்து ஆதரிக்கப்பெற்றது: இதன்படி, அரசருக்குத் தனிச்சிறப்பு அதிகாரம் என்ற பெயரில் விரிவான வரையறையற்ற உரிமைகளும் அதிகாரங்களும் ஒதுக்கி வைக்கப்பட்டிருப்பதாகவும், இந்தத் தனிச்சிறப்பு அதிகாரம் அல்லது இறைமை அதிகாரத்தின் ஒரு பகுதியானது நாட்டின் சாதாரணச் சட்டத்தைவிட மிக உயர்வானது என்றும் கூறப்பட்டது.[2] இந்தக் கருத்தினின்றும், 'சட்டங்களை நிறுத்தி வைப்பதற்கும் அல்லது அவற்றிற்குக் கீழ்ப்படிதலினின்றும் சிலருக்கு விலக்கு அளிப்பதற்கும் அரசருக்கு அதிகாரம் உண்டு' என்ற கருத்து வருவிக்கப்படுகிறது; இந்த இரண்டு கருத்துகளும், 'தனிச்சிறப்பு அதிகாரத்திலடங்கியுள்ள உயரிய ஆற்றல்கள் எல்லாம், பாராளுமன்றச் சட்டத்தினால் மாற்ற முடியாதவையாக இருக்கின்றன' என்ற ஒரு முடிவை நமக்கு உணர்த்துகின்றன. ஆனால், இந்த இடத்தில் நாம் ஒரு காலத்தில் நிலவிய அரசியல் சம்பந்தமான கருத்து மாறுபாடுகளைப்பற்றி ஏதும் கூற வேண்டியதில்லை. இங்கு நாம் காணவேண்டியதெல்லாம் என்ன

[1] Stubbs, 'Constitutional History of England', vol. ii, 1875.

[2] Gardiner, 'History of England', vol. iii, 1883. Abbott, 'Francis Bakon' (1885).

வென்றால், உடன்படிக்கை செய்யும் உரிமை போன்ற சில அதிகாரங்கள் சட்டத்தினால் அரசருக்கே கொடுக்கப்பட்டிருந்தபோதிலும், நடைமுறையில் அவ்வதிகாரங்கள் எல்லாம் அரசாங்கத்தினுடைய நிர்வாகத்துறையினால் கையாளப்படுகின்றன; என்றாலும் இந்த அதிகாரங்களும் அல்லது அரசருடைய வேறு எந்த அதிகாரமும் பாராளுமன்றச் சட்டத்தினால் ஒழுங்குபடுத்தப்படாமலோ அல்லது நீக்கப்படாமலோ இருப்பவையென்று இக்காலத்தில் எந்த வழக்கறிஞரும் கூறமாட்டார்; அல்லது, உடன்படிக்கைகள் செய்தற்குரிய வகையை நிர்ணயிக்கின்ற ஓர் சட்டத்தையோ, அல்லது ஓர் உடன்படிக்கைக்குப் பாராளுமன்றங்களினுடைய ஒப்புதலின் மூலமாகவே ஆற்றலை அல்லது மதிப்பை அளிக்கக்கூடிய சட்டத்தையோ, சட்டப்படி செல்லத்தக்கது அன்று, என்று நீதிபதிகள் கூறுதல்கூடும் என்றும், இக்காலத்தில் வழக்கறிஞர் எவரும் ஒப்புக்கொள்ளமாட்டார்.[1]

## பாராளுமன்றத்தின் முந்திய சட்டங்கள் (Preceding Acts of Parliament)

மூன்றாவதாகக் கூறப்படும் வரம்பு பின்வருமாறு: ஒரு பாராளுமன்றத்தால் செய்யப்படும் சட்டங்களை அதற்குப் பிற்காலத்திலுள்ள பாராளுமன்றமானது மாற்ற முடியாது எனவும், ஆகையால் இப்பொழுதுள்ள பாராளுமன்றத்தினுடைய சட்டமியற்றும் அதிகாரமானது, அதற்குப் பின்வரும் பாராளுமன்றங்களின் சட்டங்களால் வரையறுக்கப்படலாமெனவும் பொருள் படும்படியாகப் பாராளுமன்றச் சட்டங்களின் சில வாசகங்கள் அமைந்துள்ளன.[2]

[1] பொது நிதியிலிருந்து செலவு செய்வதற்கு அனுமதி கேட்கும் எந்தத் தீர்மானத்தையும் பொதுமக்கள் மன்றமானது பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளு முன்பாக, அத்தகைய தீர்மானத்துக்கு அரசருடைய அமைச்சருடைய சிபாரிசு அல்லது பரிந்துரை இருத்தல் வேண்டும். அரசி தனது தனிச்சிறப்பு அதிகாரங்களையெல்லாம் பாராளுமன்றமானது சட்டத்தின் மூலமாக மாற்றத் தீர்மானிக்கும்போது, அவற்றை அம்மன்றத்தினிடமே விட்டுவிடுகின்றாள்.

[2] இந்தக் கருத்துத் தவறுடையது என்பதாக பேக்கன் கூறுகிறார். The Works of Francis Bacon-ல் காணப்படும் அவருடைய கருத்தாவது:

" இப்பொழுதுள்ள பாராளுமன்றத்தில் செய்யப்பட்டுள்ள சட்டமானது ஓர் புதுமையான இயல்பை உடையதாகும்; அது சட்டப்படியாக அமைந்துள்ளது என்பதைவிட அது நியாயமானது என்பதே பொருந்தும்; அது தக்க பாதுகாப்புகளை அளிப்பதைவிட தாராள மனப்பான்மையைத்தான் காட்டுகிறது. அச்சட்டம், 'அரசருக்கு இக்காலத்தில் படைபலத்தின் மூலமாகவோ அல்லது வேறு எதன் மூலமாகவோ உதவி செய்தால் அவரை அதற்காகக் குற்றம் சாட்டுதலோ, அல்லது பாராளுமன்றச் சட்டத்தின் மூலமாக அவருடைய உயிரையோ உடைமையையோ பறிப்பதோ கூடாது; அவருடைய உயிரைப் பறிப்பதற்காகச் சட்டம் ஏதும் செய்யப்பட்டால் அது செல்லுபடி ஆகாததாக இருத்தல் வேண்டும்' என்று கூறிற்று............எனினும் இச்சட்டத்தின் பிற்பகுதியைப் பொறுத்தவரை அதற்குள்ள வலிமையும் ஆற்றலும் ஒரு கற்பனையாகவே காணப்படுகிறது; (ஏனென்றால், பாராளுமன்றத்தினால் முன்பு செய்யப்பட்ட ஒரு சட்டம் எதிர்காலத்தில் அதனால் செய்யப்படுகிற ஒரு சட்டத்தை வரையறுக்கவோ நீக்கவோ கூடும்.) ஏனென்றால், மிக உயர்தரமானதாகவும் முழுமையானதாகவும் இருக்கின்ற எந்த ஓர் அதிகாரமும் தனக்குத்தானே

### இணைப்புச் சட்டங்கள் (Acts of Union)

'பாராளுமன்றங்கள் பல தடவைகளில் தங்களுக்குப் பின் வருகின்ற பாராளுமன்றங்களின் அதிகாரங்களைக் கட்டுப்படுத்தக்கூடிய சட்டங்களை நிறைவேற்ற முயன்றிருக்கின்றன' என்பது உண்மையே; ஆனால், அத்தகைய முயற்சியெல்லாம் எப்பொழுதும் தோல்வியிலேயே முடிந்திருக்கின்றன. எதிர்காலத்தியச் சட்டங்களின் போக்கை மாற்ற முயன்ற சட்டங்களுள் மிகவும் குறிப்பிடத்தக்கவை ஸ்காட்லாந்தோடும் அயர்லாந்தோடும் செய்யப்பட்ட இணைப்பு உடன்படிக்கைகளைக் குறிப்பிடும் சட்டங்கள் ஆகும் (Act of Union with Scotland 1706, Act of Union with Ireland 1800). இந்தச் சட்டங்களை நிறைவேற்றிய சட்டமன்ற உறுப்பினர்கள், உண்மையிலேயே அச்சட்டங்களின் சில பகுதிகளுக்கு, சட்டங்களுக்குள்ள சாதாரண வலிமையைவிட மிக அதிகமான வலிமையைக் கொடுக்கவே கருதி இருந்தனர். ஆயினும், இச்சட்டங்கள் நிறைவேறிய வரலாறானது இறைமையையுடைய ஒரு சட்டமன்றத்தின் செயலை இறைமையையுடைய வேறு ஒரு சட்டமன்றமானது கட்டுப்படுத்துவதற்கு வீணில் முயன்று தோல்வியுற்றதற்குச் சான்றாகத்தான் இருக்கிறது. ஸ்காட்லாந்தின் இணைப்புச் சட்டமானது, 'ஸ்காட் பல்கலைக் கழகத்தின் ஒவ்வொரு பேராசிரியரும் யாவராலும் ஒப்புக்கொள்ளப்பட்ட சமய நெறியைத் தனது சமயநெறியாக ஒப்புக்கொண்டும், அதைக் கடைப்பிடித்தும் வரவேண்டும்' என்றும், 'சட்டத்தின் இந்தப் பகுதியானது வருங்காலத்திலெல்லாம் இந்த இணைப்பு உடன்படிக்கைக்கு இன்றியமையாத, ஓர் அடிப்படையான விதியாக இருக்கும் என்றும் கூறிற்று. ஆனால், மேற்கூறிய இந்தச் சட்டத்தின் இப்பகுதியானது 1853 ஆம் ஆண்டின் ஸ்காட்லாந்திய பல்கலைக் கழகங்களின் சட்டத்தினால் நீக்கப்பட்டது: மேலும் இச்சட்டமானது ஸ்காட்ச் பல்கலைக் கழகங்களின் பேராசிரியர்களில் பலரைச் சமயநெறி நம்பிக்கை வெளிப்படுத்தும்

---

வரையறை செய்துகொள்ள முடியாது; மேலும் நீக்கப்படக்கூடிய தன்மையையுடைய எதுவும் நிலையாக இருக்கும்படி யாராலும் செய்யமுடியாது; இது எவ்வாறென்றால், ஒருவர் தனது இறுதி விருப்பப் பத்திரத்தைச் (Will) செய்யும் போது, அதில் தான் பின்னர் வேறு ஒரு புதிய இறுதி விருப்பப் பத்திரத்தைச் செய்தால், தான் முதலில் செய்தது செல்லுபடியாகாது என்று கூறாமல் இருப்பதைப் போல அமையும். இந்தப் பாராளுமன்றச் சட்டத்தைப் பொறுத்த வரையில் இதற்குப் பொருத்தமான ஒரு முன்னோடியாக எட்டாம் ஹென்றி அரசருடைய காலத்தில் ஒரு சட்டம் இருக்கிறது; தனது மகன் சிறுவனாக இருக்கையிலேயே தான் இறத்தல் கூடும் என்று எண்ணிய அந்த அரசர் ஒரு சட்டத்தைச் செய்து அதில், 'ஓர் அரசருடைய இளமைப் பருவத்தில் செய்யப்படும் எந்தச் சட்டமும் அவருடைய வயது வந்த காலத்தில் அவருடைய முத்திரையின் மூலமாக ஒப்புதல் அளிக்கப்பட்டால் அல்லாமல், அந்தச் சட்டம் அந்த அரசரையோ அல்லது அவருடைய பின்தோன்றல்களையோ கட்டுப்படுத்தாது' என்று விதித்தார், ஆனால், ஆறாம் எட்வர்ட் அரசருடைய ஆட்சிக் காலத்தில் செய்யப்பட்ட முதல் சட்டமானது, மேற்கூறிய இந்தச் சட்டத்தை நீக்கிற்று; இவ்வாறு இந்தச் சட்டம் செய்யப்பட்டபோது அரசர் இளமைப் பருவத்தினராகத்தான் இருந்தார். ஆனால், எவரையும் கட்டுப்படுத்தாத எந்த விதியும் தற்சமயத்துக்குப் போதுமானதாகவே இருக்கும்.''

கடமையினின்றும் விடுவிக்கிறது. இணைப்புச் சட்டத்தின் பிரிவுகளில் செய்யப்பட்ட மாறுதல் இது ஒன்றுதான் என்பதில்லை: ஆன் அரசியின் காலத்தில் செய்யப்பட்ட பத்தாவது சட்டம் அரசியல் அலுவல்களில் ஆட்களை அமர்த்தும் அதிகாரத்தை மீண்டும் அரசிக்கு அளிக்கிறது: இச்சட்டமானது இணைப்பு உடன்பாட்டுச் சட்டத்துக்கு நேர்மாறானதாகும்.[1] இந்தச் சட்டங்களை மாறாமல் இருக்கும்படி செய்வதற்காக அவர்கள் எடுத்துக்கொண்ட முயற்சியும், உண்மையில் இந்தச் சட்டங்களும் அல்லது உடன்படிக்கைகளும் பாராளுமன்றத்தால் மாற்றப்படத் தக்கவையாக இருந்ததுவும், அயர்லாந்தின் இணைப்புச் சட்ட வரலாற்றில் இன்னும் மிகத் தெளிவாகக் காணப்படுகின்றன. இந்தச் சட்டத்தினுடைய ஐந்தாவது பிரிவு பின்வருமாறு கூறுகிறது: 'சட்டத்தினால் ஏற்படுத்தப்பட்ட இங்கிலாந்தின் திருச்சபையும் அயர்லாந்தின் திருச்சபையும் ஒரே பிராடஸ்டன்ட் எபிஸ்கோபல் திருச்சபையாக இணைக்கப்பட்டு இங்கிலாந்து அயர்லாந்து இணைப்புத் திருச்சபை (United Church of England & Ireland) என்று அழைக்கப்படுதல் வேண்டும் என்றும், குறிப்பிட்ட இந்த இணைப்புத் திருச்சபையினுடைய கோட்பாடும், வழிபாடும், ஒழுங்கும், ஆட்சியும் இப்பொழுது சட்டத்தினால் இங்கிலாந்தின் திருச்சபைக்கு ஏற்படுத்தப்பட்டவற்றைப் போலவே முழுவதும் எக்காலத்திலும் நடைமுறையில் இருந்துவரும் என்றும், குறிப்பிட்ட இந்த இணைப்புத் திருச்சபையே இங்கிலாந்து அயர்லாந்து ஆகியவற்றுக்கு ஏற்படுத்தப்பட்ட திருச்சபையாகத் தொடர்ந்து பாதுகாப்பாக இருக்கும் என்றும், இதுவே இந்த இணைப்பினுடைய முக்கியமான அடிப்படையான பகுதியாகக் கொள்ளப்படும் என்றும், இந்த இணைப்பின் ஐந்தாவது பிரிவு கூறுகிறது.'

இச்சட்டத்தின் இப்பிரிவின் வாசகத்திலிருந்து, இதனை இயற்றிய அரசியலறிஞர்கள், இப்பிரிவானது எதிர்காலத்திய பாராளுமன்றங்களினுடைய செயலையும் கட்டுப்படுத்த வேண்டுமென்ற நோக்கத்தோடுதான், இவ்வாறு செய்தார்களென்று தெரிகிறது. இம்முயற்சி அல்லது நோக்கமானது வெற்றி பெறவில்லை என்பது, 1869ஆம் ஆண்டின் ஐரிஸ் திருச்சபைச் சட்டத்தின் (Irish Church Act) பொருளை உணர்ந்த ஒவ்வொருவருக்கும் தெரியும்.

### பாராளுமன்றத்திற்குக் குடியேற்ற நாடுகளின்மீதுள்ள உரிமையைக கட்டுப்படுத்தும் சட்டம்

பிரிட்டிஷ் பாராளுமன்றத்தினுடைய ஒரு குறிப்பிட்ட சட்டத்தை நாம் வரலாற்று வாயிலாக ஆராய்ந்தால், அதற்குப் புதுமையானதோர் புனிதத்தன்மை இருப்பதாகக் கூறப்படுகிறது. இச்சட்டத்தினுடைய

[1] Innes என்பவர் எழுதிய 'Law of Creeds in Scotland', 1867 என்ற நூலைப் பார்க்கவும்.

பிரிவுகள் எதிர்காலத்தில் நீக்கப்படமாட்டா எனவும், அதனுடைய நோக்கத்துக்கு மாருகவும் எதுவும் செய்யப்படமாட்டாது எனவும், நாம் திட்டமாகக் கொள்ளக்கூடிய வகையில் அமைந்த ஓர் சட்டமாகும் இது. இதுவே 1778ஆம் ஆண்டின் குடியேற்ற நாடுகளின்மீது வரி விதிக்கும் சட்டம் (Taxation of Colonies Act) ஆகும். 'பாராளு மன்றமானது வட அமெரிக்காவிலும், மேற்கிந்தியத் தீவுகளிலும், மாட்சிமை தங்கிய மன்னருக்கு உரிய குடியேற்ற நாடுகளிலும், மாகாணங்களிலும், வாணிபத்தை ஒழுங்குபடுத்துவதற்கு மட்டு மன்றி, வேறுவகையில் சுங்கம், வரி, தீர்வை முதலியவற்றை விதிக்காது: மேற்கூறிய காலனிகளிலும், மாகாணங்களிலும், பொதுமன்றங்களால் திரட்டப்பட்டுச் செலவழிக்கப்படுகிற மற்றெந்த வரிப் பணங்களையும் போல, குறிப்பிட்ட இத்தீர்வை, வரி முதலியவற்றிலிருந்து கிடைக்கும் வருமானமும் அவைகளைக் கொடுத்த காலனி, மாகாணம் முதலிய வற்றின் நலனுக்காகவே செலவழிக்கப்படுதல் வேண்டும்' என்று இந்தச் சட்டத்தின் முதலாம் பிரிவு கூறுகிறது.

குடியேற்ற நாடுகளின்மீது முத்திரைத் தீர்வைகளை விதிக்கும் சட்டங்களை நீக்கிய 1776ஆம் ஆண்டின் அமெரிக்கக் குடியேற்ற நாடு களின் சட்டமானது, குடியேற்ற நாடுகளின்மீது வரிவிதிப்பதற்குப் பாராளுமன்றத்துக்கு இருக்கும் உரிமையை அது துறந்துவிடுவதாக எதுவும் கூறவில்லை: இந்தச் சட்டத்தோடு, மேலே குறிப்பிட்ட குடியேற்ற நாட்டு வரிவிதிப்புச் சட்டத்தின் (1778) முதற் பிரிவானது மாறுபட்டிருப்பதை நாம் காணும்போது, அந்தப் பிரிவின் வாசகம் மிகவும் தெளிவாக இருக்கிறது. இந்த இரண்டு சட்டங்களையும் சட்ட நூலில் இருக்கும்படியாகச் செய்த நிகழ்ச்சிகளின் போக்கைப்பற்றி நாம் இங்கு விரிவாகக் கூறவேண்டுவதில்லை. கொள்கையினடிப்படை யிலும், கட்டுப்பாடாக இருக்கவேண்டுமென்ற காரணத்தினடிப்படை யிலும் பார்க்கும்போது, இந்த 1778ஆம் ஆண்டின் குடியேற்ற நாட்டு வரிவிதிப்புச் சட்டத்தை நீக்குவதோ, அல்லது அதற்கு மாருன தொரு சட்டத்தைச் செய்வதோ நல்லதல்ல என்று தோன்றலாம்; அவ்வாறு தோன்றினும், மேற்குறிப்பிட்ட சட்டத்தை நீக்குவதிலோ மாற்றுவதிலோ நமது அரசியலமைப்பில் எவ்விதத் தடையும் கிடையாது என்ற உண்மையையே நாம் இங்குக் கவனிக்கவேண்டும். இப்பொழுது, நியூஸிலாந்து நாட்டின்மீதோ, கனடியக் குடியேற்ற நாட்டின்மீதோ வரியை விதிக்கின்ற ஓர் சட்டத்தைப் பாராளுமன்றம் நிறைவேற்றுமாறல், அப்பொழுது அச்சட்டம் சட்டப்படியாகச் செல்லக்கூடிய ஒன்றே ஆகும்.[1] இதைப்பற்றிச் சுருக்கமாக ஓர் ஆசிரியர் கூறுவதாவது: 'பொது மக்களுடைய நலனுக்காகப் பாராளு மன்றத்தினுடைய சட்டத்தைக் கையாளவேண்டிய கட்டாயம் எதிர்

[1] Statute of Westminster, 1931.

காலத்தில் நேரும்போது, அச் சட்டமன்றத்தின் செயல் உரிமையை முழுவதும் அழிக்கவும் சூழ்நிலைக்கேற்பச் செயல்படக்கூடிய அதனுடைய அறிவாற்றலைக் கட்டுப்படுத்தவும் சட்டம் எதனையும் செய்து. அதன்மூலமாகத் தனக்குப்பின் வரக்கூடிய பாராளுமன்றங் களைக் கட்டுப்படுத்துவதற்குப் பாராளுமன்றத்தால் இயலாது என்பது தெளிவானதோர் உண்மையாகும்.'[1]

[1] டாட் (Todd) என்பவர் தாம் எழுதிய 'Parliamentary Government in the British Colonies' (1880) என்ற நூலில் இவ்வாறு குறிப்பிடுகிருர். ஜென்னிங்ஸ் எழுதிய 'The Law and the Constitution' (1952) என்ற நூலிலும் இது காணப்படு கிறது. பாராளுமன்றமானது, எதிர்காலத்தில் மாற்றப்படக்கூடாத சட்டங்களை அவ்வப்போது செய்துவந்தபோதிலும், அது இவ்வகையாகத் தனது சட்ட மியற்றும் அதிகாரத்தைத் தானே வரையறுத்துக் கொள்வதென்பதை நடை முறையில் செய்யவில்லை; அதனுல் ஏன் இவ்வாறு செய்யமுடியவில்லை என்பதை ஆராய்வது, நமக்குப் புதுமையான நல்ல அறிவைக் கொடுக்கக்கூடியது ஆகும்.

இக் கேள்வியை நாம் தருக்க அல்லது அளவைநூல் வாயிலாகவும், வரலாற்று வாயிலாகவும் ஆராயலாம்.

எப்பொழுதும், மாற்றமுடியாத சட்டங்களைச் செய்வதற்காகப் பாராளுமன்றம் எடுத்துக்கொண்ட முயற்சிகள் ஏன் வீணுயின என்பதற்குத் தருக்கவாயிலாக அமைந்த காரணம் என்னவென்ருல், இறைமையை உடைய ஓர் அதிகாரி, தனது இறைமைத் தன்மையைத் தன்னிடம் நீடித்து வைத்துக்கொண்டே, ஏதேனுமொரு குறிப்பிட்ட சட்டத்தின்மூலமாகத் தனது சொந்த அதிகாரங்களைத் தானே கட்டுப்படுத்திக்கொள்ள அல்லது வரம்புக்கு உட்படுத்த முடியாது என்பதாம். பாராளுமன்றத்தால் செய்யப்பட்ட ஒரு சட்டமானது, அதனுடைய உட்பொருள் எதுவாக இருந்தாலும், அது நிறைவேற்றப்பட்டதற்கு அடுத்த அமர்வுக் காலத்திலேயோ (Session) அல்லது அதே அமர்வுக் காலத்திலேயோ நீக்கப்படலாம்; அது, சட்டத்தை மாற்றப்பட முடியாததாக நிறைவேற்றிய பாராளுமன்றத்தின் அதிகாரத்தைவிட, அதனை நீக்கிய பாராளுமன்றத்தின் அதிகாரத்தைக் குறைந்ததாக எதுவும் ஆக்கிவிடாது. பாராளுமன்ற இறைமை என்பதைப் பொறுத்தவரையில், மற்றெல்லா வகையான இறைமையிலும் காணப் படுவதைப் போல, 'வரையறுக்கப்பட்ட, அல்லது வரம்புக்கு உட்படுத்தப்பட்ட இறைமை' (Limited Sovereignty) என்ற கருத்து சொற்களினளவிலேயே முரண்பாடான ஒரு கருத்து ஆகும் (Contradiction in Terms). இக் கருத்து 'முன்பு ஓர் காலத்தில் ஓர் உண்மையான இறைமை அதிகாரியாக அல்லது சர்வாதிகாரியாக இருந்த ஒருவர் அல்லது அரசர், பெயரளவில் இப்பொழுதும் நடைமுறை இறைமை அதிகாரியாக அமைந்து, நாட்டில் இப்பொழுது சட்டப் படியாக உயர்தர இறைமை அதிகாரியின் ஒரு பகுதியாக அல்லது பாகமாக இருக் கிருர்' என்ற பொருளையே, இச் சொற்கள் அவற்றுக்குரிய துல்லியமான பொருளில் கையாளுபவருக்கெல்லாம் உணர்த்துகின்றது. மேற்கூறிய இறைமை நிலையே அரசியலமைப்புக்கு உட்பட்ட பல முடியாட்சிகளிலுள்ள அரசருடைய உண்மையான நிலை ஆகும் என்பது குறிப்பிடத்தக்கது. இப் பொருளை உணர்த்துவதற்கு வசதியாக இச் சொற்ருெடர் இருப்பதால், இது அடிக்கடி கையாளப்படுகிறது.

இறைமை அதிகாரத்தைக் கையாளுவதில், எவ்வித வரம்பும் ஏற்படுத்த முடியாது என்ற நிலையானது, தருக்க முறையிலோ அல்லது நடைமுறையிலோ, இறைமை அதிகாரத்தைத் துறந்துவிடுவதற்குத் தடை எதனையும் விதிக்கவில்லை என்பதையும் நாம் கவனிக்கவேண்டும். இந்த உண்மையை நாம் நன்கு கவனிக்க வேண்டும்; ஏனென்ருல், யுனைடெட் கிங்டத்திலுள்ள பாராளுமன்றத்தைப் போன்ற ஓர் இறைமை அதிகாரி, தனது சொந்தச் செயலின்மூலமாகவே இறை மையைத் தன்னிடமிருந்து அகற்றிக்கொள்ளுதற்கு ஒருபோதும் இயலாது என்பதாக ஒரு புதுமையான கருத்துச் சில சமயங்களில் கூறப்படுகிறது. மேற்கூறிய இந்த நிலை ஏற்றுக்கொள்ள முடியாதது என்பது தெளிவு. ருஷிய ஃசார் அரசரைப் போன்றதொரு சர்வாதிகாரி பதவியைத் துறந்துவிட முடியும்; இதனைப் பற்றி ஐயம்

எனவே, பாராளுமன்ற இறைமை என்பது ஐயப்பாட்டுக்கு இடமில்லாமல் சட்டத்திலுள்ள ஓர் உண்மை ஆகும்.

உடன்பாட்டு வகையாகவும், எதிர்மறை வகையாகவும் அவ் விறைமை அதிகாரமானது முழுமையான ஒன்றாக இருந்துவருகிறது. சட்டம் இயற்றப்படுதற்குரிய பொருள் என்பதாகப் பாராளுமன்றத்

---

எதுவும் இல்லை; ஆயின், இறைமை அல்லது நாட்டின் உயர்தர அதிகாரமானது—அது ஒரு எச்சார் அரசரிடமிருந்தாலும் சரி, ஓர் பாராளுமன்றத்திடமிருந்தாலும் சரி—ஒரே தன்மை அல்லது இயல்பு உடையதாகத்தானிருக்கிறது. ஒரு எச்சார் அரசர் பதவியைத் துறத்தல் இயலுமென்றால், ஒரு பாராளுமன்றத்துக்கும் இதனைச் செய்ய இயலும். 'இறைமை அதிகாரமானது வரம்புக்கு உட்படாதது' என்ற காரணத்தால் (இக் கருத்து உண்மையானது), 'அவ் விறைமை அதிகாரமானது ஒருவரால் மற்றவரிடத்து விட்டுவிட முடியாதது' என்று வாதிப்பது (பின்கூறப்பட்ட கருத்து உண்மையன்று), இரண்டு முற்றிலும் வேறுபட்ட கருத்துகளைக் குழப்புவதாகும். இவ்வாறு வாதிப்பது, 'எம் மனிதனும், தான் உயிர்வாழும்போது, தனது இயக்கச் சுதந்திரத்தை (Freedom of Volition) விட்டுவிட முடியாது' என்பதனால், 'எம் மனிதனும் தன்னைத்தானே அழித்துக் கொள்ள முடியாது' என்று வாதிப்பது போலாகும். ஓர் இறைமை அதிகாரி தனது இறைமை அதிகாரத்தை இரண்டே இரண்டு வரிகளில் விட்டுவிடமுடியும் என்று கூறப்படுகிறது. ஒன்று, பாராளுமன்றம் தன்னைத்தானே சட்டப்படியாகக் கலைத்துக்கொண்டு, தனக்குப் பின்னர் சட்டப்படியாகப் பாராளுமன்றம் எதுவும் கூட்டப்படுவதற்குரிய வழி இல்லாமற்செய்து, இவ்வாறாகப் பாராளுமன்றம் தன்னைத்தானே அழித்துக்கொண்டுவிடலாம் (பிரைஸ் என்பவர் எழுதிய 'American Commonwealth' 1910 பக்கம் 243). 1653ஆம் ஆண்டில் பேர்போனஸ் பாராளுமன்றம் தனது அதிகாரத்தைக் கிராம்வெல்லிடம் விட்டுவிட்டபோது, அதன் செய்கை மேற்கூறிய செயலே ஆகும். இரண்டாவது, ஓர் இறைமை அதிகாரி தன்னிடமுள்ள இறைமை அதிகாரத்தை வேறு ஓர் ஆளுக்கோ அல்லது வேறு பலர் சேர்ந்த ஒரு கூட்டத்துக்கோ மாற்றிவிடலாம். 1539ஆம் ஆண்டில் பிரகடனங்கள்மூலமாகச் சட்டம் செய்யும்படி அரசருக்குப் பாராளுமன்றம் அதிகாரம் அளித்தபோது இதனையே செய்தது; இங்கிலாந்தும் ஸ்காட்லாந்தும் இணைந்தபோது, இவை ஒவ்வொன்றின் பாராளுமன்றமும், தனது இறைமை அதிகாரத்தைப் புதியதோர் இறைமை அதிகாரிக்கு அதாவது, கிரேட் பிரிட்டனின் பாராளுமன்றத்துக்கு மாற்றிற்று; இவ் வுண்மைநிலை பெரும்பாலும் ஊன்றிக் கவனிக்கப்படுவதில்லை. இவ்விரு சட்டமன்றங்களினாலும் புதிதாக அமைக்கப்பட்ட இந்தப் பாராளுமன்றமானது, அவற்றினுடைய முழு அதிகாரத்தையும், அவற்றினிடமிருந்து பெற்ற ஒரு காரணத்தால், சட்டப்படியான ஓர் உயர்தர, அல்லது இறைமை உடைய சட்டமன்றமாக ஆயிற்று; எனவே, அதனை நிறுவிய மன்றங்களினுடைய நோக்கத்திற்குமாறாக இருந்தாலும், தன்னை நிறுவிய இணைப்புச் சட்டத்தையே இப்புதிய மன்றமானது, மாற்றவோ, நீக்கவோ கூடிய அதிகாரத்தை உடையதாக ஆயிற்று. இணைப்புச் சட்டத்தைத் தேவைப்படும்போது மாற்றுவதற்காக மட்டுமே இங்கிலாந்தின் பாராளுமன்றத்தையும், ஸ்காட்லாந்தின் பாராளுமன்றத்தையும் இணைப்புச் சட்டமானது அழிக்காமல் நீடித்திருக்கும்படி விட்டுவிட்டு, இணைப்புச் சட்டத்தை மாற்றவோ, நீக்கவோ செய்ய இயலாத சட்டங்களைமட்டும் செய்யும்படி கிரேட் பிரிட்டனின் பாராளுமன்றத்துக்கு அதிகாரத்தைக் கொடுத்திருக்குமானால், அவ்விணைப்புச் சட்டமே பிரிட்டிஷ் பாராளுமன்றத்தால் சட்டப்படி மாற்றமுடியாத ஓர் அடிப்படையான சட்டமாக ஆகியிருக்கும்; ஆனால் இத்தகையதொரு நிலையில் கிரேட் பிரிட்டனின் பாராளுமன்றமானது, இறைமை உடையதாக இல்லாமல், வேறொன்றுக்குக் கீழ்ப்பட்ட சட்டமன்றமாக இருந்திருக்கும்; கடைசியில் இறைமை அதிகாரி என்பதற்கு உரியபொருளில், அவ்வதிகாரத்தை உடையனவாக இங்கிலாந்தின் பாராளுமன்றமும் ஸ்காட்லாந்தின் பாராளுமன்றமும் இருக்கும். இரு நாடுகளிலுள்ள அரசியலறிஞர்கள் ஒரு புதிய இறைமையை உடைய பாராளுமன்றத்தைத் தோற்றுவிப்பதே பொருத்தமானது என்று அப்போது எண்ணினர். எனவே, அத்தகையதொரு புதிய இறைமை அதிகாரிக்கு வரம்பு ஏற்படுத்துவதற்காகச் செய்யும் எந்த முயற்சியும் பயனளிக்காமல் போகிறது; இம் முயற்சி என

தால் தீர்மானிக்கப்படும் எந்தச் செயலையும்பற்றி, அது சட்டப்படியாகச் சட்டம் செய்யமுடியும். ஆங்கில அரசியலமைப்பிலே, எந்த அதிகாரியும் பாராளுமன்றத்தின் சட்டம் செய்யும் இறைமைக்குப் போட்டியாக வர இயலாது.

பாராளுமன்றத்தினுடைய முழுமையான அதிகாரத்துக்குச் சட்டத்தின் மூலமாக ஏற்படுத்தப்பட்டவை என்று கூறப்படும் வரம்புகளில் எதுவும் உண்மையில் கிடையாது; அதற்குச் சட்ட நூலிலோ, நீதி மன்றங்களின் செயலிலோ எவ்வித ஒப்புதலும் கிடையாது.

---

பயனளிக்கவில்லை, என்றால் வரம்பில்லாத முழுமையான சட்டமியற்றும் அதிகாரத்தை, அவ்வதிகாரத்தை வரம்புக்குட்பட்டதாக, முழுமையற்றதாகச் செய்யக்கூடிய கட்டுப்பாடுகளோடு இணைப்பது என்பது தருக்கமுறைக்கும் நடைமுறைக்கும் சிறிதும் பொருந்தாதது என்பதாம்.

*மாற்றப்படாத சட்டங்களைச் செய்வதில் பாராளுமன்றமானது எடுத்துக்கொண்ட முயற்சிகள் ஏன் வெற்றியடையவில்லை, அல்லது ஓர் உயர்தரச் சட்டமன்றத்துக்கு உரிய இயல்பை அது எப்பொழுதும் ஏன் தன்னிடத்திலேயே வைத்துக்கொண்டுள்ளது என்பதற்கு வரலாற்றின் வாயிலாக அமைந்துள்ள காரணத்தைப் பார்க்கும்போது, அத்தகைய காரணம் ஆங்கில மக்களுடைய வரலாற்றிலும், ஆங்கில அரசியலமைப்பின் புதுமையானதொரு வளர்ச்சி முறையிலும் வேரூன்றி இருப்பதைக் காணலாம். இங்கிலாந்து நாடானது, குறைந்த அளவு நார்மானியரது வெற்றிக் காலத்திலிருந்தாவது, எப்பொழுதும் ஒரு வரம்பற்ற முழுமையான அதிகாரமுடைய சட்ட அதிகாரியினாலேயே ஆளப்பட்டு வந்திருக்கிறது. இத்தகைய சட்ட அதிகாரியாக முதன்முதலில் அரசரே இருந்து வந்தார்; அரசருடைய இத்தகைய சட்டமியற்றும் அதிகாரமானது ஒரு பொழுதும் அளவில் குறைக்கப்பட்டதில்லை; ஆனால், அது முதலில் தனித்து (அல்லது ஆலோசனை மன்றத்திலிருந்து செயல்பட்ட) அரசரிடமிருந்து பிற்காலத்தில் பாராளுமன்றத்தின் இரு சபைகளோடும் இருந்து செயல்பட்ட அரசருக்கும், பின்னர் அவ்விரு சபைகளுக்கும் கீழ்ப்பட்ட நிலையில் இருந்து செயல்பட்ட அரசருக்கும் மாற்றப்பட்டது; இத்தகையதோர் புதுமையான வழியில்தான் ஆங்கில அரசியலமைப்பு வளர்ச்சியடைந்தது காணப்படுகிறது. எனவே, பாராளுமன்றமே,—அல்லது தக்க சொற்களிலமைத்துச் சொன்னால், பாராளுமன்றத்திலுள்ள அரசியே—இப்பொழுது ஓர் உயர்தரச் சட்டமாக ஆயிற்று; அதுவே எப்பொழுதும் ஓர் உயர்தரச் சட்டமன்றமாக இருந்து வந்துள்ளது என்று கூறுவதும் பொருத்தமாகும். ஒரு காலத்தில் ஆங்கில அரசியல் சீர்திருத்தக்காரர்கள், ஆங்கில அரசியலின் ஒழுங்கான வரலாற்று வளர்ச்சிப் போக்கினின்றும் பிரிந்து, அதற்கு மாறுபட்ட, நாட்டிற்கு ஓர் எழுதப்பட்ட அரசியலமைப்பை வரைந்து, இவ்வகையில் அவர்கள் அமெரிக்க ஐக்கிய நாட்டின் அரசியலமைப்புக் கோட்பாட்டின் பல இயல்புகளுக்கு முன்னோடியாக அமைந்து, இவ்வாறு தாங்கள் வரைந்த அரசியலமைப்புச் சட்டத்தை நாட்டின் சாதாரண சட்ட மன்றத்தினுடைய கட்டுப்பாட்டுக்கு அப்பாற்பட்டதாகச் செய்தார்கள்; இதை நாம் கருத்தில் கொள்ளுதல் நல்லது. 1653ஆம் ஆண்டில் செய்யப்பட்ட அரசாங்க அமைப்புப் பத்திரத்தின்படி (Instrument of Government), சில அடிப்படையான செயல்கள் பாராளுமன்றத்தினால் மாற்றப்படாததாக இருக்கவேண்டுமென்று கிராம்வெல் கருதினார்; இது நமக்குத் தெளிவாகத் தெரிகிறது. இந்த 1653ஆம் ஆண்டு அரசியலமைப்பானது நிர்வாகத்துறையைச் சட்ட மன்றத்தின் கட்டுப்பாட்டிற்கும் அப்பாற்பட்டதாக ஆக்கிற்று என்பது குறிப்பிடத்தக்கது. இவ்வமைப்பிற்கிணங்க, நியமிக்கப்பட்ட காப்பாளருடைய (Protector) நிலைமையை, அமெரிக்கக் குடியரசு தலைவருடைய அல்லது ஜெர்மன் பேரரசருடைய நிலைமைக்குப் பொருத்தமாக ஒப்பிட்டுக் கூறலாம். ஹாரிசன் எழுதிய ஆலிவர் கிராம்வெல் (1888) என்ற நூலைப் பார்க்கவும். இங்குக் கூறப்பட்டுள்ள இறைமை என்ற கருத்துக்கு ஓரளவு மாறுபட்டும், நிறைய செய்திகளையும் ஈடுபாட்டையும் உண்டாக்கக்கூடியதுமான கருத்து, சிட்ஜ்விக் என்பவர் 1897-ல் எழுதிய 'அரசியல்பற்றிய அடிப்படை நூல்' என்பதில் காணலாம்,

பாராளுமன்றத்தின் சட்டமியற்றும் உயர்தர அதிகாரம் என்பது, அரசியலமைப்புச் சட்டத்தின் ஆணிவேராகவே அமைந்த ஒரு கோட்பாடு ஆகும். ஆயினும், இக் கோட்பாடு எப்பொழுதும், யாராலும் நேரடியாக ஒப்புக்கொள்ளப்படுவதில்லை என்பதையும் நாம் கவனிக்க வேண்டும். இவ்வுண்மையை நாம் கவனித்து ஆராய்வதும் பொருத்தம் ஆகும்.

**பாராளுமன்ற இறைமைக்குக் கூறப்படும் தடைகள்**

C. பாராளுமன்ற இறைமைக் கோட்பாட்டிற்கு எதிராகக் கூறப் படும் தடைகள்:

பாராளுமன்ற இறைமைக் கோட்பாட்டை ஒத்துக்கொள்ளு வதற்குப் பலர் மறுப்பதற்குரிய காரணங்கள் இரண்டு ஆகும்.

**ஆஸ்டினுடைய கோட்பாட்டிலிருந்து ஓர் தடை**

பாராளுமன்ற இறைமைக் கோட்பாடு என்பது, இறைமையைப் பற்றி ஆஸ்டின் வகுத்துள்ள கோட்பாட்டை பிரிட்டிஷ் அரசியலமைப் புக்கு ஏற்றிச் சொல்லுகின்ற ஒரு செயலே ஆகும்; மேலும் பிரிட்டிஷ் அரசியலமைப்பில் இறைமை அதிகாரத்தைப் பெற்றிருப்பவர் எவர் என்று ஆங்கிலச் சட்ட அறிஞருடைய ஆதாரத்தின் பேரில், இச் சொற்பொழிவு களில் நிலைநாட்டப்படும் கருத்துக்கு மாறுக இருப்பதும், ஆஸ்டினுடைய கருத்தை ஆராய்வாருக்குப் புலப்படும். எவ்வாறெனில், சட்ட அறிஞர் கள், 'பாராளுமன்றத்தில்,' அதாவது, அரசி, பொதுமக்கள் மன்றம், பிரபுக்கள் மன்றம் ஆகியோர் சேர்ந்த கூட்டத்தில் இறைமை அதிகாரம் இருப்பதாகக் கூறவும், ஆஸ்டினே, இறைமை அதிகாரமானது, அரசியிடத்திலும் பிரபுக்கள் மன்றத்திலும் பொதுமக்கள் மன்றத்திலும் அல்லது வாக்காளர்களிடத்தும் இருப்பதாகக் கூறுகிறர்.[1]

**பாராளுமன்ற அதிகாரத்துக்கு நடைமுறை வரம்பிலிருக்கும் தடை**

பகுத்தறிவு முறையாகப் பார்க்குமிடத்து, சட்ட அறிஞர்க ளுடைய கருத்து எவ்வாருயினும், பாராளுமன்றத்தின் இறைமை அதிகார மானது வரம்புக்குட்படாமல் இல்லை; மேலும், அரசரும் பிரபுக்களும் பொதுமக்களும் சேர்ந்த குழுவானது, மனிதனுல் உண்டாக்கப்பட்ட எந்த நிறுவனத்துக்கும் கொடுக்கப்படக்கூடிய உயர்தர அதிகாரத்தை— இதனை வேண்டுமானுல் 'கட்டுப்படுத்தப்பட்ட சருவ வல்லமை'(restricted omnipotence) என்று கூறலாம்—பெற்றிருக்கவில்லை, என்பதை யும் யாவரும் அறிவர். அறிவுக்குப் பொருந்தாத அல்லது கொடுமையான தன்மை எதுவும் இல்லாத சட்டங்கள் பல இருக்கின்றன; எனினும், இத் தகைய சட்டங்களைப் பாராளுமன்றமானது ஒருபொழுதும் செய்யாது; இன்னும் தெளிவாகக் கூறினுல், இத்தகைய சட்டங்களை அதனுல் செய்ய

[1] ஆஸ்டின் எழுதிய 'Jurisprudence' (1879) என்ற நூலைப் பார்க்கவும் ஆஸ்டினுடைய வாசகத்தை, அமெரிக்க ஐக்கிய நாட்டின் இறைமைக் குழுவோடு ஒப்பிட்டுப் பார்க்கலாம்,

வும் முடியாது; பாராளுமன்ற இறைமை என்ற கோட்பாட்டிற்குப் பாராளுமன்றத்தின் கட்டுப்பாடற்ற அதிகாரம் என்ற பொருளை நாம் கொடுத்தால், இத்தகைய கோட்பாடு சட்டத்திலுள்ள ஒரு கற்பனையே தவிர வேறு இல்லை; அதற்கு இவ்விடத்தில் ஆழ்ந்த ஆராய்ச்சி தேவையில்லை.[1]

## ஆஸ்டினுடைய கோட்பாட்டிற்கு மறுப்பு

பிரிட்டிஷ் அரசியலமைப்பைப் பொறுத்தவரையில், ஆஸ்டினுடைய இறைமைக் கோட்பாட்டைப்பற்றி நாம் பின்வரும் கருத்தைக் கூறுவோம். ஆங்கில வாணிபத்தின் சூழ்நிலைகளிலிருந்து பெறப்படும் பொது உண்மைகளிலிருந்தே, ஆஸ்டினுடைய தலைமுறையைச் சேர்ந்த பொருளியல் வல்லுநர்களுடைய கருத்துகள் உருவாகி இருத்தல் போலவே ஆஸ்டினுடைய பல கருத்துகளும் இறைமையைப்பற்றிய கருத்தும், பெரும்பாலும் ஆங்கிலச் சட்டத்திலிருந்தே பெறப்படும் ஒரு பொது உண்மையாகும். இங்கிலாந்து நாட்டில், ஒவ்வொரு சட்டத்தையும் செய்யவும் நீக்கவும் கூடியதும், வேறு எந்தச் சட்டத்தினாலும் வரம்புக்கு உட்படாததுமான ஓர் உயர்தரச் சட்டமன்றம் இருப்பதை, நாம் எல்லாரும் வழக்கமாக ஒப்புக்கொண்டிருக்கிறோம். இதுவே சட்டக் கருத்தின்படி, இறைமையைப்பற்றிய ஓர் உண்மையான கருத்து ஆகும். முழுமையான, வரம்புக்கு அப்பாற்பட்ட, இறைமைக் கோட்பாட்டை ஆங்கிலச் சட்ட வல்லுநர்கள் (Jurists) மிக எளிதாக ஒப்புக்கொள்ளுவதற்குக் காரணம், ஆங்கில அரசியலமைப்புச் சட்டத்தின் புதுமையான வரலாற்றினால் தோன்றிற்று. ஆகவே, பாராளுமன்ற இறைமை என்பது மனத்துக்குமட்டுமே புலனாகக்கூடிய சட்டக் கோட்பாடுகளிலிருந்தே தோன்றிற்று என்று சொல்லுவதைவிட, 'சட்டம்' (Law) என்ற சொல்லைப்பற்றி ஆஸ்டினின் ஆராய்ச்சி, எவ்வாறு உண்மையில் ஓர் சட்டவகையாகிய, ஆங்கிலக் குற்ற வழக்குச் சட்டத்தைப் பற்றியதாக (Criminal Statute) இருக்கிறதோ, அதேபோல ஆஸ்டினுடைய இறைமைக் கோட்பாடும், ஆங்கிலப் பாராளுமன்றத்திற்குரிய நிலையைப்பற்றிய கருத்தினின்றே வருவிக்கப்படுவது, அல்லது தோன்றியது என்று ஆராய்ச்சியாளர் கூறுவதுதான் உண்மையாகும்.

மேலும், 'இறைமை' என்ற சொல்லை ஆஸ்டின் கையாளுகின்ற பொருளிலேயே, வழுவாமல் கையாளும்போதெல்லாம், அது ஓர் சட்டக் கருத்தாகமட்டுமே இருக்கிறது; அப்போது, அதற்கு, 'சட்ட வரம்பு எதனாலும் கட்டுப்படுத்தப்படாத, சட்டம் செய்யும் அதிகாரம்' என்று மட்டுமே பொருள் உண்டு. இச் சொல் இப் பொருளில் கையாளப் பட்டால், ஆங்கில அரசியலமைப்பில் இத்தகைய இறைமை அதிகாரத்தை

[1] ஜென்னிங்ஸ் எழுதிய 'சட்டமும் அரசியலமைப்பும்' (1952) என்ற நூலைப் பார்க்கவும்.

உடையது 'பாராளுமன்றமே' என்பது தெளிவு. ஆனால் 'இறைமை' என்ற சொல் சில சமயங்களில் சட்டப்படியான பொருளில் மட்டுமல்லாமல், அரசியற்பொருளில்தான் (political sense) மிகுதியும் கையாளப்படுகிறது. நாட்டு மக்களெல்லாம் முடிவாக எந்தக் குழுவினுடைய விருப்பத்துக்குக் கீழ்ப்படிந்து நடக்கிறார்களோ, அந்தக் குழுவே நாட்டில் 'அரசியல் முறையில்' (Politically) இறைமை அதிகாரி அல்லது உயர்தர அதிகாரி ஆவார். இந்தப் பொருளில் பார்த்தால், கிரேட் பிரிட்டனின் வாக்காளர்கள், அரசரோடும் பிரபுக்களோடும் சேர்ந்து அல்லது இன்னும் தெளிவாகக் கூறினால், அரசர், பிரபுக்கள் ஆகியோரினின்றும் தனித்து நின்று, இறைமை அதிகாரத்தை உடைய குழுவாக அமைகிறார்களென்று கூறலாம். எவ்வாறெனில், இப்பொழுது காணப்படும் நிலையில் வாக்காளர்களுடைய விருப்பமே, அதாவது பிரபுக்களோடும் அரசரோடும் கூடிய வாக்காளருடைய விருப்பமே பிரிட்டிஷ் அரசாங்கத்தாரால் தீர்மானிக்கப்பட வேண்டிய எல்லாக் காரியங்களையும் உறுதியாகத் தீர்மானிக்கிறது. இக் கருத்தை இன்னும் விரிவாக நாம் எடுத்துக் கூறலாம்; வாக்காளர்களுடைய விருப்பமே நாட்டின் தலைசிறந்த ஆதிக்கமாக எப்பொழுதும் உறுதியாக, ஒழுங்கான அரசியலமைப்புக்கு ஏற்ற வழிகளில் வெளிப்படும்; இதனை உறுதிப்படுத்தும் வகையில்தான் இப்பொழுது அரசியலமைப்பு ஏற்பாடுகள் அமைந்திருக்கின்றன. ஆயினும், இது அரசியல் சார்புள்ள ஓர் உண்மையே தவிர சட்டத்தின் சார்புடைய உண்மை அன்று. வாக்காளர்கள் தங்களுடைய விருப்பத்தையே முடிவாகச் செயல் படுத்தக்கூடிய நிலையில் இப்பொழுதும் இருக்கின்றனர்.[1] ஆயினும், வாக்காளர்களுடைய விருப்பத்தை நீதிமன்றங்கள் தமது கவனத்துக்கு

[1] அரசியற் சார்பான இறைமை அதிகாரி தனது விருப்பத்தை எந்த அளவுக்குச் செயல்படும்படியாக வெளிப்படுத்துகிறதோ, அந்த அளவிற்கு அரசியலமைப்பின் செயல்திறன் பாதிக்கப்படுகிறது. இவ்வகையில் நாம் அமெரிக்க ஐக்கிய நாடு, ஸ்விஸ் கூட்டரசு, யுனைடெட் கிங்டம் ஆகியவற்றின் அரசியலமைப்புகளை முறையே ஒப்பிட்டுப் பார்க்கலாம். இவை ஒவ்வொன்றிலும் நாட்டின் மக்களே அல்லது வாக்காளர்களே அரசியற்சார்பான இறைமை அதிகாரி ஆவர். அமெரிக்க ஐக்கிய நாட்டின் கூட்டரசு அரசியலமைப்பை அந் நாட்டு மக்கள் திருத்துவது என்பது பல இடர்ப்பாடுகளினால் தடுக்கப்பட்டு நடைமுறையில் மிகவும் மெல்ல நடைபெறவேண்டியதாக இருக்கிறது; அக் கூட்டரசு அரசியலமைப்பானது, அந் நாட்டில் நடைபெற்ற உள்நாட்டுப் போருக்குப் பிற்பட்ட காலத்திலல்லாமல், அது அமைக்கப்பட்ட நூற்றாண்டுக் காலத்தில் வெகுவாகத் திருத்தப்படவில்லை. ஸ்விஸ் கூட்டரசின் அரசியலமைப்புச் சட்டப் பிரிவுகள், அமெரிக்க ஐக்கிய நாட்டு அரசியலமைப்பின் சட்டப் பிரிவுகளைவிட மிக எளிதில் மாற்றக்கூடியனவாக இருக்கின்றன; அவை 1848ஆம் ஆண்டுக்குப்பின் வெகுவான மாறுதல்களுக்கு உள்ளாகி இருக்கின்றன. ஆயினும், 1874ஆம் ஆண்டில் திருத்தி அமைக்கப்பட்ட அரசியலமைப்பு உண்மையில் ஒரு புதிய அரசியலமைப்பு என்றாலும், அடிப்படையில் அது 1848ஆம் ஆண்டின் அரசியலமைப்பினின்றும் வேறுபட்ட ஒன்று அன்று. இப்பொழுது உள்ள ஏற்பாட்டின்படி இங்கிலாந்தின் மக்கள் தங்களுடைய அரசியலமைப்புச் சட்டத்தின் எப்பகுதியையும் வெகுவிரைவில் மாற்றலாம். கொள்கையடிப் படையிலே, பாராளுமன்றத்தின் செயலுக்கு எவ்விதத் தடையும் கிடையாது; மேலும், ஒரு பொதுமக்கள் மன்றத்தால் ஒப்புக்கொள்ளப்பட்டுப் பாராளுமன்றக் கலைப்புக்குப் பின்னர் கூடுகிற, புதிதாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட அடுத்த பொது மக்கள் மன்றத்தால் ஆதரிக்கப்படுகிற எந்த அடிப்படையான மாறுதலும், நடை

ஏற்றுக்கொள்ளமாட்டா. மக்களுடைய விருப்பமானது ஓர் பாராளு மன்றச் சட்டத்தின்மூலமாக வெளிப்படுத்தப்பட்டாலன்றி மக்களுடைய கருத்தைப்பற்றி நீதிபதிகள் யாதொன்றும் அறியார்; மேலும், வாக்காளர்களுடைய விருப்பங்களுக்கு மாறாக ஓர் சட்டம் வழக்கத்தில் கொண்டுவரப்பட்டுள்ளதென்ற காரணத்துக்காகவும் அல்லது அது அவர்களுடைய விருப்பங்களுக்கு மாறாக நிறைவேற்றப் பட்டுள்ளதென்ற காரணத்துக்காகவும், அச் சட்டம் செல்லுபடியாகாதெனவும் நீதிபதிகள் கூறமாட்டார்கள். ‘இறைமை’ என்ற சொல்லுக்கு உள்ள அரசியல் சார்பான பொருள், அச் சொல்லுக்கு உள்ள சட்டச்சார்பான பொருளைப்போல அல்லது அதனினும் கூடுதலாக முக்கியத்துவம் உடையது என்பது உண்மையே. எனினும், இந்த இரண்டு பொருள்களும் ஒன்றோடொன்று நெருங்கிய தொடர்பு உடையவை ஆயினும், இரண்டும் வெவ்வேறானவை; மேலும், ஆஸ்டின் தனது நூலின் சில பகுதிகளில் ஒரு பொருளை வேறொன்றாக எண்ணிக் குழப்பமடைவதாகத் தெரிகிறது.

தனது ‘சட்ட நூலில்’ (1879, பக்கம் 253-ல்) ஆஸ்டின் பின்வருமாறு கூறுகிறார்: ‘பிரிட்டிஷ் அரசியலமைப்பை ஆராய்ந்துள்ள பல ஆசிரியர்களுடைய கருத்தை ஒட்டியே, நானும், இப்பொழுது உள்ள பாராளுமன்றம், அல்லது தற்காலப் பாராளுமன்றம் இறைமை உடையதாக இருக்கிறதென்று பொதுவாக நம்புகிறேன்; அல்லது அரசரும், பிரபுக்களும், பொதுமக்கள் மன்றத்தினுடைய உறுப்பினரும் மூன்று கூறுகளுள்ள குழுவாக அமைந்து, அதுவே இறைமையை உடையதாக அல்லது எல்லாவற்றுக்கும் மேலான அதிகாரியாக இருக்கிறதென்று நான் சாதாரணமாக நம்புகிறேன். ஆனால், இன்னும் சரியாகச் சொல்லப் போனால், பொதுமக்கள் மன்ற உறுப்பினரெல்லாம், தங்களைத் தேர்ந்தெடுத்து அமர்த்திய வாக்காளர்களுடைய பொறுப்பாளர்களே (trustees) ஆவர்; இறைமையானது எப்பொழுதும், பொதுமக்களின் வாக்காளர் குழுவோடுகூடிய அரசரிடத்தும், பிரபுக்களிடத்திலும்தான் எப்பொழுதும் தங்கி இருக்கிறது. ஓர் அதிகாரத்தை மற்றவருக்கு ஒரு

---

முறையில் நிறைவேற்றி வைக்கப்படுமென்று நாம் ஊகித்துக் கொள்ளலாம். ஆனால், அரசியலமைப்புத் தன் முயற்சி முறையின்மூலமாக (Initiative Constitutionnelle) ஸ்விஸ் அரசியலமைப்பையே மாற்றிவிட முடியுமென்பது குறிப்பிடத்தக்கது. ஏதேனும் ஒரு திருத்தமானது 50,000 வாக்காளர்களால் கொண்டுவரப்பட்டு, வாக்காளர்களில் பெரும்பாலானவருடைய ஒப்புதலையும், கான்டன்களில் (Cantons) அல்லது மாகாணங்களில் பெரும்பாலானவற்றின் ஒப்புதலையும் பெற்றால், அது அரசியலமைப்புச் சட்டத்தின் ஒரு பகுதியாக ஆகிவிடும். எனவே, யுனைடெட் கிங்டத்தில் காணப்படுவதைப்போல ஓர் அரசாங்கம் மாறி மற்றொன்று வரும்வரையில் மக்கள் காத்திருக்கவேண்டிய தேவை இல்லாமல், ஸ்விஸ் அரசியலமைப்பு அதன் மக்களால் மாற்றப்படக்கூடியதாக இருக்கிறது; எடுத்துக்காட்டாக, அரசியலமைப்புத் தன்முயற்சி முறையின் மூலமாக வறியவர் உதவி உரிமையை (right to poor relief), அரசாங்கத்தில் மாறுதல் எதுவும் இல்லாமல் அரசியலமைப்புச் சட்டத்தில் சேர்த்துவிடலாம்.

கட்சி ஆட்பேர் உரிமை கொடுத்து அனுப்புவதும் (delegate), ஒருவருக்கு மற்றவர் பகர ஆளாக இருந்து (represent), தான் ஆட்பேர் உரிமையாகப் பெற்ற அதிகாரத்தைக் கையாள ஒத்துக்கொள்ளுவதும், ஒன்றுக்கொன்று இணையான சொற்களாகிய ஆட்பேர் உரிமை ஒப்படைப்பு (Delegation), பகராண்மைமுறை (Representation) என்பவற்றினல் உணர்த்தப்படுகின்றன. அதிகாரத்தை ஒப்படைக்கும் கட்சியானது, பகரமாக அல்லது சார்பாளியாக இருக்கும் கட்சியை எந்த நோக்கங்களுக்காக நியமிக்கிறதோ, அவற்றுள் எதையேனும் நீக்கிவிடவோ அல்லது அழித்துவிடவோ, சார்பாளிக் கட்சிக்கு உரிமை அளிக்கிறது என்பது தவறு அல்லது பொருந்தாதது ஆகும்; எடுத்துக்காட்டாக, பொதுமக்கள் இறைமை அதிகாரத்தில் தங்களுக்குள்ள பங்கை, அரசருக்கும் பிரபுக்களுக்கும் விட்டுக்கொடுக்கும்படி தங்களுடைய சார்பாளிகளுக்கு அல்லது பிரதிநிதிகளுக்கு அதிகாரம் அளிக்கின்றனர் என்பது பொருந்தாதது ஆகும்.'

பிரிட்டிஷ் அரசியலமைப்பைப்பற்றி ஆராய்ந்துள்ள ஆசிரியர்களுடைய கருத்துக்கு மாருகவே மேற்கூறிய கோட்பாட்டைத் தான் நிறுவி இருப்பதாக ஆஸ்டின் ஒத்துக்கொள்ளுகிருர். மேலும், மேலே கூறப்பட்ட அவருடைய கோட்பாடு ஏழாண்டுச் சட்டத்தினுடைய செல்லுபடியாகும் தன்மைக்கு (validity) முற்றிலும் பொருந்தாதது ஆகும். பாராளுமன்றமானது தன்னைத் தேர்ந்தெடுத்த வாக்காளர்களுக்கு ஒரு 'பொறுப்பாளி' (trustee) என்ற சட்டப்படியான நிலையில் இருக்கிறது என்பதாக எந்த ஓர் ஆங்கில நீதிபதியும் ஒத்துக்கொண்டதில்லை.[1] அவ்வாறு அவரால் இக் கால அரசியலமைப்பில் ஏற்றுக் கொள்ளவும் முடியாது; இதைவிடத் தெளிவான உண்மை வேறெதுவும் இல்லை. இவ்வாறு 'ஒப்படைப் பொருளாகக்' (Trust) கருதப்பட்ட எதனைப்பற்றியும் நீதிமன்றங்கள் அறியமாட்டா. 'சட்ட அளவிலே பாராளுமன்றமே நாட்டில் இறைமை அதிகாரியாக இருக்கிறது' என்பதும், ''ஆஸ்டினல் தவருனதாகக் கொள்ளப்படுகிற 'கற்பனேயே', சட்டப்படி உண்மையாக இருக்கிற ஒரு செய்தியைப் பிழையின்றிக் கூறுவதாகும்' என்பதும், 'சட்டப்படி உண்மையான இந்த நிலேயே எமது சட்டம் இயற்றும் அமைப்புக்கும், நீதிவழங்கும் அமைப்புக்கும் ஆதாரமாக உள்ளது' என்பதும் யாவருக்கும் எளிதில் விளங்கக்கூடிய உண்மைகளாகும். என்ருலும், இதுபோலவே மற்ருெரு செய்தியும் உண்மையானதாகும்; 'வாக்காளர்களுடைய விருப்பமே இறுதியில் தற்கால அரசியலமைப்பின்படி யாவராலும் கீழ்ப்படியப்படுவதற்கு உரியதாக ஆகிவிடுகிறபடியால், அவர்களே அரசியற்சார்பான பொருளில்

[1] இக் கருத்தை ஆஸ்டின் ஒத்துக்கொள்ளுகிருர்; ஆனல், இவ்வாறு அவர் இக் கருத்தை ஏற்றுக்கொள்ளுவதே, 'பாராளுமன்றம் உண்மையில் ஓர் இறைமை அதிகாரி அன்று' என அவர் கொள்ளும் கோட்பாட்டையே தகர்த்தெரிந்துவிடுகிறது.

இறைமையின் ஒரு முக்கியமான பகுதியாக—அல்லது இன்னும் தெளிவாகச் சொன்னால்—நடைமுறையில் இறைமை அதிகாரியாக இருக்கின்றனர்' என்பதுவே அச் செய்தி. ஆகையால், ஆஸ்டினுடைய விளக்கமானது, நம்மால் 'சட்டச்சார்பான இறைமை' என்று சுட்டப்படும் கருத்தைப் பொறுத்தவரையில் எத்துணை பிழைபட்டதாக இருக்கிறதோ, அவ்வளவிற்கு அவருடைய விளக்கம் 'அரசியற்சார்பான' இறைமையைப் பொறுத்தவரையில் சரியானதாக, பொருத்தமாக இருக்கிறது. அரசியற்சார்பான இறைமை அதிகாரியின் ஒரு பாகமாக, முக்கியமான பாகமாக வாக்காளர்கள் இருக்கின்றனர். ஆனால், அரசியலமைப்பைப் பற்றி எழுதி, மிகச்சிறந்த ஆசிரியர்களெல்லாம் ஒப்புக்கொள்ளுகிறபடி, சட்டப்படியான இறைமை அதிகாரி பாராளுமன்றத்தைத் தவிர வேறெவரும் இல்லை.

சட்ட அறிஞர்களுடைய கருத்துப்படி, ஆஸ்டினைக் குற்றவாளி ஆக்குகிற தவறு எதிலிருந்து தோன்றுகிறது என்றால், அது நாம் முன்பே பார்த்தபடி, 'பாராளுமன்றமானது எல்லா வல்லமையும் உடைய ஒரு குழு ஆகாது, செயலளவில் அதனுடைய அதிகாரங்களெல்லாம் ஒன்றுக்கு மேற்பட்ட பல வழிகளால் வரையறுக்கப் பட்டுள்ளன' என்று, சொற்களைமட்டும் கொள்ளாமல், பொருளையும் கொள்ளுகின்ற அவருடைய எண்ணத்திலிருந்து தோன்றியதாகும்; அதனை நாம் ஊகித்து உணரலாம். ஆனால், 'பொதுமக்கள் மன்றத்தினுடைய உறுப்பினர்கள் தங்களிடத்தில் வாக்காளர்களால் ஒப்படைக்கப்பட்டிருக்கின்ற ஒரு பொறுப்பின்மூலமாகக் கட்டுப்படுத்தப்பட்டிருக்கிறார்கள்' என்பதாகக் கூறி, மேற்கூறிய வரம்புக்கு ஆஸ்டின் விளக்கம் தருவது நமக்கு மகிழ்ச்சியை அளிக்கவில்லை. எனினும், இக் கருத்து நாம் ஆராயவேண்டிய இரண்டாவது தடையைச் சுட்டிக்காட்டுகிறது; அதாவது, பாராளுமன்ற இறைமை அதிகாரத்தோடு, பாராளுமன்ற அதிகாரத்துக்கு நடைமுறையிலுள்ள வரம்புகளும் சேர்ந்தே இருக்கின்றன என்ற உண்மையைக் காட்டுகிறது.

### அதிகாரத்திற்கு நடைமுறை வரம்புகள் இருப்பது இறைமைக்கு முரணானது அன்று

பாராளுமன்ற இறைமை அதிகாரத்திற்குள்ள நடைமுறை வரம்புகளைப்பற்றி (actual limitations) நாம் ஆராய்வோம். எந்த இறைமை அதிகாரியாலும், குறிப்பாகப் பாராளுமன்றத்தால் நடைமுறையில் கையாளப்படும் அதிகாரமானது, இரண்டு வரம்புகளால் எல்லைக்கு உட்படுத்தப்பட்டு அல்லது கட்டுப்படுத்தப்பட்டு இருக்கிறது. இவற்றுள் ஒன்று வெளியிலிருந்து வரும் வரம்பு அல்லது புறவரம்பு (external limitation), மற்றொன்று உள்வரம்பு (internal limitation).

புற வரம்பு

ஓர் இறைமை அதிகாரியினுடைய குடிமக்கள் அல்லது அவருள் பெரும்பாலோர் அவருடைய சட்டங்களுக்குக் கீழ்ப்படியாமல் அல்லது அதை எதிர்த்து இருக்கக்கூடிய நிச்சயமான நிலைமை தோன்றும்போது, அந்த நிலைமை, அந்த இறைமை அதிகாரியினுடைய அதிகாரத்துக்கு ஒரு புற வரம்பாக அமைகிறது.

இத்தகைய வரம்பானது, தீவிர சர்வாதிகாரத் தன்மையையுடைய முடியாட்சிகளிலும்கூடக் காணப்படுகிறது. பண்டைய ரோமானியப் பேரரசரோ அல்லது பதினெட்டாம் நூற்றாண்டின் நடுவிலிருந்த ஒரு ஃபிரெஞ்சு அரசரோ அல்லது இப்போது இருக்கிற ருஷ்யன் சார் அரசரைப் போல, இறைமை அதிகாரியாக, அச் சொல்லுக்குச் சட்டப்படியாக உள்ள பொருளில் இருந்துவந்தார். அவர் வரம்பற்ற சட்டமியற்றும் அதிகாரத்தைப் பெற்றிருந்தார். அவரால் செய்யப்பட்ட எந்தச் சட்டமும் கட்டுப்படுத்தும் தன்மை வாய்ந்தது; அத்தகைய சட்டத்தை நீக்குவதற்கு அந்தப் பேரரசிலோ அல்லது நாட்டிலோ எந்த அதிகாரியும் கிடையாது. ஒரு சர்வாதிகார அரசருடைய விருப்பத்திற்கே அவருடைய குடிமக்கள் யாவரும் பொதுவாகக் கீழ்ப்படிந்து நடக்கின்றனர் என்று நாம் சொல்லும்போது, சட்டச்சார்பான பொருளில் அல்லாமல், அரசியல்சார்பான பொருளில் இறைமையை நாம் குறிப்பிடுகிறோம்; என்றாலும், இதுவும் உண்மைதான். ஆனால், இதுவரை இருந்துவந்துள்ள எந்த வரம்புமில்லாத அதிகாரத்தையுடைய ஆட்சியாளரும்கூட, தனது விருப்பம்போல நடைமுறையில் எந்தச் சட்டத்தையும் ஆக்கவோ நீக்கவோ முடியும் என்று எண்ணுவது தவறாகும். இது இவ்வாறாகத்தான் இருக்கவேண்டும் என்பது, ஹியூம் (Hume) என்பவரால் வெகுகாலத்துக்கு முன்பே சுட்டிக்காட்டப்பட்டுள்ள காரணங்களினின்றும் தோன்றியதாகும். 'ஒருவகையில் பார்த்தால், வலுக்கட்டாயம் அல்லது பலாத்காரம் என்பது எப்பொழுதும் ஆளப்படுபவரிடத்திலேயேதான் இருக்கிறது. ஆகையால், அரசாங்கமானது எப்பொழுதும் கருத்தையே சார்ந்திருக்கிறது' என்ற உண்மையை ஹியூம் நமக்குக் கற்றுக் கொடுக்கிறார். அவர் எழுதுவதாவது: 'பலர் ஒரு சிலரால் ஆட்சி செய்யப்படுகின்ற எளிமைத் தன்மையைவிட, வேறெதுவும், மக்களுடைய செயல்களை உண்மைநெறி நோக்கோடு ஆராய்பவருக்கு வியப்பைத் தராது; ஆட்சியாளர்களுடைய உணர்ச்சிகளுக்கும் விருப்பங்களுக்கும் மக்கள் தங்களுடைய உணர்ச்சிகளையும் விருப்பங்களையும் விட்டுக்கொடுத்துக் கீழ்ப்படிந்துபோவதைக் காட்டிலும் வியப்பைத் தருவது வேறெதுவும் இல்லை. இத்தகையதோர் அற்புதமானது எவ்வகையான வழிகளில் நடைபெறுகிறது என்பதை நாம் ஆராய்வோமானால், வலுக்கட்டாயமானது எப்பொழுதும் ஆளப்படுபவரிடத்திலேயே இருக்கிறது என்ப

தையும், ஆளுவோருக்கு ஆதாரமாகக் கருத்தைத்தவிர வேறெதுவும் இல்லை என்பதையும் நாம் காண்போம். ஆகையால், கருத்து என்பதன் அடிப்படையில்மட்டுமே அரசாங்கமானது அமைந்திருக்கிறது. இந்த உண்மையானது மிக்க சர்வாதிகாரத் தன்மைவாய்ந்த அரசாங்கங் களுக்கும், மிக்க இராணுவ இயல்புடைய அரசாங்கங்களுக்கும் பொருந்துவதோடு அல்லாமல், மிக்க உரிமையுடைய, குடியாட்சித் தன்மையுடைய அரசாங்கங்களுக்கும் பொருந்துவதாகும். எகிப்திய சுல்தானே அல்லது ரோமானியப் பேரரசரோ ஒரு குற்றமும் செய்யாத தனது குடிமக்களை, அவர்களுடைய உணர்ச்சிகளுக்கும் விருப்பங் களுக்கும் மாருகக் கொடிய மிருகங்களைப் போல அடக்கி நடத்தலாம். ஆனல், அவர் தனது அலுவலரான மாங்லூக்குகளையோ அல்லது மெய்க் காவலர்களையோ மனிதர்களாக மதித்து அவருடைய கருத்தின் ஆதரவை முதலில் பெற்றாகவேண்டும்.'[1]

## இறைமை அதிகாரத்தைக் கையாளுதலில் உள்ள வரம்புகளுக்கு எடுத்துக்காட்டுகள்

ஒரு சர்வாதிகாரியினுடைய அதிகாரம்கூட, அவருடைய ஆணை களுக்குக் கீழ்ப்படிந்து நடப்பதற்கு அவருடைய குடிமக்கள் யாவரும், அல்லது அவருடைய குடிமக்களுள் ஒரு பிரிவினர் காட்டும் ஆர்வத்தையே சார்ந்துள்ளது : ஆணைகளுக்குக் கீழ்ப்படிதல் என்ற இத்தகைய ஆர்வம் எப்பொழுதும் ஓரளவுக்கு உட்பட்டதாகத்தான் இருக்கும். இவ்வுண்மையானது வரலாற்றில் காணப்படும் வெளிப் படையான செய்திகளிலிருந்து அறியப்படுகிறது. பண்டைய ரோமா னியப் பேரரசர்களான சீசர்கள், ரோமப் பேரரசில் இருந்துவந்த மூலாதாரமான அரசியல் நிறுவனங்களையோ அல்லது சமய வழிபாட்டு முறைகளையோ தங்கள் விருப்பம்போல் மாற்றிவிட முடியாது. பேரரசர் கான்ஸ்டன்டைன் ஒரு சமயப் புரட்சியை நிறைவேற்றியபோது, அவருடைய வெற்றிக்கு அவருடைய குடிமக்களுள் பெரும்பகுதியினர் காட்டிய பரிவு அல்லது இரக்கமே காரணம் ஆகும். சுல்தான் அரசரால் முகமதியருடைய சமயத்தை நீக்குதல் இயலாது. பதினன்காம் லூயி அரசர் தனது அதிகாரத்தின் உச்சநிலையில்தான் நான்ட்டிஸ் ஆணையை மாற்றிவிட முடிந்தது ; ஆனாலும், அந் நிலையிலும் பிராடஸ்டன்ட் சமயத்தை உரியதாகச் செய்வது தன்னால் இயலாது என்பதை அவர் உணர்ந்திருப்பார் ; இதே காரணத்திற்காக இரண்டாம் ஜேம்ஸ் அரசர் ரோமன் கத்தோலிக்கச் சமயத்தைத் தலைசிறந்ததாக ஆக்க இயலாமற் போயிற்று. இவருள் ஓர் அரசர் சர்வாதிகாரி என்பது முற்றிலும் பொருந்தும் ; மற்றவர் ஏனைய எந்த ஆங்கில அரசரையும்போல அதிகார முடையவராய் இருந்தார். ஆயினும், இவருள் ஒவ்வொருவருடைய வலிமைக்கும் வரம்பாக அமைந்தது, குடிமக்களுடைய கீழ்ப்படியாமை

[1] ஹியூம், 1875-ல் எழுதிய 'ஒழுக்க, அரசியல், இலக்கியக் கட்டுரைகள்' என்ற நூலில் முதற் பகுதி, 109, 110ஆம் பக்கங்கள்.

அல்லது எதிர்ப்பு ஏற்படும் என்ற உறுதிப்பாடுதான். கீழ்ப்படிதலுக்குக் குடிமக்களுடைய விரும்பாமை என்ற இயல்பு பெரும் காரியங்களில் மட்டுமன்றிச் சிறிய காரியங்களிலும் காணப்படும். 1771ஆம் ஆண்டிலுள்ள ஃபிரெஞ்சு தேசியச் சட்டமன்றமானது ஃபிரான்சில் இறைமை அதிகாரியாக இருந்தது என்பது உறுதியே. அதனுடைய உறுப்பினருள் பெரும்பாலோர் முடியாட்சியின் மீட்புக்கு ஆதரவாக இருந்தனரென்று கூறப்படுகிறது; ஆயினும், அது அமைதி உடன்படிக்கைக்கு அடையாளமான வெண்கொடியை ஏற்பதற்கு ஆயத்தமாக இல்லை; போர்போன் அரசகுடும்பத்தவர் ஃபிரெஞ்சு ஆட்சிக்கு மீண்டும் வருவதற்கு இசையக்கூடிய ஃபிரெஞ்சுப்படை, புரட்சிக்கு எதிரான அடையாளத்தைக் காண விரும்பாது எனப் பலரும் எண்ணினர்; 'துப்பாக்கிகள் தாமாகவே வேலைசெய்யும்' என்று கூறப்பட்டது. இந்த இடத்தில்தான் நாம் சட்டச்சார்பான இறைமைக்குள்ள சரியான வரம்பைக் காண்கிறோம்; ஒரு சர்வாதிகாரியினுடைய அதிகாரத்துக்குப் பொருந்துகிற இந்த உண்மையானது, பாராளுமன்ற இறைமைக்கும் பொருந்துவதாகும். எவ்வகையிலிருந்தும் அதற்குப் பொதுமக்களுடைய எதிர்ப்பு என்ற வரம்பு இருக்கிறது. பாராளுமன்றமானது எளிதில் ஸ்காட்லாந்தில் பிஷப்புகள் அடங்கிய, எபிஸ்கோபல் திருச்சபையை நிறுவமுடியும்; பாராளுமன்றம், சட்டப்படி குடியேற்ற நாடுகளில் வரிவிதிக்க முடியும்: ஆயினும், இப்பொழுதுள்ள உலகச் சூழ்நிலையில் இவற்றுள் எதனையும் பற்றி ஒரு சட்டம் செய்யப்பட்டால், அது பாராளுமன்றத்தின் அதிகாரம் செல்லுமளவிற்கும் அப்பாற்பட்ட காரியமாக இருக்குமாகையால், அதனைப்பற்றிய சட்டத்துக்கும் பரவலான எதிர்ப்புத் தோன்றும். இதுமட்டுமன்று; இதனினும் மேலாக, பாராளுமன்றத்தால் பண்டைக் காலத்தில் வெற்றியாக நிறைவேற்றப்பட்ட பல செயல்களை இக் காலத்தில் எந்தப் பாராளுமன்றமும் செய்யத் துணியாது. இந் நாளில் பாராளுமன்றமானது, இப்போது இருந்துவரும் பொதுமக்கள் மன்றத்தினுடைய அமர்வுக் காலத்தை ஒரு சட்டத்தின்மூலமாக நீடித்து வைக்காது. தீர ஆலோசிக்காமல், பாராளுமன்ற வாக்காளர்களுள் பெரும்பாலான வகுப்பினருடைய வாக்குரிமைகளைப் பறிக்க இயலாது; பொதுவாகக் கூறினால், பிற்போக்கான எந்தச் சட்டத்தையும் செய்யப் பாராளுமன்றம் துணியாது; கத்தோலிக்கருக்கு அளிக்கப்பட்ட விடுதலையை உண்மையாகக் குறைகூறுபவர்களும், ஐரிஷ் திருச்சபையைப் பிரித்த சட்டத்தை வெறுப்பவர்களும்கூட, 1829-லும் 1869-லும் செய்யப்பட்ட இச் சட்டங்களைப் பாராளுமன்றத்தால் இப்போது நீக்க முடியும் என்று கனவிலும் கருதமாட்டார்கள். இவைபோன்ற பல எடுத்துக் காட்டுகள், கொள்கையளவில் வரம்பு ஏதும் இல்லாத பாராளுமன்ற இறைமையானது, அது கையாளப்படும்போது, புற வரம்பினால் குறைக்கப்படுகிற வகையை விளக்குவதற்குப் போதுமானதாக இருக்கின்றன.

**உள்வரம்பு - எடுத்துக்காட்டுகள்**

இறைமை கையாளப்படும்போது அதற்குள்ள உள்வரம்பு (internal limit) அவ்விறைமை அதிகாரத்தின் இயல்பிலிருந்தே தோன்றுகிறது. ஓர் சர்வாதிகாரியும்கூட, தனது அதிகாரங்களைத் தனது ஒழுக்கத்திற்கு ஏற்பவேதான் கையாளுகிறார்; அவருடைய ஒழுக்கமும், அவர் காலத்திலுள்ள ஒழுக்கக் கருத்துகளினாலும், அவர் பொருந்தி இருக்கும் சமுதாயச் சூழ்நிலைகளினாலும் உருவாக்கப்படுகிறது. முகமதிய சமயத்தை மாற்றுவதற்குச் சுல்தான் விருப்பமுடையவராக இருந்தபோதிலும், அவ்வாறு மாற்றுவதற்கு அவரால் முடியாது; ஆனால், அவர் அவ்வாறு செய்தாராயின், முகமதிய சமயத்தவருடைய தலைவர் முகமதுவினால் நிறுவப்பட்ட சமயத்தை நீக்குவதற்கு விரும்புதல் எவ்வகையிலும் பொருந்தாத செயலாக ஆகிவிடும். சுல்தானுடைய அதிகாரத்தைக் கையாளுவதற்கு இருக்கும் உள்வரம்பானது, புறவரம்பைப் போலவே மிகவும் உறுதியானது. சிலர், ஏதேனுமொரு சீர்திருத்தத்தைக் குறிப்பிட்டு, அதனை ஏன் போப் செய்யவில்லை, என்பதாக வீணான ஓர் கேள்வியைக் கேட்கின்றனர். இதற்குச் சரியான விடை, 'புரட்சியாளர் எவரும் போப் ஆக வருவதற்குத் தகுதியானவர் ஆகார்; போப் ஆக வருபவர் புரட்சியாளராக இருக்க விரும்பமாட்டார்' என்பதே ஆகும். பதினான்காம் லூயி அரசரால் ஃபிரான்சின் தேசிய சமயமாகப் பிராடஸ்டன்ட் சமயத்தை நிறுவ முடியாது என்பது கண்கூடு; ஆனால் ஒரு பிராடஸ்டன்ட் சமயச் சீர்திருத்தத்தை நிறைவேற்ற பதினான்காம் லூயி விரும்பினாரென்று கற்பனை செய்துகொள்ளுவது, அவர் ஓர் பெருமைமிக்க மன்னர் அன்று (Grand Monarque) என்று கற்பனை செய்து கொள்ளுவதேயன்றி வேறன்று. இங்கும் இறைமையின் உள்வரம்பு, புறவரம்போடு இணைந்தே செயல்படுகிறது. பாராளுமன்ற வகையான ஆட்சியிலுள்ள இறைமைக்கு இருப்பதுபோல, மற்றெவ் வகைப்பட்ட ஆட்சியிலுள்ள இறைமைக்கும் உள்வரம்பின் வலிமை பெருமளவில் காணப்படுகிறது; ஒருவகையில் பாராளுமன்ற வகைப் பட்ட இறைமையில் உள் வரம்பு மிக்க ஆற்றலுடன் இருக்கிறது. முன்மதியுடைய பாராளுமன்றம் குடியேற்ற நாடுகளின்மீது வரி விதிக்காது; ஆனால், பதினெட்டாம் நூற்றாண்டின் வரலாற்றை நன்றாக நினைவில் வைத்துக்கொள்ளக்கூடிய தற்காலப் பாராளுமன்றம், குடியேற்ற நாடுகளின்மீது வரிவிதிக்க விரும்புமென்று நாம் நினைத்தும் பார்க்கமுடியாது. சட்டம் செய்யும் இறைமை அதிகாரத்தை, உள் வரம்பின் வலிமையும் புறவரம்பின் வலிமையும் சேர்ந்து கட்டுப்படுத்துவதை வியத்தகுமுறையில் லெஸ்லி ஸ்டீபன் என்பவர் ஒழுக்க விதிகளைப் பற்றிய அறிவியல் (Science of Ethics) என்ற நூலில் கூறியுள்ளார்; அதில் 'சட்டமும் வழக்கமும்' என்ற இயலில் இறைமையான சட்ட மன்றங்களின் கொள்கையளவில் அமைந்த சர்வ வல்லமைக்கு

(theoretical omnipotence) இயற்கையில் அமைந்த வரம்புகளைப்பற்றி மிகச்சிறந்த கருத்துரைகள் காணப்படுகின்றன.

லெஸ்லி ஸ்டீபன் (Sciuce of Ethics, 1882, பக்கம் 143) கூறுவதாவது: 'சட்டமன்றத்தின் முடிபுகளுக்கும் மேலாக, வேறு எதனையும் சட்ட அறிஞர்கள் ஒப்புக்கொள்ளுவதில்லையாகையால், சட்டமன்றமே சர்வ வல்லமையுள்ளதுபோலச் சட்ட அறிஞர்கள் கூறும் நிலையில் இருக்கிறார்கள். ஒரு சட்டம் என்பது, சட்டமன்றத்தினால் செய்யப்பட்ட ஓர் விதி என்று பொருள்படும். இதனாலும் இவ்வாறு தான் விரும்பிய சட்டங்கள் எவற்றையும் அது செய்யமுடியும் என்பதனாலும், உண்மையில் அது சர்வ வல்லமையுடையதே ஆகும். ஆனால், அறிவியற் கோணத்திலிருந்து பார்த்தால், உண்மையில் சட்டமன்றத்தின் அதிகாரமானது மிகவும் வரையறை செய்யப்பட்டிருப்பது தெரியவரும். அது உள்ளும் புறமும் வரையறை செய்யப்பட்டிருக்கிறதென்று சொல்லலாம்: சமுதாயத்தை உருவாக்குகின்ற ஆற்றல்களால் அதுவும் உருவாக்கப் பட்டு, ஓர் குறிப்பிட்ட சமுதாய நிலைமையினின்றும் அது தோன்றியதாக இருப்பதால், அதற்கு உள்வரம்பு இருக்கிறது; சுருக்கமான, குறைந்த அளவில் காணப்படுகிற கீழ்ப்படியும் இயல்பைப் பொறுத்தே சட்டங்களைச் செயல்படுத்தும் ஆற்றல் அமைந்திருப்பதால், இறைமைக்குப் புறவரம்பும் இருக்கிறது. நீலக்கண்களையுடைய எல்லாக் குழந்தைகளும் கொல்லப்படுதல் வேண்டுமென ஓர் சட்டமன்றமானது தீர்மானித்தால், நீலக் கண்களையுடைய குழந்தைகளைப் பாதுகாப்பது சட்டத்துக்கு மாறானதாகும்; ஆனால், இத்தகையதொரு சட்டத்தைச் செய்யும் சட்டமன்ற உறுப்பினர்கள் பைத்தியம் பிடித்தவர்களாகவும், இத்தகையதொரு சட்டத்துக்குக் கீழ்ப்படியும் குடிமக்கள் முட்டாள்களாகவுமே இருப்பார்கள்.'[1]

## இருவகை வரம்புகளும் பொருந்தாமலிருக்கலாம்

இறைமை அதிகாரமானது புறவரம்பினாலும், உள்வரம்பினாலும் கட்டுப்படுத்தப்பட்டிருந்தாலும், எந்த வரம்பின் எல்லையையும் உறுதி செய்தல் இயலாது. ஓர் இறைமை அதிகாரி தன்னால் ஒருபோதும் செய்ய இயலாத காரியத்தையோ அல்லது செய்தால் மிகவும் கடுமையான எதிர்ப்பை விளைவிக்கக்கூடிய செயலையோ செய்ய விரும்பலாம்; புறவரம்பு எந்த இடத்தில் செயல்படத் தொடங்குகிறது என்பதை அல்லது ஓர் ஆட்சியாளருடைய ஆணைகளுக்குப் பொதுவாகக் கீழ்ப்படிந்து நடக்கும் குடிமக்கள் எந்த நிலையில் அவ்வாட்சி

[1] ஜென்னிங்ஸ் என்பவர் கூறுவதாவது: '' பலர் விரும்பாத பல சட்டங்களைப் பாராளுமன்றம் நிறைவேற்றுகிறது. ஆனால், மக்கள் சமுதாயத்தில் கணிசமான பகுதியினரால் கடுமையாக எதிர்க்கப்படும் சட்டங்கள் எவற்றையும் அது ஒருபோதும் செய்வதில்லை.'

யாளரால் தவிர்க்க முடியாத அளவுக்கு அவரை எதிர்த்திருப்பார்கள் என்பதைத் துல்லியமாக வரையறுக்க முடியாது: இதை நாம் பல காரணங்களுக்காகக் கவனிக்கவேண்டும். ஸ்காட்ச் சட்ட நீதிமன்றங் களை நீக்கிவிட்டு, ஸ்காட்லாந்தின் சட்டங்களை இங்கிலாந்தின் சட்டங் களோடு சேர்த்துவிட ஏகாதிபத்தியப் பாராளுமன்றம் கருதுவது, தீர ஆலோசிக்காமல் செய்யும் செயலாகும். ஆயினும், இத்தகையதொரு மாற்றம் செய்யப்படுமானுல், இதற்கு ஸ்காட் மக்களின் எதிர்ப்பு எந்த இடத்தில் கடுமையாகத் தொடங்குமென்று எவராலும் உறுதியாகக் கூற முடியாது. பிரிவினைப் போருக்கு முந்திய காலத்தில், அமெரிக்க ஐக்கிய நாட்டின் இறைமை அதிகாரி, ஓர் உள்நாட்டுப் போரைத் தோற்று விக்காமல் அடிமைத் தளையை ஒழித்திருக்க முடியாது; பிரிவினைப் போருக்குப் பிற்பாடு, இறைமை அதிகாரி நடைமுறையில் எதிர்ப்பைக் கிளப்பாமல், அடிமைத் தளையை ஒழித்து, கறுப்பர்களுக்கு வாக்காளர் உரிமையை வழங்கிற்று.

### பிரதிநிதித்துவ அரசாங்க முறை புற, உள் வரம்புகளின் இணைப்பை ஏற்படுத்துகிறது

இறைமைக்கு உரிய புற, உள் வரம்புகளின் தொடர்பைப் பொறுத்த வரையில், பிரதிநிதித்துவ அரசாங்க முறையானது ஒரு குறிப்பிடத்தக்க புதுமையான நிலையைத் தோற்றுவிக்கிறது. அது வருமாறு: இறைமை அதிகாரத்தைக் கையாளுதலில் காணப்படும் உள் வரம்புக்கும் புற வரம் புக்குமிடையே ஓர் இணைப்பை (coincidence) ஏற்படுத்துவது, அல்லது அவற்றுக்கிடையேயுள்ள வேறுபாட்டைக் குறைப்பது என்பதுதான் பிரதிநிதித்துவ அல்லது சார்பாளர் முறையிலமைந்த அரசாங்கத்தின் நோக்கமும் விளைவும் ஆகும். மாமன்னர் ஃபிரடரிக் தனது குடிமக்களுடைய விருப்பங்களுக்கு மாறுன சீர்திருத்தங்களையோ அல்லது மாறுதல்களையோ புகுத்துவதற்கு விரும்பியிருத்தல் கூடும், அல்லது நடைமுறையில் அவர் அவ்வாறு செய்திருத்தலும் இயலும். லூயி நெப்போலியன் அரசர், ஃபிரெஞ்சு மக்களுடைய கருத்தை உண்மையாக எடுத்துக் காட்டிய சட்டமன்ற உறுப்பினர்களால் ஒப்புக்கொள்ளப்படாத தடையற்ற வாணிப முறைக் கொள்கையை (free trade policy) நடைமுறையில் புகுத்தத் தொடங்கினுர். இந் நிகழ்ச்சிகளில் இருவருள் ஒருவராவது தனது இறைமை அதிகாரத்துக்கு உரிய புற வரம்பை எட்டவில்லை; ஆனுல், அவர் புற வரம்பை எட்டி இருத்தல் கூடும் என்பதும், அதன்மூலமாக அவன் தனது குடிமக்க ளிடமிருந்து கடுமையான எதிர்ப்பைத் தோற்றுவித்திருத்தல் கூடு மென்பதும் நடைபெறக் கூடியவையே ஆகும். சுருங்கச் சொன்னுல், இறைமைக்கு உள்ள உள்தடைக்கும், புறத்தடைக்கும் இடையே ஒரு வேறுபாடு தோன்றி இருக்கும், இத்தகையதொரு வேறுபாடு இருந்த தென்பது அல்லது வேறுவகையாகச் சொன்னுல், அக் காலத்தில்

(அதாவது, பதினேழாம் நூற்றுண்டில்) இறைமை அதிகாரத்தின் உயரிய பாகமாக அமைந்த அரசருடைய அல்லது இறைமை அதிகாரியினுடைய நிலையான விருப்பங்களுக்குமிடையே வேறுபாடு இருந்ததென்பது, இங்கிலாந்தில் முதலாம் ஜேம்ஸ் அரியணை ஏறியதுமுதல் 1688ஆம் ஆண்டில் பெரும் புரட்சி நடைபெற்றது வரையிலுள்ள காலம் முழுவதிலும் காணப்படுகிறது. இத்தகைய வேறுபாட்டை நீக்குவதற்கு உரிய வழி, அதிகாரத்தை அரசரிடமிருந்து பாராளுமன்றத்துக்கு மாற்றுவதுதான் என்பதாக உணரப்பட்டது; மேலும், தங்களுடைய விருப்பங்களை, பொதுமக்கள் மன்றத்தின்மூலமாக வெளிப்படுத்தப் பட்ட நாட்டு மக்களின் கருத்தோடு ஒத்திருக்கும்படியாகச் செய்யவல்ல நிலையில் உள்ளவர்களையே, அரியணையில் அரசர்களாக ஏற்றிவைத்ததன் மூலமாகவும் இரு வரம்புகளுக்குமுள்ள வேறுபாடு நீக்கப்பட்டது; இறைமை அதிகாரியின் கருத்துக்கும் நாட்டுமக்களின் கருத்துக்கு மிடையே உள்ள வேறுபாடானது, ஓர் உண்மையான சார்பாளர் அரசாங்க முறையை (representative goverament) நிறுவியதன் மூலமாக நீக்கப்பட்டது. எப்பொழுது பாராளுமன்றமானது மக்க ளுடைய சரியான சார்பாளியாக விளங்குகிறதோ, அப்பொழுது இறைமை அதிகாரத்தைக் கையாளுதலில் உள்ள உள்வரம்புக்கும் புறவரம்புக்கு மிடையே அமைந்த வேறுபாடு தோன்றுது; அவ்வாறு அது தோன்றி ணுலும் அது விரைவில் மறைந்துவிடும். சுருக்கமாகச் சொன்னுல் பாராளுமன்றத்தின், சார்பாளர் நிறைந்த பகுதியில் காணப்படும் நிலையான விருப்பங்கள், ஆங்கில மக்களுடைய விருப்பங்களினின்றும் நெடுங்காலத்துக்கு மாறுபட்டிருக்க முடியாது; எவ்வாருயினும் அவை வாக்காளருடைய விருப்பங்களுக்கு மாறுபட்டே இருக்க முடியாது; பொதுமக்கள் மன்றத்தின் பெரும்பாலானவருடைய ஆணை எதனைக் கூறுகிறதோ, அதனையே ஆங்கில மக்களில் பெரும்பாலோர் வழக்கமாக விரும்புகின்றனர். இறைமை அதிகாரியின் விருப்பங் களுக்கும் குடிமக்களுடைய விருப்பங்களுக்கும் இடையே உள்ள ஓர் வேறுபாட்டைத் தடுப்பதே, ஓர் உண்மையான சார்பாளர் அரசாங்கத்தி னுடைய அலுவல்,—ஒரே அலுவல் ஆகும். இவ்வலுவலின் விளைவு நல்லதா அல்லது கெட்டதா என்று நாம் நமது ஆய்வில் காண வேண்டியதில்லை. ஓர் அறிவுக்கூர்மையுள்ள இறைமை அதிகாரி தனது குடிமக்களின் விருப்பங்களை முன்னதாகவே எதிர்பார்த்துப் பல தடவைகளில் சீர்திருத்தங்களை நிறைவேற்றுவது உண்டு. இது இறைமையை உடைய அரசர்களைப் பொறுத்தவரையிலும், மிக அருமையான இறைமை உடைய பாராளுமன்றங்களைப் பொறுத்த வரையிலும் உண்மையே ஆகும். ஆனல், இதனைச் செய்யும் இறைமை அதிகாரி, அவர் அரசராக இருப்பினும், பாராளுமன்றமாக இருப்பினும், உண்மையில் தனது குடிமக்களின் சார்பாளர் ஆக இருப்பதில்லை.[1]

[1] டைசி எழுதிய 'இங்கிலாந்தில் சட்டமும் கருத்தும்' என்ற (1914) நூலின் பக்கங்கள் 4, 5 பார்க்கவும்.

இங்கு வலியுறுத்திக் கூறப்படவேண்டியதெல்லாம் 'இறைமை அதிகாரியின் விருப்பங்களுக்கும், குடிமக்களின் விருப்பங்களுக்கும் இடையே இணைப்பை உண்டாக்குவதுதான் சார்பாளர் அரசாங்க முறையின் முக்கியமான இயல்பாக இருத்தல் வேண்டும் என்பது தான். இறைமை அதிகாரத்தைக் கையாளுதலில் உள்ள இந்த இரு வரம்பு களையும் முழுவதும் ஒன்றாக ஆக்குவதுதான். சுருங்கச் சொன்னால், நம்மால் இங்கு வற்புறுத்தப்படவேண்டிய ஒன்று ஆகும். இந்த உண்மை எல்லாச் சார்பாளர் அரசாங்கங்களுக்கும் பொருந்துவதைப் போல், ஒரு தனிச் சிறப்பான உண்மையோடு ஆங்கிலப் பொதுமக்கள் மன்றத்துக்கும் பொருந்துவதாகும்.

பர்க் (Burke) என்பவர் எழுதுவதாவது: 'பொதுமக்கள் மன்ற மானது, இந் நாட்டின் நிலையான அரசாங்கத்தின் ஒரு பாகமாக, முற்காலத்தில் கருதப்படவில்லை. அது, மக்களிடத்திலிருந்து நேரடி யாகத் தோன்றி, தோற்றுவித்த மக்களிடத்திலேயே விரைவாகச் சென்று விடுகிற ஓர் கட்டுப்பாடு என்பதாகக் கருதப்பட்டது. இவ்வகையாகப் பார்க்கும்போது அது அரசாங்கத்தின் உயர்தர நிலைகளில், தீர்ப்புச் சான்றாளர் குழுவுக்கு உள்ள நிலையில் (Juries) இருந்தது. ஓர் நீதி அதிகாரியின் திறம் தற்காலிகத் தன்மை வாய்ந்ததாகவும், ஒரு குடி மகனின் திறம் நிலையானதாகவும் இருப்பது; எனவே, பிற்கூறப்பட்ட திறமானது, மக்களுக்கும், நிலையான அதிகாரமுடைய அரசருக்கும் இடையே நடைபெறும் எல்லா ஆய்வுகளிலும், மக்களுக்கும் நிலையற்ற அதிகாரத்தையுடைய பொதுமக்கள் மன்றத்துக்கும் இடையே நடைபெறும் எல்லா ஆய்வுகளிலும், மிகவும் வலியதாக இருக்குமென்று கருதப்பட்டது. மேலும், குடிமக்களுக்கும் அரசாங்கத்துக்கும் இடைப் பட்ட நிலையில் பொதுமக்கள் மன்றம் இருப்பதால், சட்டமன்றத்தில் மிக நிலையானதாகவும், மக்களிலிருந்து மிகவும் விலகி இருப்பதுமான மற்ற பாகங்களைவிடப் பொதுமக்கள் மன்றமே மக்களைப்பற்றிய ஒவ்வொரு காரியத்தையும், பரிவு உணர்வோடும் ஈடுபாட்டோடும் கவனிக்கு மென்றும் எதிர்பார்க்கப்பட்டது.

'எவ்வகையான மாறுதல்களையும் காலமும் தொழில் வணிகமுறை களும் புகுத்தி இருந்தபோதிலும், பொதுமக்கள் மன்றமானது, பொதுவாக மக்கள் எல்லாருடைய இயல்பையும் அல்லது கருத்தையும் காட்டவல்ல ஏதேனுமோர் அடையாளத்தைப் பெறும்படியாக அமைக்கப்பட்டாலல்லாமல், மேற்கூறப்பட்ட பொதுமக்கள் மன்றத் தின் நிலையைப்பற்றிய கருத்து என்றும் ஒப்புக்கொள்ளப்பட முடியாத தாகும். பொதுமக்கள் மன்றத்துக்கு வெளியே உள்ள மக்களுடைய கருத்துகளையும், உணர்ச்சிகளையும்பற்றி ஒரு சிறிதும் கவனிக்காமல் பொதுமக்கள் மன்றம் இருந்தால், அதனால் விளையும் தீங்கைவிட,

தொகுதியாளர்களுடைய பரிவையும் தொடர்பையும் காட்டக்கூடியதும், அவ்வப்போது தொற்றுநோய்போல் மக்களிடையே பரவக்கூடியதும், அறிவுக்குப் பொருந்தாததுமான ஒவ்வொரு கருத்தினுலும், பொது மக்கள் மன்றம் பீடிக்கப்படுவதனுல் விளையும் தீங்கு, இயல்பானதாகவும், ஓரளவு பொறுத்துக்கொள்ளத் தக்கதாகவும் இருக்கிறது: இது அரசியலில் தோன்றும் பல துன்பங்களுள் ஒன்று. மேற்கூறப்பட்ட பரிவு உணர்ச்சி இல்லாவிட்டால், இந்த மன்றமானது, உண்மையில் ஒரு பொதுமக்கள் மன்றம் ஆகாது.'[1]

1. 1808 ல் வெளியிடப்பட்ட 'எட்மண்ட் பர்க்கின் நூல்கள்', பக்கங்கள் 287, 288.

இறைமையை உடைய பாராளுமன்றத்தோடு வேறுபடுத்திக் காட்டும்பொருட்டு ஆசிரியர் இங் த எடுத்து காட்டுகளாகக் குறிப்பிடுகிற, இறைமை இல்லாத சட்டம்செய்யும் மன்றங்களைப்பற்றி வாசகர்கள் யாதொன்றும் பிழைபட உணரமாட்டார்கள். 1885 ஆம் ஆண்டில் அவர் முதன்முதலாக பிரிட்டிஷ் இந்தியாவின் சட்டமன்றத்தைப்பற்றிக் குறிப்பிட்ட கருத்துகள், 1947 ஆம் ஆண்டில் இந்தியா சுதந்தர அரசின் நிலையை அடைவதற்கு நெடுங்காலத்துக்கு முன்னரே, வழக்கற்றுப் போய்விட்டன. சார்பாளர்முறையும் பொறுப்பும் உடைய அரசாங்க அமைப்பைக்கொண்ட ஆங்கிலக் குடியேற்ற நாட்டுக்கு எடுத்துக் காட்டாக அவர் நியூஸிலாந்தைத் தேர்ந்தெடுத்தார். இந்த இயலில் அவர் கூறுபவை சுதந்தரம் அடைய இருக்கும் ஒரண்டு குடியேற்ற நாடு களுக்குத்தான் பொருந்தும். முரணுரையாக, காமன்வெல்த்தில் நியூஸி லாந்து ஒன்றுதான் ஆசிரியர் டைசியின் கோட்பாட்டை அப்படியே நடைமுறையில் கையாளுகிற அரசுக்கு ஓர் எடுத்துக்காட்டாக இருக் கிறது: அதனுடைய பாராளுமன்றமானது ஓரவை மன்றமாக (Uni-Cameral) இருந்தபோதிலும், அதனால் ஒவ்வொரு சட்டத்தையும், எந்தச் சட்டத்தையும் மாற்ற இயலும். அயல்நாட்டில் இறைமை இல்லாத சட்டமன்றத்துக்கு ஓர் எடுத்துக்காட்டாக, ஆசிரியர் டைசி ஃபிரான்சைக் குறிப்பிடும்போது, அவர், அந் நாட்டின் ஐந்தாம் குடியரசின் அரசியல் அமைப்பைப்பற்றி எழுதவில்லை என்பது தெளிவு: இது போலவே, அவர் இதற்கடுத்த இயலாகிய 'பாராளுமன்ற இறைமையும் கூட்டரசுக் கோட்பாடும்' என்பதில் ஜெர்மன் பேரரசின் அரசியலமைப்பை ஆய்வு செய்யும்போது, அக் காலத்திய ஜெர்மன் பேரரசுக்குப் பதிலாக இக் காலத்திய மேற்கு ஜெர்மன் கூட்டரசின் அரசியலமைப்பைப்பற்றிக் கற்பனைகூடச் செய்திருக்கமாட்டார் என்பதும் தெளிவு.

## 2. பாராளுமன்றமும் இறைமையைப் பெற்றிராத சட்டம்செய்யும் மன்றங்களும்[1]

### இயலின் நோக்கம்

நான், சென்ற இயலில் பாராளுமன்ற இறைமையின் இயல்பைப் பற்றி விளக்கிக் கூறினேன். இங்கிலாந்திலுள்ளதைப்போல, இறைமையை உடைய ஒரு பாராளுமன்றத்தின் முக்கியமான தன்மைகளையெல்லாம், இறைமையைப் பெற்றிராத சட்டம்செய்யும் மன்றங்களின் பண்புகளோடு ஒப்பிட்டுப்பார்த்துப் பாராளுமன்ற இறைமையின் பண்புகளை விளங்கவைப்பதுதான் இந்த இயலில் என்னுடைய நோக்கமாகும்.

### பாராளுமன்ற இறைமை

A. **இறைமையையுடைய பாராளுமன்றத்தின் பண்புகள் :** பாராளுமன்ற இறைமையின் பண்புகளை அச் சொற்றொடரிலிருந்தே நாம் வருவிக்கலாம். ஆயினும், இப் பண்புகளெல்லாம் ஆங்கில மக்களுடைய கவனத்திலிருந்தும் தப்பிவிடக்கூடும்; ஏனெனில், அவர்கள் ஓர் உயர்தர அதிகாரமுடைய சட்டமன்றத்தின் ஆட்சியில் வாழ்வதற்கு நெடுங்காலமாகப் பழக்கப்பட்டுவிட்டபடியால், அவர்களை அறியாமலே, அவர்கள் எல்லாச் சட்டமன்றங்களும் தங்களுடையதைப்போன்று உயர்தர அதிகாரத்தோடு இருப்பதாக எண்ணிக்கொண்டுவிடலாம். இதனால் இறைமையைப் பெற்றிராத சட்டம்செய்யும் ஒரு மன்றத்தின் இயல்புகளுக்கு மாறாக, உயர்தர அதிகாரத்தை உடைய சட்டமன்றத்தின் இயல்புகள் இருப்பதை அவர்கள் கவனிக்காமல் இருக்கலாம். இந்நிலையைப் பொறுத்தவரையில், அயல்நாட்டு ஆசிரியர்கள் ஆங்கில மக்களைவிட, மிகத்தெளிவான அறிவுடன் இருப்பது இயல்பே. டிலோமே (De Lolme), நீஸ்ட் (Gneist), டி டாக்விலி (de Tocqueville) முதலிய ஆசிரியர்களெல்லாம், பாராளுமன்றத்தின் இறைமை என்பதையே ஆங்கில அரசியலமைப்பின் ஒரு முக்கியமான பண்பாக ஒப்புக்கொண்டு, சிறப்பான இந்தப் பண்பினின்றும் தோன்றும் விளைவுகளை நமது அரசியல் நிறுவனங்களில் காண்கின்றனர்.

[1] Parliament and Non - Sovereign Law-Making Bodies.

'இங்கிலாந்தில், அரசியலமைப்பை மாற்றுவதற்குப் பாராளுமன்றத்திற்கு யாவராலும் ஒப்புக்கொள்ளப்பட்ட ஓர் உரிமை இருக்கிறது; இவ்வாறு அரசியலமைப்பானது எப்பொழுதும் மாறுதலுக்கு உட்படக்கூடும்; ஆகையால், உண்மையில் அரசியலமைப்பு என்பதே கிடையாது; பாராளுமன்றமே ஒரு சட்டமன்றமாகவும் ஓர் அரசியல் நிர்ணய மன்றமாகவும் ஆகிவிடுகிறது,' என்று டி டாக்விலி எழுதுகிறார்.[1]

அவருடைய கருத்துகள் சரியானவை அன்று; அவை சில மறுப்புகளைத் தோற்றுவிக்கின்றன; ஆயினும், ஆங்கிலப் பாராளுமன்றத்தை 'ஒரு சட்டமன்றமாகவும் ஓர் அரசியல் நிர்ணயமன்றமாக'வும் அவர் குறிப்பிடுவது, பாராளுமன்றமானது எந்தச் சட்டத்தையும் மாற்ற இயலும் என்பதைச் சுருக்கமாகச் சுட்டிக்காட்டக்கூடிய ஒரு வாய்பாடு (formula) ஆக இருக்கிறது. 'ஒரு சட்டமன்றமாக' அது இருப்பதால், அதனால் சாதாரணச் சட்டங்களைச் செய்ய இயலும்; அது 'ஓர் அரசியல் நிர்ணயமன்றமாக' இருப்பதால், அரசியலமைப்பின் ஆதாரத்தையே மாற்றக்கூடிய சட்டங்களை அது செய்தல்கூடும். இந் நிலையிலிருந்து தோன்றக்கூடிய விளைவுகளை நாம் மூன்று தலைப்புகளில் குறிப்பிடலாம்.

## பாராளுமன்றத்தால் மாற்றப்படக்கூடாத சட்டம் இல்லை

முதலாவது, பாராளுமன்றத்தால் மாற்றமுடியாத எந்தச் சட்டமும் இல்லை; அல்லது இதனை வேறுவிதமாகச் சொன்னால், அடிப்படையான அல்லது அரசியலமைப்புபற்றிய சட்டங்களெனக் கூறப்படுபவையெல்லாம், பாராளுமன்றத்தால், அது தனது சாதாரணச் சட்டம் இயற்றும் தன்மையோடு கூடி இருக்கும்போது, மற்றச் சட்டங்கள் எவ்வாறு மாற்றப்படுகின்றனவோ, அவ்வழியிலேயே மற்றச் சட்டங்களை மாற்றும் பாராளுமன்றத்தாலேயே மாற்றப்படுகின்றன.

பொதுமக்கள் மன்றத்தைச் சீர்திருத்தும் ஒரு மசோதாவோ, பிரபுக்கள் மன்றத்தை நீக்கிவிடுவதற்குரிய ஒரு மசோதாவோ, இலண்டன் நகரத்துக்கு ஒரு நகராட்சி மன்றத்தை வழங்கும் ஒரு மசோதாவோ, சமயக்குருவுக்கு உரிய நிலையில் இல்லாத ஒரு போலி சமயக்குருவினால் செய்துவைக்கப்பட்ட, திருமணச் சடங்கைச் செல்லுபடியாகச் செய்கின்ற ஒரு மசோதாவோ எந்த மசோதாவும் பாராளுமன்றத்தினால் செய்யப்படுதற்குத் தக்கதே ஆகும்; இவற்றுள் எதுவும் ஒரே வகையான செயல்முறையில்தான் நிறைவேற்றப்படலாகும்; இவை நிறைவேறியவுடன் சட்டப்படியாக நோக்கினால், மற்றச்சட்டங்களைவிடக் கூடுதலாக, மாற்றமுடியாத தன்மையையோ அல்லது கூடுதலான புனிதத் தன்மையையோ ஒரு சிறிதும் பெற்றுவிடமாட்டா; எவ்வாறெனில் பாராளுமன்றத்தின் எந்தச் சட்டத்தையும்போல இவையெல்லாம்

[1] டி டாக்விலி எழுதிய, 'அமெரிக்காவில் குடியாட்சி' என்ற நூலின் 14ஆம் பதிப்பில், பக்கங்கள், 166, 167.

175196

சட்டங்களேதவிர, வேறு எந்தவகையிலும் இவை கூடுதலாகவோ குறைந்தோ போய்விடவில்லை; எனவே, இவை பாராளுமன்றத்தால் நிறைவேற்றப்பட்டதுபோலவே, பாராளுமன்றத்தால் நீக்கப்படவும் கூடும்; இவற்றைப் பாராளுமன்றத்தைத்தவிர வேறெந்த அதிகாரியும் நீக்கமுடியாது.

## அரசியலமைப்புச் சட்டங்களுக்கும் சாதாரணச் சட்டங்களுக்கும் வேறுபாடு இல்லை

இரண்டாவதாக, ஆங்கில அரசியலமைப்பிலே அடிப்படையல்லாத அல்லது அரசியலமைப்புச் சார்பு அல்லாத சட்டங்களுக்கும், அடிப்படையான அல்லது அரசியலமைப்புச் சார்பான சட்டங்களுக்கிடையே, குறிப்படத்தக்க அல்லது தெளிவான வேறுபாடு எதுவும் இல்லை. ஆகையால் சாதாரணச் சட்டங்களை மாற்றக்கூடிய ஓர் 'சட்டமன்றத்'துக்கும், சாதாரணச் சட்டங்களை மட்டுமன்றி, அரசியலமைப்புபற்றிய அடிப்படையான சட்டங்களையும் மாற்றக் கூடிய 'அரசியல் நிர்ணயமன்றத்'துக்குமுள்ள வேறுபாட்டை எடுத்துக் கூறும் விளக்கமானது, அயல்நாடுகளிலுள்ள அரசியல் சொற்களிலிருந்து எடுத்து ஆளப்பட்டதாகும்.

## பாராளுமன்ற இறைமைக்கும் எழுதப்படாத அரசியலமைப்புக்கும் உள்ள தொடர்பு

அரசியலமைப்புபற்றிய சட்டத்திற்கும் சாதாரணச் சட்டத்துக்கும் இடையே யாதொரு வேறுபாடும் இல்லாத நிலைக்கும், இங்கிலாந்தில் எழுதப்பட்ட அல்லது சட்டமாக நிறைவேற்றப்பட்ட அரசியலமைப்புச் சட்டமோ அல்லது பட்டயமோ இல்லாத நிலைக்கும் ஒரு நெருங்கிய தொடர்பு உண்டு; மற்ற ஆசிரியர்களைப்போல டி டாக்விலியும் பிரிட்டிஷ் அரசியலமைப்பின் எழுதப்படாத இயல்பை, அதனுடைய முக்கியமானதொரு இயல்பாகக் கருதுகிறார்; அவர் கூறுவதாவது: (ஃபிரெஞ்சு மொழியில்) 'L' Angleterre n'ayant point de constitution 'ecrite, qui peut dire qu'on change sa constitution?' ஆயினும் இவ்விடத்தில் டி டாக்விலி ஒரு தவறு செய்கிறார்; அத் தவறு அவருடைய நாட்டினரின் இயல்பாகவும், மிக அரிதாக அமைந்துள்ள, அவருடைய அறிவாற்றலில் காணப்படும் குறைபாட்டின் இயல்பாகவும் இருக்கிறது. அவர் அரசியலமைப்பின் வடிவமே, அவ்வரசியலமைப்பின் உண்மையான பண்புகளுக்குக் காரணமென்று கூறி, காரணத்துக்கும் காரியத்துக்கும் அல்லது விளைவுக்குமுள்ள தொடர்பை மாற்றிக் கூறிவிடுகிறார். 'அரசியலமைப்பானது ஓர் எழுதப்பட்ட சட்டவடிவத்தில் இல்லாத காரணத்தால், அது மாற்றப்படக்கூடியதாக இருக்கிறது,' என்று அவர் கருதுவதாகத் தெரிகிறது. ஆனால், 'அரசியலமைப்பின் ஒவ்வொரு பகுதியும் பாராளுமன்றத்தின் விருப்பத்திற்கு இணங்க

மாற்றப்படக்கூடியதாக இருக்கிற காரணத்தினுலேதான், அரசியலமைப் பானது ஓர் எழுதப்பட்ட சட்ட வடிவத்தில் அமைக்கப்படவில்லை' என்று வலியுறுத்துவதுதான், அவருடைய கருத்தையும்விட உண் மைக்குப் பொருத்தமாகும். மாற்றப்படமுடியாத அல்லது எப்படியும் சில குறிப்பிட்ட இடர்ப்பாடுகளோடு கூடவேதான் மாற்றப்படக் கூடியதாக அமைக்கப்பட்ட ஓர் அரசியலமைப்புச் சட்டத்தின் மூலமாக ஓர் அரசு ஆளப்படும்போது அந்த அரசியலமைப்பானது, நிலேயான அல்லது மாற்றப்படாத பண்பை உடைய சட்டங்களாகத்தான் ஆகிறது. அவ்வாறு இருக்கும் அரசியலமைப்பு எழுத்துமூலமாகவே வெளிப்படுத்தப்படவேண்டிய கட்டாயம் தோன்றுகிறது. அல்லது ஆங்கிலேயருடைய சொல்வழக்கில் கூறினல், அது ஒரு சட்டமாக நிறை வேற்றப்படவேண்டிய கட்டாயம் தோன்றுகிறது. இதற்கு மாருக, ஒவ்வொரு சட்டமும் ஒரே அளவான எளிமையுடனே அல்லது ஒரே அளவான இடர்ப்பாட்டுடனே சட்டப்படி மாற்றப்படும்போது, அரசியல் அமைப்பை ஓர் எழுதப்பட்ட வடிவில் ஆக்குவதற்கோ அல்லது ஒரு குறிப்பிட்ட சட்டங்களடங்கிய தொகுப்பைத் தனியாக அரசியலமைப் பைத் தோற்றுவிக்கின்ற சட்டத்தொகுப்பு என ஏற்றுக்கொள்ளுவ தற்கோ, எவ்விதக் கட்டாயத் தேவையும் தோன்றவில்லே. 'இங்கிலாந்தில் அரசியலமைப்புச் சட்டங்கள் ஏன் அத்தகைய பெயரில் ஒப்புக்கொள்ளப் படவில்லே,' என்பதற்கும் 'அத்தகைய சட்டங்கள் பலவும் ஏன் ஒரு சட்டவடிவத்தில் நிறைவேற்றிவைக்கப்படவில்லே' என்பதற்கும் ஒரே காரணம் என்னவென்ருல், எந்தச் சட்டமும், அது எவ்வளவுதான் முக்கியமானதாக இருந்தாலும், மற்ற எந்தச் சட்டமும் நிறைவேறு தற்கும் மாற்றப்படுவதற்கும் கையாளப்படும் முறையிலேயே, நிறை வேற்றப்படவும் மாற்றப்படவும் கூடியதாக இருக்கிறது. என்ருலும், ஆங்கில அரசியலமைப்பின் சட்டம் முழுவதும் ஓர் அரசியலமைப்புச் சட்டத்தொகுப்பு வடிவத்தில் எழுதப்படாமலும், சட்டமாக ஆக்கப் படாமலும் போய்விடலாம் என்று எண்ணுதல் தவருகும். உண்மையில் பெல்ஜிய அரசியலமைப்பானது, ஓர் எழுதப்பட்ட இங்கிலாந்தின் அரசியலமைப்பைப் பெரிதும் ஒத்திருக்கிறது. அரசியலமைப்புச் சட்டத் தொகுப்பை நீக்கவும் மாற்றவும் கூடிய வரம்பற்ற அதிகாரம் பெல்ஜியப் பாராளுமன்றத்திடம் இல்லே; அது ஆங்கிலப் பாராளுமன்றத்தினிடம் தான் காணப்படுகிறது; இத்தகைய அதனுடைய அதிகாரத்தை அதனிடம் இருக்கும்படிசெய்து, அரசியலமைப்பின் தன்மையில் எந்த மாறுதலும் செய்யாமல், இங்கிலாந்தின் அரசியலமைப்பை எளிதில் ஒரு பாராளுமன்றச் சட்டமாக ஆக்கிவிடலாம்.

**பாராளுமன்றச் சட்டத்தைச் செல்லுபடியற்றது எனக்கூற எவருக்கும் உரிமையில்லே**

பிரிட்டிஷ் பாராளுமன்றத்தால் நிறைவேற்றப்பட்ட எந்த ஒரு சட்டத்தையும், அது பாராளுமன்றத்தால் நீக்கப்பட்டாலல்லாமல், 'அது

அரசியலமைப்புக்கு முரணுனதென்பதாலும் அல்லது வேறு பல காரணங்களினுலும் செல்லுபடி ஆகாதென்று தீர்ப்புக்கூறக்கூடியவராக பிரிட்டிஷ் பேரரசில் எந்த ஓர் ஆளுக்கும் அல்லது பலர்சேர்ந்த நிர்வாக, சட்டமன்ற, நீதித்துறைகளிலுள்ள குழுவும் காணப்படமாட்டா: இதுவே, மூன்ருவது விளைவாகும்.

இவை மூன்றுமே இங்கிலாந்தில் இருக்கும் பாராளுமன்ற இறைமையின் பண்புகளாகும்; அடிப்படையான சட்டங்களையும், அவ்வாறு அல்லாதனவற்றையும் மற்றச் சட்டங்களை மாற்றும் வகையிலேயே, தன் விருப்பம்போல மாற்றுவதற்குச் சட்டமன்றத்திற்குள்ள அதிகாரம் முதலாவது பண்பு; அரசியலமைப்புச் சட்டங்களுக்கும் மற்றச் சட்டங்களுக்கும் இடையே, சட்டச்சார்பான வேறுபாடு எதுவும் இல்லாதிருத்தல் இரண்டாவது பண்பு; ஒரு பாராளுமன்றச் சட்டத்தைச் செல்லுபடியாகாதெனவோ, அரசியலமைப்புக்கு மாருனதென்ருே கருதி அதனைத் தள்ளுபடி செய்வதற்கு உரிமையுடைய நீதிமன்றமோ அல்லது வேறெந்த அதிகாரியோ இல்லாதிருத்தல் மூன்ருவது பண்பு ஆகும்.

### அரசியலமைப்பின் நெகிழும் தன்மை (Flexibility of the Constitution)

மேலே குறிப்பிட்ட பண்புகளெல்லாம், பிரிட்டிஷ் அரசியலமைப்பில் காணப்படுவதும், என் நண்பர் திரு பிரைஸ் (Bryce அவர்களால் மிக மகிழ்ச்சியாகக் குறிப்பிடப்படுவதுமான, 'நெகிழ்ச்சி' (flexibility) என்ற தன்மைக்கு எடுத்துக்காட்டுகளாக இருக்கின்றன.[1] பிரிட்டிஷ் அரசியலமைப்பின் எப் பகுதியும் மிக எளிதாக விரிவாக்கவோ, குறைக்கவோ, நீக்கவோ செய்யப்படக்கூடியதாக இருக்கிறது இப்பொழுது உலகில் காணப்படும் அரசியலமைப்புகளிலெல்லாம் இதுவே மிகவும் நெகிழ்ச்சி உடையதாகும். எனவே, திரு. பிரைஸ் அவர்களால் 'இறுக்கமான'தெனச் சுட்டிக்காட்டப்படும் அரசியலமைப்புகளின் பண்புகளின்றும் பிரிட்டிஷ் அரசியலமைப்பானது முற்றிலும் வேறுபட்டது; இறுக்கமான அரசியலமைப்பின் முழுவடிவமும் அல்லது அதன் எப் பகுதியும், ஏதேனும் ஒரு தனித்த சட்டம் இயற்றும் வழியினுல்தான் மாற்றப்படக்கூடியதாக இருக்கிறது.

### இறைமையைப் பெருத சட்டம்செய்யும் மன்றங்கள்

B. **இறைமையைப் பெருத சட்டம்செய்யும் மன்றங்களின் இயல்புகள்:** இறைமையையுடைய ஒரு சட்டமன்றத்தின் இயல்புகளில் இருந்து, இறைமை பெற்றிராத சட்டமியற்றும் மன்றங்களினுடைய இயல்புகள்

[1] பிரைஸ் எழுதிய (1901ஆம் ஆண்டு) வரலாற்றிலும், சட்ட இயலிலும் ஆராய்ச்சிகள், நெகிழ்ச்சியான, இறுக்கமான அரசியலமைப்புகள் என்ற கட்டுரையில் பார்க்கவும்.

அல்லது அடையாளங்கள் என்ன என்பதை எதிர்மறைவாயிலாக நாம் வருவிக்க இயலும்; எனவே, இறைமையில்லாத சட்டமன்றங்களின் இயல்புகளே, கீழ்ப்பட்ட நிலையிலுள்ள சட்டமன்றங்களுக்கு அடையாளங்களாக இருக்கின்றன.

கீழ்ப்பட்ட நிலையிலுள்ள ஒரு சட்டம்செய்யும் மன்றத்தை நாம் கண்டுபிடிப்பதற்குதவும் அடையாளங்களாவன: ஒன்று, அத்தகைய மன்றத்தால் மாற்றப்படக்கூடாததும், அதனால் கீழ்ப்படிந்து நடக்கப்படவேண்டியதுமான சட்டங்கள் இருக்கின்றன; இரண்டு, சாதாரணச் சட்டங்களுக்கும் அடிப்படைச் சட்டங்களுக்கும் ஒரு குறிப்பிடத்தக்க வேறுபாடு அமைக்கப்பட்டிருக்கிறது; இறுதியாக, அத்தகைய சட்டமியற்றும் மன்றத்தால் செய்யப்படும் சட்டங்கள் செல்லுபடியாகத் தக்கவையா அல்லது அரசியலமைப்புக்கு ஏற்றவையா என்று தீர்ப்பு அளிப்பதற்குரிய அதிகாரத்தையுடைய நீதிமன்ற அதிகாரியோ அல்லது வேறெந்த அதிகாரிகளோ இருக்கின்றனர்.

கீழ்ப்பட்ட நிலையை உண்டாக்கக்கூடிய இந்த அடையாளங்களுள் எவையேனும், எங்கெல்லாம் ஒரு சட்டம்செய்யும் மன்றத்தில் காணப்படுகிறதோ, அவை அந்த மன்றமானது ஒரு இறைமையுடைய மன்றம் அன்று என்பதற்குச் சான்றாக இருக்கின்றன.

### சட்டம்செய்யும் மன்றம் என்ற சொல்லின் பொருள்

'சட்டம்செய்யும் மன்றம்' என்ற சொற்றொடரின் பொருளைக் கவனிப்போம். இச் சொற்றொடரானது, ஒரு பக்கம் வழக்கமாகச் சட்டமன்றங்கள் என்று அழைக்கப்படாத, ஆனால் சட்டங்களைச் செய்வதற்கு ஓரளவு அதிகாரத்தையுடைய நகராட்சி மன்றங்கள், இரயில்வேக் கழகங்கள், பள்ளிக்கூடக் கழகங்கள், நகரக் கழகங்கள் முதலியவற்றையும், இன்னொரு பக்கம் வழக்கமாகச் 'சட்டமன்றங்கள்' என்று அழைக்கப்படுகிற ஆனால் இறைமையைப் பெற்றிராத மன்றங்களாகிய, பிரிட்டிஷ் குடியேற்ற நாடுகளின் பாராளுமன்றங்களையும் சுட்டிக் காட்டுகிறது; இத்தகைய மன்றங்களைக் குறிப்பிடும் சொற்றொடராகவே இது இங்குக் கையாளப்படுகிறது.[1]

[1] இச் சொற்றொடரைக் கையாளுதற்கு மறுப்பு தெரிவிக்கப்பட்டுள்ளது. இம் மறுப்பைப்பற்றி ஆசிரியர் டைசியின் கருத்தாவது வருமாறு: 'இச் சொற்றொடருக்குக் கூறப்பட்டுள்ள மறுப்புகள் மூன்று வகையாவன:

'முக்கியத்துவத்திலும் மதிப்பிலும் முற்றிலும் வேறுபட்டிருப்பவைகளை, எடுத்துக்காட்டாக, பெல்ஜியப் பாராளுமன்றத்தையும், ஆங்கிலப் பள்ளிக்கூடக் கழகத்தையும் ஒருசேரவைத்து, ஒரே வகுப்பாகச் சொல்வது அறியாமையாகும் என்று சொல்லப்படுகிறது; இதுவே, முதலாவது மறுப்பு. இந்த மறுப்பு ஒரு தவறான எண்ணத்தின் அடிப்படையில் எழுந்தது. அதிகாரம் மிக்க ஒரு சட்டமன்றத்துக்கும், ஒரு சிறிய கழகத்துக்கும் உள்ள அடிப்படையான வேற்றுமைகளைக் கவனிக்காமலிருப்பது நகைப்பிற்கிடமாகும். ஆயினும், இந்த இரண்டுக்கும் பொருந்தும்படி பொதுவாக இருக்கும் செய்திகளை அல்லது ஒற்றுமைகளைப் பற்றிக் கவனிப்பதில் நகைப்புக்கிடம் ஏதுமில்லை. இங்கு நாம் ஆராயவேண்டிய

பிறநாட்டுக் குறிப்புவகையாக உணர்த்தப்படுவதுபோல, 'சட்ட மன்றமாகமட்டுமே இருந்து, 'அரசியல் நிர்ணயமன்ற'மாக' இல்லாமல் எனவே இறைமையைப் பெற்றிராமல் அமையும் மன்றங்களினுடைய இயல்பைப்பற்றி நாம் கொண்டுள்ள கருத்துகளைத் தெளிவாக விளக்க வேண்டும்; அதற்குச் சிறந்தவழி, ஓர் உயர்தரச் சட்டமன்றத்தினிடமிருந்து ஓரளவு சட்டமியற்றும் அதிகாரத்தை, அவ்வதிகாரம் அம் மன்றத்தினுடைய வெளிப்படையான கட்டுப்பாட்டுக்குக் கீழ்ப் பட்டிருத்தல் வேண்டுமென்ற நிலையில் பெற்றிருக்கிற ஆங்கில இரயில்வேக் கழகங்களைப்போன்ற பல கழகங்களின் தன்மைகளை விளக்குவதுதான். இந்தக் காரணத்துக்காகத்தான் (முந்திய பத்தியில் கூறப்பட்டதுபோல்) பல்வேறு வகைப்பட்ட 'சட்டம்செய்யும்' மன்றங்களெல்லாம் ஒரே பெயரில் இணைத்துக் கூறப்பட்டன.

இறைமையைப் பெறாத சட்டம்செய்யும் மன்றங்களையெல்லாம், நகர்மன்றங்கள், இந்தியச் சட்டமன்றம்போன்ற வெளிப்படையாக வேறொன்றுக்குக் கீழ்ப்பட்ட நிலையிலுள்ள மன்றங்கள் எனவும், அரசியல் நிர்ணயம் செய்யாமல், சட்டங்களைமட்டும் செய்யக்கூடிய மன்றங்களாக அதாவது இறைமையைப்பெறாத சட்டமன்றங்களாக இருக்கும் சுதந்தரநாடுகளின் சட்டமன்றங்கள் எனவும், நாம் பாகுபாடு செய்யலாம்; இவ்வாறு பாகுபாடுசெய்தால், நமது கருத்து தெளிவாக விளங்கும்.

---

தெல்லாம், இந்த இரண்டுக்கும் இருப்பதாகக் கூறப்படும் ஒற்றுமை உண்மையா என்பதுதான். ஒன்றிற்கொன்று தோற்றத்திலும், மதிப்பிலும் வேறுபட்டுக் காணப்படும் இரண்டு பொருள்களுக்குமுள்ள ஒற்றுமை இயல்புகள் சுட்டிக் காட்டப்படும்போது, உடனே நம்முள் ஒரு வியப்பான உணர்வு தோன்றுகிறது; ஆனால், அறியாமையால் இத்தகைய மறுப்புக் கூறப்பட்டது என்பதனால், இரண்டுக்குமுள்ள ஒற்றுமை இல்லை என்றோ அல்லது கவனிக்கப்படவேண்டிய தில்லை என்றோ ஆகாது. ஒரு மனிதன் ஓர் எலியினின்றும் வேறுபட்டவனான்; என்றாலும் இச்செய்தி மனிதனும் எலியும் முதுகெலும்புள்ள விலங்குகள் என்ற செய்தியைப் பொய்யானதாகவோ அல்லது கவனிக்கப்படக்கூடாத ஒரு செய்தியாகவோ ஆக்கிவிடாது. 'ஏதேனும் ஓர் ஆங்கிலக் கழகமானது தன் அதிகாரங்களைப் பொதுவாக, அறிவுக்குப் பொருத்தமான முறையில்தான் கையாளமுடியும் என்றும், அறிவுக்குப் பொருந்தாதமுறையில் அதிகாரம் கையாளப்பட்டால், அது செல்லுபடி ஆகாதென்றும் இந்த நிலைமையானது ஒரு பிரிட்டிஷ் குடியேற்றநாட்டுப் பாராளுமன்றத்தால் செய்யப்பட்ட சட்டங்களைப் பொறுத்தவரையில் உண்மை அன்று எனவும் இரண்டாவது மறுப்புக் கூறப்படுகிறது. இந்த மறுப்புக்கு ஒன்றுக்கு மேற்பட்ட விடைகள் இருக்கின்றன. ஒரு கழகத்தால் செய்யப்படும் துணைச் சட்டங்களெல்லாம் (by-laws) காரணத்துக்கு அல்லது அறிவுக்குமாறாக இருந்தால், அவை செல்லத்தக்கவை ஆகமாட்டா என்பது எப்பொழுதும் எங்கும் உண்மை அன்று. எனினும், இங்கு விவாதத்துக்காக, துணைச் சட்டங்களைச் செய்வதற்கு இத்தகையதொரு தடை அல்லது கட்டுப்பாடு, உண்மையில் சில சமயங்களில் விதிக்கப்படுவதுபோல, எப்பொழுதும் விதிக்கப்படுகிறதென்று வைத்துக்கொள்ளுவோம். இவ்வாறான ஒரு தடை இருக்கிறதென்று வைத்துக்கொண்டாலும், இதனால் துணைச் சட்டங்களெல்லாம், சட்டங்களின் இயல்பைப் பெறாதவையென்று ஆகமாட்டா. இந்த மறுப்பினின்றும் பெறப்படும் முடிபு என்னவென்றால், இறைமையைப் பெறாத, சட்டம்செய்யும் ஒரு மன்றத்தின் அதிகாரங்களெல்லாம், பல்வேறுவகையான அளவுகளில் தடுக்கப்பட்டு அல்லது கட்டுப்படுத்தப்பட்டு இருக்கின்றன என்பதே; இதனை எவரும் மறுப்பதில்லை.

கூட்டரசு அரசாங்கம் என்று அழைக்கப்படுவதும், சிக்கலான வடிவமுள்ளதுமான, அரசியலமைப்பில் இருக்கும் இறைமையைப் பெருத சட்டமன்றங்களினுடைய நிலையானது, அடுத்த இயலில் ஆராயப்படுகிறது.

## I. கீழ்ப்பட்ட நிலையிலுள்ள மன்றங்கள், கழகங்கள்

### கீழ்ப்பட்ட நிலையிலுள்ள சட்டமியற்றும் மன்றங்கள்[1]

(i) **கழகங்கள்:** கீழ்ப்பட்ட நிலையிலுள்ள ஒரு சட்டமியற்றும் மன்றத்துக்கு, ஓர் ஆங்கில இரயில்வேக் கழகம் மிகப்பொருத்தமான எடுத்துக்காட்டு. அக் கழகம் உண்மையில், ஒரு சட்டம்செய்யும் கழகமாகும். எவ்வாறெனில், அதற்குரிய சட்டத்தின்படி, அது அதனுடைய இரயில்வேயில் பயணம்செய்வதை ஒழுங்குபடுத்தவும், இது

[1] Subordinate Law-Making Bodies. ஜென்னிங்ஸ் எழுதிய, 'காமன் வெல்த்தின் அரசியலமைப்புச் சட்டங்கள்' என்ற நூலின் முதற்பாகம், இரண்டாம் இயலைப் பார்க்கவும்.

---

'மூன்ருவதாக, ஒரு கழகத்தினுடைய துணைச் சட்டங்கள் சில குறிப்பிட்ட ஆட்களைமட்டுமே பாதிப்பதாகவும், அவை ஒரு குடியேற்றநாட்டுச் சட்ட மன்றத்தின் சட்டங்களைப்போலத் தனது அதிகார ஆட்சி எல்லைக்குள் வரும் எல்லா ஆட்களையும் பாதிக்காமல் இருப்பதால், அவை சட்டங்கள் ஆகமாட்டா எனவும் கூறப்படுகிறது. எடுத்துக்காட்டாக, ஓர் இரயில்வேக் கழகத்தின் துணைச் சட்டங்கள் அதன் இரயிலில் பயணம்செய்வோரைமட்டும் பாதிக்கிறது; குடியேற்ற நாட்டுச் சட்டமன்றத்தின் சட்டங்கள் அதன் மக்கள் யாவரையும் பாதிக்கிறது. வேறுவகையாகச் சொன்னுல், ஓர் இரயில்வேக் கழகத்தின் துணைச் சட்டங்கள் அதன் இரயிலைப் பயன்படுத்துவோரைப் பாதிக்கும்போது, அவர்கள் அந் நாட்டிலுள்ள மற்றவர்களைப்போல, அந் நாட்டின் பொதுச் சட்டத்தினுலும் கட்டுப் படுத்தப்படுகின்றனர்; ஆனுல், இதற்குமாருக ஓர் எடுத்துக்காட்டாகக் கூறினுல், நியூஸிலாந்து பாராளுமன்றத்தின் சட்டங்கள், அக்குடியேற்ற நாட்டின் பொதுச் சட்டங்களாக அமைகின்றன.

இந்த மறுப்பு மதிப்புக் கொடுக்கப்படவேண்டிய ஒன்று; எனினும், ஒரு கழகத்தின் நிலைக்கும் ஒரு குடியேற்றநாட்டுப் பாராளுமன்றத்தின் நிலைக்கும் வலியுறுத்திக் காட்டப்படும் ஒற்றுமையானது, உண்மையில் இல்லை என்று இந்த மறுப்பு காட்டவில்லை. கழகத்தால் செய்யப்படும் சட்டங்களாயினும் அல்லது சட்ட மன்றத்தால் செய்யப்படும் சட்டங்களாயினும், அவை ஒரு குறிப்பிட்ட மக்களடங்கிய கூட்டத்துக்கே கையாளப்படுகின்றன; மேலும், அவை ஓர் உயர் தரச் சட்டமன்றத்தின் சட்டங்களால் மாற்றப்படத்தக்கவையாகவும் இருக்கின்றன. நியூஸிலாந்தைப்போலப் பெருமளவு சுதந்தரமுள்ள ஒரு குடியேற்ற நாட்டிலும்கூட, அதனுடைய மக்கள் முதலில் ஏகாதிபத்தியப் பாராளுமன்றத்தின் சட்டங்களாலும், அவற்ருேடுகூட, நியூஸிலாந்துப் பராராளுமன்றத்தின் சட்டங்களாலும் கட்டுப்படுத்தப்படுகின்றனர். ஒரு கழகத்தால் செய்யப்படும்பொழுது துணைச் சட்டங்களாக இருக்கின்ற விதிகளே, பாராளுமன்றத்தால் நேராகச் செய்யப்படுமாறுல், உண்மையில் சட்டங்களாக அமைகின்றன. அவ் விதிகள் பாராளுமன்றத்தின் இசைவுடனே, ஒரு கீழ்நிலைப்பட்ட சட்டமன்றத்தால் செய்யப்படுகின்றன என்பதனுல், அவற்றின் தன்மையை மாற்றிவிட முடியாது. எனது இக்கருத்தை விளக்குவதற்கு ஓர் இரயில்வேக் கழகத்தைவிட, ஒரு மாவட்டக் கழகமே மிகப் பொருத்தமான எடுத்துக்காட்டு ஆகும். ஒரு மாவட்டக் கழகம், தனக்குப் பாராளுமன்றத்தால் அளிக்கப்பட்ட அதிகாரங்களுக்கிணங்க, ஞாயிற்றுக்கிழமைகளில் இசையோடு கூடிய ஊர்வலங்களைத் தடைசெய்கிற ஒரு துணைச் சட்டத்தை நிறைவேற்றுகிறது என்று வைத்துக்கொள்ளுவோம். இத் தடையானது ஒரு பாராளுமன்றச் சட்டத்தில் சேர்க்கப்படுமாறுல், ஐயப்பாட்டுக்கு இடமின்றி, அந்தத் தடையானது ஒரு சட்டமே ஆகும். எனினும், பாராளுமன்றத்தால் சட்டம்செய்வதற்கு இசைவு அளிக்கப்பட்ட ஒரு மன்றத்தினுல் இந்தத் தடை செய்யப்பட்டது என்ற காரணத்தினுலும், இது ஒரு சட்டமே ஆகும்.',

போன்ற பலவற்றைச் செய்யவும் துணைச் சட்டங்கள்[1] எனப்படும் சட்டங்களை இயற்றமுடியும். மேலும், அது அச் சட்டங்களை மீறிய செயல்களுக்குத் தண்டனை விதிக்கவும், அச் சட்டங்கள் நீதிமன்றங்களின் நடவடிக்கைகள் மூலமாகச் செயல்படுத்தப்படவும் கூடும். ஆகையால் ஒரு கழகமானது தனக்குச் சட்டத்தின்மூலமாக அளிக்கப்பட்ட அதிகார எல்லைக்குள் செய்யும்விதிகள் அல்லது துணைச் சட்டங்கள், உண்மையில், 'சட்டங்கள்' எனவே அமையும்; இக் கருத்தை, கிரேட் வெஸ்ட்ரன் இரயில்வேக் கழகத்தால் முறையே செய்யப்பட்ட ஒரு துணைச் சட்டத்தை ஆக்ஸ்ஃபர்டிலிருந்து பாடிங்டனுக்குப் பயணம் செய்யும் ஒருவர் வேண்டுமென்றே மீறி நடப்பாரானல், அப்பொழுது அவர் தமக்குச் செலவை உண்டாக்கிக்கொண்டு கண்டுகொள்வார்.

ஆயினும், ஓர் ஆங்கில இரயில்வேக் கழகமானது ஒரு சட்டம் செய்யும் மன்றமாக இருப்பது வெளிப்படையானதாக இருந்தாலும், உண்மையில் ஓர் இறைமையைப் பெற்றிராத சட்டம்செய்யும் மன்றமே ஆகும். அதனுடைய சட்டமியற்றும் அதிகாரத்தில், அதனுடைய கீழ்ப் பட்ட நிலையின் அடையாளங்களெல்லாம் காணப்படுகின்றன.

முதலாவதாக, இந்தக் கழகத்தைத் தோற்றுவிக்கின்ற பாராளு மன்றச் சட்டத்துக்கும் மற்றச் சட்டங்களுக்கும் அது கீழ்ப்படிய வேண்டிய கட்டாயம் இருக்கிறது; மேலும், தன்னைத் தோற்றுவிக்கும் பாராளுமன்றச் சட்டத்தை அதனல் மாற்றவும் இயலாது. இது மிகவும் வெளிப்படையான செய்தியாக இருப்பதால், இதனை வலியுறுத்த வேண்டுவதில்லை.

இரண்டாவதாக, இந்தக் கழகத்தால் ஒரு வரிகூட மாற்றமுடியாத சட்டமாக இருப்பதும், இதனைத் தோற்றுவித்ததுமான பாராளுமன்றச் சட்டத்துக்கும், அச் சட்டத்தினல் இதற்கு அளிக்கப்பட்ட அதிகாரங் களின் எல்லைக்குள், இதனல் செய்யப்படவும் நீக்கப்படவும்கூடிய துணைச் சட்டங்களுக்கும், மிகவும் குறிப்பிடத்தக்க வேறுபாடு இருக் கிறது. இந்த நிலையில், ஒரு கீழ்ப்பட்ட சட்டமன்றத்தால், அதாவது இரயில்வேக் கழகத்தால் மாற்றக்கூடிய சாதாரணச் சட்டங்களுக்கும், அதனல் மாற்றப்பட முடியாததான அரசியலமைப்புச் சட்டங்களுக்கும் உள்ள உண்மையான வேறுபாடு, மிகச் சிறிய அளவில் காணப்படு கிறது. இரயில்வேக் கழகத்துக்கு நாம் அரசியலமைப்புச் சட்டப் பிரிவு களைப் பொருந்தக் கையாளுவோமானல், அது ஓர் அரசியல் நிர்ணய

[1] 1845ஆம் ஆண்டின் இரயில்வேக்களுடைய விதிகளின் தொகுப்புச் சட்டத்தைப் பார்க்கவும். இரயில்வேக் கழகத்தை அமைக்கிற தனியானதொரு சட்டத்தில், மேற்படி சட்டம் சேர்க்கப்பட்டுள்ளது. எனவே, அச் சட்டத்தி னுடைய பிரிவுகளே ஓர் இரயில்வேக் கழகத்தின் அரசியலமைப்பின் பகுதியாக அமைகிறது.

மன்றமாக இல்லாமல், சில குறிப்பிட்ட வரம்புகளுக்குள் ஒரு சட்ட மன்றமாகமட்டுமே இருக்கிறது; இந்த வரம்புகளும் கழகத்தின் அரசியலமைப்பினாலேயே ஏற்படுத்தப்பட்டுள்ளன.

கழகத்தினுடைய துணைச் சட்டங்கள் செல்லும்படியாகுமா என்று தீர்ப்புக் கூறுவதற்கு நீதிமன்றங்களுக்கு உரிமை உண்டு. அவை அவ்வாறு கூறுதற்குக் கடமையும் உடையவை; அதாவது கழகமானது தான் ஒரு சட்டம்செய்யும் மன்றம் என்ற நிலையில், செய்த சட்டங்கள் செல்லுபடியாகத்தக்கவையா அல்லது அரசியற் சொற்களில் கூறினால், அவை அரசியலமைப்புக்கு ஏற்றவையா எனத் தீர்ப்புக் கூறுவதற்கு நீதிமன்றங்களுக்கு உரிமையும் கடமையும் உண்டு. ஓர் இரயில்வேக் கழகத்தால் செய்யப்பட்ட ஒரு துணைச் சட்டத்தை ஒரு நீதிமன்றமோ அல்லது நீதிபதியோ தாமே நேராகச் செல்லுபடியாகாது என்று கூறுவதோ அல்லது நீக்குவதோ செய்தல், அந்த நீதிமன்றத்தின் அல்லது நீதிபதியின் வேலையன்று என்பதை நாம் முக்கியமாகக் கவனிக்கவேண்டும். ஓர் இரயில்வேக் கழகத்தினால் செய்யப்பட்ட ஒரு துணைச் சட்டத்தோடு தொடர்புள்ள குறிப்பிட்ட ஒரு வழக்கு நீதிமன்றத்துக்கு வரும்போது, நீதிமன்றமானது அந்த வழக்கில் உள்ளதை ஆராய்ந்து தீர்ப்புக் கூறுவதற்காகப் பாராளுமன்றச் சட்டத்தினால் கழகத்துக்கு அளிக்கப்பட்டுள்ள அதிகாரங்களுக்குள் அடங்கியதாக அந்தத் துணைச் சட்டம் இருக்கிறதா, இல்லையா என்று ஆராய்வதுதான் நீதிமன்றத்தின் வேலையாகும்; அதாவது கழகத்தின் துணைச் சட்டமானது செல்லுபடியாகுமா, செல்லுபடியாகாதா என்று தீர்மானிப்பதும், துணைச் சட்டத்தினுடைய செல்லுபடியாகும் தன்மையைப்பற்றி நீதிமன்றமானது, தான் கொண்டுள்ள கருத்தையொட்டிக் குறிப்பிட்ட வழக்கில் திர்ப்பு அளிப்பதுமே அதனுடைய வேலை. ஒரு குறிப்பிட்ட துணைச் சட்டமானது, பாராளுமன்றச் சட்டத்தினால் கழகத்துக்கு அளிக்கப்பட்டுள்ள அதிகாரங்களுக்குள் அடங்கியதாக இருக்கிறதா, இல்லையா என்று, ஆங்கில நீதிபதிகள் ஆய்வுசெய்யும் முறையையும் நாம் கவனமாக ஆராயவேண்டும்; ஏனென்றால், இதனை அறிந்தால்தான், ஓர் இறைமை இல்லாத சட்டமன்றத்தினால் செய்யப்படும் சட்டங்களின் அரசியலமைப்புக்கு இயைந்த தன்மையை (constitutionality) ஆங்கில அல்லது அமெரிக்க நீதிமன்றங்கள் தீர்மானிக்கும் முறையைச் சரிவர நாம் அறிந்துகொள்ள இயலும்.

இலண்டன் - வடமேற்கு இரயில்வேக் கழகமானது தான்செய்த ஒரு துணைச் சட்டத்தில் பின்வருமாறு கூறுகிறது: 'கழகத்தினால் முறையாக அதிகாரம்பெற்ற ஏதாவதோர் ஊழியருடைய தனிப்பட்ட இசைவு இல்லாமல், ஒருவர் தான் எந்த வகுப்பு அல்லது எந்த வகையான இரயிலில் பயணம் செய்வதற்குப் பயணச்சீட்டு வாங்கி

யிருக்கிறரோ, அந்த வகுப்புக்கும் அல்லது அந்தவகையான வண்டிக்கும் மேலானதொரு வகுப்பிலோ அல்லது மேலானதொரு வண்டியிலோ பயணம் செய்வாராளுல், அவர் இதன்மூலமாக நாற்பது ஷில்லிங்குக்கு மேற்படாத அபராதத்தொகை செலுத்தவேண்டியவராகிறர்; மேலும், அவர் இதனேடுகூட, தான் கழகத்தை ஏமாற்றும் நோக்கம் உடையவரல்லா எனச் சான்றுடன் காட்டினுலொழிய, அவர்வந்த இரயில் முதலில் எந்த நிலையத்திலிருந்து புறப்பட்டுவந்ததோ, அதிலிருந்து, அவர் பயணம்செய்த வகுப்புக்குரிய கட்டணத்தையும் செலுத்துதல் வேண்டும். 'X' என்பவர், தாம் ஓர் இரண்டாம் வகுப்பு வண்டியில் பயணம் செய்வதற்குப் பயணச்சீட்டு வாங்கியிருக்க, ஏமாற்றும் நோக்கத்துடனேயே, அவர் ஓர் இரண்டாம் வகுப்பு வண்டியிலல்லாமல், ஒரு முதல்வகுப்பு வண்டியில் பயணம் செய்தார்; அவர் இந்தத் துணைச் சட்டத்தின்படி குற்றம்சாட்டப்பட்டு, பத்து ஷில்லிங் அபராதமும் செலவுத்தொகைகளும் கட்டும்படியாகத் தண்டிக்கப்பட்டார். X மேல்முறையீடு (appeal) செய்துகொள்ள, நீதிமன்றம் 'சான்றுகாட்டும் பொறுப்பை'க் (burden of proof) குற்றம்சாட்டியவருக்கு (accused) மாற்றுகிற கழகத்தின் துணைச் சட்டமானது, ஏமாற்றும் நோக்கத்தைக் காட்டும் சான்றைக் குற்றத்தின் அடிப்படையாகக் கருதுகிற விட்டோரியா அரசியின் 8ஆம் சட்டத்திற்கு (C-20, & 103) அல்லது அந்த இரயில்வேக் கழகத்தை அமைத்த சட்டத்தினுடைய பிரிவுகளுக்கு முரணுனதாக இருப்பதால், அவ்வாறு முரணுக இருக்கும் துணைச் சட்டமானது சட்டத்துக்குப் புறம்பானதெனவும், செல்லுபடியாகாதெனவும் தீர்மானித்து, எனவே, 'X என்பவர்மீது சுமத்தப்பட்ட குற்றத்துக்காக அவர் தண்டிக்கப்படுதல் கூடாதென'வும் தீர்ப்பளித்தது.

தென் கிழக்கு இரயில்வேக் கழகத்தின் சட்டமொன்று, தனது பயணச்சீட்டைக் கொடுக்குமாறு கழகத்தின் ஊழியரால் கேட்டுக் கொள்ளப்படும்போது கொடுத்துவிடவேண்டும் என்றும், எவராவது பயணச்சீட்டு இல்லாமல் பயணம் செய்தாலும் அல்லது தமது சீட்டைத் திருப்பிக்கொடுக்க மறுத்தாலும், அந்த இரயில் முதலில் புறப்பட்ட நிலையத்திலிருந்து, அவருடைய பயணத்தின் இறுதிவரையிலுமுள்ள பயணக் கட்டணத்தைச் செலுத்துதல் வேண்டுமென்றும் விதித்தது.

'X' என்பவரிடம் தென் கிழக்கு இரயில்வேயில் பயணம்செய்வதற்கு ஒரு பயணச்சீட்டு இருந்தது. வழியில் இரயில்களில் மாறவேண்டியிருந்ததனுல் கழகத்தின் இரயில் நிலையத்திற்கு வெளியில் செல்லும்போது, அவர் தமது பயணச்சீட்டைக் காட்டும்படி கேட்டுக்கொள்ளப்பட்டார்; ஆனல், அவர் ஏமாற்றும் நோக்கம் எதுவுமின்றிப் பயணச்சீட்டைக் காட்ட மறுத்ததால், மேற்கூறிய துணைச் சட்டத்தை அவர் மீறியதற்காக நீதி மன்றத்துக்கு வரவழைக்கப்பட்டு, இரயில் முதலில் புறப்பட்ட நிலையத்திலிருந்து பயணக்கட்டணம் செலுத்தவேண்டும் என்று

தண்டிக்கப்பட்டார். அரசியின் உயர்நீதி மன்றம், எந்தச் சட்டத்தின்படி துணைச் சட்டமானது செய்யப்படுதல் வேண்டுமெனப் பொருள்படுகிறதோ, அந்தச் சட்டத்தினால் அத் துணைச் சட்டம் செய்யப்படுவதற்குப் பல காரணங்களின்படி அதிகாரம் இல்லையாகையால். துணைச் சட்டத்தைச் செல்லுபடியாகாதென்ற காரணத்தினால் தண்டனை தவறானதென்றும் தீர்ப்பளித்தனர்.

தண்டனைகள் மூலமாகச் செயல்படுத்தப்படும் துணைச் சட்டங்களைச் செய்தற்குரிய அதிகாரங்களையுடைய ஒரு கழகத்தினால், (எடுத்துக்காட்டாக ஓர் இரயில்வேக் கழகம் அல்லது ஒரு பள்ளிக்கூடக் கழகம்) செய்யப்படும் ஒரு துணைச் சட்டத்தினுடைய செல்லுபடியாகத்தக்க தன்மையைத் தீர்மானிப்பதற்காக, மேலே கூறப்பட்டவைபோன்ற வழக்குகளில் நீதிமன்றங்கள் முயலும்போது, நீதி மன்றங்கள் துணைச் சட்டங்களைச் செல்லுபடியாகத் தக்கவையென்றோ அல்லது செல்லுபடியாகாதவை என்றோ தீர்ப்பளிக்கின்றன என்று யாவரும் கூறுவது இயல்பே. நீதிபதிகள் தீர்மானிப்பது, 'ஒரு குறிப்பிட்ட துணைச் சட்டமானது செல்லுபடியாகாது' என்பதை அன்று; ஏனென்றால், இரயில்வேக் கழகங்களினால் செய்யப்பட்ட துணைச் சட்டங்களை நீக்குவதோ, அழிப்பதோ நீதிமன்றங்களின் அலுவல் அன்று. ஆனால், ஒரு துணைச் சட்டத்தை மீறியதற்காக, X என்பவர்மீது விதிக்கப்பட்ட அபராதத்தை மீட்டுக்கொடுப்பதற்காக நடைபெறும் இந்த வழக்கில் 'குறிப்பிட்ட துணைச் சட்டமானது கழகத்திற்கு அளிக்கப்பட்ட அதிகாரங்களுக்கும் அப்பாற்பட்டது. எனவே, அது செல்லுபடியாகாது,' என்ற காரணத்தின்மீதுதான் தீர்ப்பு அளிக்கப்பட வேண்டியதாக இருக்கிறது. ஒரு துணைச் சட்டத்தை நீக்குவதற்கும், அந்தத் துணைச் சட்டமானது செல்லுபடியாகாது என்ற அனுமானத்தில் ஒரு வழக்கில் தீர்ப்புக் கூறுவதற்கும் உள்ள வேறுபாடு, பெருமளவில் இல்லை என்றும் கருதப்படலாம். ஆயினும், உண்மை இவ்வாறு இல்லை. ஓர் இரயில்வேக் கழகத்தில் செய்யப்பட்ட ஒரு துணைச் சட்டத்தை மீறியதாகக் குற்றம்சாட்டப்பட்ட X என்பவர், அபராதம் செலுத்தவேண்டியவர்தானா, என்ற வழக்கை ஆய்வுசெய்யும்போதுகூட, மேற்கூறிய இரண்டுக்குமுள்ள வேறுபாடு முக்கியமானதாக இருக்கிறது; நீதிமன்றங்களின்முன் உள்ள வழக்கு அரசியலமைப்புச் சட்டத்தைப்பற்றிய ஆய்வுகளைத் தன்னிடத்து உடையதாக இருக்குமானால், எடுத்துக்காட்டாக அவ்வப்போது நடைமுறையில் காணப்படுகிறபடி, கனடா டொமினியன் பாராளுமன்றத்தாலோ அல்லது கனடா மாகாணப் பாராளுமன்றங்கள் ஏதாவதொன்றினாலோ செய்யப்பட்ட சட்டங்களினுடைய செல்லுபடியாகும் தன்மையை அல்லது அரசியலமைப்புத் தன்னகத்தேகொண்ட வழக்குகளைப் பிரிவு கௌன்சில் தீர்மானிக்கவேண்டி வருமானால்,— மேலே சுட்டிக்காட்டப்பட்ட வேறுபாடு முதல்தரமான முக்கியத்துவம்

உடையதாக இருக்கிறது. இந்த வேறுபாட்டிலுள்ள உட்பொருள், நாம் எடுத்துக்கொண்ட பொருளைப்பற்றி மேலும் ஆராயும்போது தெளிவாகத் தெரியவரும்; இவ்வேறுபாட்டின் இயல்பையும், 'ஒரு குறிப்பிட்ட வழக்கை ஒரு நீதிமன்றம் தீர்க்கும்போது, அது ஒரு துணைச் சட்டமானது செல்லுபடியாகுமா, ஆகாதா என்று ஆராய்ந்தாலும், அதனுடைய ஆய்வு, துணைச் சட்டத்தை நீக்கவோ அல்லது அழிக்கவோ செய்யும் செயலாக அல்லாமல் வேறானதாக இருக்கிறது.' என்பதையும் நாம் இங்குக் கவனிக்கவேண்டும்.

## பிரிட்டிஷ் இந்தியாவின் சட்டமன்றம்[1] (Leeislative council of British India)

(ii) **பிரிட்டிஷ் இந்தியாவின் சட்டமன்றம்:** பிரிட்டிஷ் இந்தியாவுக்கான சட்டங்கள், மிக விரிவான சட்டமியற்றும் அதிகாரங்களையுடைய ஒரு சட்டமன்றத்தினால் செய்யப்படுகின்றன. 'மன்றத்தில் கவர்னர்-ஜெனரல்' (Governor-General in Council) என்று குறிப்புச் சொல்லால் அழைக்கப்படுகிற இந்தச் சட்டமன்றமானது, பிரிட்டிஷ் பாராளுமன்றத்தால் செய்யப்படுகின்ற எந்தச் சட்டங்களையும்போல, முக்கியமான சட்டங்களைச் செய்யமுடியும். ஆனால், சட்டம் செய்வதற்கான வழியில் இந்த மன்றத்துக்கு இருக்கும் அதிகாரமானது, இலண்டன் - வடமேற்கு இரயில்வேக் கழகத்துக்குத் துணைச் சட்டங்கள் செய்வதற்கு இருக்கும் அதிகாரம், எவ்வாறு பாராளுமன்றச் சட்டத்துக்கு முழுவதும் கீழ்ப்பட்டதாக, அதனைச்சார்ந்து இருக்கிறதோ அவ்வாறே இருக்கிறது.

கவர்னர்-ஜெனரலுக்கும் அவருடைய மன்றத்திற்கும் இருக்கும் சட்டம்செய்யும் அதிகாரங்கள் மிகத் தெளிவான பாராளுமன்றச் சட்டங்களிலிருந்தே தோன்றுகின்றன.[2] இந்தச் சட்டங்கள் சட்டமன்றத்தைப் பொறுத்தவரை, இந்தியாவின் அரசியலமைப்பு என்று சொல்லும்படியாக இருக்கின்றன; இந்தச் சட்டங்களின்படி, இந்தியச் சட்டமன்றமானது, ஓர் இறைமையைப் பெற்றிராத சட்டமியற்றும் மன்றமாக இருக்கிறதென்றும், மன்றத்தில் கவர்னர் - ஜெனரலால் செய்யப்பட்ட சட்டங்கள் அல்லது விதிகள் அரசரால் நீக்கப்படவோ,

[1] இல்பர்ட் எழுதிய, இந்திய அரசாங்கம் (1910) என்ற நூலையும் (பக்கங்கள் 224-240), இயற்றப்பட்ட சட்டங்களின் தொகுப்பு (பிரிவுகள் 60 69) என்ற நூலையும் பார்க்கவும். இதனை அடுத்துவரும் பத்திகளெல்லாம் இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் நீக்கப்பட்ட, இந்திய அரசியலமைப்புச் சட்டத்தை ஆதாரமாக உடையவை. 1947ஆம் ஆண்டில் இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கும் சுதந்தரம் வழங்கப்படுவதற்கு அண்மையான முற்பட்ட காலத்தில், காபினெட் அரசாங்கமுறையைப் புகுத்திய, 1935 ஆம் ஆண்டின் இந்திய அரசாங்கச் சட்டத்தால், பிரிட்டிஷ் இந்திய மாகாணங்களின் அரசாங்கம் ஒழுங்குபடுத்தப்பட்டது—பதிப்பாசிரியர்.

[2] இந்திய அரசாங்கச் சட்டம், 1833, இந்தியச் சட்டமன்றங்கள் சட்டம் 1861, இந்திய அரசாங்கச் சட்டம், 1865.

தடுக்கப்படவோ கூடுமென்ருலும், மேற்கூறியவிதமாகவே மன்றம் இருக்கிறதென்றும் நாம் கவனிக்கவேண்டும். சட்டமன்றத்தினுடைய நிலைமையானது, சட்டம் இயற்றுதலில் கீழ்ப்பட்ட நிலையிலுள்ளதைக் காட்டும் அடையாளங்களை அல்லது குறிப்புகளை உடையதாக இருக்கிறதென்பதையும் நாம் நோக்கவேண்டும்.

முதலாவதாக, இந்தச் சட்டமன்றமானது பல விதிகளால் கட்டுப் படுத்தப்பட்டது ; இவ் விதிகளை இந்தியச் சட்டமன்றமே மாற்ற முடியாது : இவை ஏகாதிபத்தியப் பாராளுமன்றத்தின் உயர்தர அதிகாரத்தினுல் மாற்றப்படத்தக்கவை.

தனது அதிகாரத்தை எந்தச் சட்டங்களிலிருந்து இந்தச் சட்ட மன்றம் பெறுகிறதோ, அந்தச் சட்டங்களே இந்தச் சட்டமன்றத்தால் மாற்றப்பட முடியாதனவாகும் ; எனவே, இந்தச் சட்டங்கள் இந்தியச் சட்டக் கழகத்தைப் பொறுத்தவரையில், அரசியலமைப்பான அல்லது அடிப்படையான சட்டங்களாக அமைகின்றன ; இந்தச் சட்டங்களைச் சட்டமன்றம் மாற்றமுடியாதாகையால், அவை இந்தச் சட்டமன்ற மானது கொடுக்கப்பட்ட அதிகாரத்தோடு செய்யும் சட்டங்களினின்றும் தெளிவாக வேறுபட்டிருக்கின்றன. இந்தச் சட்டமன்றமானது சட்டமாகச் செய்தற்குரிய பல பொருள்களைப்பற்றித் திட்டவட்டமான பல வரையறைகளை, மேற்கூறிய அடிப்படைச் சட்டங்கள் விதிக்கின்றன என்பதையும் நாம் குறிப்பிடவேண்டும். பாராளுமன்றத்தினுடைய அதிகாரத்தைப் பாதிக்கக்கூடிய சட்டங்களையோ, யுனைடெட் கிங்டத்தின் அரசருக்கு எவரேனும் ஒருவர் செலுத்தவேண்டிய விசுவாசத்தை விதிக்கும், எழுதப்படாத சட்டங்களையும் அல்லது அரசியலமைப்பையும் இந்தியாவின் எந்தப் பகுதியின்மீது அரசருக்கு உள்ள இறைமையையோ அல்லது நிலத்தையோ பாதிக்கக்கூடிய சட்டங்களையோ செய்வதற்கு மன்றத்தில் கவனர் - ஜெனரலுக்கு அதிகாரம் கிடையாது.[1]

மூன்ருவதாக, இந்தியாவிலும் (அல்லது பிரிட்டிஷ் பேரரசின் மற்றெந்தப் பகுதியிலுமுள்ள) நீதிமன்றங்கள், வாய்ப்பு தோன்றும் போது, இந்தியச் சட்டமன்றத்தால் செய்யப்பட்ட சட்டங்களினுடைய செல்லுபடியாகும் தன்மையைப்பற்றி அல்லது அரசியலமைப்புக்கு ஒத்த தன்மையைப்பற்றி ஆராய்ந்து தீர்ப்புக் கூறலாம்.

ஓர் இரயில்வேக் கழகத்தின் துணைச் சட்டங்களை எவ்வாறு அரசருடைய நீதிமன்றம் நடத்துகின்றதோ, அவ்வாறே இந்தியச் சட்டமன்றத்தினுல் நிறைவேற்றப்பட்ட சட்டங்களை, நீதிமன்றங்கள் நடத்துகின்றன. இந்தியாவிலோ அல்லது வேறெங்குமோ உள்ள எந்த நீதிபதியும் மன்றத்தில் கவர்னர் - ஜெனரலினுல் செய்யப்பட்ட

[1] இந்தியச் சட்டமன்றங்களின் சட்டம், 1861.

விதியை அல்லது சட்டத்தைச் செல்லுபடியாகாது எனவும், அழிக்கப்பட வேண்டியதெனவும் தீர்ப்புக்கூறுவது இல்லை. ஆனால், இந்தியச் சட்ட மன்றத்தின்மூலமாக யாராவது ஒருவருடைய உரிமைகளையும் அல்லது கடமைகளையும் பாதிக்கக்கூடிய, சிவில் அல்லது குற்றவழக்கு நீதி மன்றங்களின் முன்னர் வரும்போது, நீதிமன்றமானது, குறிப்பிட்ட இந்த வழக்கையொட்டி மேற்கூறிய சட்டமானது சட்டமன்றத்தினுடைய சட்டபூர்வமான அதிகாரங்களுக்கு உட்பட்டதா, இல்லையா என்று ஆராய்ந்து தீர்மானிக்கவேண்டியிருக்கிறது: இத்தகைய ஆய்வு, குறிப்பிட்ட சட்டமானது, இந்த வழக்கைப் பொறுத்தவரையில், செல்லுபடியாகத் தக்கதா, அரசியலமைப்புத் தன்மை உடையதா என்று ஆய்ந்து தீர்ப்பளிப்பதே ஆகும். X என்பவர் சட்டமன்றத்தினால் நிறைவேற்றப்பட்ட ஒரு சட்டத்தையோ அல்லது விதியையோ மீறியதாகக் குற்றம்சாட்டப்பட்டதாகவும், குற்றத்தை X செய்தாரென்பது ஐயத்திற்கிடமின்றி நிறுவப்பட்டதாகவும் வைத்துக் கொள்ளுவோம். இதற்கான நடவடிக்கைகள் எடுக்கப்படும் நீதிமன்றமானது, சாதாரணமாக ஓர் இந்திய நீதிமன்றமாகத்தான் இருக்கும்; X மீறிய விதியானது, இந்திய அரசியலமைப்புச் சட்டமாக இருக்கின்ற பாராளுமன்றச் சட்டங்களினால், இந்தியச் சட்டமன்றச் சட்டத்துக்குக் கொடுக்கப்பட்டுள்ள அதிகாரங்களுள் அடங்கியதா என்பதை, இந்த நீதிமன்றமானது ஆய்வு செய்யவேண்டிவரும். இந்தச் சட்டமானது, அதிகாரங்களுள் அடங்கியதாக இருக்குமாயின், வேறுவகையாகச் சொன்னால், அரசியலமைப்புக்கு ஒத்ததாக இருக்குமானால், நீதிமன்றம் X என்பவருக்கு எதிரான தீர்ப்பை வழங்குவதன்மூலம் மேற்கூறிய சட்டத்துக்கு முழுமதிப்பையும் கொடுக்கும். இவ்வாறு அது செய்வது ஓர் இரயில்வேக் கழகத்தின் துணைச் சட்டத்தை மீறியதற்காகத் தன்முன் வழக்குக்குக் கொண்டுவரப்பட்ட குற்றவாளியின்மீது, நீதிமன்றம் அபராதம் விதித்துத் தீர்ப்புக்கூறி, அதன்மூலமாக அத் துணைச் சட்டத்துக்கு மதிப்புக் கொடுப்பதைப்போல இருக்கிறது. இதற்கு மாறாக, மன்றத்தில் கவர்னர்-ஜெனரலால் செய்யப்பட்ட விதியானது செல்லுபடியாகாது; அல்லது அரசியலமைப்புக்குப் புறம்பானது என இந்திய நீதிமன்றம் தீர்மானித்தால், அது விதிக்கு மதிப்புக்கொடுக்காது; அந்த விதி செல்லுபடியாகாததால், சட்டப்படியாக அது நடைமுறையில் இல்லை என்ற காரணத்தில், நீதிமன்றம், பிரதிவாதிக்குச் சார்பாகத் தீர்ப்பளித்து, அந்த விதிக்கு மதிப்புக் கொடுக்க மறுக்கும். இந்த உண்மையை அறிய, பேரரசிக்கும் புரா, புக்சிங்குக்கும் இடையே (1877) எழுந்த வழக்கு மிகவும் தெளிவாக உதவுகிறது. இவ் வழக்கிலுள்ள விவரங்கள் நமக்குத் தேவையில்லை. பேரரசுப் பாராளுமன்றத்தில் கவர்னர்-ஜெனரலுக்கு அளிக்கப்பட்ட அதிகாரத்துக்கும் கூடுதலாக, மீறியதாக அம் மன்றத்தின் ஒரு குறிப்பிட்ட விதியானது இருப்பதால், அது செல்லுபடியாகாதெனா உயர்நீதிமன்றம் கூறி, இந்த

அடிப்படையில் அது இரண்டு கைதிகளிடமிருந்து வந்த மேல்முறையீட்டை (appeal)[1] ஏற்றுக்கொண்டது: இந்த விதியானது செல்லுபடியாகுமானால், மேல்முறையீட்டை நீதிமன்றம் ஏற்றுக்கொண்டிருக்காது: இவ் விரண்டு செய்திகள்மட்டுமே இங்குக் கவனிக்கப்படவேண்டியவை. இந்தத் தீர்ப்புக்கும் எதிரான மேல்முறையீட்டைக்கேட்ட பிரிவி கௌன்சில், குறிப்பிட்ட விதியானது. சட்டமன்றத்தினுடைய சட்டப்படியான அதிகாரங்களுள் அடங்கியதென்றும், எனவே செல்லுபடியாகுமென்றும் தீர்ப்பளித்தது உண்மையே: எனினும், கவர்னர்-ஜெனரலுடைய சட்டமானது, அரசியலமைப்புத் தன்மை உடையதா இல்லையா என்பதை ஆய்வுசெய்வதற்குக் கல்கத்தா உயர்நீதி மன்றத்துக்கு இருக்கும் கடமையைப் பிரிவி கௌன்சில் மறுக்கவில்லை. இச்செய்தியை வேறு கோணத்திலிருந்து பார்த்தால், நமக்குத் தெரிவது என்னவெனில், பேரரசுப் பாராளுமன்றச் சட்டங்களை ஓர் ஆங்கில நீதிமன்றம் நடத்தும் ஒருமுறைக்கு, முற்றிலும் மாறுபட்டமுறையில் இந்தியாவிலுள்ள நீதிமன்றங்கள், மன்றத்திலுள்ள கவர்னர்-ஜெனரலின் சட்டத்தை நடத்துகின்றன என்பதுதான். கவர்னர் - ஜெனரலால் செய்யப்பட்ட ஒரு சட்டம் அரசியலமைப்புத் தன்மையற்றதாக, செல்லுபடியாகாததாக இருப்பதால், அதற்குக் கீழ்ப்படிய வேண்டாவென்று எந்த இந்திய மன்றமும் தீர்ப்புக் கூறலாம். பாராளுமன்றச் சட்டமானது அரசியலமைப்புத் தன்மையற்றதாக இருப்பதால், அதற்குக் கீழ்ப்படிய வேண்டியதில்லை என்பதாக ஒரு பிரிட்டிஷ் நீதிமன்றமும் தீர்ப்புக்கூற முடியாது: தீர்ப்புக் கூறுவதுமில்லை. சுருங்கச்சொன்னால் இந்நிலையில், ஒரு கீழ்ப்பட்ட நிலையிலுள்ள சட்டமன்ற அதிகாரிக்கும், இறைமையை உடைய ஒரு சட்டமன்ற அதிகாரிக்குமுள்ள முக்கியமான வேறுபாட்டை நாம் காண்கிறோம்.[2]

## ஆங்கிலக் காலனிகள் அல்லது குடியேற்றநாடுகள்

(iii) **ஆங்கிலக் குடியேற்றநாடுகளும், சார்பாளர் முறையில் பொறுப்புள்ள அரசாங்கங்களும்:** பல ஆங்கிலக் குடியேற்ற நாடுகளும் முக்கியமாக, (தெளிவான விளக்கம் பெறுவதற்காக நம்மால் கவனிக்கப்படுவதுமான) நியூஸிலாந்து டொமினியனும் சார்பாளர் சட்டமன்றங்களை உடையவை: இம் மன்றங்கள் ஒரு புதிய நிலையில் இருக்கின்றன.

## குடியேற்றநாட்டுப் பாராளுமன்றங்களால் கையாளப்படும் அதிகாரங்கள்

நியூஸிலாந்து டொமினியன் பாராளுமன்றமானது, யுனைடெட் கிங்டத்தின் பாராளுமன்றத்தைப்போன்ற ஓர் இறைமையையுடைய

[1] அரசிக்கும் புராவுக்குமுள்ள வழக்கு, (1878).

[2] பேரரசிக்கும், புரா, புக் சிங்குக்குமுள்ள வழக்கு, (1877).

மன்றத்தின் சாதாரண அதிகாரங்கள் பலவற்றை நாடு முழுவதிலும் கையாளுகிறது.[1] அது சட்டங்களைச் செய்கிறது; நீக்குகிறது; அமைச்சரவைகளை அமர்த்துகிறது: அலுவலினின்றும் நீக்குகிறது; நியூஸிலாந்து அரசாங்கத்தின் பொதுவான கோட்பாட்டைக் கட்டுப்படுத்துகிறது; மேலும். அது வெஸ்ட்மின்ஸ்டரிலுள்ள பாராளுமன்றம் செய்வதைப்போல, பொதுக்காரியங்கள் செய்யப்படுவதில் தனது விருப்பம் ஏற்றுக்கொள்ளப்படும்படியாகச் செய்கிறது. நியூஸிலாந்துச் சட்டமன்றத்தினுடைய அன்றாட நிகழ்ச்சிகளைக் கண்ணுறும் எவரும், அந்த மன்றம் யுனைடெட் கிங்டத்தின் பாராளுமன்றத்தைவிட, ஒரு சிறிதேனும் குறைவான அதிகாரம் உடையது என்று கருதமாட்டார். குடியேற்ற நாட்டு மசோதாக்கள், சட்டங்களாக ஆவதற்கு அவற்றின் ஆளுநரின் அல்லது கவர்னரின் ஒப்புதலைப் பெறுதல் வேண்டுமென்பது உண்மையே; இன்னும் நன்ருக ஆராய்ந்தால், எந்தக் குடியேற்ற நாட்டுச் சட்டத்துக்கும் செல்லுபடியாகும் தன்மை இருக்கவேண்டுமானல், அதற்கு ஆளுநரின் ஒப்புதலோடுகூட, அரசருடைய வெளிப்படையான அல்லது மறைமுகமான ஒப்புதலும் இருக்கவேண்டுமென்பது தெரியவரும். ஆயினும், இத்தகைய ஒப்புதல்களெல்லாம் அவ்வப்போது,

[1] நியூஸிலாந்து இப்பொழுது காமன்வெல்த்திலுள்ள ஒரு நாடாக இருக்கிறது; அக்காலத்திலிருந்த டொமினியன்களுக்குப் பொருந்தக்கூடிய 1865ஆம் ஆண்டின் குடியேற்றநாட்டுச் சட்டங்களின் மதிப்புப்பற்றிய சட்டத்தை நீக்கிவிட்டு, 1931ஆம் ஆண்டின் வெஸ்ட்மின்ஸ்டர் சட்டம், டொமினியன்களுக்குச் சட்டத்துறையில் சுயாட்சி வழங்கி, நாட்டுக்கு வெளியேயும் செயல்படக்கூடிய சட்டங்களைச்செய்யும் அதிகாரத்தை வழங்கிற்று. ஒரு குடியேற்றநாட்டுப் பாராளுமன்றமாக நியூஸிலாந்து இருக்கும் நிலைக்கு இணையாக, இப்பொழுது மௌரிஷியஸ் போன்ற ஒரு குடியேற்றநாட்டு நிலத்திலுள்ள சார்பாளர் சட்டமன்றத்தைச் சொல்லலாம்.

ஆசிரியர் டைசி, இச் செய்தியைக் கூறுமிடத்து, 'எந்த ஒரு குடியேற்ற நாட்டுச் சட்டமன்றத்திற்கும், தன் நில எல்லைகளுக்கு அப்பால் எந்த அதிகாரமும் இல்லை' என்று சொன்ஞர். இந்தக் கருத்தை ஒப்புக்கொள்ளத் தூண்டுகிறவகையில், மக்ளியாடுக்கும் நியூசௌத்வேல்சின் உயர்தர வழக்கறிஞருக்குமிடையே, 1891ஆம் ஆண்டிலெழுந்த வழக்கின் தீர்ப்பு அமைந்தபோதிலும், இக் கருத்து முறையாக இவ்வாறு நீதிபதிக் குழுவினல் (judicial committee) தீர்க்கப்படவில்லை. ஒரு குடியேற்றநாட்டுச் சட்டமானது அமைதி, ஒழுங்கு, நல்ல ஆட்சி ஆகியவற்றை ஏற்படுத்துவதற்குத் துணையான பிரிவுகளை உடையதாக இருக்குமானல், அது குடியேற்றநாட்டின் அல்லது டொமினியன் எல்லைகளுக்கும் அப்பால் செயல்படும்படியாக விரிவானது என்று பல வழக்குகளில் தீர்ப்பளிக்கப்பட்டிருக்கிறது. இதற்கு கிராஃப்ட்டுக்கும் டன்ஃபிக்கும் 1933-ல் எழுந்த வழக்கு ஓர் எடுத்துக்காட்டு. கனடாவினுடைய நிலத்தையொட்டி நீரெல்லைக்கும் அப்பாற்பட்ட இடத்திலுள்ள கப்பல்களைக் கைப்பற்றுவதற்கு அதிகாரம் அளிக்கும் ஒரு கனடியச் சட்டத்தின் செல்லுபடியாகுந் தன்மை ஒப்புக்கொள்ளப்பட்டது. அவ்வாறு கைப்பற்றுதல், டொமினியனின் சுங்கவரிச் சட்டங்களைச் செயல்படுத்துவதற்குத் தேவையான துணைப் பிரிவில் அடங்கியது. குடியேற்றநாட்டின் எல்லைக்கும் அப்பால், சில குறிப்பிட்ட பொருளில் செயல்படக்கூடிய சட்டங்களைச் செய்வதற்குக் குடியேற்றநாட்டுச் சட்டமன்றங்களுக்கு விரிவான சட்டமியற்றும் அதிகாரங்களை, வெளிப்படையாகப் பேரரசுச் சட்டங்கள் பல நிகழ்ச்சிகளில் வழங்கியுள்ளன என்று ஆசிரியர் சரியாகக் குறிப்பிடுகிருர். இதற்கு எடுத்துக்காட்டு, 1894ஆம் ஆண்டின் வாணிபக் கப்பல் சட்டத்தின் 478, 735, 736 பிரிவுகள். கடைசியிலுள்ள இரு பிரிவுகளைப் பொறுத்தவரை வெஸ்ட்மின்ஸ்டர் சட்டத்தின் 5ஆம் பிரிவைப் பார்க்கவும்.

இயல்பானதொரு நடைமுறையாகவே கொடுக்கப்படுகின்றன; அரசருடைய ஒப்புதலளிக்கும் அதிகாரத்தை ஓரளவு சரியான ஒப்புமையாகக் கூற வேண்டுமானால், அது பாராளுமன்றத்தின் சபைகளினால் நிறைவேற்றப்பட்ட மசோதாக்களின்மீது அரசருக்குத் 'தள்ளுரிமை அதிகாரம்' (veto) அல்லது ஒப்புதலை மறுக்கும் அதிகாரமாக இருக்கிறதென்று சொல்லாம்.

## அதிகாரங்களின் வரம்பு

இவ்வளவெல்லாம் இருந்தபோதிலும், இந்தச் செய்தியை இன்னும் ஆராயும்போது, டொமினியன் பாராளுமன்றமானது, மற்றெல்லாக் குடியேற்றநாட்டுச் சட்டமன்றங்களையும் போல, ஓர் இறைமை இல்லாத சட்டமன்றமாக இருக்கிறதென்றும், சட்டம் இயற்றுவதில் கீழ்ப்பட்ட நிலைக்குரிய தெளிவான அடையாளங்களை உடையது என்றும் தெரிய வரும். டொமினியன் பாராளுமன்றத்தின் செயலானது, அதனால் மாற்றமுடியாத சட்டங்களினால் கட்டுப்படுத்தப்பட்டுள்ளது; பிற்கூறப்பட்ட இச் சட்டங்கள் பேரரசுப் பாராளுமன்றத்தால்மட்டுமே மாற்றப்படக்கூடியவை; மேலும், 'நியூஸிலாந்துச் சட்டங்கள், குடியேற்ற நாட்டுச் சட்டமன்றத்தின் அதிகாரத்தால் மாற்றப்படாத பேரரசுப் பாராளுமன்றச் சட்டங்களோடு முரண்படுகின்றன' என்ற காரணத்தின் அடிப்படையில், அந்த நியூஸிலாந்துச் சட்டங்களை, அவைகளுக்கு அரசரால் ஒப்புதலளிக்கப்பட்டிருந்தபோதிலும், செல்லுபடியாகாதவை எனவும், அரசியலமைப்புத் தன்மையற்றவை எனவும் மதிப்பிடுவதற்கு, நியூஸிலாந்திலும் மற்ற பிரிட்டிஷ் டொமினியன்களிலும் உள்ள நீதிமன்றங்களுக்கு உரிமை உண்டு.[1]

[1] டொமினியன் சட்டமன்றத்துக்கு அளிக்கப்பட்டுள்ள அதிகாரங்களுக்கு அப்பாற்பட்டவை என்ற கருத்தினடிப்படையிலும், ஒரு டொமினியன் சட்டத்தை, அது அரசருடைய உடன்பாட்டைப் பெற்றுள்ளதென்றாலும், செல்லுபடியாகாது என அதனுடைய நீதிமன்றம் தீர்மானிக்கலாம். இந்த ஒரு காரணத்தின் அடிப்படையிலும் ஒரு குடியேற்றநாட்டுச் சட்டமானது, குடியேற்றநாட்டு நிலத்துக்கு அப்பாலும் செல்லத்தக்கதாகச் செய்யப்பட்டாலும் அது செல்லுபடியாகாது. 1879ஆம் ஆண்டில், நியூஸிலாந்தின் உயர்நீதிமன்றம், 1863ஆம் ஆண்டின் பிறநாட்டுக் குற்றவாளிகளைக் கைப்பற்றுதல் சட்டத்தை, நியூஸிலாந்துச் சட்டமன்றத்தின் அதிகாரத்துக்கு அப்பாற்பட்டதென்று கூறிற்று; ஏனெனில், பிற குடியேற்ற நாடுகளில் குற்றம் சாட்டப்படத்தக்க செயல்களைச் செய்தவர்களைக் கைப்பற்றி வெளியேற்றுவதற்கு அதிகாரமளிக்கின்ற அந்தச் சட்டம், நடுக்கடல்களில் ஆட்களைச் சிறைபிடிப்பதையும் குறிப்பிடுகிறது; இவ்வாறு செய்வதற்குச் சட்டமன்றம் அதிகாரமளிக்க முடியாது; அது குடியேற்ற நாடுகளின் எல்லைகளுக்குள் அமைதி, ஒழுங்கு, நல்ல அரசாங்கம் முதலியவற்றை ஏற்படுத்தத்தான் சட்டம் செய்யமுடியும்.' ஜெங்கின்ஸ் எழுதிய 'கடல் கடந்த நாடுகளில் பிரிட்டிஷ் ஆட்சியும், நீதி அதிகார எல்லையும்' (1902) என்ற நூலின் பக்கம் 70, கீத் எழுதிய 'டொமினியன்களில் பொறுப்பாட்சி' (1928) என்ற நூலின் பாகம் I, பக்கம், 329 ஆகியவற்றைப் பார்க்கவும். இந்த வழக்கு கனடிய உயர்தர வழக்கறிஞருக்கும் கெய்ன் என்பவருக்கும் (1906) எழுந்த வழக்குக்கு மாறானது.

குடியேற்றநாட்டுச் சட்டங்களுக்கும் ஏகாதிபத்தியச் சட்டங்களுக்கும் இடையேயுள்ள தொடர்பை நாம் சரிவர அறிந்துகொண்டால், குடியேற்றநாட்டுச் சட்டங்களின் செல்லுபடியாகும் தன்மையைப் பற்றி, அந் நாட்டு மன்றங்களே தீர்ப்புளிக்க முடியுமென்பது விளங்குகிறது.

குடியேற்றநாட்டின் சட்டமியற்றும் சுதந்தரத்துக்கு ஒரு பட்டயமாக இருப்பது 1865ஆம் ஆண்டின் குடியேற்ற நாட்டுச் சட்டங்களின் மதிப்பைப்பற்றிய சட்டம் (Colonial Laws Validity Act) ஆகும்.

## குடியேற்றநாட்டுச் சட்டத்தின் மதிப்பைப்பற்றிய சட்டம், 1865

இந்தச் சட்டமானது யாதொரு விவாதமுமில்லாமல் பாராளுமன்றத்தில் நிறைவேறியது வியப்புக்குரியது; ஆனால், அது குடியேற்ற நாடுகளின் சட்டமன்றங்களுடைய அதிகாரத்துக்கு வரையறைசெய்து, விரிவுபடுத்துகிறது; அதனுடைய முக்கியமான பிரிவுகள் இங்குச் சொல்லுக்குச்சொல் மேற்கோளாகக் காட்டப்படத் தக்கவை.

'இரண்டாம் பிரிவு: ஏதாவதொரு குடியேற்றநாட்டுச் சட்டமானது அது செயல்படக்கூடிய நாட்டைப்பற்றிய எந்தப் பாராளுமன்றச் சட்டத்தின் பிரிவுகளுக்கும் முரணாக இருக்குமானால், அல்லது அது அந்தப் பாராளுமன்றச் சட்டத்தின்படி விடுக்கப்பட்ட எந்த ஆணைக்கும் அல்லது விதிக்கும் அல்லது குடியேற்றநாட்டில் சட்டத்திற்குரிய ஆற்றலோடு இயங்குகின்ற எந்த விதிக்கும் முரணாக இருக்குமானால், அந்தக் குடியேற்றநாட்டுச் சட்டம் குறிப்பிட்ட பாராளுமன்றச் சட்டம், ஆணை அல்லது விதி ஆகியவைகளுக்குக் கீழ்ப்பட்டதாகக் கருதப்பட்டு, அது முரண்படுமளவுக்குச் செல்லுபடியாகாததாகும்.

3. 'மேற்கூறியவாறு ஏதாவதொரு குடியேற்றநாட்டுச் சட்டமானது, ஏதாவது ஒரு பாராளுமன்றச் சட்டத்துக்கு அல்லது ஆணைக்கு அல்லது விதிக்கு முரண்பாடு உள்ளதாகக் கருதப்பட்டாலொழிய, அது இங்கிலாந்தின் சட்டத்துக்கு முரண்பாடாக இருக்கிறதென்ற காரணத்திற்காகச் செல்லுபடியாகாது என்று கொள்ளப்படமாட்டாது.

4. ஒரு குடியேற்ற நாட்டின் அமைதி, ஒழுங்கு, நல்லாட்சி ஆகியவற்றின்பொருட்டுச் செய்யப்படும் சட்டங்களுக்கு ஒப்புதல் அளிக்கவும், அல்லது அவை நிறைவேற்றப்படுவதற்கு ஒப்புதலளிக்கவும், அதனுடைய ஆளுநருக்கு அதிகாரம் அளிக்கின்ற கருவி (instrument) அல்லது முத்திரைக் கடிதங்கள் (Letters-Patent) ஆகியவற்றினால் அல்லாமல், வேறெந்த வகையான கருவி அடிப்படையில் மாட்சிமை

தங்கிய அரசியின்சார்பில் ஏதாவதொரு குடியேற்றநாட்டுச் சட்டத்தைப் பற்றி அல்லது அது குறிப்பிடும் ஏதாவதொரு பொருளைப்பற்றி ஆளுநருக்கு (Governor) எந்த ஆணை இருந்தாலும், அத்தகைய ஆணை முத்திரைக் கடிதம் அல்லது இறுதிக் கருவி குறிப்பிடப்பட்டிருந்தாலும் அதற்கு மாறாக, அந்தக் குடியேற்றநாட்டுச் சட்டமானது, அதன் ஆளுநருடைய ஒப்புதலைப் பெற்று நிறைவேற்றப்பட்டிருக்குமாயின், அது செல்லுபடியாகாது எனக் கொள்ளப்படமாட்டாது.

5. தனது நாட்டின் எல்லைக்குள் நீதிமன்றங்களை நிறுவவும், நீக்கவும், மாற்றி அமைக்கவும், நாட்டில் முறைமை ஆட்சிக்குகந்த சட்டங்களைச் செய்யவும், ஒவ்வொரு குடியேற்றநாட்டின் சட்டமன்றத்துக்கும் முழு அதிகாரமும் உண்டு என்று கொள்ளப்படுகிறது. ஒவ்வொரு சார்பாளர் சட்டமன்றத்தினுடைய அமைப்பையும் அதிகாரங்களையும் செயல்முறையையும்பற்றிய சட்டங்களை, அந்தந்தக் குடியேற்றநாட்டின் முறைமை எல்லைக்கு உட்படும்வகையில், செய்வதற்கு அந்தந்தக் குடியேற்றநாட்டுச் சார்பாளர் சட்டமன்றத்துக்கு முழு அதிகாரமும் உண்டு; ஆனால், அத்தகைய சட்டங்கள், அவ்வப்போது எந்தப் பாராளுமன்றச் சட்டத்தினாலும், முத்திரைக் கடிதத்தினாலும் (Letters Patent), ஆலோசனை மன்றத்தின் ஆணையினாலும், குறிப்பிட்ட குடியேற்றநாட்டில் அப்பொழுது வழக்கிலிருந்துவரும் குடியேற்ற நாட்டுச் சட்டத்தினாலும் விதிக்கப்படுகிற முறையையும். வடிவத்தையும்[1] ஒட்டி நிறைவேற்றப்பட்டிருத்தல்வேண்டும்.' (இங்குக் குறிப்பிடப்படும் சார்பாளர் சட்டமன்றத்தில், ஒரு சபையின் சரிபாதி உறுப்பினர்களாவது, குடியேற்றநாட்டு மக்களால் தேர்ந்தெடுக்கப் பட்டிருத்தல் வேண்டும்).

1865ஆம் ஆண்டின் குடியேற்றநாட்டுச் சட்டங்களின் மதிப்பைப் பற்றிய சட்டத்தினுடைய முக்கியத்துவத்தை மிகைபடவோ, குறைத்து மதிப்பிடவோ கூடுமென்பது உண்மையே. ஒருவகையாகப் பார்த்தால், அந்தச் சட்டம் வெளிப்பார்வையில் காணப்படுவதைவிட, குறைந்த முக்கியத்துவம் உடையது; ஏனெனில், அது நிறைவேற்றப் படுதற்கு முன்னரே, அதனால் வகுக்கப்பட்ட கொள்கைகள், குடியேற்ற நாட்டுச் சட்டங்களின் மதிப்பைக் கட்டுப்படுத்தக்கூடியவை என்பதாக ஓரளவிலாவது யாவரும் அனுமதித்திருந்தனர். வேறு ஒரு கோணத்தி லிருந்து பார்த்தால், இந்தச் சட்டம் மிகவும் முக்கியத்துவம் உடையதாகக் காணப்படுகிறது; ஏனெனில், இதற்குமுன்பு துல்லியமாக வரையறுக்கப்படாமலும், ஓரளவு ஐயப்பாட்டிற்கு உரியவையாகக்

[1] இதுபற்றி நியூசௌத்வேல்சின் உயர்தர வழக்கறிஞருக்கும் டௌத்தோ வானுக்குமிடையே எழுந்த வழக்கைப் பார்க்கவும்.

கருதப்பட்ட சில கொள்கைகளுக்குச் சட்டத்தின் ஆற்றலை அது கொடுக்கிறது.[1]

டொமினியன் பாராளுமன்றமானது, ஆங்கிலப் பொதுச் சட்டங்களுக்கு மாறுபடான சட்டங்களைச் செய்யலாம்; அத்தகைய சட்டங்கள், தக்க ஒப்புதல்களைப் பெற்றதும், முழுவதும் செல்லுபடியாகத் தக்கவை.

உடைமைகளைத் தாயமுறையில் பெறுவதற்காக ஆங்கிலப் பொதுச் சட்டத்தில் கூறப்பட்டுள்ள விதிகளை, மாற்றியோ அல்லது பொதுக் கூட்டங்களைத் தடைசெய்வதற்கு ஆளுநருக்கு அதிகாரத்தைக் கொடுத்தோ, தீர்ப்புச்சான்ருளர் குழு முறையின்படி ஆய்வுசெய்வதை நீக்கியோ, நியூஸிலாந்தில் ஒரு சட்டம் செய்யப்படுமானல், அச் சட்டம் பொருத்த மற்றதாகவும் முறையற்றதாகவும் இருந்தபோதிலும், அது முழுவதும் செல்லுபடியாகக்கூடிய சட்டமே ஆகும். அது அத்தகையதாகவே பிரிட்டிஷ் பேரரசிலுள்ள ஒவ்வொரு நீதி மன்றத்தாலும் ஒப்புக்கொள்ளப் படுகிறது.[2]

நியூஸிலாந்துக்குப் பொருந்தும்படியாக ஏகாதிபதியப் பாராளுமன்றத்தினல் செய்யப்பட்ட எந்தச் சட்டத்திற்கும் அல்லது அச் சட்டத்தின் எப் பகுதிக்கும் முரண்பாடுடைய சட்டங்களை டொமினியன் பாராளுமன்றம் செய்யமுடியாது.

எடுத்துக்காட்டாக, நியூஸிலாந்தில் செய்யப்படும் சிலவகையான குற்றங்களின் வழக்குகளை ஆய்வுசெய்வதற்குத் தனிப்பட்ட முறைகளை வகுத்து, ஏகாதிபத்தியப் பாராளுமன்றம் ஒரு சட்டத்தைச் செய்கிறது என்று வைத்துக்கொள்ளுவோம்; ஏகாதிபத்தியச் சட்டத்தினல் வகுக்கப்பட்டமுறைக்கு மாருக, வேறுவகையாக அக் குற்றங்களை ஆய்வுசெய்யும்படி குடியேற்றநாட்டுப் பாராளுமன்றம் ஒரு சட்டத்தைச் செய்தால், அச் சட்டத்திற்குச் செல்லுபடியாகக்கூடிய தன்மை இராது. இது போலவே, பிரிட்டிஷ் குடியேற்றநாடுகளில் அடிமை வாணிபத்தை ஒழித்த 1824ஆம் ஆண்டின் அடிமை வாணிபச் சட்டத்தினுடைய பிரிவுகளுக்கு முரணுக, அடிமை வாணிபத்தைச் சட்டப்படி

[1] 1865ஆம் ஆண்டுவரையிலும், இங்கிலாந்தில் பரவியிருந்த ஒரு கருத்தின்படி ஆங்கிலச் சட்டத்தின் கொள்கைகளுக்கு முரணுன எந்தச் சட்டமும் இங்கிலாந்தின் சட்டத்திற்கு முரண்பாடு அல்லது செல்லுபடியாகாத இயல்பு உடையதென்ற எண்ணத்தின் அடிப்படையில், குடியேற்றநாட்டுச் சட்டங்கள் அவ்வப்போது தள்ளுபடி செய்யப்பட்டன. டொமினியன் சட்டங்களின் செயல்படும் வகையைப்பற்றிய அறிக்கையைப் (1929) பார்க்கவும்; கீத் 1929-ல் எழுதிய 'பிரிட்டிஷ் டொமினியன்களின் இறைமை' என்ற நூலையும் பார்க்கவும்.

[2] இவ்வாறு நாம் கூறுகையில், அத்தகைய சட்டங்கள், குடியேற்ற நாட்டுக்குப் பொருந்தச் செய்யப்பட்ட எந்தப் பேரரசுச் சட்டத்துக்கும் முரண் பட்டதாக இல்லை என்றும் அனுமானித்துக் கொள்ளவேண்டும். ராபின்சன் ரெய்ஞல்ட்ஸ் வழக்கைப் (1867) பற்றிய விவரங்களைப் பார்க்கவும்.

ஏற்றுக்கொள்ளத் தக்கதாக ஆக்கும் எந்த நியூஸிலாந்துச் சட்டமும் செல்லுபடி ஆகாது; 1894ஆம் ஆண்டின் வாணிபக்கப்பல் போக்கு வரத்துச் சட்டமானது, குடியேற்றநாடுகளுக்குச் செய்யப்பட்ட ஒன்று; ஓர் ஏகாதிபத்தியச் சட்டமாகிய ஆங்கில வாணிப நொடிப்புச் சட்டமானது (English Bankruptcy Act), பிரிட்டிஷ் டொமினியன்களின் எப் பகுதியிலும் வாங்கப்பட்ட கடன்களின்றும் விடுதலைபெறும் உரிமையை அளிக்கிறது; மேலே கூறிய வாணிபக்கப்பல் போக்கு வரவுச் சட்டத்தின் பல பிரிவுகளையோ அல்லது ஆங்கில நொடிப்புச் சட்டத்தின்மூலம் கிடைக்கும் விடுதலை உரிமையையோ நீக்கவும் அல்லது செல்லுபடியாகாமல் செய்யவும் கூடிய சட்டங்களை, டொமினியன் பாராளுமன்றம் நிறைவேற்றினால், அவை செல்லுபடி ஆகமாட்டா. சுருங்கச்சொன்னால், குடியேற்றநாடுகளுக்குப் பொருந்தக்கூடிய எந்த ஏகாதிபத்தியச் சட்டத்தையும், ஒரு குடியேற்றநாட்டுச் சட்டமன்றமும் மீறமுடியாது. ஏகாதிபத்தியச் சட்டமானது குடியேற்றநாடுகளுக்குப் பொருந்துவதென்பது, பல சொற்களில் வெளிப்படுத்தப்பட்டிருந் தாலும் சரி, அல்லது அதனுடைய பொதுவான நோக்கம், தன்மை ஆகியவற்றிலிருந்து குறிப்பாக உணர்த்தப்பட்டிருந்தாலும் சரி, மேற் கூறப்பட்ட விதியே ஒப்புக்கொள்ளப்படுகிறது. ஏதேனுமோர் ஏகாதி பத்தியச் சட்டமானது, ஒரு குறிப்பிட்ட குடியேற்றநாட்டிற்குப் பொருந்துகிறதென்பது நிறுவப்பட்டுவிட்டால், பின்னர் அதனின்று தோன்றும் விளைவு என்னவென்றால், அந்தச் சட்டத்தோடு முரண் படுகிற குடியேற்றநாட்டின் சட்டமானது செல்லுபடியாகாமலும் அரசியலமைப்பின் தன்மையை இழந்தும் போய்விடும்.[1]

### குடியேற்றநாட்டுச் சட்டமன்றத்தின் சட்டங்களைச் செல்லுபடியாகுமா என நீதிமன்றங்கள் கூறலாம்

எனவே, நியூஸிலாந்து டொமினியனிலுள்ள நீதிமன்றங்கள், பிரிட்டிஷ் பேரரசின் மற்றப் பகுதியிலுள்ளவற்றைப்போல, குடியேற்ற நாட்டுப் பாராளுமன்றத்தால் செய்யப்படும் எந்தச் சட்டமும் செல்லுபடி ஆகத்தக்கதா அல்லது அரசியலமைப்புத் தன்மை உடையதா என்பதைச் சட்டத்தின் அடிப்படையில் ஆய்வுசெய்யும்படி கேட்டுக்கொள்ளப்பட லாம். எவ்வாறெனில், நியூஸிலாந்துக்குப் பொருந்துமாறு செய்யப்பட்ட ஒரு பாராளுமன்றச் சட்டத்தின் பிரிவுகளுக்குமாறாக, ஒரு நியூஸிலாந்துச் சட்டம் இருக்குமானால், பிரிட்டிஷ் பேரரசில் எந்த நீதிமன்றமும், அந்த டொமினியன் பாராளுமன்றத்தின் சட்டத்தைச் சட்டப்படியாக ஒப்புக் கொள்ளாது. இது, ஏகாதிபத்தியப் பாராளுமன்றத்தினால் கையாளப்

[1] 1913-ல் டாரிங் (Tarring) என்பவர் எழுதிய, 'குடியேற்ற நாடுகளைப் பற்றிய சட்டங்கள், என்ற நூலின் 209-221 பக்கங்களைப் பார்க்கவும். இதில் குடியேற்றநாடுகளைப்பற்றிய பொதுவான ஏகாதிபத்தியச் சட்டங்களின் பட்டியல் காணப்படுகிறது. எனவே, இவற்றை ஏதாவது ஏகாதிபத்தியப் பாராளுமன்றத்தின் சட்டத்தின்மூலம் கொடுக்கப்பட்ட அதிகாரங்களின்மூலமாக அல்லாமல் எந்தக் குடியேற்றநாட்டுச் சட்டமும் மாற்றமுடியாது.

படும் சட்டமியற்றும் இறைமை அதிகாரத்தினின்றும் தோன்றுகின்ற தவிர்க்கமுடியாத விளைவாகும். மேற்கூறிய கற்பனையான வழக்கில், டொமினியன் பாராளுமன்றமானது, நீதிபதிகளை ஒரு குறிப்பிட்ட வகையில் செயலாற்றும்படியாக ஆணையிடுகிறது. ஆனால், ஏகாதிபத்தியப் பாராளுமன்றமோ, நீதிபதிகளை வேறொருவகையாகப் பணிசெய்யும்படி ஆணையிடுகிறது. இவ் விருவகை ஆணைகளுள் எது கீழ்ப்படியத்தக்கது என்றால், அது ஏகாதிபத்தியப் பாராளுமன்றத்தினுடையதே ஆகும். இதுவே, பாராளுமன்ற இறைமை என்பதன் பொருளாகும். எனவே, எப்பொழுதேனும் டொமினியன் பாராளுமன்றத்தினுடைய எந்த ஒரு சட்டமும், குடியேற்றநாட்டுக்குப் பொருந்துவதான ஏகாதிபத்தியப் பாராளுமன்றச் சட்டம் எதனோடும் முரண்படுவதாகக் கூறப்படுமானால், இவ்வாறு கொண்டுவரப்படும் மறுப்பைக் கவனிக்கும் நீதிமன்றமானது, குடியேற்றநாட்டுச் சட்டத்தின் செல்லுபடியாகுந் தன்மையை அல்லது அரசியலமைப்புத் தன்மையை ஆய்ந்து தீர்ப்புக் கூறுதல் வேண்டும்.[1]

## குடியேற்றநாட்டுப் பாராளுமன்றம் அரசியல் அமைப்புச் சட்டமன்றமாகவும், சாதாரணச் சட்டமன்றமாகவும் இருக்கலாம்

நியூஸிலாந்தின் அரசியலமைப்பானது 1852ஆம் ஆண்டின் நியூஸிலாந்து அரசியலமைப்புச் சட்டத்தையும், அதனைத் திருத்திய பல சட்டங்களையும் சார்ந்து, அவற்றால் தோற்றுவிக்கப்பட்டு இருக்கிறது. எனவே, நியூஸிலாந்து டொமினியனின் பாராளுமன்றமானது அல்லது வசதியாக நம்மால் குறிப்பிடத் தக்கவாறு இருக்கும் நியூஸிலாந்து பாராளுமன்றமானது, அடிப்படையான அல்லது அரசியலமைப்புச் சட்டங்களை மாற்றுவதற்கு இயலாத ஒரு சட்டமன்றத்தினுடைய 'கீழ்ப்பட்ட நிலையைக் காட்டும் அடையாளங்கள்' வெளிப்படுத்துகிறதென்று நாம் கூறலாம்; அல்லது இதனையே வேறுவகையாகச் சொன்னால், நியூஸிலாந்துப் பாராளுமன்றமானது, ஒரு சட்டமன்றத்தினால் மாற்றப்படக்கூடிய சாதாரணச் சட்டங்களுக்கும், அதனால் அதனுடைய சாதாரணச் சட்டப்படியான இயல்பில் மாற்றமுடியாத அரசியலமைப்பின் சட்டங்களுக்கும் இடையே உள்ள வேறுபாடுகளைக் காட்டுகிறதென்று கூறலாம். ஆனால், இத்தகைய முடிவை, நாம் நியூஸிலாந்தின் அரசியலமைப்பையே தோற்றுவிக்கிற சட்டங்களை ஆராய்ந்தால் அதில் காணமுடியாது. 1865ஆம் ஆண்டின் குடியேற்றநாட்டுச் சட்டங்களின் மதிப்புப்பற்றிய சட்டத்தையும், நியூஸிலாந்து அரசியமைப்புச் சட்டத்தையும் அதற்குச் செய்யப்பட்ட திருத்தங்களோடு ஒப்பிட்டுப்பார்த்தால், நியூஸிலாந்து பாராளுமன்றமானது, அரசியலமைப்புச் சட்டத்தின் பிரிவுகளை மாற்றமுடியுமென்று தெரியவருகிறது. ஏகாதிபத்தியச் சட்டங்களின்றும் பெறப்படுகின்ற

[1] இதற்குமேல் விவரமாக, பௌவல்-அப்போலோ மெழுகுவர்த்திக்கம்பெனி (1885) வழக்கையும், ஹாட்ஜ்-அரசி வழக்கையும் (1883) பார்க்கவும்.

அதிகாரமானது, ஏகாதிபத்தியப் பாராளுமன்றத்தினுடைய சட்டப்படியான இறைமை அதிகாரத்திற்கு எவ்வகையிலும் முரண்பாடானது அன்று.[1] ஆகையால், நியூஸிலாந்து பாராளுமன்றமானது ஒரு 'கீழ்ப்பட்ட நிலையிலிருந்தாலும்.' மற்றக் குடியேற்றநாட்டுச் சட்டமன்றங்களைப் போல, ஒரு சட்டமன்றமாகவும், அரசியலமைப்புச் சட்டமன்றமாகவும் இருக்கிறதென்று நாம் கூறுவது பொருந்தும். அது ஒரு 'கீழ்ப்பட்ட நிலையிலுள்ள சட்டமன்றமாகும்.[2] எவ்வாறெனில், அதனுடைய அதிகாரங்களெல்லாம் ஏகாதிபத்தியப் பாராளுமன்றத்தின் சட்டங்களால் வரையறுக்கப்பட்டுள்ளன; அது நியூஸிலாந்தின் அரசியலமைப்பின் பிரிவுகளை மாற்றக்கூடுமாகையால், அது ஓர் அரசியலமைப்புச் சட்டமன்றமும் ஆகும். நியூஸிலாந்தின் அரசியலமைப்புப் பிரிவுகளை மாற்றுவதற்கு நியூஸிலாந்துப் பாராளுமன்றத்துக்கு உரிய அதிகாரமானது, பல்வேறு காரணங்களுக்காக ஆராய்வதற்கு உரியது.

### மேற்கூறிய நிலைமைக்குரிய காரணம்

ஓர் அரசியலமைப்பின் எழுதப்படாத தன்மைக்கும் அதனுடைய மாற்றப்படமுடியாத தன்மைக்கும் தொடர்பு இருக்கவேண்டிய கட்டாயமில்லை என்பதற்கு, நமக்கு இங்கு ஒரு தெளிவான சான்று இருக்கிறது. நியூஸிலாந்தின் ஓர் அரசியலமைப்பானது எழுதப்பட்ட பிடிபாட்டில் (docum t) காணப்படுகிறது; அது ஓர் இயற்றப்பட்ட சட்டம் எனினும், இதனைத் தோற்றுவித்த பாராளுமன்றத்தாலேயே, இதனுடைய பிரிவுகள் மாற்றப்படக்கூடும். மேலும், அவை மற்றெந்தச் சட்டத்தையும் செய்வதற்குரிய முறையிலேயே மாற்றப்படக்கூடும்.[3] இது மிகவும் தெளிவாக

[1] சுதந்தர ஆட்சியுள்ள பிரிட்டிஷ் காமன்வெல்த்திலுள்ள சில நாடுகளின் அரசியலமைப்புகள், எடுத்துக்காட்டாக, விக்டோரியாவின் அரசியலமைப்பு, அதனை மாற்றுகிற ஒரு விக்டோரியச் சட்டம் மற்றச் சட்டங்கள் நிறைவேற்றப்படுகின்ற வகையினின்றும் வேறுபட்டவகையாக நிறைவேற்றப்படுதல் வேண்டும் என்பதைக் காட்டுகிறது. இது அடிப்படையான சட்டங்களுக்கும் மற்றச் சட்டங்களுக்குமிடையேயுள்ள வேறுபாட்டை ஓரளவு ஒப்புக்கொள்ளுவதாகும். (Compare 18 & 19 vict. C. 55, Sched I- s. 60) ஆயினும் இத்தகைய அரசியல் அமைப்பு விதிகளைக் கடைப்பிடிப்பதில் வெகுவான கட்டாயம் இல்லையென்று தெரிகிறது. (Jenks எழுதிய விக்டோரியாவின் அரசாங்கம், (1891) என்ற நூலின் 247, 249ஆம் பக்கங்களைப் பார்க்கவும்).

[3] நியூஸிலாந்தின் அரசியலமைப்பை மாற்றும் அதிகாரங்களைப்பற்றி விவரமாக அறிய, Wheare எழுதிய The Statue of Westminster and Dominion Status (1953), (227—235 பக்கங்கள், என்ற நூலைப் பார்க்கவும்.

[2] நியூஸிலாந்தைப்போன்ற காமன்வெல்த்தின் எந்த உறுப்பு நாட்டுக்கும் தனது அரசியலமைப்பை மாற்ற முழு அதிகாரமும் உண்டு என்பது இப்பொழுது சட்டமாக இருக்கிறது. இத்தகைய அதிகாரம் எவ்வளவு என்பதும் அது எவ்வகையாகக் கையாளப்படுதல் வேண்டுமென்பதும், காமன்வெல்த்தின் பழைய உறுப்பினர்களைப் பொறுத்தமட்டில், யுனைடெட் கிங்டம் பாராளுமன்றத்தினுடைய சட்டத்தின் பிரிவுகளைப்பொறுத்து அமைந்திருக்கிறது. இப்பொழுது. ஒரு மன்றமாகமட்டுமே அமைந்துள்ள நியூஸிலாந்தின் பாராளுமன்றமானது, அரசியல் சட்டத்தைத் திருத்துவதற்கு வரம்பற்ற அதிகாரத்தைப் பெற்றுள்ளது.

யாவருக்கும் தெரியவருகிறது; எனினும், 'ஒரு சட்டத்தின் தன்மையானது, அச் சட்டம் ஓர் எழுதப்பட்ட வடிவமுடைய சட்டமாக (statute) அமைவதன்மூலம் மாறுதலுக்குள்ளாகிறது எனவும், 'சட்டவடிவத்திலுள்ள ஓர் அரசியலமைப்பு மாற்றப்படமுடியாத அரசியலமைப்பாக இருத்தல்வேண்டும் என்ற பொருளைத் தரவில்லை என்பதையும் நாம் கருத்தில் கொள்ளவேண்டும்' எனவும் குறிப்புத் தோன்றும்படியாக ஆழ்ந்த புலமையுடையோர் பலர் எழுதுகின்றனர். ஆங்கிலப் பாராளுமன்றமானது குடியேற்றநாட்டுச் சட்டமன்றங்களுக்கு, அரசியலமைப்பு அதிகாரங்களை வழங்கியுள்ள பான்மையை நாம் பார்க்கும்போது, அமெரிக்காவிலும் மற்ற ஐரோப்பிய நாடுகளிலுமுள்ள அரசியலமைப்புகளில் எல்லாம் காணப்படுகிறது. அடிப்படைச் சட்டங்களுக்கும், அடிப்படை அல்லாத மற்றச் சட்டங்களுக்கும் இடையேயுள்ள வேறுபாடான ஆங்கில மக்களின் கருத்தில் இடம்பெறவே இல்லை என்பதைக் காட்டுகிறது. 'ஒருவகையான சட்டத்தை மற்ற வகையான எந்தச் சட்டத்தையும் போலவே மிக எளிதாக மாற்றிவிடக்கூடிய ஆற்றலையுடையதாக நாம் இங்கிலாந்தில் பாராளுமன்றத்தைக் கருதும் பழக்கமுடையவர்களாக இருந்து வந்துள்ளோம்,' என்பதை மேற்கூறிய நிலைமைக்கு அமைந்த விளக்கமாக இருக்கிறது. எனவே, ஆங்கில அரசியல் அறிஞர்கள் பாராளுமன்ற அரசாங்கமுறையைக் குடியேற்றநாடுகளுக்கு வழங்கிய போது, குடியேற்றநாட்டைப் பாதிக்கக்கூடிய எல்லாச் சட்டங்களையும்,—அவை அரசியலமைப்புச் சட்டமாயினும் சரி, அவ்வாறு அல்லாமல் சாதாரணச் சட்டமாயினும் சரி,—தீர்மானிப்பதற்குக் குடியேற்றநாட்டுச் சட்டமன்றங்களுக்கு விதிமுறையாக அதிகாரத்தைக் கொடுத்தனர். அப்போது இந்த அதிகாரமானது பிரிட்டிஷ் பாராளு

---

இத்தகைய அதிகாரமானது, நியூஸிலாந்துக்கு 1947ஆம் ஆண்டு வெஸ்ட்மின்ஸ்டரில் செய்யப்பட்ட நியூஸிலாந்து அரசியலமைப்பு (திருத்தம்) சட்டத்தின்மூலமாக வழங்கப்பட்டுள்ளது. 1949ஆம் ஆண்டின் பிரிட்டிஷ் வட அமெரிக்கச் சட்டத்தின் இரண்டாம் எண் மூலமாக, டொமினியனுகிய கனடாவின் கூட்டரசுப் பாராளுமன்றமானது, அரசியலமைப்பை மாற்றுவதற்குச் சட்ட அதிகாரத்தைப் பெற்றது. இச் சட்டம் கனடா அரசு வேண்டிக்கொண்டபடி வெஸ்ட்மின்ஸ்ட்டரில் செய்யப்பட்டது; ஆயினும் இது வழங்கும் அதிகாரத்திற்கு விலக்காகச் சில விஷயங்களும் கூறப்படுகின்றன. சிறப்பாகக் கனடாவின் மாகாணச் சட்டமன்றங்களுக்கென்றே தனியாக ஒதுக்கிவிடப்பட்டுள்ள விஷயங்களையெல்லாம் யுனைடெட் கிங்டத்தின் பாராளுமன்றத்தால்மட்டுமே மாற்றப்படக்கூடியவை. இதற்குமாறாக ஆஸ்திரேலியக் காமன்வெல்த்தின் பாராளுமன்றமோ ஒரு தனித்த நிலையில் இருக்கிறது. அது அரசியலமைப்பின் பிரிவுகளின்படி, சாதாரணச் சட்டங்களை இயற்றும் முறையிலேயே அரசியலமைப்பின் ஒரு சில பிரிவுகளை மாற்றக்கூடும். (காமன்வெல்த்தின் அரசியலமைப்பு 65, 67 பிரிவுகளைப் பார்க்க) ஆனல், அது சாதாரணச் சட்டம் இயற்றும் முறையின் மூலமாக, அரசியலமைப்பின் மற்றப் பிரிவுகளை மாற்றமுடியாது. எனினும், சாதாரணமான பாராளுமன்றச் சட்டம்செய்யும் முறையின்மூலமாக மாற்றப்பட முடியாத அரசியலமைப்பின் பிரிவுகளெல்லாம், அரசருடைய ஒப்புதலின்பேரில், காமன்வெல்த்தின் அரசியலமைப்பில் கூறப்பட்டுள்ள, காமன்வெல்த் பாராளுமன்றத்தின் இருசபைகளினுலும் மக்களுடைய வாக்கெடுப்பினுலும் மாற்றப்படவோ, நீக்கப்படவோ கூடும்.

மன்றத்தின், தலைமை அதிகாரத்துக்கு முரணானவகையில் கையாளப் படுதல் கூடாது என்று வெளிப்படையாக அல்லாத குறிப்பாக அமைந்த நிபந்தனையையும் சேர்த்தனர். சுருங்கச் சொன்னால், குடியேற்ற நாட்டுப் பாராளுமன்றங்களெல்லாம் தத்தமக்கு உரிய எல்லைகளுள் பேரரசுப் பாராளுமன்றத்தின் நகல்களாக இருக்கின்றன. அவை தமது எல்லைகளில் இறைமையுடைய மன்றங்கள்; ஆயினும் அவற்றின் செயலாற்றும் உரிமையானது, அவை யுனைடெட் கிங்டத்தின் பாராளுமன்றத்துக்குக் கீழ்ப்பட்டிருப்பதனால், கட்டுப்பாட்டிற்குள் அமைந்தது.

**ஏகாதிபத்தியச் சட்டத்துக்கும் குடியேற்ற நாட்டுச் சட்டத்துக்கும் உள்ள முரண்பாடுகள் எவ்வாறு தவிர்க்கப்படுகின்றன**

நியூஸிலாந்து போன்ற நாடுகளுக்கு அளிக்கப்பட்டுள்ள பெருமளவு குடியேற்றநாட்டுச் சுதந்தரமானது சட்ட அடிப்படையாக எவ்வாறு ஏகாதிபத்திய இறைமையோடு பொருத்தமுடையது என்று ஒரு கேள்வி எழுவது இயற்கையே.

இக் கேள்வியை நாம் ஆய்வுசெய்வது, நாம் எடுத்துக்கொண்ட பொருளுக்குச் சிறிது அப்பாற்பட்டது என்றாலும், அது முற்றிலும் நமது பொருளுக்குப் புறம்பானதன்று; எனவே, அதற்கு விடை கூறுவது முற்றிலும் பொருத்தமானதே ஆகும். மேலும், இவ் வினாவில் விளக்கப்படவேண்டிய முரண்பாட்டின் உண்மையான இயல்பை நாம் மனத்தில்கொண்டால், அதற்குரிய விடையைக் கண்டுபிடிப்பதும் கடினமன்று.

இங்குத் தீர்மானிக்கப்படவேண்டிய கேள்வி, 'ஆங்கில அரசாங்க மானது குடியேற்ற நாடுகளை எவ்வாறு தனது கட்டுப்பாட்டுக்குள் வைத்துள்ளது என்பதோ அல்லது 'ஆங்கில அரசாங்கமான யுனைடெட் கிங்டத்தில் எவ்வாறு நடைமுறையில் இறைமை அதிகாரத்தை நிலைபெறச் செய்கிறது?' என்பதோ அன்று. இக் கேள்வி நடைமுறை அரசியல் தொடர்பான ஒரு பொருளாகும்; எனவே, இந்தக் கேள்விக்கும் இந் நூலுக்கும் எத் தொடர்பும் இல்லை.

'பிரிட்டிஷ் பேரரசு முழுவதிலும் சட்டத்துக்கு யாவரும் கீழ்ப் படிதல் வேண்டும்,' என்பதை நாம் மனத்தில் கொண்டால், குடியேற்றநாடுகளினுடைய சட்டம் இயற்றும் அதிகாரமானது அல்லது சுதந்தரமானது எவ்வாறு பாராளுமன்றத்தின் சட்டமியற்றும் இறைமை அதிகாரத்தோடு முரண்படாமல், பொருத்தமுடையதாக இருக்கிறது?—இதுவே இங்கு விடை காணுதற்குரிய ஒரு கேள்வி ஆகும். பேரரசின் ஏகாதிபத்தியப் பாராளுமன்றமும் குடியேற்ற நாடுகளினுடைய சட்டமன்றங்களும் தத்தமக்குரிய அதிகார எல்லைகளை மீறிச் செல்லமுடியாதபடி எவ்வாறு தடுக்கப்படுகின்றன?

யுனைடெட் ஸ்டேட்ஸ் அல்லது கனடிய டொமினியன் போன்ற கூட்டரசு நாடுகளில், நடு அரசாங்கத்தின் சட்டமியற்றும் அதிகாரத் துக்கும், மாகாணச்சட்டமன்றங்களின் அதிகாரத்துக்கும் இடையேயுள்ள எல்லைகளைத் தீர்மானிப்பதில் நீதிமன்றங்கள் ஈடுபட்டுள்ளன; இதனை எடுத்துக்கூறுபவர் எவருக்கும், மேலே கூறப்பட்ட கேள்வி அல்லது ஆராய்ச்சி தேவையற்றது எனத் தோன்றுது.

**முரண்பாடுகள்**

**(i) பிரிட்டிஷ் பாராளுமன்ற இறைமை என்ற நிலையினால் தவிர்க்கப்படுகின்றன**

பாராளுமன்றத்தினுடைய சட்ட அடிப்படையிலமைந்த உயர்தர அதிகாரந்தான், குடியேற்றநாடுகளின் சட்ட மன்றங்களுக்கு விரிவாகச் சட்டமியற்றும் அதிகாரம் அளிக்கப்பட்டிருப்பதற்கு முக்கியக் காரணமாக இருக்கிறது; இவ்வாறு கூறுவது முரணான ஒரு கூற்று என்பதாகத் தோன்றினும் அது முழுவதும் உண்மையே.

குடியேற்றநாடுகளின் அரசியலமைப்புச் சட்டங்கள் எல்லாம் நேரடியாகவோ, மறைமுகமாகவோ ஏகாதிபத்தியச் சட்டங்களைச் சார்ந்தே இருக்கின்றன. 'பாராளுமன்றமானது எந்த ஒரு குடியேற்ற நாட்டின் அரசியலமைப்புச் சட்டத்தையும், சட்டப்படியாக நீக்கிவிட முடியும்' என்பதையோ, 'பாராளுமன்றமானது எந்த ஒரு காலத் திலும் தானே குடியேற்றநாடுகளுக்காகச் சட்டமியற்றவும், எந்தக் குடியேற்றநாட்டுச் சட்டத்தையும் நீக்கவும் அல்லது அதனை மாற்றவும் முடியும்' என்பதையோ, எந்த வழக்கறிஞரும் ஒப்புக்கொள்ளாமல் இரார். பாராளுமன்றமானது குடியேற்றநாடுகளைப் பாதிக்கக்கூடிய சட்டங்களை அவ்வப்போது நிறைவேற்றிவருகிறது.[1] மேலும், ஏகாதி பத்தியப் பாராளுமன்றத்தின் சட்டமானது, பிரிட்டிஷ் டொமினியன் களில் எப் பகுதிக்குச் செல்லுபடியாகும் வண்ணம் நிறைவேற்றப் பட்டுள்ளதோ, அப் பகுதியை அது கட்டுப்படுத்தும்' என்ற கோட் பாட்டை முழுவதும் குடியேற்றநாடுகளின் நீதிமன்றங்களும், ஆங்கில நீதிமன்றங்களும் ஒப்புக்கொள்ளுகின்றன. இந்த நிலைமை ஒப்புக்கொள்ளப்பட்டவுடன், குடியேற்றநாட்டினுடைய சட்ட மியற்றும் அதிகார எல்லையை வரையறை செய்வதற்கோ, வகுப் பதற்கோ தேவை எதுவும் இல்லை' என்பது தெளிவாகிவிடுகிறது. நியூஸிலாந்து பாராளுமன்றத்தின் ஒரு சட்டமானது, ஏதேனுமோர் ஏகாதிபத்தியச் சட்டத்தோடு முரண்பட்டால், சட்டத்தின் அடிப் படையில் அது செல்லுபடியாகாத ஒன்றுகிவிடும். நியூஸிலாந்து பாராளுமன்றத்தின் ஏதேனுமொரு சட்டமான ஏகாதிபத்தியச் சட்டம் எதனேடும் மாறுபடாவிட்டாலும், ஏகாதிபத்திய நலன்களுக்கு ஊறு

[1] விவரங்களுக்கு, Todd என்பவர் 1894-ல் எழுதிய Parliamentary Government in the British Empire என்ற நூலில் ஐந்தாம் இயலைப் பார்க்கவும்.

விளைவிக்கக்கூடியதாகவும், அது உண்மையில் நிறைவேற்றப்படக் கூடாத ஒன்றாகவும் இருக்குமானால், அதனை பிரிட்டிஷ் பாராளுமன்றமானது, ஓர் ஏகாதிபத்தியச் சட்டத்தின்மூலமாக நடைமுறைக்கு வரமுடியாதபடி தள்ளுபடி செய்துவிடலாம்.

### (ii) தள்ளுரிமை (right of veto)

எனினும், இத்தகையதொரு செயல்முறைக்குத் தேவையிருப்பது வெகு அருமையே; எவ்வாறெனில் குடியேற்றநாடுகளின் சட்டங்களைப் பொறுத்தவரையில், அரசர் தமது தள்ளுரிமை அதிகாரத்தைக் கையாளுவதென்பதைப் பாராளுமன்றமானது ஒழுங்குபடுத்துகின்றது; இவ்வாறு ஒழுங்குபடுத்துவதன் மூலமாகப் பாராளுமன்றமானது, குடியேற்றநாடுகளின் சட்டமியற்றும் அதிகாரத்தின்மீது தனது அதிகாரத்தைக் கையாளுகிறது.

பாராளுமன்றத்தின் இரு மன்றங்களாலும் நிறைவேற்றப்பட்ட மசோதாக்களுக்கு, அரசர் ஒப்புதலளிக்க மறுக்கும் அதிகாரமானது நடைமுறை வழக்கிலிருந்து மறைந்துவிட்ட ஒன்றாகும்.[1] ஆனால்,

[1] இந்தக் கருத்தை Hearn என்பவர் தாம் 1887-ல் எழுதிய Government of England என்ற நூலில் 63ஆம் பக்கத்தில் மறுத்துள்ளார். எனினும், இக் கருத்து சரியானதே என்று இங்குக் கூறப்படுகிறது. ஹனோவீரியனும் அரசகுடும்பத்தார் ஆட்சிக்குவந்த காலம் முதலாக, 'தள்ளுரிமை' எனப்படும் இந்த அதிகாரமானது எந்தப் பொது மசோதாவைப் பொறுத்தவரையிலும் கையாளப்படவில்லை. பாக்ஸ் என்ற அமைச்சரால் கொண்டுவரப்பட்ட இந்தியச் சட்ட மசோதா நிறைவேற்றப்படுவதினின்றும் தடுக்க மூன்றாம் ஜார்ஜ் அரசர் விரும்பியபோது, நிறைவேற்றப்பட்ட இந்த மசோதாவைத் தள்ளுபடி செய்வதற்கு அரசருக்கு உள்ள அதிகாரத்தைக் கையாளவில்லை; ஆனால், இந்த மசோதாவைத் தள்ளுபடி செய்யும்படி பெருமக்கள் மன்றத்தில் தனக்குள்ள செல்வாக்கைக் கையாண்டார். தள்ளுரிமை அதிகாரமானது ஏற்கெனவே ஒரு நூற்றாண்டுக்கும் மேலாகவே வழக்கற்றுப் போய்விட்டது என்பதற்கு, இதனினும் வலிய சான்று தேவையில்லை. ஆனால், 'ஓர் அதிகாரம் நடைமுறையில் வழக்கற்றுப் போயுள்ளது' என்று கூறுவதனால், 'அந்த அதிகாரமானது, எதிர்காலத்தில் ஒருபொழுதும் மீண்டும் தோற்றுவிக்கப்படமுடியாதது' என்று பொருள்படாது. தள்ளுரிமை என்ற பொருளைப்பற்றிய முழு விவரத்தையும், இச் சொல் கையாளப்படும் எல்லா வேறுபட்ட பொருளையும்பற்றி அறிந்துகொள்ளுவதற்கு வாசகர்கள் சூரிக் (Zurich) நகரத்துப் பேராசிரியர் ஆரல்லி என்பவர் எழுதிய, 'தள்ளுரிமை' என்ற கட்டுரையை என்சைக்ளோபீடியா பிரிட்டானிக்காவின் 1888ஆம் ஆண்டுப் பதிப்பில், 24ஆம் பாகத்தில், 206ஆம் பக்கத்தில் பார்க்கவேண்டும்.

நடைமுறையில் வழக்கற்றுப்போனவைபோலத் தோன்றும் சில விசேட அதிகாரங்களைக் கொள்கையளவிலே இருக்கும்படி செய்யும் நன்மையை அரசருடைய தள்ளுரிமை அதிகாரம் எடுத்துக்காட்டுகிறது. சட்டங்களைத் தள்ளுபடி செய்வதற்கு அரசருக்கு இருக்கும் அதிகாரம், இங்கிலாந்தில் நெடுங்காலமாகக் கையாளப்படாமலிருந்து வருகிறது; ஆனால், அது யுனைடெட் கிங்டத்துக்கும், குடியேற்ற நாடுகளுக்கும் இடையேயுள்ள உறவுகளை ஒழுங்குபடுத்துவதற்கு, ஒரு வசதியான வழியாகத் தோன்றிவிட்டது. பாராளுமன்றத்தின் இருமன்றங்களாலும் நிறைவேற்றப்பட்ட ஒரு மசோதாவுக்குத் தனது ஒப்புதலைக் கொடுக்காமல் மறுப்பதற்கு அரசருக்கு இருக்கும் உரிமையானது ஒரு சட்டத்தினால் நீக்கிவிடப்படுமாயின், ஒரு கிரௌன் காலனியின் சட்டமன்றத்தால் நிறைவேற்றப்பட்ட சட்டங்களைத் தள்ளுபடி செய்யவோ அல்லது ஏற்காமல் மறுக்கவோ செய்வது இயலக்கூடியதென்றாலும், கடினமான ஒன்றே ஆகும். வேறுவகையாகச் சொன்னால், குடியேற்றநாட்டுச் சட்டத்துக்கு பாராளுமன்றத் தள்ளுரிமை அதிகாரம் என்ற ஒன்றை உண்டாக்குவது கடினமே ஆகும்,

குடியேற்றநாட்டுச் சட்டமன்றங்களினால் நிறைவேற்றப்பட்ட மசோதாக்களைத் தள்ளுபடி செய்வதற்கு அரசருக்குள்ள அதிகாரமானது, மேலே குறிப்பிடப்பட்ட தள்ளுரிமை அதிகாரத்தினின்றும் வேறானதாகும். இவ்வதிகார மன்றமானது, பெயரளவில் இல்லாவிட்டாலும், நடைமுறையில், ஏகாதிபத்தியப் பாராளுமன்றத்துக்குக் குடியேற்றநாட்டின் சட்டமியற்றும் அதிகாரத்தைக் கட்டுப்படுத்த அல்லது வரையறை செய்வதற்குள்ள உரிமையே ஆகும். இவ்வதிகாரம் அடிக்கடி கையாளப்படுகிறது.

குடியேற்றநாட்டின் சட்டமியற்றும் அதிகாரத்துக்கு உரிய இந்தத் தடை இரண்டு வேறுவகையான வழிகளில் கையாளப்படுகிறது.[1]

[1] குடியேற்றநாட்டுச் சட்டத்தைத் தள்ளுபடிசெய்யும் அதிகாரமானது கையாளப்படும் வகையை 'மாட்சிமை தங்கிய அரசியின் குடியேற்றநாட்டு ஆட்சித்துறைக்குரிய விதிகளும் ஒழுங்குகளும்,' என்ற (Rules and Regulations for the Majesty's Colonial Service (Colonial Office, 1867, pages 13, 14) தொகுப்பிலிருந்து கீழே தரப்படும் சில பகுதிகளினால் நன்கு அறியலாம் :

### ௲ மேற்சட்ட மன்றங்களும், கீழ்ச்சட்ட மன்றங்களும் (Legislative Councils and Assemblies)

ஒவ்வொரு குடியேற்றநாட்டிலும், சட்டமன்றத்தின் மற்றக் கிளைகளாலும் அல்லது உறுப்பினராலும் நிறைவேற்றப்பட்ட சட்டங்களுக்குத் தனது ஒப்புதலைக் கொடுக்கவோ அல்லது கொடுக்காமல் மறுக்கவோ ஆளுநருக்கு அதிகாரம் உண்டு; அத்தகைய ஒப்புதல் கொடுக்கப்படும்வரையில், எச் சட்டமும் செல்லுபடியாகவோ, கட்டுப்படுத்தவோ செய்யாது.

சிலசமயங்களில், 'தற்காலிகமாக நிறுத்திவைக்கும் பிரிவுகளோடு' (suspending clauses) சட்டங்கள் நிறைவேற்றப்படுகின்றன; அதாவது, அவைகளுக்கு ஆளுநருடைய (Governor) ஒப்புதல் கொடுக்கப்பட்டாலும், அவைகளை மேன்மைதங்கிய அரசி தனிப்பட்டமுறையில் உறுதிப்படுத்துகிறவரையில். அவை குடியேற்றநாட்டில் செயல்முறைக்கு வருவதில்லை; வேறுசில சமயங்களில், இதே நோக்கத்தை அடிப்படையாகக் கொண்டு, ஆளுநர் சட்டங்களுக்குத் தானே ஒப்புதலளிக்கவோ, ஒப்புதலை மறுக்கவோ செய்யாமல், அவற்றை அரசியின் ஒப்புதலுக்காக ஒதுக்கிவைக்கும்படி அவருக்குப் பாராளுமன்றம் அதிகாரத்தை வழங்கியிருக்கிறது.

'நிறுத்திவைக்கும் பிரிவுகள் இல்லாத' ஒவ்வொரு சட்டமும் ஆளுநருடைய ஒப்புதலைப் பெற்ற உடனேயே செயல்முறைக்கு வருகிறது; அல்லது அச் சட்டத்திலேயே குறிப்பிடப்படும் காலத்தில் அது நடைமுறைக்கு வருகிறது. எனினும், சட்டத்தைத் தள்ளிவிடுவதற்கு அரசருக்கு அதிகாரம் இருக்கிறது; அத்தகைய அதிகாரமானது கையாளப்படுமாயின், அச் சட்டம் தள்ளிவிடப்பட்டமை குடியேற்றநாட்டில் வெளியிடப்படும் நாளிலிருந்து, அச் சட்டம் நடைமுறைக்கு வருவது நின்றுவிடும்.

சார்பாளிகளடங்கிய சட்ட மன்றங்களையுடைய (Representative Assemblies) குடியேற்ற நாடுகளிலே, எந்தச் சட்டத்தையும் தள்ளிவிடுவதோ அல்லது ஒதுக்கப்பட்ட ஒரு மசோதாவுக்கு அரசியின் ஒப்புதலை அளிப்பதோ, மன்றத்தின் ஆணையினால் (Order in Council) குறிப்பிடப்படுகிறது. 'தற்காலிகமாக நிறுத்திவைக்கும் பிரிவோடு, நிறைவேற்றப்பட்ட ஒரு சட்டத்தை உறுதிப்படுத்துவது மன்றத்தின் ஆணையினால் குறிப்பிடப்படுவதில்லை; இத்தகைய வகையினால் சட்டத்தை உறுதிப்படுத்துதல் வேண்டுமென்பது, 'தற்காலிகமாக நிறுத்திவைக்கும் பிரிவிலேயே சொல்லப்பட்டிருந்தாலோ அல்லது குடியேற்றநாட்டு அரசியலமைப்பின் சில தனிப்பட்ட பிரிவிலேயே சொல்லப்பட்டிருந்தாலோ, அச் சட்டத்திற்களிக்கப்படும் உறுதியை மன்றத்தின் ஆணை குறிப்பிடுகிறது.

## தள்ளுரிமை அதிகாரம் எவ்வாறு கையாளப்படுகிறது

எடுத்துக்காட்டாக நியூஸிலாந்துபோன்ற ஒரு குடியேற்றநாட்டின் ஆளுநர், நியூஸிலாந்துப் பாராளுமன்றத்தின் இரு மன்றங்களாலும் நிறைவேற்றப்பட்ட ஒரு மசோதாவுக்குத் தமது ஒப்புதலை வழங்க நேரடியாக மறுக்கலாம். இத்தகைய சூழ்நிலையில், இந்த மசோதா ஒரு குடியேற்றநாட்டுச் சட்டமன்றத்தால் தள்ளிவிடப்பட்ட ஒரு மசோதாவைப்போல முடிவாகத் தோற்கடிக்கப்பட்டதாக ஆகிவிடுகிறது; அல்லது ஆங்கிலப் பாராளுமன்றத்தின் இரு மன்றங்களாலும் நிறை

---

கிரௌன் காலனிகளில், எந்தச் சட்டத்துக்கும் அளிக்கப்படும் ஒப்புதலோ அல்லது மறுப்போ செய்திவிடுப்பதன் மூலமாகக் குறிப்பிடப்படுகிறது.

சில சமயங்களில் ஒரு காலவரையறை குறிப்பிடப்படுகிறது; இக் காலவரம்பு தாண்டியதும், குடியேற்றநாட்டுச் சட்டங்கள் தள்ளுபடி செய்யப்படாவிட்டாலும், அவை குடியேற்ற நாட்டில் சட்டத்துக்குரிய அதிகாரத்தைப் பெருமல் போய்விடுகின்றன; காலவரம்பு முடிவடைவதற்குமுன் மேன்மைதங்கிய அரசியினுடைய ஒப்புதல் கொடுக்கப்பட்டமை அறிவிக்கப்பட்டால், அவை சட்டம் ஆகின்றன; ஆனல், 'காலவரம்பு கடந்தபின் தள்ளுபடி செய்யப்படாத மசோதாக்கள் சட்டங்களாகாமற் போகின்றன' என்பதே பொதுவானதொரு விதியாகும்.

சார்பாளர்களடங்கிய சட்டமன்றங்களையுடைய குடியேற்ற நாடுகளில், அரசியிஞலோ அல்லது மேன்மைதங்கிய அரசியின் சார்பில் ஆளுநராலோ அல்லது சில சமயங்களில் அரசியைப்பற்றிய வெளிப்படையான குறிப்பெதுவும் இல்லாமல் மேல் சட்டமன்றம், கீழ்ச் சட்டமன்றம் ஆகியவற்றின் ஆலோசனையையும், இணக்கத்தையும் பெற்று, ஆளுநரால் மட்டுமே சட்டங்கள் செய்யப்படுகின்றன. இவையெல்லாம் சட்டங்கள் (Acts) என்றே எப்பொழுதும் அழைக்கப்படுகின்றன. மேலே குறிப்பிடப்பட்ட சட்டமன்றங்கள் இல்லாத குடியேற்ற நாடுகளில், சட்டங்களெல்லாம் (Laws), ஆணைகள் (Ordinances) என அழைக்கப்படுகின்றன; இவை ஆளுநரால் மேல் சட்டமன்றத்தின் ஆலோசனையோடும். ஒப்புதலோடும் செய்யப்படுகின்றன; பிரிட்டிஷ் கயாஞ நாட்டில் ஆணைகளை ஆளுநர், கொள்கை வகுக்கும் மன்றத்தவருடைய ஆலோசனையையும் ஒப்புதலையும் பெற்றுச் செய்கிருர்.

எனவே, 'தள்ளுரிமை அதிகாரம்' என்பது இரண்டு முற்றிலும் வேறுபட்ட வழிகளுள் ஏதேனும் ஒன்றின் மூலமாகக் கையாளப்படலாமென்பதும்; அவற்றுள் ஒன்று ஆளுநர் தமது ஒப்புதலைத் தரமறுப்பது என்பதும்; மற்ருென்று ஆளுநரால் ஒப்புக்கொள்ளப்பட்ட சட்டங்களையும் தள்ளிவிடும் அதிகாரத்தை அரசர் கையாளுவது என்பதும் நமக்கும் தெரியவருகின்றன. மேலும், மசோதாக்களை ஆளுநர் அரசருடைய மேற்பார்வைக்காக ஒதுக்கிவைக்க முடியுமாதலாலும், குடியேற்றநாட்டுச் சட்டங்களுக்கு அரசருடைய ஒப்புதல் கொடுக்கும்வரை அவற்றை நடைமுறைக்கு வருவதை நிறுத்திவைக்கும் பிரிவுகளை உடையனவாகச் சில சமயங்களில் குடியேற்றநாட்டுச் சட்டங்கள் நிறைவேற்றப்படுவதாலும், குடியேற்றநாட்டுச் சட்டமியற்றும் அதிகாரத்தின்மீது தடை, நான்கு வேறுபட்ட வடிவங்களில் கையாளப்படலாம்:

(1) ஒரு மசோதாவுக்கு ஆளுநர் ஒப்புதலைக் கொடுக்க மறுத்தல், (2) ஒரு மசோதாவை அரசருடைய மேற்பார்வைக்காக ஒதுக்கிவைத்தல், பின்னல் இதற்கு அரசருடைய ஒப்புதல் மறுக்கப்படவும், இது நடைமுறைக்கு வராமற் போதல்; அல்லது சட்டத்தில் குறிப்பிடப்பட்ட காலத்துக்குள் அரசருடைய ஒப்புதல் கொடுக்கப்படாமற் போதல், (3) ஒரு மசோதாவுக்கு அரசரின் ஒப்புதல் கொடுக்கப்படும்வரை அதனை நடைமுறைக்கு வருவதினின்றும் தடுக்கும் ஒரு பிரிவை அந்த மசோதாவிலேயே சேர்த்தலும், அதற்கு அரசரின் ஒப்புதல் இல்லாமற்போதலும், (4) குடியேற்றநாட்டுப் பாராளுமன்றத்தால் நிறைவேற்றப்பட்ட ஒரு சட்டத்தை ஆளுநரின் இசைவுடனேயே அரசர் தள்ளிவிடுதல். குடியேற்றநாட்டுச் சட்டமியற்றும் அதிகாரத்தைக் கட்டுப்படுத்துவதற்காக

வேற்றப்பட்ட ஒரு மசோதாவுக்குத் தனது ஒப்புதலைக் கொடுக்க மறுத்தல் என்ற வழக்கற்றுப்போன விசேட அதிகாரத்தை அரசர் கையாண்டால், அந்த மசோதா தோற்கடிக்கப்பட்டதாக ஆகிவிடுவதைப் போல, மேலே கூறப்பட்ட குடியேற்றநாட்டு மசோதா ஆகிவிடுகிறது. மேலும், ஆளுநர் தமது ஒப்புதலைக் கொடுக்க மறுக்காமல், குறிப்பிட்ட மசோதாவை, அரசரின் ஆய்வுக்காக ஒதுக்கிவைக்கக்கூடும். இத்தகைய சூழ்நிலையில், அந்த மசோதா அரசருடைய ஒப்புதலைப் பெறும்வரை நடைமுறைக்கு வராது; இத்தகைய அரசருடைய ஒப்புதல் என்பதும், உண்மையில் ஆங்கில அமைச்சரவையினுடைய ஒப்புதலே ஆகும். ஆகையால் இவ்வொப்புதல் மறைமுகமாக ஏகாதிபத்தியப் பாராளுமன்றம் அளிக்கும் ஒப்புதலே ஆகும்.

வேறுவகையாகப் பார்க்கப்போனால், ஆளுநர் அரசருடைய சார்பாளி என்றமுறையில், நியூஸிலாந்தின் எந்த மசோதாவுக்கும் ஒப்புதல் அளிக்கலாம். எனவே, இத்தகைய மசோதா நியூஸிலாந்து முழுவதிலும் நடைமுறைக்கு வருகிறது. ஆனால், அத்தகைய மசோதா சிறிது காலத்துக்கு உண்மையான சட்டமாக இருந்தாலும், அதற்கு ஆளுநரின் ஒப்புதல் கொடுக்கப்பட்டபின், அரசர் அக் குடியேற்ற நாட்டுச் சட்டத்தைத் தள்ளிவிடக்கூடுமாதலால், அது நியூஸிலாந்திலேயே சட்டமாகக் கடைசியில் ஆகாது. இத்தகைய உண்மை நிலையைக் கீழ்வருமாறு திரு. டாட் (Mr. Todd)[1] என்ற ஆசிரியர்

[1] Todd எழுதிய பிரிட்டிஷ் குடியேற்ற நாடுகளில் பாராளுமன்ற அரசாங்க முறை(1894) என்ற நூலின் 171-ஆம் பக்கத்தைப் பார்க்கவும். 'டொமினியன் சட்டம் இயற்றும் அதிகாரம் செயல்படுவதைப்பற்றிய மாநாடு' (1929, 1930) என்ற நூலின் 11,14-ஆம் பக்கங்களைப் பார்க்கவும். கனடாவின் கவர்னர் ஜெனரல், நடு அரசாங்கமாகிய டொமினியன் காபினெட்டின் ஆலோசனையின்பேரில், 1938-ஆம் ஆண்டில், ஆல்பர்ட்டா மாகாணச் சட்ட மன்றத்தால் நிறைவேற்றப்பட்ட சில சட்டங்களைத் தள்ளுபடி செய்தார்.

---

மேலே கூறப்பட்ட நான்கு முறைகளுள், முதல் மூன்று முறைகளுக்கும் நான்காவது முறைக்குமுள்ள வேறுபாட்டை வாசகர்கள் நன்கு கவனிக்க வேண்டும். முதல் மூன்று முறைகளிலும், குடியேற்றநாட்டுச் சட்டமன்றத்தில் நிறைவேற்றப்பட்ட ஒரு சட்டமானது, அக் குடியேற்றநாட்டில் ஒருபொழுதும் நடைமுறைக்கு வராது. நான்காவதாகக் கூறப்பட்ட முறையின்படி, ஒரு குடியேற்ற நாட்டில் நடைமுறைக்கு வந்துள்ள குடியேற்றநாட்டுச் சட்டமானது, அரசரால் தள்ளுபடி செய்யப்படும் நாளிலிருந்து தள்ளப்பட்டோ அல்லது நீக்கப்பட்டோ போய்விடுகிறது. பல குடியேற்ற நாடுகளைப் பொறுத்தவரையில், மேற்கூறப்பட்ட வகையாக ஒரு குடியேற்றநாட்டுச் சட்டத்தைத் தள்ளுபடி செய்வதென்பது, அவற்றின் அரசியலமைப்புச் சட்டத்தின்படி, அச் சட்டம் நிறைவேற்றப்பட்ட இரண்டு ஆண்டுகளுக்குள் வெளிப்படுத்தப்பட வேண்டும். பிரிட்டிஷ் வட அமெரிக்கா சட்டம் (1867), 56ஆவது பிரிவைப் பார்க்கவும். 1842ஆம் ஆண்டு ஆஸ்திரேலிய அரசியலமைப்புக்களின் சட்டம், 32, 33; 1850ஆம் ஆண்டு ஆஸ்திரேலிய அரசியலமைப்புகள் சட்டம், 1855ஆம் ஆண்டு விக்டோரியா அரசியலமைப்புச் சட்டம், பிரிவு 3 ஆகியவற்றை ஒப்பிடுக. டொமினியன்களைப் பொறுத்தவரையில், சட்டங்களை ஒதுக்கிவைக்கவும் தள்ளுபடி செய்யவும் கூடிய அதிகாரங்களைக் கையாளுதல் என்பது நெடுங்காலமாகப் பழக்கத்திலிருந்து மறையும்படியாக விட்டுவிடப்பட்டது; சில சூழ்நிலைகளில் இவ் வதிகாரங்கள் சட்டத்தினால் நீக்கப்பட்டும்போய்விட்டன.

குறிப்பிடுகிருர் : 'ஓர் ஆளுநர் அரசருடைய சார்பாளி என்ற முறையில் மசோதாக்களுக்கு அரசருடைய ஒப்புதலை அளிப்பதற்கு அதிகாரத்தைப் பெற்றிருந்தபோதிலும், அவருடைய இத்தகைய செயல் முடிவானது என்று ஆகாது ; ஏனென்ருல், உண்மையில், இரண்டாவது முறையாகத் தள்ளுபடிசெய்யும் அதிகாரம் அரசருக்கு இருக்கிறது. ஒரு குடியேற்றநாட்டு ஆளுநரால் ஒப்புதலளிக்கப்படும் எல்லாச் சட்டங்களும் உடனடியாக நடைமுறைக்கு வருகின்றன ; ஆனல், அவற்றுக்கு அரசியின் ஒப்புதலளிக்கப்படும் விவரம் அரசியின் ஆலோசனை மன்றத்தில் விளம்பரம் செய்யப்படும்வரை அவற்றை நடைமுறைக்கு வருவதைத் தடுத்துநிறுத்தும் பிரிவு, அவற்றில் சேர்க்கப்பட்டிருந்தாலும் அல்லது அவை உடனடியாக நடைமுறைக்கு வராமல் தடுக்கக்கூடிய வேறு ஏதேனுமொரு பிரிவு சேர்க்கப்பட்டிருந்தாலும், அவை உடனடியாக நடைமுறைக்கு வரமாட்டா ; ஆனல், இவ்வாறு உடனடியாக நடைமுறைக்குவரும் சட்டத்தின் படியை (copy) ஆளுநர் குடியேற்றநாடுகளின் செயலாளருக்கு (secratary of state for the colonies) அனுப்பிவைக்க வேண்டும்; ஆலோசனை மன்றத்தில் அரசி (queen in council) மேற்கூறிய சட்டம் கிடைக்கப்பெற்ற இரண்டு ஆண்டுக் காலத்துக்குள் அத்தகைய சட்டத்தைத் தள்ளுபடி செய்யலாம்'

எனவே, இத்தகைய நிலைமையினல் தோன்றும் விளைவு என்ன வென்ருல், 'குடியேற்றநாட்டுச் சட்டம் ஏகாதிபத்தியப் பாராளுமன்றத்தினுடைய தள்ளுரிமை அதிகாரத்துக்கு உட்பட்டது' என்பதும், 'நியூஸிலாந்தினுடைய அல்லது வேறெந்தக் குடியேற்றநாட்டினுடைய சட்டமன்றத்தால், ஒரு சட்டம் நிறைவேற்றப்பட்டிருந்தபோதிலும், அதனை ஏகாதிபத்திய நலன்களின் காரணங்களுக்காகத் தள்ளிவிடுதல் வேண்டுமென ஆங்கில அமைச்சரவை கருதினல், அச் சட்டம் முடிவாக நடைமுறைக்கு வராது' என்பதும், ஏதேனுமொரு குடியேற்ற நாட்டுச் சட்டமானது, எழுத்தளவிலாயினும் அல்லது பொருளளவிலாயினும் (either in letter or in spirit) பாராளுமன்றச் சட்டத்துக்கு முரணனதாக இருக்குமாயின், அதனைத் தாய்நாட்டின் (அதாவது இங்கிலாந்தின்) அரசாங்கமானது ஒப்புக்கொள்ளாமல் தள்ளிவிடுதல் உறுதியே ; பல்வேறு காரணங்களின் அடிப்படையில் அரசரால் ஒப்புதலளிக்கப்படாமல், தள்ளுபடி செய்யப்பட்ட எண்ணற்ற சட்டங்களை நாம் இங்குக் குறிப்பிடமுடியும். கவர்னர்-ஜெனரலினுடைய சம்பளத்தைக் குறைக்க வழிசெய்யும் ஒரு கனடியச் சட்டத்துக்கு 1868 ஆம் ஆண்டில் அரசி ஒப்புதல் அளிக்க மறுத்துவிட்டார்.[1] ஒரு கனடியப் பதிப்புரிமைச் (copyright) சட்டத்தின் சில பகுதிகள் ஏகாதிபத்தியச் சட்டத்தோடு முரண்பட்ட காரணத்தால்,

[1] Todd, pages, 177, 178,

அச் சட்டத்துக்கு அரசி ஒப்புதலளிக்க மறுத்துவிட்டார்.[1] 1867ஆம் ஆண்டின் பிரிட்டிஷ் வட அமெரிக்கச் சட்டத்தின் வெளிப்படையான சில பகுதிகளோடு, ஒரு கனடியச் சட்டம் முரண்பட்டதாகக் கருதப் பட்டு அது 1873-ல் தள்ளுபடி செய்யப்பட்டது.

இதே காரணத்துக்காக, 1878ஆம் ஆண்டில் ஒரு கனடியக் கப்பல் போக்குவரத்துச் சட்டம் தள்ளுபடி செய்யப்பட்டது.[2] கணவன் பரத்தைமை (adultery) செய்தானென்ற ஒரு காரணத்துக்காக மணமுறிவு (divorce) உரிமையை வழங்குகின்ற ஒரு குடியேற்றநாட்டுச் சட்டமும், (இறந்துபோன மனைவியின் சகோதரியின் திருமணச் சட்டம் 1907ஆம் ஆண்டில் செய்யப்படுவதற்கு முன்னர்) இறந்துபோன மனைவியின் சகோதரியைத் திருமணம் செய்துகொள்வதைச் சட்டப் படியான ஒன்றாக ஆக்குகிற குடியேற்றநாட்டுச் சட்டமும், ஆங்கில அரசாங்கம் கையாளுகிற குடியேற்றநாட்டுக் கொள்கையோடு பொருந்துவனவாகா. எனினும், இவை சில சமயங்களில், அரசரால் அதாவது உண்மையில் தாய்நாட்டின் அரசாங்கத்தால் தள்ளுபடி செய்யப்பட்டுள்ளன.

ஆகையால், 'குடியேற்றநாட்டினுடைய சட்டமியற்றும் உரிமை யானது, ஏகாதிபத்திய நாட்டின் இறைமை அதிகாரத்தோடு எவ்வாறு சட்டப்படியாகப் பொருந்துமாறு செய்யப்படுகிறது?' என்று ஆய்வு செய்தால், அதற்குப் பொதுவான விடை என்னவென்றால், 'பாராளு மன்றத்தின் இறைமை அதிகாரமானது, முழுவதும் ஒப்புக்கொள்ளப் படுவதால், குடியேற்றநாட்டுச் சட்டமன்றங்களின் அதிகாரத்தை நுட்பமாக வரையறுக்கவேண்டிய தேவையே இல்லாமற் போய்விடு கிறது' என்பதும், 'பாராளுமன்றத்தின் சார்பாளியாக இருக்கின்ற தாய்நாட்டின் (ஏகாதிபத்திய) அரசாங்கமானது (home government) அரசருடைய தள்ளுரிமை அதிகாரத்தைக் கையாளுவதன்மூலமாகக் குடியேற்றநாட்டுச் சட்டங்களுக்கும், ஏகாதிபத்தியச் சட்டங்களுக்கும் இடையே, முரண்பாடுகள் தோன்றுவதைத் தடுக்கும் அதிகாரத்தைத் தன்வசம் வைத்துக்கொண்டுள்ளது' என்பதும் ஆம். இவற்றோடு சேர்த்துக்கூறப்பட வேண்டிய செய்தி இன்னொன்று உண்டு; ஏகாதி பத்திய நாட்டினால் செய்யப்படும் அயல்நாட்டு உடன்படிக்கைகள் சட்டப்படியாகக் குடியேற்றநாடுகளையும் கட்டுப்படுத்தக் கூடியன வாகும். மேலும், அமெரிக்கரால் தனித்த ஓர் அதிகாரமாகக் குறிப்பிடப்

[1] Todd, pages, 180, 183.

[2] 1900ஆம் ஆண்டுக்கு முன்னர், ஆஸ்திரேலியக் குடியேற்ற நாடுகளைப் பொறுத்தவரையில், இத்தகைய சட்டமியற்றும் அதிகாரமானது, பின் கூறப்படும் முறையில் தடுக்கப்பட்டதென ஆசிரியருக்குச் செய்தி கிடைத்துள்ளது; குடியேறும் சட்டங்களெல்லாம் (Immigration Acts) ஆளுநர்களால் அரசருடைய ஆராய்வுக்கு ஒதுக்கிவைக்கப்பட்டன; அரசருடைய ஒப்புதல் கொடுக்கப்படா விட்டால், மசோதாக்கள் நடைமுறைக்கு வராமற்போயின.

படும் 'அயல்நாடுகளோடு உடன்படிக்கை செய்யும் அதிகாரம், (treaty making power) என்பது அரசரிடமே இருப்பதாகும்; எனவே, அவ்வதிகாரமானது ஏகாதிபத்திய அரசாங்கத்தினால், பாராளு மன்றத்தின் இரு மன்றங்களினுடைய அல்லது குறிப்பாகக் கூறினால், பொதுமக்கள் மன்றத்தினுடைய (House of commons) கருத்து களுக்கு ஏற்பவே கையாளப்படுகிறது; ஆனால், அயல்நாட்டு உடன் படிக்கைகள் செய்யும் அதிகாரமானது, ஏதேனுமொரு பாராளுமன்றச் சட்டத்தினால் வெளிப்படையாக வழங்கப்பட்டாலன்றி, அதனை எந்தக் குடியேற்றநாட்டு அரசாங்கமும் பெற்றிருக்கமுடியாது.

இவ்வாறிருந்தபோதிலும், 'ஏகாதிபத்திய அரசாங்கத்துக்கும் வேறொரு அயல் அரசாங்கத்துக்கும் இடையே ஏற்படும் உடன் படிக்கையை ஏற்றுக்கொள்ளுவதற்குரிய சட்டங்களைச் செய்வதா, இல்லையா என்று தீர்மானிப்பதற்கு, சுய ஆட்சியுடைய ஒரு குடியேற்ற நாட்டுச் சட்டமன்றத்துக்கு உரிமை உண்டு' என்பதையும் நாம் இங்குக் கவனிக்கவேண்டும்; மேலும்,[1] நாடுகடத்தப்பட்டு வந்த குற்றவாளிகளைத் திருப்பி ஒப்படைத்தல் (extradition of criminals) போன்ற செயல்களுக்கு ஒரு குடியேற்றநாட்டின் கருத்து (தாய் நாட்டின் கருத்துக்கு) மாறுபட்டதாக இருக்குமானால், இவைகளைக் குறிப்பிடுகின்ற ஓர் அயல்நாட்டு உடன்படிக்கையின் ஷரத்துகளைக் குடியேற்றநாடு செயல்படுத்துவதில் பெரும் இடையூறுகள் தோன்றலாம். என்றாலும் இந்தத் தடை, 'ஒரு குடியேற்றநாடு ஏகாதிபத்திய அரசாங் கத்தால் செய்யப்படும் உடன்படிக்கைகளால் கட்டுப்படுத்தப்படு கிறது' என்ற சட்டப்படியான கொள்கையைப் பாதிக்கவில்லை; இதனால், ஏதேனுமொரு பாராளுமன்றச் சட்டத்தின் தனித்த ஒரு பிரிவினால் அல்லாமல், எந்தக் குடியேற்றநாடும் வேறு அயல்நாட்டோடு உடன்படிக்கைகள் செய்யும் அதிகாரத்தைப் பெற்றிருக்கவில்லை.

### குடியேற்ற நாடுகளின் செயலில் தலையிடாத பேரரசு அரசாங்கத்தின் கொள்கை

குடியேற்றநாட்டின் சட்டமியற்றும் அதிகாரத்தின்மீது, கிரேட் பிரிட்டனால் கையாளப்படும் கட்டுப்பாட்டின் அளவையும், தன்மை யையும் நன்றாகப் புரிந்துகொள்ள விரும்பும் எவரும், இரண்டு குறிப்பு களைக் கவனமாக மனத்திற் கொள்ளவேண்டும். முதலில் காண வேண்டியது, 'கோட்பாடு என்ற அடிப்படையில், ஏகாதிபத்திய அரசாங்கமானது, குடியேற்றநாடுகளின் சட்டம் இயற்றும்

[1] இவ்வகையாக, இறந்துபோன கணவனின் சகோதரனைத் திருமணம் செய்துகொள்ள அனுமதிக்கும் 1900ஆம் ஆண்டின் நியூஸிலாந்துச் சட்டமும், காமன்வெல்த் பாராளுமன்றத்தால் 1901 ல் நிறைவேற்றப்பட்ட குடிபுகுதலைத் தடுக்கும் சட்டமும், அரசருடைய ஒப்புதலைப் பெற்றன. இதில் கடைசியாகக் குறிப்பிடப்பட்ட சட்டமானது, சில சூழ்நிலைகளில் ஒரு குடியேற்றநாட்டுப்

செயலிலோ[1] அல்லது வேறொரு வகையான செயலிலோ மிகவும் குறைவாகவே தலையிடும் இயல்புடையதாக இருக்கிறது என்பதாகும். ஒரு குடியேற்றநாட்டுச் சட்டங்கள் கடைசியில் அரசரால் ஒப்புக் கொள்ளப்பட்டபோது, அவை அக் குடியேற்றநாட்டுக்குப் பொருந்தக் கூடிய ஏதேனுமொரு பாராளுமன்றச் சட்டத்துக்கு முரண்பட்டதாக இருக்குமானல், நாம் முன்பே குறிப்பிட்டபடி அச் சட்டங்கள் செல்லு படியாகா' என்பது இரண்டாவதாகக் கவனிக்கப்படவேண்டிய குறிப்பு ஆகும். எனவே, பிரிட்டனைச் சார்ந்துள்ள நாடுகளின் உள் நாட்டுச் செயல்களில் தலையிடாமை என்ற ஏகாதிபத்தியக் கொள்கை யானது, ஏகாதிபத்தியப் பாராளுமன்றத்தினுடைய சட்டமியற்றும் உயர்தர அதிகாரத்தோடு இணைந்திருப்பதால், குடியேற்றநாட்டுச் சட்டமியற்றும் அதிகார எல்லைக்குள் யுனைடெட் கிங்டத்தின் பாராளுமன்றமானது மீறித் தலையிடுதல் என்பதோ அல்லது ஏகாதி பத்தியச் சட்டமியற்றும் அதிகாரத்தில் குடியேற்ற நாட்டுப் பாராளு மன்றங்கள் எல்லைமீறித் தலையிடுதல் என்பதோ வெகு அருமையாக நிகழக்கூடியதாகவே இருக்கிறது.[2]

[1] ஹேக் உடன்படிக்கைகள் (Hague conventions) போன்ற அரசியல் சார்பான உடன்படிக்கைகளிலல்லாமல், மற்ற உடன்படிக்கைகளில், 1914ஆம் ஆண்டில்கூட யுனைடெட் கிங்டத்தின் அரசாங்கம் டொமினியன்களைக் கட்டுப் படுத்தவில்லை; ஆனல், அத்தகைய உடன்படிக்கைகளைக் குடியேற்றநாடுகள் விரும்பினல் ஏற்றுக்கொள்ள அவைகளை அனுமதிக்கும் ஒரு பிரிவை உடன் படிக்கைகளில் யுனைடெட் கிங்டத்தின் அரசாங்கம் சேர்த்தது. ஏதாவதொரு காமன்வெல்த் நாடு உடன்படிக்கையில் கண்டுள்ள கடமைகளை ஒப்புக்கொள்ள விரும்பினல், அந் நாட்டின் அமைச்சர்களுடைய ஆலோசனையின்பேரிலேயே அரசரானவர், உடன்படிக்கை செய்யும் தம் அதிகாரங்களை 1923ஆம் ஆண்டி லிருந்து கையாண்டுவருகிருர். பல குடியேற்றநாடுகளுக்கிடையே செய்யப்படும் உடன்படிக்கைகளில் ஒவ்வொரு குடியேற்றநாட்டின் சார்பாக, அந்தந்த நாட்டின் அமைச்சர்கள் தனித்தனியே அரசரின் பெயரால் கையெழுத்திடுகின்றனர்.

[2] 1914ஆம் ஆண்டுக்கு முன்னர், வாணிகக் கப்பல் வசதியைப் (Merchant Shipping) பாதிக்கும் விஷயங்களைப்பற்றி ஏகாதிபத்தியச் சட்டங்களுக்கும், குடியேற்றநாட்டுச் சட்டங்களுக்கும் நிறைய மாறுபாடுகள் அல்லது முரண் பாடுகள் இருந்தன.

---

பாராளுமன்றத்துக்குத் தாய்நாட்டு அரசாங்கம் வழங்கக்கூடிய, மிக விரிவான சட்டமியற்றும் அதிகாரத்துக்கு எடுத்துக்காட்டாக விளங்குகிறது. இந்திய நாட்டின் செயலாளராக (Secretary of State for India) இருந்த திரு. ஜான் மார்லி, இக் குறிப்பிட்ட சட்டமானது ஏனைய ஆட்சிக் குடியேற்றநாடுகளின் சட்ட மியற்றும் அதிகாரத்தை ஒத்திருப்பதாகக் கூறுவதைத் தாம் ஒப்புக்கொள்ள வில்லை, என்று கூறுகிருர்; மேலும் அவர் கூறுவதாவது: "......டிரான்ஸ்வால் சட்டத்தின் 2ஆவது பிரிவு (4), முந்திய சட்டங்களில் காணப்பட முடியாத ஒரு புதிய கொள்கையைப் புகுத்துகிறது. குடிபுகுவோருக்காக டிரான்ஸ்வாலில் (அரசாங்கத்தால் விதிக்கப்படுகின்ற கல்வித் தேர்வுகளில் தாங்கள் தேர்ச்சிபெற முடியுமென்பதைச் செயலில் காட்டி) வேறு எந்தக் குடியேற்றநாட்டிலும் குடியேறு தற்கு உரிமையுள்ள பிரிட்டிஷ் குடிமக்கள் டிரான்ஸ்வாலில் குடியேறுவதை மேற்கூறிய சட்டப்பிரிவு தடை செய்கிறது. எடுத்துக்காட்டாக, ஆசியாவில் பிறந்து, ஐரோப்பியப் பல்கலைக் கழகங்களில் பட்டம் பெற்றவர்களையும், உயர் கல்விப் பயிற்சியாளருக்குமட்டுமே உரிய தொழில்களை ஏற்றுள்ளவர்களையும், அவர்கள் டிரான்ஸ்வால் குடியேற்றநாட்டில் எதிர்காலத்தில் குடியேற விரும் பினல், நிலையாகத் தடுத்துவிடுகிறது.' (1908-ல் டிரான்வாலில் ஆசிரியர் களைப் பாதிக்கும் சட்டத்தைப்பற்றிய கடிதப் போக்குவரத்தைப் பக்கங்கள் 52, 53, 31, 32-ஐப் பார்க்கவும்.)

## II. இறைமையைப் பெற்றிராத அயல் நாட்டுச் சட்டமன்றங்கள் (Foreign Non - sovereign Legislatures)

### சுதந்தர நாடுகளின் இறைமை அல்லாத சட்டமன்றங்கள்

கனடா டொமினியனைப் போலவோ அல்லது ஆஸ்திரேலியக் காமன்வெல்த்தைப் போலவோ பெரும்பாலும் சுதந்தர நாடுகளாக விளங்குகிற குடியேற்றநாடுகளின் பாராளுமன்றங்களுங்கூட, உண்மையில் இறைமையுடைய சட்டமன்றங்கள் அன்று என்பதைக் காண்பதற்கு நமக்கு இடர்ப்பாடு ஒன்றும் இல்லை. இது தெளிவாகத் தெரிகிறது; எவ்வாறெனில், பிரிட்டிஷ் பேரரசு முழுமைக்கும் சட்டம் செய்கின்ற யுனைடெட் கிங்டத்தின் இறைமையுடைய பாராளுமன்றமானது, இக்குடியேற்றநாட்டுப் பாராளுமன்றங்களின் பின்னர்ச் செயல்படுவதைக் காண்கிறோம்; மேலும், குடியேற்றநாடுகளுக்கு நடைமுறையிலுள்ள செயலுரிமை அளவில் பெரியதாக இருந்தாலும், அவை அயல்நாடுகளோடு வைத்துக்கொள்ளும் உறவைப் பொறுத்தவரையில், அவை சுதந்தர நாடுகளாகச் செயல்புரிவதில்லை; சார்புநாடு ஒன்றின் பராளுமன்றமானது (dependency)இறைமையுடைய மன்றமாக இருத்தல் இயலாது; 'ஒரு சுதந்தரநாட்டின் சட்டமன்றமானது, ஓர் இறைமையுடைய மன்றமாக இருத்தல் இயலாது' என்பதை உணருவது ஆங்கில மக்களுக்குக் கடினமாக இருக்கும். 'பாராளுமன்றத்துக்கு எல்லா அதிகாரமும் உண்டு,' என்ற அடிப்படையான ஓர் அனுமானத்தின்மீதே, நமது அரசியல் வழக்கங்களும் கருத்தும் அமைந்திருக்கின்றன; இதே காரணத்தால், ஒரு பாராளுமன்றமானது, ஒரு சுதந்தர நாட்டின் பிரதிநிதி என்ற நிலையிலும், அதேசமயத்தில் அது இறைமை அதிகாரம் இல்லாதது என்ற நிலையிலும் உள்ளது என்பதைக் காணும்போது, இந்த இரண்டு நிலைகளும் ஒரு விதிவிலக்கானவை என்றோ அல்லது பொருத்தமில்லாத அல்லது முரண்பாடானவையாகவோ தோன்றுகின்றன. எனினும், நாகரிகமுற்ற நாடுகளின் அரசியலமைப்புகளை ஆய்வு செய்பவர் எவரும், 'பெரியநாடுகளின் சட்டமன்றங்களெல்லாம், பெரும்பாலும் சட்டம் செய்பவையாகமட்டுமே இருந்து வந்துள்ளன' என்பதையும், 'அவை அரசியலமைப்புச் சட்டங்களைச்செய்யும் மன்றங்களாக இயங்கவில்லை,' என்பதையும் காண்பார்கள். எனவே, 'ஓர் அயல் நாட்டுச் சட்டமன்றமானது இறைமை உடையதா இல்லையா' என்பதைக் காணும் எந்த ஒரு நிலையிலும், அந்தச் சட்டமன்றத்துக்குரிய நாட்டின் அரசியலமைப்பை நாம் ஆய்வு செய்யப்படுகின்ற சட்டமன்றத்தின் நிலைமையில், அது கீழ்ப்பட்ட நிலையிலுள்ளது எனக் காட்டும் தன்மைகள் இருக்கின்றனவா என்று காணவேண்டும். இவ்வாறான ஆய்வு செய்தால் பெரும்பாலான நிலைகளில், இறைமை உடையதாகத் தோன்றுகின்ற ஓர் சட்டமன்றமானது, உண்மையில் இறைமையைப் பெற்றிராத, சட்டம்செய்கின்ற மன்றமாகவே இருப்பது தெரியும்.

**ஃபிரான்ஸ்**

ஃபிரான்ஸ் நாடு கடந்த நூற்றைம்பது ஆண்டுகளில் குறைந்தது, பன்னிரண்டு அரசியலமைப்புகளை ஆராய்ந்து பார்த்துள்ளது.

இப் பல்வேறு அரசாங்க வகைகளுள்ளும், பலவேறுபாடுகள் இருந் தாலும், அவற்றில் ஒரு பொதுவான இயல்பு காணப்படுகிறது. மாற்றப் படமுடியாத அல்லது மிக்க இடர்ப்பாட்டின் இடையேதான் மாற்றப் படக்கூடிய அரசியலமைப்பு அல்லது 'அடிப்படையான' சட்டங்களுக் கும், சட்டம் இயற்றுவதற்கான சாதாரண வகையிலேயே சாதாரணச் சட்டமன்றத்தால் மாற்றப்படக்கூடிய சாதாரணச் சட்டங்களுக்கும் இடையேயுள்ள முக்கியமான வேறுபாட்டின்மீதே அமைக்கப்பட்டுள் ளன. ஆகையால் ஃபிரான்சினுல் அவ்வப்போது அமைக்கப்பட்டுள்ள அரசியலமைப்புகளில், பொதுவான பாராளுமன்றம் அல்லது சட்ட மன்றம் ஓர் இறைமையுடைய சட்டமன்றமாக இருந்ததில்லை.

**லூயி பிலிப்பின் அரசியலமைப்பிற்கு உட்பட்ட முடியாட்சி**

லூயி பிலிப் ஏற்படுத்திய அரசியலமைப்புக்கு உட்பட்ட முடியாட்சி யானது, வெளிப்படையாகவேனும் இங்கிலாந்தின் அரசியமைப்புக்கு உட் பட்ட முடியாட்சியை ஒத்திருக்கிறது. அதன் அரசியலமைப்புப் பட்ட யத்தில், அரசருக்கும் இரண்டு சட்டமன்றங்களுக்கும் உள்ள சட்டம் இயற்றும் அதிகாரத்துக்கு வெளிப்படையாக வரம்பு எதனையும் ஏற்படுத் கின்றசொல் ஒன்றுகூட காணப்படவில்லை; எனவே, அந் நாட்டு ஆர்லியன்ஸ் அரசகுடும்பத்தின் ஆட்சியில், பாராளுமன்றத்துக்கு இறைமை அதிகாரம் உண்டு என்ற கருத்து, ஆராய்ச்சிக்குரிய ஒன்றே என்பதாக எந்த ஆங்கிலேயரும் கருதுவர். என்ருலும், இது ஃபிரெஞ்சுச் சட்ட அறிஞரால் கொள்ளப்படுகின்ற கருத்து அன்று. டி டாக்விலி என்ற ஃபிரெஞ்சு ஆசிரியர் தாம் எழுதிய, 'அமெரிக்காவில் குடியாட்சி' (1875) என்ற நூலில் பின்வருமாறு கூறுகிருர் :

'ஃபிரான்சின் அரசியலமைப்பு மாற்றப்பட முடியாதது என்பது, அந் நாட்டுச் சட்டங்களினின்றே பெறப்படுகின்ற ஒரு தன்மை அல்லது முடிபு ஆகும்...... அரசர், பிரபுக்கள், பிரதிநிதிகள் ஆகிய எல்லாரும் தங்களுடைய அதிகாரத்தை அரசியலமைப்பினின்றே பெறுவதால், இம் மூவகை அதிகாரிகளும் ஒன்றுசேர்ந்து, தாங்கள் எந்தச் சட்டத்தின் உதவியினுல் ஆட்சி செய்கின்ருர்களோ, அந்தச் சட்டத்தை மாற்ற முடியாது. அரசியலமைப்புச் சட்டம் என்ற வரம்புக்கு அல்லது வேலிக்கு அப்பால் அவர்களுக்கு ஒரு நிலையுமில்லை; இவ்வாருனல், அரசி யலமைப்புச் சட்ட விதிகளில் ஏதேனுமொரு மாற்றத்தை, அவர்கள் எந்த அடிப்படையான நிலையிலிருந்து செய்யமுடியும்? இதற்கு உள்ள ஒரே வழி தெளிவாக இருக்கிறது; ஒன்று, அவர்களுடைய முயற்சிகள் அரசியல்

அமைப்புப்பட்டயத்துக்கெதிராக ஒன்றும் செய்யமுடியாமலிருக்கின்றன; அவர்களுடைய முயற்சிகளுக்கு எதிராக, அரசியலமைப்புப் பட்டயமானது தொடர்ந்து இருந்துவரும்; எனவே, அவர்கள் அரசியலமைப்புப் பட்டயத்தின் பெயரால் ஆளுபவர் ஆவர்; அல்லது அவர்கள் அரசியல் அமைப்புப் பட்டயத்தை மாற்றுவதில் வெற்றி அடையவேண்டும்; இவ்வாறாயின், அவர்கள் ஆட்சியாளரென அமைவதற்கு உதவிய சட்டமானது நீக்கப்படவே, அவர்களும் ஆட்சியாளரென இருப்பதற்கு இயலாது. அரசியலமைப்புப் பட்டயத்தை அழிப்பதன்மூலமாக, அவர்கள் தங்களைத் தாங்களே அழித்துக்கொள்ளுகின்றனர். இது 1814ஆம் ஆண்டின் சட்டங்களில் காணப்படுவதைவிட, 1830ஆம் ஆண்டின் சட்டங்களைப் பொறுத்தவரையில் மிகத்தெளிவாகக் காணப்படுகிறது. 1814ஆம் ஆண்டில் அரசருடைய விசேட அதிகாரமானது, அரசியலமைப்பிற்கும் உயர்ந்ததாக, அப்பாற்பட்டதாக அமைக்கப்பட்டிருந்தது. ஆனால், 1830ஆம் ஆண்டிலோ, இவ் வதிகாரமானது அரசியலமைப்புச் சட்டத்தினாலேயே தோற்றுவிக்கப்பட்டும். அதனையே சார்ந்தும் இருந்தது. எனவே, ஃபிரெஞ்சு அரசியலமைப்பின் ஒரு பகுதியானது மாற்றப்பட முடியாதது; ஏனெனில், அது ஒரு குறிப்பிட்ட குடும்பத்தாரது வரலாற்றோடு பிணைக்கப்பட்டுள்ளது; இதுபோலவே அரசியல் அமைப்புச் சட்டமும் மாற்றப்பட முடியாததாக இருக்கிறது; ஏனெனில், அதை மாற்றுவதற்குச் சட்டப்படியான வழிகள் எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை. இந்தக் கருத்துகள் இங்கிலாந்துக்குப் பொருந்துவன அல்ல. அந்த நாட்டிற்கு எழுதப்பட்ட அரசியலமைப்பு ஒன்றும் இல்லையாகையால், அதன் அரசியலமைப்பு எப்பொழுது மாற்றப்பட்டதென்று எவரால் சொல்லமுடியும்?'

டி டாக்விலியின் ஆய்வும் கருத்தும் எந்த ஆங்கிலேயராலும் சரியென ஒப்புக்கொள்ளத் தக்கதாக இல்லை.[1] அவருடைய ஆய்வும் கருத்தும் வலியற்றவை; அவை எல்லாப் ஃபிரெஞ்சு மக்களின் கருத்திலும் உறுதியாகக் காணப்படுவதும், அவரால் வலியுறுத்தப்படுவதுமான ஒரு கருத்தை உறுதியாகக் காட்டுகின்றன; அவர் காட்டும் கருத்து யாதெனில், அது 'பாராளுமன்ற இறைமை என்பது ஃபிரெஞ்சு அரசியலமைப்புக் கருத்துகளில் ஒப்புக்கொள்ளப்பட்ட ஒரு பகுதி அன்று,' என்பதே.

### 1848ஆம் ஆண்டின் குடியரசு

1848ஆம் ஆண்டின் குடியரசு இந்த வேறுபாட்டை வெளிப்படையாக ஒப்புக்கொண்டது; 1848ஆம் ஆண்டு நவம்பர் 4ஆம்

[1] அவருடைய கருத்து முரண்பாடுடையது. உண்மையில் பிரபுக்களை அமர்த்துவதைப்பற்றிய, அரசியலமைப்பின் 23ஆவது பிரிவு, சாதாரணச் சட்டம் செய்யும் வகையால்தான் மாற்றப்பட்டது.

நாள் விளம்பரம் செய்யப்பட்ட அரசியலமைப்பின் எந்தப் பிரிவையும் ஒரு சாதாரணச் சட்டத்தை மாற்றுவதற்குரிய முறையில் மாற்ற முடியாது. சட்டமன்றம் (கீழ்ச்சபை) மூன்று ஆண்டுகளுக்குக் கூடியிருந்தது. அது கூடியிருந்த கடைசி ஆண்டில்தான், அதன் உறுப்பினருள் நான்கில் மூன்று பங்கினருடைய வாக்கின்பேரில், அரசியலமைப்பை மாற்றக்கூடிய ஓர் அரசியல் நிர்ணயசபையைக் கூட்டமுடியும். இந்த இறைமையுடைய அரசியல் நிர்ணயசபை இறைமை இல்லாத சாதாரணச் சட்டமன்றத்தினின்றும் எண்ணிக்கையிலும், வேறு பல அம்சங்களிலும் வேறுபட்டிருந்தது.

### இக் காலக் குடியரசு

ஃபிரெஞ்சுக் குடியரசின் தேசியச் சட்டமன்றமானது (National Assembly) ஆங்கிலப் பாராளுமன்றத்தின் இருசபைகளைப் போலவே நேரான அதிகாரத்தைக் கையாளுகிறது. நம் பொதுமக்கள் மன்றம் செய்வதைப்போலவே, ஃபிரெஞ்சுப் பிரதிநிதிகளின் மன்றமும் (Chamber of Deputies) அமைச்சர்களை அமர்த்துவதில் மிகுந்த செல்வாக்கைக் கையாளுகிறது; மேலும், அது அரசாங்கத்தின் செயல்களையும் கட்டுப்படுத்துகிறது. மேலும், குடியரசுத் தலைவருக்குக் கொள்கை அளவிலேனும் தள்ளுரிமை அதிகாரம் கிடையாது. இவ்வளவெல்லாம் இருந்தபோதிலும், ஃபிரெஞ்சுப் பாராளுமன்றமானது ஓர் இறைமை உடைய சட்டமன்றம் ஆகாது; நமது பாராளுமன்றத்தை எந்தச் சட்டமும் கட்டுப்படுத்தவில்லை; ஆனால், ஃபிரெஞ்சுப் பாராளுமன்றமானது அரசியலமைப்புச் 'சட்டங்களினால் கட்டுப்படுத்தப்படுகிறது. அரசியலமைப்பின் பிரிவுகள் அல்லது 'அடிப்படைச் சட்டங்கள், நாட்டின் சாதாரணச் சட்டத்தினின்றும் முற்றிலும் வேறுபட்ட நிலையில் உள்ளன. அரசியலமைப்பின் எட்டாவது பிரிவின்படி, இந்த அடிப்படையான சட்டங்களில் எதனையும் கீழ்க்கண்ட விதிகளை ஒட்டி அல்லாமல், சட்டப்படி வேறெவ்வகையாலும் மாற்ற இயலாது:

'8. Les Chambres auront le droit, par deliberations separees, prises dans chacunce a la majorite absolue des voix, soit spontanement, soit sur la dimande du President de la Republique, de declarer qu'il y a lieu de reviser les lois constitutionnelles.

'Apres que chacune des deux Chambres aura pris cette resolution, elles se reuniront en Assemblee nationale prur proceder a la revision.—Les deliberations portant revision des lois constitutionnelles, en tout ou

'en partie, devront etre prises a la majorite absolue des-membres composant l' Assemblee nationale.'

(From Duguit et Monnier, *Les Constituttons et les principales lois politiqes de la France depuis* 1789—*written in* 1898 )[1]

ஆகையால், குடியரசில் மேலான (அல்லது) உயர்தர, சட்டம் இயற்றும் அதிகாரம் இரண்டு மன்றங்களுமடங்கிய சாதாரணப் பாராளுமன்றத்தில் இல்லாமல், பிரதிநிதிகள் சபையும், செனட்டும் ஒன்றுகூடி இருக்கிற 'கூட்டத்தில்' (congress) அல்லது தேசிய மன்றத்தில் தங்கி இருக்கிறது.

## நெகிழ்வான அரசியலமைப்புகளுக்கும், இறுக்கமான அரசியலமைப்புகளுக்குமுள்ள வேறுபாடு

சுருங்கச் சொன்னால், ஃபிரான்சின் பல்வேறு அரசியலமைப்புகளும், சுருங்கி விரியக்கூடிய அல்லது 'நெகிழ்ச்சியான' தன்மையையுடைய (flexibility) ஆங்கில அரசியல் நிறுவனங்களுக்கு மாறாக, 'இறுக்கம்' (rigidity) எனப் பொருத்தமாகக் குறிப்பிடப்படுகின்ற இயல்பை வெளிப்படுத்துகின்றன. இந் நிலையைப் பொறுத்தவரையில்

[1] Duguit et Monnier 1898-ல் எழுதிய நூலில் (Les constitutions et les principales lois politigues de la France depuis, 1789) பக்கம் 320-ல் இப் பகுதி காணப்படுகிறது. 'இரண்டு ஃபிரெஞ்சு சபைகளும் ஒன்றுகூடியிருக்கும்போது, அவற்றுக்கு அரசியலமைப்புச் சட்டத்தை மாற்றுவதற்கு அரசியலமைப்புச் சட்டத்தின்படி உரிமை உண்டா? என்ற வினவுக்கு விடைகாணுவதில் புகழ் பெற்ற ஃபிரெஞ்சு ஆசிரியர்களிடையிலேயே கருத்து வேறுபாடு இருக்கிறது. இக் கருத்து வேறுபாடுதான் ஆங்கில, ஃபிரெஞ்சு அரசியலமைப்புக் கோட்பாடுகளுக்கிடையேயுள்ள வேறுபாட்டிற்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டாக விளங்குகிறது. ஓர் ஆங்கிலேயருக்கு இக் கேள்வியானது விவாதத்துக்கிடமில்லாத ஒன்றாகத் தோன்றும்; ஏனென்றால், அரசியலமைப்புச் சட்டங்களின் 8ஆவது பிரிவு, 'இச் சட்டங்கள் இரண்டு சபைகளும் தேசிய மன்றமாக ஒன்றுகூடியிருக்கும்போது, அவைகளால் இதிற் கூறப்பட்ட முறைப்படி மாற்றப்படலாம், என்று தெளிவாகக் கூறுகிறது. ஆகையால், ஃபிரெஞ்சு தேசியமன்றமானது ஓர் அரசியலமைப்புச் சட்டமன்றமாகவும், சாதாரணச் சட்டமன்றமாகவும் இருக்கிறதெனவும், அதற்கு அரசியலமைப்புச் சட்டத்தை மாற்ற உரிமை இருக்கிறதெனவும், எந்த ஓர் ஆங்கிலச் சட்ட அறிஞரும் கூறுவது போலவே, பல பிரெஞ்சு அரசியலமைப்புக் கோட்பாட்டினரும் (constitutionalists) கருதுகின்றனர். ஆயினும், இக் கருத்துத் தவறானதெனவும், அரசியலமைப்பில் மேற்கூறிய தொடர்கள் காணப்படினும், அரசியலமைப்பைத் திருத்துவதற்குரிய முடிவான அதிகாரம் அல்லது உரிமை நேராகப் ஃபிரெஞ்சு மக்களால்தான் கையாளப்படுதல் வேண்டுமெனவும், எனவே தேசிய மன்றத்தால் அரசியலமைப்பில் செய்யப்படும் எந்த மாற்றத்துக்கும், வாக்காளர்களுடைய நேரான வாக்கின்மூலம் ஒப்புதல் கொடுக்கப்படுகிறவரை, அதற்குச் சட்டமுறையில் செல்லுபடியாகக்கூடிய எந்த மதிப்பும் கிடையாதெனவும், சில புகழ்பெற்ற ஆசிரியர்கள் கருதுகின்றனர். (இதற்கு Duguit என்பவருடைய நூலையும், மற்றும் Bard et Robiquet, Esmein Borgeaud முதலிய ஆசிரியர்கள் எழுதிய நூல்களையும் பார்க்கவும். இவை முறையே 1875, 1921, 1893ஆம் ஆண்டுகளில் வெளியானவை.) (இங்கு ஆசிரியரால் குறிப்பிடப்படும் ஃபிரெஞ்சு அரசியலமைப்புச் சட்டம் மூன்றாவது குடியரசின் சட்டமாகும்—பதிப்பாசிரியர்.)

இந்த அரசியலமைப்புகளெல்லாம் மற்ற ஐரோப்பிய நாடுகளின் அரசாங்கங்களின் அமைப்புவகைகளையே எடுத்துக்காட்டுகின்றன.[1]

இவ்விடத்தில் நமது நாட்டின் அரசியலமைப்பை நன்றாக அறிந்து கொள்ளும்பொருட்டு, ஒரு 'நெகிழ்ச்சியான' அரசியலமைப்பிற்கும், ஓர் 'இறுக்கமான' அரசியலமைப்பிற்கும் இடையே உள்ள முன்பே சுட்டிக்காட்டப்பட்ட வேறுபாட்டை, நாம் முற்றிலும் தெளிவாக அறிந்துகொள்ளுதல் நல்லது.

## நெகிழ்ச்சியான அரசியலமைப்புகள்

ஓர் அரசியலமைப்பில், எந்தவகையான சட்டமும், எளிதாக, ஒரேமுறையில், ஒரேமன்றத்தினால் சட்டபடியாக மாற்றப்படுவதற் குரியதாக இருக்குமாயின், அவ் வரசியலமைப்பு, ஒரு 'நெகிழ்ச்சியான' அரசியலமைப்பு ஆகும். எந்தச் சட்டத்தையும் மாற்றவோ அல்லது நீக்கவோ அரசரும் இரண்டு சட்டமன்றங்களும் பெற்றிருக்கும் உரிமையில்தான் நமது அரசியலமைப்பின், 'நெகிழ்ச்சியான' தன்மை அடங்கியுள்ளது; ஒரு கழகத்திற்கு ஆக்ஸ்ஃபர்டிலிருந்து இலண்டனுக்கு ஒரு புதிய இரயில்பாதை அமைப்பதற்கு அதிகாரமளிக்கும் ஒரு சட்டத்தை அரசரும் இரண்டு மன்றங்களும் எவ்வாறு செய்கின்றனவோ, அவ்வாறே அரசுரிமைக்கு உரிய முறையை மாற்றும் சட்டத்தை இயற்றக் கூடும். இணைப்புச் சட்டங்களையும் நீக்குதல் கூடும். எனவே, நம் நாட்டைப் பொறுத்தவரை, அரசியலமைப்புச் சட்டங்களெனப்படு பவையெல்லாம், மற்றச் சட்டங்களைவிட, மிக்க புனிதமானவை என்பதனாலோ அல்லது மற்றச் சட்டங்களைவிட, மாற்றுவதற்குக் கடினமானவை என்ற காரணத்தாலோ, அரசியலமைப்புச் சட்டங் களென அழைக்கப்படவில்லை. நாட்டின் அடிப்படையான நிறுவனங் களைப் பாதிக்கக்கூடிய சட்டப் பிரிவுகளை அரசியலமைப்புச் சட்டங்கள் குறிப்பிடுகின்ற காரணத்தினால்தான், அவை அரசியலமைப்புச் சட்டங்களென அழைக்கப்படுகின்றன. உண்மையில் பார்க்கப்போனால், 'அரசியலமைப்புச் சட்டத்திற்கொத்த' (constitutional) என்ற சொல்லுக்கு இங்கிலாந்தில் தெளிவற்ற பொருள்தான் உண்டு; எனவே,

[1] மற்றெல்லா நிலைகளையும்போல இவ் வகையைப் பொறுத்தவரையிலும் பெல்ஜிய அரசியலமைப்பைப்போல, மற்றெந்த அரசியலமைப்பும் ஆய்வதற்கு உகந்ததாக இல்லை; இது ஆங்கில அரசியலமைப்பை ஒட்டியே அமைக்கப்பெற்ற தாயினும், அது பாராளுமன்ற இறைமை என்ற கொள்கையை மறுத்துவிடுகிறது; அல்லது புறக்கணித்து விடுகிறது. சாதாரணப் பாராளுமன்றமானது, அரசிய லமைப்பிலுள்ள எதனையும் மாற்றமுடியாது; அது ஒரு சட்டமன்றமே தவிர, அரசியலமைப்புச் சட்டமன்றம் அன்று; ஒரு குறிப்பிட்ட அரசியலமைப்புச் சட்டப்பிரிவை மாற்றுவதற்குத் தக்க காரணம் இருப்பதாக அது எடுத்துக் கூறலாம்; அவ்வாறு கூறியபின், அக் காரணத்தால் அது கலைக்கப்படுகிறது. அதன் பின்னர்த் தேர்ந்தெடுக்கப்படும் புதிய பாராளுமன்றமானது மாற்றப்படு தற்கு உரியதெனக் கூறப்பட்ட அரசியலமைப்புப் பிரிவை மாற்றுவதற்கு உரிமையைப் பெறுகிறது.

"ஓர் அரசியலமைப்புச் சட்டம்' என்று குறிப்பிடும் சொல் அதனுடைய இயல்பைத் திட்டவட்டமாக விளக்கக்கூடிய எந்த ஓர் ஆங்கிலச் சட்டத்திற்கும் பொருந்தக் கையாளப்படுவதில்லை.

## இறுக்கமான அரசியமைப்புகள்

அரசியலமைப்பான அல்லது அடிப்படையான சட்டங்களெனப் பொதுவாகக் குறிப்பிடப்படுபவைகள் எல்லாம், சாதாரணச் சட்டங்களை மாற்றுவதற்குரிய வகையிலேயே மாற்றக்கூடியனவாக இருக்குமாயின், அவ் வரசியலமைப்பு 'இறுக்கமான' அரசியலமைப்பு எனப்படும். எடுத்துக் காட்டாக ஃபிரெஞ்சு அல்லது பெல்ஜியநாட்டுப் பாராளுமன்றமானது தனது சாதாரண அதிகாரத்தைக் கையாளும்போது, அரசியலமைப்புச் சட்டங்கள் அல்லது அடிப்படைச் சட்டங்கள் எனப்படுபவைகளை மாற்றவோ அல்லது நீக்கவோ அதற்கு உரிமை இல்லாமலிருப்பதில் தான், பெல்ஜிய அல்லது ஃபிரஞ்சு நாட்டின் அரசியலமைப்பின் 'இறுக்க மான இயல்பு' காணப்படுகிறது. ஓர் இறுக்கமான அரசியலமைப்பில், 'அரசியலமைப்பான' என்ற சொல் ஒரு சட்டவகைக்குப் பொருந்தக் கையாளப்படும்போது, அச் சொல்லுக்கு முற்றிலும் திட்டவட்டமான பொருள் உண்டு. அது, 'ஒரு குறிப்பிட்ட சட்டமானது அரசியலமைப் பின் பிரிவுகளைக் காட்டுகிறது எனவும் 'அது சாதாரணச் சட்டங்களைப் போல எளியமுறையில் சட்டப்படி மாற்றப்பட முடியாதது எனவும் பொருள்படும். அரசியலமைப்புச் சட்டத்தின் பிரிவுகளெல்லாம் நாட்டின் எல்லா முக்கியமான அடிப்படையான சட்டங்களையும் பொது வாக உள்ளடக்கியே இருக்கும் என்பதில் ஐயமில்லை. ஆயினும், ஓர் அரசியலமைப்பு இறுக்கமான இயல்புடையதாக இருக்கும்போது, அதனுடைய எல்லாப் பிரிவுகளும் மிகமுக்கியமான எல்லாக் காரியங்களை யும் குறிப்பிடுகின்றன என்று கொள்ள இயலாது. ஃபிரெஞ்சுப் பாராளு மன்றமானது, வேர்சேய்ல்ஸ் நகரத்தில் கூடுதல் வேண்டுமென்ற விதி யானது, ஒரு காலத்தில் ஃபிரெஞ்சுக் குடியரசினுடைய அரசியலமைப்புச் சட்டங்களில் ஒன்றாக இருந்தது. இந்தச் சட்டமானது நடைமுறை யில் எவ்வளவுதான் முக்கியமானதாக இருந்தாலும், அது தனது இயல்பை அல்லது பொருளைப் பொறுத்தவரையில், அரசியலமைப்புத் தன்மையை உடையதாக ஒருபோதும் ஆகமாட்டாது. அது அரசிய லமைப்புச் சட்டங்களில் ஒன்றாகச் சேர்க்கப்பட்ட ஒரே காரணத்தினால் தான் அரசியலமைப்புத்தன்மை உடையதாக ஆயிற்று.[1]

[1] 'நெகிழ்ச்சியான', 'இறுக்கமான' என்ற சொற்கள் முதன்முதலில் இந் நூலாசிரியரின் நண்பரான பிரைஸ் கோமகனால் (Lord Bryce) கையாளப்பட்டன. இச் சொற்கள் பாராட்டுக்குரிய பொருளிலோ அல்லது குறைகூறற்குரிய பொருளிலோ அல்லாமல் இந் நூல் முழுவதிலும் கையாளப்பட்டுள்ளன. ஆங்கில அரசியலமைப்பின் நெகிழ்ச்சியான, விரிவாக இயங்கக்கூடிய தன்மையும், ஐக்கிய அமெரிக்க நாட்டு அரசியலமைப்பின் இறுக்கமான, மாற்றுதற்கு எளிதாக இல்லாத தன்மையும் அவற்றைத் திறனாய்வு செய்கிறவர்களுடைய தீர்ப்பிற்கு

ஆங்கில அரசியலமைப்பின் நெகிழ்ச்சியான இயல்புக்கும் பெரும் பாலும் எல்லா அயல் அரசியலமைப்புகளின் இறுக்கமான இயல் புக்கும் இடையேயுள்ள முரண்பாடு நமக்கு இரண்டு சுவையான கேள்வி களைக் காட்டுகிறது.

**அரசியலமைப்பின் இறுக்கமான தன்மை அதற்கு நிலையான தன்மையை உண்டாக்குகிறதா?**

முதலில், ஓர் அரசியலமைப்பின் இறுக்கமான இயல்பு, அதற்கு நிலையான தன்மையை உண்டாக்கி, நாட்டின் அடிப்படையான நிறுவனங்களுக்கு என்றும் மாற்றப்பட முடியாத நிலைமையைத் தோற்று விக்கிறதா?

இந்தக் கேள்விக்கு வரலாற்றின்வாயிலாக ஒரு முடிவான விடையும் கிடைக்கவில்லை.

ஒரு சில அரசியலமைப்புகளிலே, நாட்டின் சில சட்டங்களும் நிறுவனங்களும் அரசியல் கருத்து மாறுபாட்டின் வரம்புக்கு அப்பாற் பட்டனவாக அமைக்கப்பட்டுள்ளன; இந்தக் காரணத்தால் இங்கிலாந்து நாட்டில் அறுபது ஆண்டுக்காலத்துக்குள் நமது அரசாங்க அமைப்பை மாற்றியமைத்த படிப்படியான மாறுதல் முறையெதுவும் மேற்கூறிய அரசியலமைப்புகளிலே தோன்றாமற்போயிற்று. பெல்ஜிய நாட்டின் அரசியலமைப்பானது. ஓர் அரை நூற்றாண்டிற்கும் மேலாக வடிவ அளவிலேனும் பெருவாரியான மாற்றம் எதுவும் இல்லாமல் நிலைத்திருந் தது. ஐக்கிய அமெரிக்க நாட்டின் அரசியலமைப்பு நூறு ஆண்டுகளுக் கும் மேலாக நிலைத்திருக்கிறது; எனினும், அதிலும் இங்கிலாந்தின் அரசி யலமைப்புக்கு மூன்றாம் ஜார்ஜ் அரசர் காலமான நாளிலிருந்து ஏற்பட்ட மாறுதலை ஒத்தஅளவுக்கு எந்தமாறுதலும் ஏற்படவில்லை.[1] நாட்டின் அடிப்படையான அமைப்புகளை அழிக்கக்கூடிய, படிப்படியான

[1] கடந்த நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்து, ஐக்கிய அமெரிக்க நாட்டின் அரசியலமைப்பானது, வடிவ அளவில் இல்லாவிட்டாலும், உண்மையில் வெகுவாக மாறியுள்ளது என்பதில் ஐயமில்லைதான் ; ஆனால், இந்த மாறுதலும் முறையாகச் செய்யப்பட்ட அரசியலமைப்புச் சீர்திருத்தச் சட்டங்களினால் செய்யப் படாமல், சில வழக்கங்களினாலும் நிறுவனங்களினாலும் செய்யப்பட்டது. இவ் வழக்கங்களும். நிறுவனங்களும் அரசியலமைப்பின் சட்டப்பிரிவுகளை மாற்றாமல், அவை செயல்படும் வகையை மாற்றியுள்ளன. ஹார்வில் என்பவர் 1925-ல் எழுதிய The usages of the American Constitution என்ற நூலைப் பார்க்கவும்.

---

ஏற்பப் பாராட்டவும். குறைகூறவும்படும். இத்தகைய தீர்ப்புகளைப்பற்றி இந்த நூல் யாதொன்றும் கூறவில்லை. இந் நூலாசிரியரின் முழுநோக்கமும் ஒரு நெகிழ்ச்சியான அரசியலமைப்புக்கும், ஓர் இறுக்கமான அரசியலமைப்புக்கும் இடையே உள்ள திட்டவட்டமான வேறுபாட்டைத் தெளிவுபடுத்துவதே ஆகும். ஒரு குறிப்பிட்ட அரசியலமைப்பினுடைய நெகிழ்ச்சியான தன்மையோ அல்லது இறுக்கமான தன்மையோ அதற்குச் சிறப்பா அல்லது குறைபாடா என்பதைப் பற்றிக் கருத்து ஏதும் கூறுவது அவருடைய நோக்கம் அன்று.

பெரும் முயற்சி எடுக்காமலேயே தோன்றுகின்ற புதியமுறைகள், அரசியலமைப்பின் இறுக்கமான இயல்பினால் சில நாடுகளில் தடுக்கப் படுகின்றன; இது உண்மையேயாயினும், அரசியலமைப்பு வடிவங்களின் இறுக்கமான தன்மை, வேறுசில நாடுகளில் புரட்சியையும் தோற்று வித்துள்ளது. மாற்றப்படமுடியாத ஃபிரான்சின் பன்னிரண்டு அரசியல மைப்புகளில் ஒவ்வொன்றும், சராசரி பத்து ஆண்டுகட்கும் குறை வாகவே நீடித்திருந்தது. அவை பெரும்பாலும் வன்முறைச் செயலி னாலேயே மறைந்தொழிந்தன. அரசியலமைப்புப் பட்டயத்தின் பிரிவு களைச் சட்டப்படி மாற்றக்கூடிய அதிகாரி எதுவும் இல்லை என டி டாக்விலி சுட்டிக்காட்டிய காலத்தை அடுத்த ஏழு ஆண்டுகளுக்குள்ளாகவே லூயி பிலிப்பினால் அமைக்கப்பட்ட முடியாட்சி ஒழிக்கப்பட்டுவிட்டது. யாவருக்கும் தெளிவாகத் தெரியக்கூடிய ஒரு குறிப்பிட்ட சூழ்நிலை யிலேனும் அரசியலமைப்பினுடைய மாற்றமுடியாத (இறுக்கமான) தன்மையே அதனை வன்முறையில் தகர்த்தெறிவதற்குப் போதிய காரண மாக அமைந்தது. (இத்தகைய நிகழ்ச்சிக்குப் பல எடுத்துக்காட்டு களைப் புரட்சியில் ஈடுபட்டிருந்த ஃபிரான்சின் வரலாற்றிலிருந்து நாம் காணலாம்.) 1851ஆம் ஆண்டின் திடீர்ப் புரட்சிக்கு (Coup d' e'tat) இயைய எடுத்துக்காட்டப்பட்ட காரணம் என்னவெனில், குடியரசுத் தலைவரை மீண்டும் தேர்ந்தெடுப்பதற்குப் ஃபிரெஞ்சு மக்கள் விருப்பத் தோடு இருந்தனர்; இதற்கு மாறாகக் குடியரசுத் தலைவரை மீண்டும் தேர்ந்தெடுப்பதைத் தடுக்கின்ற சட்டத்தை மாற்றுவதற்குச் சட்ட மன்ற உறுப்பினருள், நான்கில் மூன்று பங்கினருடைய ஒப்புதல் வேண்டு மென அரசியலமைப்புச் சட்டத்தின் பிரிவு விதித்தது; எனவே, இவ் வரசியலமைப்பின் பிரிவு இறைமை உடைய மக்களின் கருத்தை எதிர்ப்பதாக அமைந்தது.' என்பதாம். குடியரசுக் கொள்கையை யுடைய கீழ்ச் சட்டமன்றமானது, ஓர் இறைமையையுடைய பாராளு மன்றமாக இருந்திருக்குமானால், 1851ஆம் ஆண்டு டிசம்பர் 2ஆம் தேதி அன்று நடைபெற்ற குற்றத்தைச் செய்வதற்குப் போதிய காரணமும் நோக்கங்களும் லூயி நெப்போலியனுக்குக் கிடைத்திருக்கமாட்டா.

1848ஆம் ஆண்டின் அரசியல் வல்லுநரால் அரசியலமைப்புச் சட்டத்திற்கு அளிக்கப்பட்ட மாற்றமுடியாத தன்மையின் காரணமாகப் ஃபிரான்சுக்கு விளைந்த கேடுகள் ஒரு விதிவிலக்காகக் கருதப்பட வேண்டுவதில்லை; ஒவ்வோர் இறுக்கமான தன்மையையுடைய அரசியல் அமைப்பிலும் இயல்பாக அமைந்துள்ள ஒரு குறைபாட்டினின்றே அக் கேடுகள் தோன்றின. மாற்றப்படமுடியாத சட்டங்களை உண் டாக்குவதற்குச் செய்யும் முயற்சி இறைமை அதிகாரத்தைக் கையாளு தலைத் தடுப்பதற்காகச் செய்யும் முயற்சியே ஆகும். எனவே, இத்த கைய முயற்சி, சட்டத்தினுடைய வாசகம் (letter of the law) நாட்டின் இறைமை அதிகாரத்தினுடைய விருப்பத்திற்கு முரண்படும்

படியாகச் செய்துவிடுகிறது. ஃபிரெஞ்சு வாக்காளர்களில் பெரும்பாலோர் நாட்டின் அரசியலமைப்பின்படி, ஃபிரான்சின் உண்மையான இறைமை அதிகாரி ஆவர்; ஆனால், சட்டப்படி குடியரசுத் தலைவரை மீண்டும் தேர்ந்தெடுப்பதைத் தடைசெய்த விதியானது, நாட்டின் சட்டத்தை வாக்காளர்களில் பெரும்பாலனவருடைய விருப்பத்துக்கு முரண்பட்டதாக ஆக்கி, எந்த ஓர் இறுக்கமான அரசியலமைப்பும் செய்வதுபோல, சட்டத்தின் வாசகத்திற்கும், இறைமை அதிகாரியின் விருப்பங்களுக்கும் இடையே ஒரு மாறுபாட்டைத் தோற்றுவித்தது. ஃபிரெஞ்சு அரசியலமைப்புகளினுடைய மாற்றமுடியாத தன்மை, புரட்சியினைத் தூண்டிவிட்டதைப்போல, ஆங்கில நிறுவனங்களின் நெகிழ்ச்சியான தன்மை ஒரே ஒரு சமயத்திலேனும் அவை வன்செயலின்மூலம் அழிக்கப்படுவதினின்றும் அவற்றைக் காப்பாற்றின. மிக எட்டிய காலமாகிய இக்காலத்திலிருந்துகொண்டு, முதல் சீர்திருத்தச் சட்டத்தின் வரலாற்றை அமைதியாக ஆராய்பவர் எவருக்கும், 1832ஆம் ஆண்டில் ஓர் அரசியல் புரட்சியை ஒரு சட்டச் சீர்திருத்தம் என்ற வடிவத்தில் நாட்டினர் நடத்திவைப்பதற்குப் பாராளுமன்றத்தினுடைய தலைமையான சட்டம் இயற்றும் அதிகாரம் உதவி செய்ததென்பது தெரியவரும்.

சுருங்கச் சொல்லின், ஓர் அரசியலமைப்பின் இறுக்கமான தன்மை படிப்படியாகப் புதிய மாறுதல்கள் செய்வதைத் தடுக்கும் இயல்புடையதாக இருக்கிறது; ஆயினும், அது மாறுதலைத் தடுக்கின்ற ஒரே காரணத்தினால், அது மாறுபட்ட சூழ்நிலைகளில், புரட்சியையும் தோற்றுவிக்கலாம்.

### அரசியலமைப்புக்கு மாறான சட்டங்களுக்கு எதிரான காப்புகள் யாவை?

இரண்டாவதான கேள்வி, ஓர் இறுக்கமான அரசியலமைப்பிலே, அரசியலமைப்புக்கு மாறான சட்டங்களுக்கு எதிராகக் கையாளப்படக்கூடிய காப்புகள் (safe guards) அல்லது தடைகள் யாவை?

இந்த நமது கேள்விக்குப் பொதுவான விடை என்னவென்றால், 'அரசியலமைப்புக்கு மாறான சட்டம் எதுவும் செய்யப்பட முடியாதவாறு அல்லது அது செயல்பட முடியாதவாறு இரண்டு வழிகள் அரசியலமைப்புகளை எழுதியவர்களால் கையாளப்படலாம்; கையாளப்பட்டும் இருக்கின்றன' என்பதே. (இந்த வழியெல்லாம் ஓர் இறைமையுடைய பாராளுமன்றத்தால் ஆளப்படும் இங்கிலாந்தைப்போன்ற ஓர் நாட்டிற்குப் பொருந்தாது என்பது தெளிவு,

பொதுமக்கள் கருத்தின் ஆற்றலையும், திறமையாகச் சமநிலைப்படுத்தப்பட்ட அரசியல் அதிகாரங்களையும் சார்ந்துநின்று, அதன்

மூலமாகச் சட்டமன்றம் அரசியலமைப்புக்கு மாறான சட்டங்களை நிறை வேற்றாதவாறு தடுக்கலாம். இந்த முறையானது ஒழுக்க இசைவு ஆணைகளின் (moral sanctions) மூலமாக, அரசியலமைப்புக்கு மாறான சட்டங்களைத் தடுக்கின்றது; இந்த வகையான ஆணைகள் பொது மக்கள் உணர்வு என்ற ஆற்றலாக அமைந்துவிடுகின்றன.

சட்டமன்றத்தினுடைய சட்டங்கள் அரசியலமைப்புத் தன்மைக்கு ஒத்து இருக்கின்றனவா என்று தீர்ப்புச் செய்வதற்கும், அவை அரசியலமைப்பின் கருத்துக்கும் (spirit) அல்லது சொல்லுக்கும் (letter) முரணாக இருக்குமாயின், அவற்றைச் செல்லுபடியாகாதவை எனத் தீர்மானிப்பதற்குவேண்டிய அதிகாரத்தை ஒருவருக்கோ அல்லது சிலர் அடங்கிய ஒரு குழுவுக்கோ, சிறப்பாக நீதிமன்றங் களுக்கோ வழங்கலாம். இந்த முறையானது, அரசியலமைப்புக்கு மாறான சட்டமெதுவும் செய்யப்படுவதைத் தடுப்பதைவிட, நீதி மன்றங்களின் தலையீட்டின்மூலமாக அத்தகைய சட்டங்களைக் கேடு இல்லாதவனவாக ஆக்குகின்றது; மேலும், இந்த முறை அடிப் படையில் நீதிபதிகளின் அதிகாரத்தில் அமைந்திருக்கிறது.

ஓர் அரசியலமைப்பினுடைய இறுக்கமான தன்மையைக் காப்பாற்றுவதற்காகக் கையாளப்படும் இந்த இரண்டு முறைகளைப் பற்றிய விவரமெல்லாம், மேலும் சில எடுத்துக்காட்டுகளின் மூல மாகவே நமக்கு விளங்குகின்றன. அதனுடைய முழுவிவரமும், சட்டமன்றத்தைப் பொறுத்தவரையில் இருவகையான அரசியல் அமைப்புக் கோட்பாட்டினரால் கையாளப்படுகின்ற வேறுபட்ட கொள்கைகளை ஒப்பிடுவதன் மூலமாக நமக்குத் தெரியவருகிறது.

## மற்ற ஐரோப்பிய நாடுகளின் அரசியலமைப்புக் கோட்பாட்டினரால் குறிப்பிடப்படும் பாதுகாப்புகள்

ஃபிரெஞ்சு அரசியலமைப்பு ஆசிரியர்களும், அவர்களைப் பின் பற்றுகின்ற மற்ற ஐரோப்பிய நாட்டினரும், நாம் முன்பே பார்த் திருக்கிறபடி, எப்போதும் அடிப்படைச் சட்டங்களுக்கும் மற்றச் சட்டங்களுக்கும் உள்ள வேறுபாட்டிற்கு இன்றியமையாத முக்கியத் துவம் அளிக்கின்றனர்; ஆகையால் அவர்கள், அரசியலமைப்புச் சட்டங்களைச் செய்யும் அதிகாரங்களைப் பெற்றிராத சாதாரணச் சட்டங்களைச் செய்யும் அதிகாரங்களை உடைய சட்டமன்றங்களை அவ்வப்போது தோற்றுவித்திருக்கின்றனர். எனவே, சாதாரணச் சட்ட மன்றத்தை அதற்குரிய எல்லைக்குள்ளேயே வைத்திருக்கும்பொருட்டு வழி கண்டுபிடிக்கவேண்டிய கட்டாயம், ஃபிரெஞ்சு அரசியல் வல்லு நருக்கு ஏற்பட்டது. இதற்காக அவர்கள் கையாண்ட செயல்முறை

ஒரே தன்மையானதாக இருக்கிறது; அவர்கள் அரசியலமைப்பிலேயே தெளிவாகச் சட்ட மன்றத்தின் அதிகாரத்துக்கு விதிக்கப்பட்ட தெளிவான வரம்புகளை எடுத்துக் கூறிவிட்டனர்; சட்டம் இயற்றும் முறையை ஒழுங்குசெய்யவும், கட்டுப்படுத்தவும் கூடிய பொது விதிகள் அனைத்தையும் அவர்கள் அரசியலமைப்பின் சட்டப்பிரிவுகளாக அமைத்துள்ளனர்: சில தனிப்பட்ட முறைகளின்மூலம், சில தனிப்பட்ட சூழ்நிலைகளில் ஓர் அரசியலமைப்புச் சட்டமன்றத்தைத் தோற்றுவிக்கவும், அதுவே அரசியல் அமைப்பைத் திருத்துவதற்கு உரிமையோடு இருப்பதற்கும் அவர்கள் வழி வகுத்துள்ளனர். சுருங்கச்சொன்னால், நாட்டின் அடிப்படையான சட்டங்களில் தலையிட்டு எதுவும் செய்யாதபடி, சாதாரணச் சட்டமன்றத்தைத் தடுப்பதிலேயே அவர்கள் தங்களுடைய கவனத்தைச் செலுத்தியிருக்கின்றனர்; ஆயினும், சட்டமன்றமானது தனது அதிகாரத்தின்மீது விதிக்கப்பட்ட தடைகளை மதிக்கும்படி அதனைத் தூண்டுவதற்கு அவர்கள் பொதுமக்கள் உணர்ச்சியை[1] நடைமுறை அரசியல் சூழ்நிலைகளையே நம்பி இருக்கின்றனர்; எனவே, அவர்கள் அரசியலமைப்புக்கு மாறான சட்டங்களைத் தள்ளுபடி செய்வதற்கும், செல்லுபடி ஆகாமற் செய்வதற்கும் அரசியல் நிறுவனம் எதனையும் நிறுவவில்லை.

### ஃபிரெஞ்சுப் புரட்சியின் அரசியல் அமைப்புகள்

ஃபிரெஞ்சு அரசியலமைப்புக் கோட்பாட்டின் இத்தகைய கூறுகள் முதல் மூன்று அரசியல் பரிசோதனைகளில் குறிப்பாகக் காணப்படுகின்றன. 1791ஆம் ஆண்டின் முடியாட்சி அரசியலமைப்பும் 1793ஆம் ஆண்டின் குடியாட்சி அரசியலமைப்பும் 1795ஆம் ஆண்டின் டைரக்டரியின் அரசியலமைப்பும் பல வேறுபாடுகளைப் பெற்றிருந்தாலும், இரு பொதுவான பண்புகளை உடையனவாக இருக்கின்றன. அவை ஒவ்வொன்றும் சட்டமன்றத்தின் அதிகாரத்தை மிகக் குறுகிய வரம்புகளுக்கு உட்பட்டிருக்குமாறு அமைகின்றது; எடுத்துக்காட்டாக டைரக்டரியின் ஆட்சியில், சட்டமன்றம் தானாகவே அரசியலமைப்பின் 377 பிரிவுகளில் எதனையும் மாற்ற இயலாது; மேலும், இந்தப் பிரிவுகளில் எதனையும் சிறிதளவேனும் ஒன்பது ஆண்டுக் காலத்துக்குள்ளாக மாற்ற

[1] 1791ஆம் ஆண்டின் அரசியலமைப்பை நாட்டினரின் பாதுகாப்புக்குத் தேசியமன்றம் ஒப்படைப்பதைக் காட்டும் சட்டப்பிரிவுகள் இவையே. நீதிமன்றங்கள் அரசியலமைப்புக்கு மாறான சட்டங்களைத் தள்ளுபடி செய்யவோ, செல்லுபடி ஆகாதெனக் கருதவோ செய்யவேண்டுமென்ற கருத்தைச் சுட்டிக்காட்டவே இங்கு நீதிபதிகளைப்பற்றிக் குறிப்பிட்டனர்; இவ்வாறு கொள்ள இடமுண்டு. எட்டாவது ஆண்டின் அரசியலமைப்பின்படி அரசியலமைப்புக்கு ஒவ்வாத சட்டங்களைச் செல்லுபடி ஆகாதனவாகச்செய்ய செனட்டுக்கு அதிகாரம் இருந்தது. ஆனால், இத்தகைய அதிகாரமும், இங்கிலாந்தில் மசோதாக்கள் எனக் கூறப்படுபவற்றின்மீது கையாளப்படும் தள்ளுரிமை அதிகாரமே தவிர (veto), முறையாக நிறைவேற்றப்பட்ட சட்டங்களைச் செல்லுபடியாகாதனவாகச் செய்யக்கூடிய ஓர் அதிகாரம் அன்று. எட்டாவது ஆண்டின் அரசியலமைப்பைப் பார்க்கவும்.

முடியாதவாறு, ஓர் அரசியலமைப்புச் சட்டமன்றத்தைத் தோற்று விக்க வழிவகுக்கப்பட்டது.[1] (இவ்வாறு சட்டமன்றத்தின் அதிகாரம் ஒருபுறம் வரையறுக்கப்பட்டுள்ளது.) மறுபுறம் இந்த அரசியலமைப்பு களில் ஒன்றுகூட, அரசியலமைப்பை மீறுவதாகக் காணப்படும் எந்தப் பட்டத்தையும் சீர்தூக்கிப் பார்ப்பதற்குரிய வழியைக் குறிப்பிட்டுக் காட்டவில்லை. 'சட்டமன்றத்தினுல் செய்யப்படும் சட்டங்கள், அவற்றின் சொற்களினளவில் அரசியலமைப்புக்கு முரணுக இல்லாவிடினும், அரசியலமைப்புக்கு ஒத்த இயல்பைப் பெருமல் இருத்தல் கூடும் என்பதையும், 'எனவே, ஒரு குறிப்பிட்ட சட்ட மானது அரசியலமைப்பின் கொள்கைகளுக்கு ஒத்து இருக்கிறதா அல்லது மாருக இருக்கிறதா என்பதைத் தீர்மானிப்பதற்கு ஏதேனுமொரு வழி இருத்தல் வேண்டும்' என்ற உண்மையையும் மேற்கூறப்பட்ட அரசியலமைப்பை எழுதியவர்கள் ஒப்புக்கொள்ள வில்லை என்று தெரிகிறது.

## இப்பொழுது இருக்கும் குடியரசு அரசியலமைப்பு

புரட்சி அரசியலமைப்புகளின் இத்தகைய பண்புகளெல்லாம், பிற்காலத்தில் ஃபிரெஞ்சு அரசியலமைப்புக் கோட்பாட்டினருடைய சட்டங்களில் மீண்டும் புகுத்தப்பட்டன. இக் காலத்திய ஃபிரெஞ்சுக் குடியரசில், பாராளுமன்றத்தால் மாற்றப்படமுடியாத சில சட்டங்கள் இருக்கின்றன. (இத்தகைய சட்டங்கள் எண்ணிக்கையில் மிகுதியாக இல்லை என்பது உண்மையே) இதைவிட முக்கியமானது என்ன வென்ருல், காங்கிரஸ் அல்லது கூட்டமென அழைக்கப்படும் நிறுவனம்[2] அடிப்படையான சட்டங்களின் எண்ணிக்கையை எக் காலத்திலும் பெருக்கமுடியும்; எனவே, இதன்மூலமாக அது எதிர் காலப் பாராளுமன்றங்களின் அதிகாரத்தை வெகுவாகக் குறைக்க முடியும். எனினும், சாதாரணப் பாராளுமன்றமானது அரசியலமைப்பின் மூலம் தனக்குரிய அதிகாரங்களையும் மிறி, ஏதேனுமொரு சட்டத்தை நிறைவேற்றினுல், அதைத் தடுப்பதற்கு மேற்கூறிய அரசியலமைப்பில் வழி ஏதும் செய்யப்படவில்லை; ஃபிரான்சில் புரட்சி நடைபெற்ற காலத்திலிருந்தே, அவ்வப்போதிருந்த நடைமுறை அரசாங்கங்களின் சட்டங்களுக்குப் ஃபிரான்சில் கொடுக்கப்பட்டுவந்த மதிப்பையும், ஃபிரெஞ்சு நீதிமன்றங்களினுல் கையாளப்படும் மரபுகளையும் நாம் நன்ருக நினைவில் வைத்துக்கொண்டால், உண்மையில் 'இரண்டு சட்ட

[1] 1795ஆம் ஆண்டு அரசியலமைப்புச் சட்டத்தைப் பார்க்கவும்.

[2] காங்கிரஸ் எனப்படும் இந் நிறுவனத்துக்குத் தக்க ஒரு பெயர் தேசிய மன்றம் ஆகும். இந்த மன்றம் பிரதிநிதிகள் மன்றம், செனட் மன்றம் ஆகிய வற்றின் உறுப்பினர்கள் ஒரே சபையாக, வேர்சேய்ல்ஸ் நகரத்தில் கூடிய மன்றம் ஆகும். ஒவ்வொரு மன்றமும் தனித்தனியே முன்னதாக அரசியலமைப்புத் திருத்தம் கொண்டுவரப்படவேண்டுமெனக் கூறி, திருத்தத்திற்குரிய பொருளும் வரையறுக்கப்படவேண்டும்.—பதிப்பாசிரியர் கருத்து.

மன்றங்களினாலும் நிறைவேற்றப்பட்டு, குடியரசுத் தலைவரால் வெளி யிடப்பட்டு, ஃபிரெஞ்சுச் சட்ட வெளியீட்டு இதழிலும் (Bulletin des Lois) வெளியிடப்பட்ட ஒரு பட்டம் குடியரசின் எந்த நீதிமன்றத் தாலும் செல்லுபடியாகத் தக்கதெனவே ஒப்புக்கொள்ளப்படும் என்று உறுதியாக நம்பலாம்.

## மற்ற ஐரோப்பிய அரசியலமைப்புகளின் பிரிவுகள் 'சட்டங்கள்' ஆகுமா?

எனவே, இத்தகைய ஒரு வியத்தகு விளைவு தோன்றுகிறது. ஃபிரெஞ்சு அரசியலமைப்பில் உள்ள சட்டமன்றத்தின்மீது விதிக்கப் பட்டுள்ள தடைகள் உண்மையில் சட்டங்கள் ஆகமாட்டா; ஏனெனில், அவை முடிவாக நீதிமன்றங்களினால் செயல்படுத்தப்படக்கூடிய விதிகள் அல்ல. அரசியல் ஒழுக்கநெறிகளுக்கு உள்ள இயல்பே அவற்றின் உண்மையான இயல்பு ஆகும்; அவற்றுக்கு ஏதேனும் கட்டுப்படுத்தும் ஆற்றல் இருக்குமாயின், அதுவும் அவை முறையாக அரசியலமைப்பில் எழுதப்பட்டதனாலும், அதன்மூலமாக அதற்குக் கிடைக்கும் பொது மக்கள் கருத்தினாலும்தான் தோன்றுகிறது. இங்கு ஃபிரெஞ்சு அரசியல் அமைப்பைப்பற்றிக் கூறப்பட்ட கருத்துகள், ஃபிரெஞ்சுக் கருத்து களின் போக்கை ஒட்டி அமைக்கப்பட்ட மற்ற ஆட்சி வகை களுக்கும் ஏறத்தாழப் பொருந்துமாறு இருக்கின்றன. எடுத்துக் காட்டாக ஃபிரெஞ்சுக் குடியரசின் அரசியலமைப்பு செய்வதைப் போலவே, பெல்ஜிய அரசியலமைப்பும் பாராளுமன்றத்தின் செயலைக் கட்டுப்படுத்துகிறது. எனினும், பெல்ஜியக் குடிமக்களுக்கு உறுதி யளிக்கப்பட்ட பேச்சு உரிமை போன்ற உரிமைகளைக் குறைக்கிற அல்லது அழிக்கிற சட்டங்களைச் செல்லுபடியாகாதனவாகச் செய் வதற்கு, பெல்ஜிய அரசியலமைப்புக் கோட்பாட்டினர் ஏதேனும் வழி வகுத்துள்ளனரா என்பது ஐயத்துக்குரியதே. அரசியலமைப்பின் எந்த ஒரு பிரிவுக்கும் முரணான பாராளுமன்றத்தின் எந்தச் சட்டத்தையும், நீதிமன்றங்கள் செல்லுபடியாகாதனவாகக் கருதுதல் வேண்டுமென்று, கொள்கையளவிலேனும் பெல்ஜிய அரசியலமைப்புக் கோட்பாட்டினர் கூறுகின்றனர். ஆயினும் பெல்ஜியத்தின் சுதந்தரமான காலத்தில் எப்போதாயினும், நீதிமன்றம் எதுவும் பாராளுமன்றச் சட்டத்தின் அரசியலமைப்பை ஒட்டிய தன்மையைப்பற்றித் (constitutionality) தீர்ப்புக் கூறவில்லை என்று கூறப்படுகிறது. பாராளுமன்றம் அரசியலமைப்பை மதித்துள்ளது என்பதையே இது காட்டுவதாகக் கூறலாம்; மேலும், இது 'முறையான உரிமைகளைப் பற்றிய விளம்பரங்களுக்கு, இங்கிலாந்தில் கொடுக்கப்படும் முக்கியத்து வத்தைவிட, தக்க சூழ்நிலைகளில் மக்களுடைய உணர்வை, அவை உருவாக்குவதன்மூலம் அதிகமான முக்கியத்துவம் உண்டு' என்பதைக்

காட்டும் ஒரு சான்றும் ஆகும்; மேலும், 'ஃபிரான்சில் உள்ளதைப்போல பெல்ஜியத்திலும் பாராளுமன்ற அதிகாரத்தின்மீது விதிக்கப்பட்டுள்ள தடைகள், ஒழுக்க உணர்வையே அல்லது அரசியல் உணர்வையே ஆதரவாகக் கொண்டுள்ளன' என்ற கருத்தையும், இந்தத் தடைகள் அரசியலமைப்பை ஒட்டிய கருத்துகளே தவிரச் சட்டங்கள் அல்ல என்ற கருத்தையும் மேற்கூறிய நிலை குறிப்பாக உணர்த்துகிறது.

மற்ற ஐரோப்பிய அரசியல் வல்லுநரும், புரட்சி மனப்பான்மை உடைய அரசியல் வல்லுநரும் சாதாரணச் சட்டமன்றத்தைப்பற்றிக் கொண்டுள்ள கருத்தெல்லாம், ஓர் ஆங்கிலநாட்டின் திறனாய்வாளருக்கு முரண்பாடான கருத்தாகவே தோன்றும். அவர்கள், சாதாரணச் சட்டமன்றத்தின் அதிகாரத்தைக் கட்டுப்பாடு எதுவும் இல்லாமல் விட்டுவிடுவதை, அச்ச மனப்பான்மையுடனேயே நோக்கினர். மேலும், சட்டமன்றம் தனது அதிகாரத்தின்மீது விதிக்கப்பட்ட தடைகளை மீறிச் செல்லாதபடி, அதனைத் தடுப்பதற்குரிய வழிகளை ஏற்படுத்தவும் அவர்கள் அஞ்சினர். இந்த இரண்டுவிதக் கருத்துகளுக்குமிடையே முரண்பாடு ஏன் தோன்றிற்று என்பதைக் காண்பதற்கு நாம் ஃபிரெஞ்சுப் புரட்சி தோன்றிய நாளிலிருந்து ஃபிரெஞ்சு அரசியலமைப்புகளை ஆக்கியவர்களிடத்திலிருந்து வந்த இரு வகையான கருத்துகளைக் காணுதல் வேண்டும்—உரிமைகள்பற்றிய பொது விளம்பரங்களினால் உண்டாகும் விளைவைப்பற்றி மிகையான மதிப்பீடு (over-estimate) ஒன்று அவர்களிடம் இருந்தது; இரண்டாவதாக, அரசியல் துறையில் நீதிபதிகள் தலையிடுதல் கூடாது என்ற நிலையான பெருவிருப்பம் (jealousy) அவர்களிடம் இருந்தது.[1] நீதிமன்றங்கள் அரசியல் காரியங்களில் எவ்வகையிலேனும் தலையிடுவதற்கு அனுமதிக்கப்படுதல் கூடாது; அரசாங்க இயந்திரத்தைப் பாதிக்கக்கூடிய எச் செயலிலும் நீதிமன்றங்கள் தலையிடுதல் கூடாது' என்ற எண்ணமும் நம்பிக்கையும் இப்பொழுதும் பெரும்பாலும் எல்லாப் ஃபிரெஞ்சு மக்களிடமும் உள்ளன; இந்த நம்பிக்கையே ஃபிரான்சின் பொதுச்சட்டத்தை இப்பொழுதும் வெகுவாக உருவாக்கியுள்ளதென்பதை நாம் பின் ஒரு இயலில் (பன்னிரண்டாவது இயலில்) காண்போம்.

### ஐக்கிய அமெரிக்க நாட்டை ஏற்படுத்தியவர்கள் செய்த பாதுகாப்புகள்

அமெரிக்க அரசியலமைப்பை எழுதிய ஆசிரியர்கள், ஃபிரெஞ்சு அரசியல் வல்லுநரைவிடத் தங்களுடைய குடியரசு முழுவதிலும் ஒவ்வொரு சட்டமன்றத்தின் அதிகாரத்தையும் வரம்புக்கு உட்படுத்துவதில் கண்ணுங்கருத்துமாயிருந்துள்ளனர்; இதற்கான காரணங்கள்

[1] de Tocqueville, pp. 167, 168.

எனது அடுத்த இயலில் கூறப்படும். மேலும், உரிமைகளைப்பற்றிய பொது விளம்பரங்களின் முக்கியத்துவத்தைப்பற்றி, மற்ற ஐரோப்பிய அரசியல் வல்லுநர் வைத்துள்ள நம்பிக்கையை, மேற்படி அமெரிக்க ஆசிரியர்களும் கொண்டுள்ளனர். ஆயினும் அவர்கள் தங்களுடைய (கூட்டரசுச் சட்டமன்றமாகிய) காங்கிரசும், ஏனைய சட்டமன்றங்களும் தத்தம் அதிகாரங்களை மீறிச் சட்டங்களைச் செய்யாதபடி அவற்றைத் தடுப்பதில் தமது கவனத்தைச் செலுத்தவில்லை; இதில் அவர்கள் ஃபிரெஞ்சு அரசியலமைப்பாளர்களை ஒத்திருக்கவில்லை; இதற்குமாறாக, அவர்கள் அரசியலமைப்புக்கு மாறான சட்டங்கள் நடைமுறைக்கு வராமல் செய்வதற்கேற்ற வழிகளைக் கண்டுபிடிப்பதில் தமது கவனத்தைச் செலுத்தினர்; இந்த நோக்கத்தை அவர்கள் எவ்வாறு அடைந்தனரென்றால், ஐக்கியநாட்டின் ஒவ்வொரு நீதிபதிக்கும், அரசியலமைப்போடு மாறுபடுகின்ற எந்தச் சட்டத்தையும் செல்லுபடியாகாது எனக் கூறும் கடமையை அளித்து, அதன்மூலம் அடைந்தனர்; இவ்வாறு அவர்கள் செய்ததன்மூலம், காங்கிரஸ், மாகாணச் சட்டமன்றங்கள் ஆகியவற்றின் சட்டமியற்றும் அதிகாரத்தின்மீது, அரசியலமைப்பில் விதிக்கப்பட்ட தடைகளுக்கு உண்மையான சட்டங்களின் தன்மையை அளித்தனர்; அதாவது, இத் தடைகளை நீதிமன்றங்களின் மூலம் செயல்படக்கூடிய விதிகளாக ஆக்கினர். இவ்வாறு நீதிபதிகளை அரசியலமைப்பின் பாதுகாவலராக ஆக்குகின்ற இந்த அமைப்பானது, அரசியலமைப்புக்கு மாறான, சட்டத்துக்கு எதிராக இதுவரையில் கண்டுபிடிக்கப்பட்ட பாதுகாப்புகளுள், முழுமையான ஒரே பாதுகாப்பு ஆகும்.

# 3. பாராளுமன்ற இறைமையும் கூட்டரசுக் கோட்பாடும்[1]

**பொருள்**

இங்கு எனது நோக்கம், இங்கிலாந்திலுள்ளதுபோன்ற பாராளுமன்ற இறைமையை, நாகரிக உலகின் பல்வேறு பகுதிகளில் சிறப்பாக, ஐக்கிய அமெரிக்க நாட்டில் காணப்படுகின்ற கூட்டரசுக் கோட்பாடு (Federalism) எனக் கூறப்படும் அரசாங்க அமைப்போடு ஒப்பிட்டுப் பார்த்துப் பாராளுமன்ற இறைமையின் இயல்பை விளக்குவதாகும்.[2]

**ஐக்கிய அமெரிக்காவின் அரசியலமைப்பை ஆராய்வதன்மூதம் கூட்டரசுக் கோட்பாட்டினை நன்கு உணரலாம்**

உண்மையில் இக் காலத்தில் கூட்டரசு அரசாங்கத்துக்கு வேறு மூன்று சிறப்பான எடுத்துக்காட்டுகள்—ஸ்விஸ் கூட்டரசு, கனடா டொமினியன், ஜெர்மன் பேரரசு முதலியவை—காணப்படுகின்றன. இந்த அரசுகள் ஒவ்வொன்றினைப்பற்றி ஆய்வு செய்வதன்மூலம், நாம் எடுத்துக்கொண்ட பொருளுக்குப் பல எடுத்துக்காட்டுகளைப் பெறலாம்; ஆயினும், இந்த இயல்முழுவதிலும், புகழ்பெற்ற அமெரிக்கக் குடியரசின் நிறுவனங்களின்மீதே நமது கவனத்தைப் பெரும்பாலும் செலுத்துவது நல்லது. முதன்முதலாக, இந்த ஐக்கிய நாடுதான் (Union) மிக முழுமையான வளர்ச்சிபெற்ற கூட்டரசுக் கோட்பாட்டைக் காட்டுகிறது. இவ்வகையான அரசாங்க ஏற்பாட்டைத் தனியே எடுத்துக் காட்டுகின்ற எல்லாப் பண்புகளும், எல்லாவற்றிற்கும் மேலாகச் சட்டமன்றங்களின்மீது நீதிமன்றங்களுக்கு இருக்கின்ற கட்டுப்பாடும் (control) இவ் வரசியலமைப்பில், மிகத் தெளிவான, முழுமையான

[1] Parliamentary Sovereignty and Federalism.

[2] அமெரிக்கக் கூட்டரசுக் கோட்பாட்டைப்பற்றிய நூலுக்கு பிரைஸ் எழுதிய (1910) American Commonwealth (பாகம் 1) பார்க்கவும். ஓர் ஆங்கில வழக்கறிஞருடைய சுருக்கமான கருத்தை அறிய, அமோஸ் எழுதிய (1938) The American Constitution என்ற நூலைப் பார்க்கவும். இதைப்பற்றிய பயனுள்ள இக் காலக் கருத்து, Bernard Schwartz என்பவருடைய, American Constitutional Law, (1955, என்ற நூலில் காணப்படுகிறது.

வடிவத்தில் எடுத்துக்காட்டப்பட்டிருக்கின்றன. மேலும், ஸ்விஸ் கூட்டரசும்,[1] கனடா டொமினியனும் பெரும்பாலும் அமெரிக்காவின் அமைப்பை ஒட்டியே ஏற்படுத்தப்பட்டுள்ளன; ஆனால், ஜெர்மன் பேரரசின் அரசியலமைப்போ, அந் நாட்டின் வரலாற்றினாலும், தற்காலிக மான சூழ்நிலைகளினாலும் தோற்றுவிக்கப்பட்ட பல முரண்பாடுகளை உடையதாக இருக்கிறது; எனவே, அந் நாட்டின் அரசியலமைப்பை இதுவரை நமக்குத் தெரியக்கூடிய எந்த அரசாங்க வகையையும் காட்டுவதாகக் கொள்ள இயலாது. இரண்டாவதாக ஐக்கியநாட்டின் அரசியலமைப்பானது இங்கிலாந்தின் நிறுவனங்களோடு ஒரு புதுமையான தொடர்புடன் இருக்கின்றன. ஐக்கிய அமெரிக்க நாட்டின் அரசிய லமைப்பின் வடிவத்தை ஆக்குகின்ற அதிகாரங்களைப் பகிர்ந்தளிக்கும் கொள்கையைப் (principle of distribution of powers) பொறுத்தவரை ஐக்கியநாட்டின் அரசியலமைப்பானது, ஆங்கில அரசியலமைப்பிற்கு நேர் முரணான ஒன்று ஆகும்; ஆங்கில அரசியலமைப்பின் மிக முக்கியமான இயல்பு, நான் முன்பே விளக்கமாகக் கூறியவாறு, பாராளுமன்றத் தினுடைய வரம்பில்லா அதிகாரமே ஆகும். அமெரிக்கக் குடி யரசின் அரசியல் அமைப்புக்கும், ஆங்கில முடியரசின் அரசிய லமைப்புக்கும் இடையேயுள்ள முறையான வேறுபாடுகள், ஒரு கோணத்திலிருந்து பார்க்கும்போது, பெருவாரியாக இருந்தபோதிலும், அமெரிக்காவின் அரசியல் நிறுவனங்களெல்லாம் தங்களுடைய உள்ளியல்பைப் (spirit) பொறுத்தவரையில் இங்கிலாந்தின் அரசியல், சட்ட நிறுவனங்களுக்கு அடிப்படையாக அமைந்துள்ள கருத்துகளின் பெருக்கமான வடிவங்களே தவிர வேறல்ல. சுருங்கச்சொன்னால் நமது அரசாங்க வகைக்குத் தனது வடிவத்தைக் கொடுக்கிற கொள்கை யானது, அயலவரால் ஆனால் பொருத்தமாகக் குறிப்பிடுகின்றபடி ஓரரசுக் கோட்பாடு (யூனிடேரியனிசம் - unitarianism) என்பதாகும்; அதாவது உயர்தரமான சட்டமியற்றும் அதிகாரத்தை ஒரு நடு அரசாங்கமே வழக்கமாகக் கையாளுதல் என்பதாகும்; இவ்வாறு செய்வது இங்குக் கூறப்படும் எடுத்துக்காட்டில் பிரிட்டிஷ் பாராளுமன்றமே ஆகும். இதற்குமாறாக, அமெரிக்க அரசாங்க அமைப்பின் ஒவ்வொரு பாகத்

[1] இவற்றோடு ஆஸ்திரேலியக் காமன்வெல்த் (1900), ஐக்கிய இந்தியக் கூட்டரசு (1950), பாகிஸ்தான் (1957), மத்திய ஆஃப்ரிக்கக் கூட்டரசு (1953), மலாயாக் கூட்டரசு (1957), பிரிட்டிஷ் கரிபியன் கூட்டரசு (1958) முதலியவை சேர்த்துக் கொள்ளப்படவேண்டும். மேற்கு ஜெர்மனி ஒரு கூட்டரசுக் குடியரசு ஆகும்.

சுவிஸ் அரசின் முக்கியமான தன்மை என்னவென்றால், அது ஓர் உண்மையான, இயற்கையான குடியாட்சி ஆகும்; ஆயினும், அக் குடியாட்சி சுதந் தரம், அரசாங்கம் ஆகியவற்றைப்பற்றி ஆங்கிலோ-சாக்சன் மக்கள் கொண்டுள்ள கருத்துகளின் அடிப்படையில்லாமல், மற்ற ஐரோப்பியர் கொண்டுள்ள கருத்து களின் அடிப்படையில் அமைந்திருக்கிறது. ஆஸ்திரேலியக் காமன்வெல்த்தின் அரசியலமைப்பு, சுவிஸ் கூட்டரசுக் கோட்பாட்டினால் குறிப்பிடப்படும் ஒரு பண்பை யேனும் தன்னிடத்துக் கொண்டுள்ளது; அதுவே, அரசியலமைப்புச் சீர்திருத் தங்களின்மீது எடுக்கப்படும் வாக்காளர்களுடைய பொது வாக்கெடுப்பு அல்லது குடிஒப்பம் (referendum) ஆகும்.

தையும் உருவாக்குகிற கொள்கை எதுவென்றால், அது கூட்டரசு அரசாங்க அமைப்புக்கு இன்றியமையாததாக இருக்கக்கூடியவகையில், வரம்புகளுக்குட்பட்ட நிர்வாக அதிகாரம், சட்டமியற்றும் அதிகாரம், நீதி வழங்கும் அதிகாரம் ஆகியவற்றை ஒன்றோடொன்று தொடர்போடும் தனித்தும் இயங்கக்கூடிய நிறுவனங்களுக்குப் பிரித்தளிப்பதே ஆகும். இது எவ்வாறு பிரித்தளிக்கப்பட்டுள்ளது என்பதை நாம் பின்னர்க் காண்போம். எனவே, இந்த இருவகையான அரசாங்க அமைப்புகளுக்குமிடையே உள்ள வேறுபாடு மிகத் தெளிவாகக் காணப் படுகிறது; மேலும், இவ் வேறுபாட்டினால் தோன்றும் விளைவுகளும் மிகவும் எளிதாகக் காணக்கூடியனவாக உள்ளன. ஏனென்றால் அட்லாண்டிக் கடலின் இருமருங்கிலும் வாழும் ஆங்கில மக்களுடைய நிறுவனங்களெல்லாம், வேறு ஒவ்வொரு துறையிலும் ஏதாவது ஒரு சட்டக் கருத்தையும், நீதிபற்றிய கருத்தையும், தனி மனிதர்களுடைய உரிமைகளுக்கும் அரசின் அல்லது அரசாங்கத்தின் உரிமைகளுக்கும் இடையேயுள்ள தொடர்பைப்பற்றிய கருத்தையும் அடிப்படையாகக் கொண்டு இயங்குகின்றன.

முதன்முதலாக ஒரு கூட்டரசுநாடு நிலைபெறுவதற்கு இன்றியமை யாததாக உள்ள சூழ்நிலைகளையும், இத்தகைய நாடு நிறுவப்படும் நோக்கங்களையும்; இரண்டாவதாக, ஒரு கூட்டரசு இணைப்பின் முக்கியமான இயல்களையும், கடைசியாகக் கூட்டரசுக் கோட்பாட்டின் இயல்பிலிருந்தே தோன்றி, கூட்டரசு அரசாங்க அமைப்புக்கும், பாராளுமன்ற இறைமை அமைப்புக்குமிடையே உள்ள சில ஒற்றுமை களையும் வேற்றுமைகளையும் காட்டுகின்ற தன்மைகளையும், நாம் நன்றாக அறிந்துகொள்ளுதல் வேண்டும்: அவ்வாறு செய்தால்தான் கூட்டரசுக் கோட்பாட்டின் இயல்பையும், ஓர் கூட்டரசின் அரசியல் அமைப்பு இங்கிலாத்தின் பாராளுமன்ற அரசியலமைப்போடு எந்தெந்த வகைகளில் மாறுபட்டிருக்கிறது என்பதையும் நாம் மிகநன்றாக அறிந்து கொள்ளமுடியும்.

**கூட்டரசுக் கோட்டிற்கு இன்றியமையாத சூழ்நிலைகள்.**

இணைப்புக்கு ஏற்ற நாடுகள் ஒரு கூட்டரசுநாடு அமைவதற்கு இரண்டு முக்கியச் சூழ்நிலைகள் தேவைப்படுகின்றன.[1]

[1] இந் நூலாசிரியர் கீழ்க்கண்ட ஆசிரியர்களின் நூல்களைக் கற்றூர் Story, commentaries on the constitution of the United States (1873); Bryce American Commenwealth (1910); British North America Act, 1867; Bourinot, Parliamentary procedure and Practice in the Dominion of Canada (1884); Lowell, Governments and Parties in Continental Europe (1896, vol II); Adams and Cunningham, Swiss Concederation (1889); Quick and farran annotated Constitution of the Australia Commonwealth (1901); Moore, the Commonwealth of Australia (1910); and Bryce, Studies in History and Jurisprudenee (1901).

முதன்முதலில் சுவிட்சர்லாந்திலுள்ள கான்டன்கள் எனப்படும் மாகாணங்களைப்போலவும் அல்லது அமெரிக்காவிலுள்ள குடியேற்ற நாடுகளைப் போலவும், கனடாவிலுள்ள மாகாணங்களைப் போலவும், பல நாடுகளடங்கிய ஒரு தொகுதி, தம்முள் ஒன்றேடொன்று நிலம், வரலாறு, இனம் ஆகியவற்றால் நெருக்கமாக இணைக்கப்பட்டு, அவற்றில் வாழும் மக்களின் மன்றத்தில் ஒரு பொதுவான தேசிய இனத்தைத் தோற்றுவிக்கக்கூடியனவாக இருக்கவேண்டும். நாம் கடந்தகால வரலாற்றைச் சற்று நினைத்துப் பார்த்தால், இப்பொழுது ஒரு கூட்டரசின் பாகமாக இருக்கும் நிலங்களெல்லாம் முன்பொருகாலத்தில், ஏதேனும் ஒரு பொதுவான இறைமை அதிகாரிக்குக் கட்டுப்பட்டோ அல்லது மிகநெருக்கமாக இணைந்தோ இருந்தன என்பது தெரியவரும். இத்தகைய பழங்காலத் தொடர்பு ஒரு கூட்டரசு நாடு அமைவதற்கு மிக இன்றியமையாதது என நாம் வலியுறுத்திக் கூறுவது, உண்மையை வேண்டுமளவுக்கும் மிகையாக வலியுறுத்துவதாகும். ஆயினும், இப்பொழுது எங்கெல்லாம் கூட்டரசுக் கோட்பாடு தழைத்தோங்கு கிறதோ, அங்கெல்லாம் முன்பு உறுதியில்லாத இணைப்பு ஒன்று இருந்து, அது இப்பொழுது மெல்லமெல்ல முதிர்ந்து பக்குவமடைந் துள்ளது என்பது உண்மையே.

### கூட்டரசு உணர்ச்சியின் தோற்றம்

இணைக்கப்படுதற்குரிய நாடுகளின் மக்களிடத்திலே ஒரு புதுமை யான உணர்வு இருத்தல்வேண்டும் என்பது, ஒரு கூட்டரசு அமைப்பை நிறுவுவதற்கு மிக இன்றியமையாது வேண்டப்படும் இரண்டாவது நிபந்தனை ஆகும். அம் மக்கள் இணைப்பை (union) விரும்புதல் வேண்டும். ஒன்றுதலை (unity) விரும்புதல் கூடாது. இணைப்பை ஏற்படுத்த விருப்பமேதும் இல்லையாயின், அப்போது கூட்டரசுக்கு வேண்டிய அடிப்படை இல்லாமற் போய்விடுகிறது. காமன்வெல்த் அமைப்பிலே, ஆங்கிலக் குடியரசையும் டச்சு ஐக்கிய மாகாணங்களையும் இணைத்தல்வேண்டுமென்ற ஒரு தீவிரமான திட்டமானது, அரசியல்வாதி களின் கற்பனையில் வரும் கனவுகளில் ஒன்றே தவிர, செயல்முறைக்குக் கொண்டுவரப்படக்கூடிய ஒன்று அன்று. இதற்குமாறாக, ஒன்றாகக் கலந்துவிடும் விருப்பம் மிகுந்திருந்தால், இவ் விருப்பமானது ஒரு கூட்டரசு அரசியலமைப்பில்லாமல், ஓரரசு அரசியலமைப்பில் (unitary state) நிறைவேறக்கூடிய இயல்பை உடையது. பதினெட்டாம் நூற்றாண்டில் இத்தாலியிலுள்ள நாடுகளுக்கு ஏற்பட்ட அனுபவமும், யாவருக்கும் பொதுவான நலன்களைப்பற்றிய உணர்வு அல்லது பொதுவான தேசிய உணர்வு மிகவும் உறுதியாக இருந்தால், இணைப்பு (union), தனிமை (Separation) ஆகியவற்றின் அடிப்படையில் அமைந் துள்ள கூட்டரசுமுறை தோன்றுவது கடினம். ஒரு கூட்டரசு நாடு அமைவதற்கு இன்றியமையாது வேண்டப்படும் நிலைமையாக இருக்கும்

உணர்வு எவ்வாறு இருத்தல் வேண்டுமெனில், சேரவிரும்பும் நாட்டின் மக்கள், பல நோக்கங்களுக்காக ஒரு நாடாக அமைய விரும்புதல் வேண்டும். ஆயினும், அவர்கள் தமது நாடு அல்லது மாகாணம் தனி ஒரு கூருக இருக்கும் தன்மையை விட்டுவிட விரும்புதல் கூடாது. இதனினும் நாம் விரிவாகச் சொல்வோமாயின், இணைக்கப்பட்டுள்ள நாடுகள் ஒவ்வொன்றிலுமுள்ள மக்கள், பொது அரசாங்கத்தைக் காட்டுகிற கூட்டரசு நாட்டைவிடத் தமது சொந்த நாட்டிற்கே மிக உறுதியான பற்றுக்கொண்டிருத்தல் வேண்டும்; இவ்வாறு இல்லா விட்டால், ஒரு கூட்டரசு அரசாங்கம் அமையமுடியாது. மேற்கூறிய பற்றுறுதி உணர்வு, பதினெட்டாவது நூற்றுண்டின் இறுதியில் அமெரிக்காவிலும், சுவிட்சர்லாந்தில் பத்தொன்பதாம் நூற்றுண்டின் நடுவிலும் காணப்பட்டது. 1787ஆம் ஆண்டில், ஒரு வர்ஜினியக் குடிமகனே, அல்லது மஸ்ஸாசூஸெட்ஸைச் சேர்ந்த குடிமகனே, தனது சொந்த நாடாகிய வர்ஜினியாவுக்கோ அல்லது மஸ்ஸாசூஸெட்சுக்கோ இணைப்பரசு நாடுகளைவிட, மிக உறுதியான பற்றுணர்வு காட்டிவந்தார். 1848ஆம் ஆண்டில் லூசர்ன் மாகாணத்தைச் சேர்ந்த குடிமக்கள் இணைப்பரசு நாட்டைவிடத் தமது சொந்த மாகாணத்திடமே மிக்க பற்றுறுதி காட்டினர்; பெர்ன், சூரிக் முதலிய மாகாண மக்களைப் பொறுத்தவரையிலும்கூட, இந்த நிலையே உண்மையாகும். ஆகையால் ஒரு கூட்டரசு நாட்டை உருவாக்குகிற உணர்வு, ஒன்றுக்கொன்று சிறிதளவு முரண்பாடான இரண்டு உணர்வுகளினுலாக்கப்பட்டு, ஏறக்குறைய நேசப்பாடாக உள்ள நாடுகளின் மக்களிடையே பரந்து இருத்தல் வேண்டும்; அவ்வுணர்வுகளே, தேசிய ஒற்றுமை என்ற விருப்பமும், ஒவ்வொரு குடிமகனின் தனிநாட்டின் சுதந்தரத்தைக் காப்பாற்றுதல் என்ற உறுதியும் ஆம். கூடியவரையில் இந்த இரு உணர்வுகளையும் நடைமுறையில் செயல்படவைப்பதே கூட்டரசின் நோக்கம் ஆகும்.

**கூட்டரசின் நோக்கம்**

தேசிய ஒற்றுமையும் ஆற்றலும், நாடுகளின் உரிமைகளைக் காப்பாற்றுதல் என்ற நிலையோடு பொருந்துமாறு (இணங்குமாறு) செய்வதற்குக் கையாளப்படும் ஓர் அரசியல் இயந்திரமே கூட்டரசு ஆகும். வகுக்கப்படுகிற இந்த நோக்கமே, கூட்டரசுக் கோட்பாட்டினுடைய முக்கியமான இயல்பைத் தீர்மானிக்கிறது. ஒன்றுக்கொன்று முரண்பாடாகத் தோன்றுகிற, தேசிய இறைமை அதிகாரத்தையும் மாகாணங்களின் இறைமை அதிகாரத்தையும் பொருந்திவரச் செய்வதற்குக் கூட்டரசுக் கோட்பாடு கையாளுகிறமுறை என்னவென்றால், அது பொதுவான அல்லது தேசிய அரசாங்கத்துக்கும் பல்வேறு மாகாணங்களுக்கும் அல்லது அரசுகளுக்குமிடையே இறைமையின் சாதாரண அதிகாரங்களை விரிவாகப் பகிர்ந்து கொடுக்கக்கூடிய ஓர் அரசியல்

அமைப்பை ஆக்குவதுதான். இத்தகைய அதிகாரப் பகிர்ந்தளிப்பு ஒவ்வொரு தனிப்பட்ட கூட்டரசு அரசியலமைப்பிலும், பல்வேறு வகையிலும் வேறுபடுகிறது; ஆயினும், அதற்கு அடிப்படையாக இருக்கும் பொதுவான கொள்கை தெளிவாக விளங்குகிறது. நாடு முழுவதையும் பாதிக்கக்கூடிய செயல்களெல்லாம் தேசிய அரசாங் கத்தின் கட்டுப்பாட்டில் வைக்கப்படுதல் வேண்டும். பொதுவாக எல்லாரையும் பாதிக்காத நலன்களெல்லாம் பல்வேறு மாகாணங்களில் ஒப்படைக்கப்படுதல் வேண்டும். ஐக்கிய அமெரிக்க நாட்டின் அரசிய லமைப்பின் முன்னுரையானது, 'ஐக்கிய அமெரிக்க நாட்டின் மக்க ளாகிய நாங்கள் இப்பொழுதிருப்பதைவிட, மிகவும் முழுமையான ஐக்கியத்தை ஏற்படுத்தும்பொருட்டும், நீதியை நிலைநிறுத்தும் பொருட்டும், உள்நாட்டில் அமைதியை நிலைநிறுத்தும்பொருட்டும், நாடு முழுமைக்கும் பொதுவான பாதுகாப்பை ஏற்படுத்தும்பொருட்டும், யாவருடைய பொதுநலனையும் மேம்பாடடையச் செய்யவும், சுதந்தர வாழ்க்கையின் நன்மைகள் எங்களுக்கும், எங்களுடைய பின்தோன்றல் களுக்கும் பாதுகாப்பாக இருக்கும்பொருட்டும் ஐக்கிய அமெரிக்க நாட்டிற்காக இந்த அரசியலமைப்பை ஆணைசெய்து ஏற்படுத்துகிறோம்.' என்று கூறுகிறது. இந்த அரசியலமைப்புக்குச் செய்யப்பட்ட பத்தாவது திருத்தமானது, 'அரசியலமைப்பின் மூலமாக, ஐக்கிய நாட்டுக்கு அளிக்கப்படாத அதிகாரங்களும், மாகாணங்களுக்கு மறுக்கப் படாத அதிகாரங்களும் முறையே மாகாணங்களுக்கு அல்லது மக்க ளுக்கு ஒதுக்கி வைக்கப்படுகின்றன' என்று ஒரு சட்டத்தைச் செய்தது. சுவிஸ் இணைப்பரசின் அரசியலமைப்பிலே ஒரு சிறிது மாற்றமுமின்றிப் புகுத்தப்பட்டிருக்கும் மேற்கூறிய இரண்டு வாசகங் களும் கூட்டரசுக் கோட்பாட்டின் நோக்கத்தையும், அடிப்படையான கருத்தையும் சுட்டிக் காட்டுகின்றன.

### கூட்டரசுக் கோட்பாட்டின் முக்கிய இயல்புகள்: ஐக்கிய அமெரிக்க நாடு

ஐக்கிய அரசுக்கும், அதில் சேர்ந்துள்ள பல்வேறு மாகாணங் களுக்குமிடையே, ஒரு பொதுவான அரசியலமைப்பின்மூலமாக அதிகாரங்களைப் பகிர்ந்தளித்து, அதன்வாயிலாக மாகாண சுதந்தரத் தையும், தேசிய ஒற்றுமையையும் பொருந்தும்படி செய்ய இயலும் என்ற கருத்திலிருந்து, முழு வளர்ச்சிபெற்ற கூட்டரசுக் கோட்பாட்டினுடைய மூன்று தலைசிறந்த இயல்புகள் வெளிப்படுகின்றன; அரசியலமைப்பி னுடைய தலைமையான தன்மை, வரம்புகளுக்குட்பட்டும், பல குழுக் களிடம் தொடர்புகொண்டும் இருக்கக்கூடிய வகையில், அரசாங்க அதிகாரங்களைப் பல குழுக்களிடம் பிரித்தல்—அரசியலமைப்புச் சட்டத்தை விளக்கக் கூடியவர்களாக நீதிமன்றங்கள் செயல்படுவதற்கு அதிகாரம் இருத்தல் என்பவையே அவை.

## அரசியலமைப்பின் தலைமையான தன்மை

ஒரு வணிகக்குழு தன்னைத் தோற்றுவிக்கிற சாசனத்திலிருந்தே தனக்கு ஒரு வடிவத்தைப் பெறுவதுபோல, ஒரு கூட்டரசுநாடும் அரசியலமைப்பிலிருந்தே தனது வடிவத்தைப் பெறுகிறது. ஆகையால், நிர்வாக அதிகாரம், சட்டமியற்றும் அதிகாரம், நீதி அதிகாரம் முதலிய ஒவ்வொன்றும், தேசிய அரசாங்கத்திற்குக் கொடுக்கப்பட்டாலும் அல்லது தனித்தனி மாகாண அரசாங்கங்களுக்குக் கொடுக்கப்பட்டாலும் அவை அரசியலமைப்புக்குக் கீழ்ப்பட்டதாகவும், அதனால் கட்டுப் படுத்தப்படுவதாகவும் இருக்கின்றன. அரசியலமைப்பின் பிரிவுகளுக்கு முரணானவகையில் எந்த ஓர் அதிகாரத்தையும் சட்டப்படியாக, ஐக்கிய நாடுகளின் தலைவரோ அல்லது காங்கிரசின் இரு சபைகளுமோ, மஸ்ஸாசுசெட்ஸின் ஆளுநரோ அல்லது சட்டசபையோ அல்லது நீதிமன்றமோ கையாளமுடியாது. அரசியலமைப்பின் மேலான அதிகாரம் என்ற இந்தக் கோட்பாடு ஒவ்வோர் அமெரிக்கருக்கும் நன்கு தெரியும். ஆனால், இங்கிலாந்திலோ நன்கு பயிற்சிபெற்ற வழக்கறிஞர்கூட, இக் கோட்பாட்டினுடைய சட்டப்படியான விளைவுகளைக் காண்பதில் இடர்ப்பாடிருப்பதை உணர்கின்றனர். இந்த இடர்ப்பாடு எதனின்றும் தோன்றுகிறது என்றால், 'கூட்டரசுக் கோட்பாட்டு முறைக்கு இன்றியமையாது வேண்டப்படுவதும், 'அரசியலமைப்பே நாட்டின் தலைமையான சட்டம் ஆகிறது' என்று பொருள்படுவதுமான கொள்கையைப் போன்ற கொள்கை எதுவும் இங்கிலாத்தின் அரசிய லமைப்பில் ஒப்புக்கொள்ளப்படுவதில்லை' என்ற நிலையினின்றும் தோன்றுகிறது. இங்கிலாத்தில், நம்மால் அரசியலமைப்புச் சட்டங் களெனவும், அடிப்படைச் சட்டங்களெனவும்.[1] அழைக்கப்படுவன வெல்லாம், அரச முடியை ஏற்கக்கூடிய தாயமுறை, ஸ்காட்லாந்தோடு இணைப்பை ஏற்படுத்தும் சட்டங்கள் ஆகியவைகளைப்போல, நமது அரசியல் நிறுவனங்களுக்கு அடிப்படையான கொள்கைகளைக் கூறுகின்றன; ஆனால், தலைமையான சட்டம் எனவோ அல்லது மற்றச் சட்டங்களினுடைய செல்லுபடியாகுந்தன்மையைப் பரிசோதித்துப் பார்க்கக்கூடிய சட்டம் எனவோ, வேறு சட்டம் எதுவும் கிடையாது. ஸ்காட்லாந்தோடு இணைப்பு ஒப்பந்தத்தை ஏற்படுத்துகிற சட்டத்தைப் போல, முக்கியமான பல சட்டங்கள் இருக்கின்றன; அவற்றைக் காரணமின்றி மாற்றமுயல்வது அரசியல் அறியாமையாகும். பாராளு மன்றத்தால் தனது விருப்பம்போல் மாற்றவோ அல்லது நீக்கிவிடவோ கூடிய பல்மருத்துவர் சட்டத்தைப்போலப் (1878) பல முக்கிய மல்லாத சட்டங்கள் இருக்கின்றன; ஆனால், ஸ்காட்லாந்தின் இணைப்புச் சட்டமோ, 1878ஆம் ஆண்டின் பல்மருத்துவர் சட்டமோ, ஒன்று

[1] 'இங்கிலாந்தின் அடிப்படைச் சட்டங்கள்' என்ற சொல், கப்பல் வரிப் பணத்தை 1635-ல் கட்டுவதைப்பற்றி எழுந்த விவாதத்தின்போது தோன்றியது. கார்டினர் எழுதிய (1884) இங்கிலாந்தின் வரலாறு 8ஆவது பாகத்தைப் பார்க்கவும்.

மற்றதனைவிடத் தலைமையான சட்டம் என ஆவதற்கு உரிய தகுதியைப் பெற்றிருக்கவில்லை. இவை ஒவ்வொன்றும் தலைமையான சட்டமியற்றும் அதிகாரத்தின் விருப்பத்தை வெளிப்படுத்துகின்றன : ஒவ்வொன்றும் சட்டப்படியாகப் பாராளுமன்றத்தால் மாற்றவும் நீக்கவும் படலாம் ; இதில் எந்தச் சட்டமும் மற்றதனுடைய செல்லுபடியாகுந் தன்மையைப் பரிசோதிக்கவில்லை. 1878 ஆம் ஆண்டின் பல்மருத்துவர் சட்டமானது. இணைப்புச்சட்டத்தின் பிரிவுகளுக்கு மாறாக இருக்குமானால், அந்த அளவிற்கு இணைப்புச் சட்டமானது நீக்கப்பட்டுவிடும் ; ஆனால், இவ்வகையாக 1878 ஆம் ஆண்டின் பல்மருத்துவர் சட்டமானது செல்லுபடியாகாததாகவோ, அரசியலமைப்பிற்கு முரண்பட்டதாகவோ ஆயிற்று என்பதாக, எந்த ஒரு நீதிபதியும் கூறமாட்டார். ஆங்கில அரசியலமைப்புச் சட்டத்தின் மிக அடிப்படையான உண்மை என்னவெனில், அது, பாராளுமன்றத்தில் அரசருக்கு வரம்பற்ற சட்டமியற்றும் இறைமை அதிகாரம் அல்லது எதேச்சாதிகாரம் உண்டு என்பதேயாம். ஆனால், இந்தக் கோட்பாடு, அரசியலமைப்பின்படி இயங்குகிற ஒவ்வோர் அதிகாரியையும் கட்டுப்படுத்தக்கூடிய விதிகள் அடங்கிய ஓர் அடிப்படை ஒப்பந்தத்தை ஏற்றுக்கொள்ளாது அதற்கு மாறுபட்டு இருக்கிறது.[1]

## விளைவுகள் எழுதப்பட்ட அரசியலமைப்பு

அரசியலமைப்பின் தலைமையான அதிகாரம் என்ற இயல்பிலிருந்து மூன்று விளைவுகள் தோன்றுகின்றன :

அரசியலமைப்பானது, ஓர் 'எழுதப்பட்ட' அரசியலமைப்பாக இருத்தலென்பது இன்றியமையாததாகிறது.

ஒரு கூட்டரசு நாட்டின் அடித்தளங்கள் ஒரு சிக்கலான ஒப்பந்தத்தினால் ஆக்கப்பட்டுள்ளன. இவ்வொப்பந்தமும்,இணைப்பரசை(Confederacy) ஆக்குகின்ற நாடுகளினால் தீர ஆராய்ச்சி செய்யப்பட்டு, ஒப்புக்கொள்ளப்பட்ட பல்வேறு வகையான குறிப்புகளை உடையது. இவ்வகையான ஏற்பாட்டை மனத்தில்மட்டும் இருக்கக்கூடிய கருத்துகளின் (understandings) அல்லது வழக்கங்களின்மீது அமையுமாறுவிட்டால், சில தவறான கருத்துகளும் முரண்பாடுகளும் தோன்றும். எனவே, இந்த உடன்பாட்டின் பிரிவுகள் அல்லது வேறுவகையாகச் சொன்னால் அரசியலமைப்பின் பிரிவுகள் எழுதிவைக்கப்படுதல் வேண்டும். அரசியலமைப்பு ஓர் எழுதப்பட்ட பிடிபாடாகவே (document) இருத்தல் வேண்டும் ; கூடுமாயின், அது தவறான கருத்து எதற்கும் இடந்தராத குறிப்புகளை உடைய ஓர் எழுதப்பட்ட பிடிபாடாக

[1] Kent எழுதிய, Commentaries, (1873) என்ற நூலைப் பார்க்கவும்.

இருத்தல் வேண்டும். ஐக்கிய அமெரிக்காவை நிறுவியோர் ஒரே ஒரு பெருங்கேள்வியை மட்டும் தீர்க்காமல் விட்டுவிட்டனர். அரசியல் அமைப்பில் உள்ள இந்த இடைவெளியே, பிரிந்து செல்வதற்கான போருக்கு வழிவகுத்த பூசலைத் தோற்றுவித்தது.[1]

## இறுக்கமான அரசியலமைப்பு

இத்தகைய அரசியலமைப்பு, நான் முன்பே குறிப்பிட்ட, 'இறுக்கமான' அல்லது 'விரிவடைய இயலாத' அரசியலமைப்பாக இருத்தல் வேண்டும். அரசியலமைப்பின் சட்டமானது, சட்டப்படி மாற்றப்பட முடியாத ஒன்றாக இருத்தல் வேண்டும்; அல்லது அது அரசியலமைப்பில் கூறப்பட்ட கூட்டரசின் சட்டமன்றம் அல்லது மாகாணச் சட்டமன்றங்கள் போன்ற சாதாரணச் சட்டமன்றங்களுக்கும் மேற்பட்ட, அப்பாற்பட்ட ஏதேனுமோர் அதிகாரியினால் மட்டுமே மாற்றப்படுவதாக இருத்தல் வேண்டும்.

'ஒவ்வொரு நாட்டிலும் அதிலுள்ள அரசியல் நிறுவனத்தையும் மாற்றுவதற்குச் சட்டப்படியான ஆற்றலையுடைய யாராவது ஓர் அதிகாரி அல்லது ஏதாவது ஒரு குழு இருந்தாக வேண்டும்' எனச் சில சட்ட அறிஞர்கள் ஒரு கோட்பாட்டை விதித்துள்ளனர்; என்றாலும், ஓர் அரசாங்கத்தின் அடிப்படைகளைச் சட்டப்படியாக மாற்றுவதற்குரிய வழிகளை வகுக்காமல், திட்டமிட்ட அரசாங்க அமைப்பை வரைந்தவர்கள் விட்டுவிட்டதற்குக் காரணத்தை அறிய முடியவில்லை.[2] ஒரு கூட்டரசு ஐக்கியநாட்டை ஏற்படுத்தியவர்கள் இவ்வாறு வழி வகுக்காமல் விட்டுவிட்டனரென்பது இயற்கைக்கு முரணானது;

[1] ஒரு கூட்டரசு வழக்கம் என்ற ஆற்றலினாலும், பல்வேறு நாடுகளுக்கிடையேயுள்ள எழுதிவைக்கப்படாத ஒப்பந்தங்களினாலும் வளர்தல் கூடுமென்பது உண்மையே; பண்டைய அக்கேயன் சங்கம் எழுதப்பட்ட அரசியலமைப்பைப் போன்ற, ஏதாவதொன்றின் மூலமாக எவ்வளவிற்கு இணைக்கப்பட்டிருந்தது என்பது ஐயப்பாட்டுக்குரியது. எந்தப் பெயரால் அழைக்கப்பட்டாலும், ஒரு எழுதப்பட்ட அரசியலமைப்பாகவே நடைமுறையில் இருக்கக்கூடியதும், கூட்டரசு அரசாங்கம், கூட்டரசை ஆக்குகின்ற நாடுகள் ஆகியவற்றின் உரிமைகளையும் கடமைகளையும் ஒழுங்குபடுத்துவதுமாகிய ஏதேனுமொரு பிடிபாடு வரையப்படாமல், ஒரு கூட்டரசு நாடு தற்காலத்தில் அமைக்கமுடியும் என்பது நடைமுறையில் செய்ய இயலாத ஒன்றாக இல்லாவிட்டாலும், நடைபெறும் செயல் அன்று.

[2] தங்களுடைய அரசியலமைப்பிலே, 'சட்டப்படியான இறைமை அதிகாரம்' என்ற தொடருக்கு, ஆஸ்டின் கூறும் பொருளில், இறைமை அதிகாரத்தை உடைய ஓர் ஆளோ அல்லது பலர் சேர்ந்த குழுவோ இல்லை என்பதாகப் புகழ்பெற்ற அமெரிக்கச் சட்ட அறிஞர்கள் கூறுகின்றனர்; இத்தகைய கருத்து பொருத்தமற்றதென நாம் காண இயலாது; ஐக்கிய அமெரிக்க நாட்டின் அரசியலமைப்பின் 5ஆவது பிரிவைப் பார்க்கவும். இதில் காணப்படவேண்டிய உண்மை என்னவென்றால், ஒரு கூட்டரசு அரசியலமைப்பு, ஓர் ஒப்பந்தத்தின் இயல்பைப் பெறுகிறது என்பதே; அரசியலமைப்பை வகுத்தவர்கள், இவ்வொப்பந்தத்திற்குரிய எல்லாக் கட்சியினருடைய ஒப்புதலின்பேரில் அல்லாமல், அதனுடைய கருத்துகளை மாற்றுவதற்கு அரசியலமைப்பை ஒட்டிய வகைகளை அல்லது வழிகளை வகுக்கும் கருத்துடையவராக அல்லாமல் இருந்திருக்கலாம்.

ஏனெனில், ஒப்பந்தத்தை ஏற்றுக்கொள்ளுகிற நாடுகளின் ஒரே முக்கியமான நோக்கமே, தங்களுடைய பல்வேறு மாகாண உரிமைகளின் மீது மேலும் தலையீடு எதுவும் ஏற்படுவதைத் தடுப்பதுதான்; மேலும், ஐக்கிய அமெரிக்க நாடுகளின் அரசியலமைப்பின் ஐந்தாவதுபிரிவு, அந்த அரசியலமைப்பின் சில பிரிவுகளுக்குத் தற்காலிகமாக மாற்றமுடியாத தன்மையைத் தர முயலுவதாகக் காணப்படுகிறது. ஆனால், ஒரு கூட்டரசு அரசியலமைப்பு என்பது. அதனுடைய பிரிவுகளைத் திருத்த அல்லது மாற்றக்கூடிய ஏதேனுமோர் உயர்தர இறைமை அதிகாரியை உள்ளடக்கி இருக்கிறது என்ற ஆராய்ச்சிக்கு எதிர்காலத்தைப்பற்றிய கற்பனைக்கு உள்ள மதிப்பே உண்டு; ஏனெனில், இப்பொழுதிருந்து வரும் கூட்டரசு அரசாங்கங்களில், அரசியலமைப்பு தனது வளர்ச்சிக்குரிய வழிகளை வகுத்துள்ளதைக் காணலாம். எவ்வாறாயினும், ஒரு கூட்டரசாங்கத்தை நிறுவியவர்கள், கூட்டரசுமுறை மிக முக்கியமானது என்று கொள்ளும்போது, உயர்தர சட்டமியற்றும் அதிகாரத்தை அரசியலமைப்பின்படி இயங்கும் ஏதேனுமொரு சாதாரணச் சட்ட சட்டமன்றத்தில் பாதுகாப்பாக விட்டுவைத்தல் இயலாது என்பது உறுதியே.[1] ஏனெனில் இவ்வாறான முறையில் சட்டமியற்றும் இறைமை அதிகாரத்தை விட்டுவைப்பது, தேசிய அரசாங்கத்தின் அதிகார எல்லைகளையும், மற்ற அரசாங்கங்களின் எல்லைகளையும் நிலையாகப் பிரித்துவைத்தல் என்ற கூட்டரசுக் கோட்பாட்டின் நோக்கத்துக்கு முரண் ஆகும். அரசியலமைப்புச் சட்டத்தைத் தேசியச்

[1] ஜெர்மானியப் பேரரசின் அரசியலமைப்பின்படி, பேரரசின் சட்டமன்றமானது அரசியலமைப்பைத் திருத்தலாம். ஆயினும், கூட்டரசின் மேற்சபையானது, மாகாண உரிமைகளுக்குப் பெருமளவு பாதுகாப்பு அளித்தது. கூட்டரசின் மேற்சபையில் பதினுன்கு வாக்குகளினால் எதிர்ப்புக்கு உள்ளாகும் எந்த அரசியலமைப்புத் திருத்தமும் நடைமுறைக்கு வரமுடியாது. எனவே, இந்த ஒரு விதி, பிரஷ்யாவுக்கும், மாகாணங்களில் பல சேர்ந்த கூட்டுக்களுக்கும், அரசியலமைப்புத் திருத்தம் எதன்பேரிலும் தள்ளுரிமை அதிகாரத்தைக் கொடுத்தது; அரசியலமைப்பை மாற்றுவதற்கு உரிமை பெற்றிருந்த இரு சபைகளும் அடங்கிய காங்கிரஸ் என்ற தேசியச் சட்டமன்றத்தின் மூன்றில் இரண்டு பங்கு உறுப்பினர் எப்போதாயினும் தேவைப்பட்டால், இந்த அரசியல் அமைப்புச் சட்டத்திற்குத் திருத்தங்களைக் கொண்டுவரக்கூடும்; அல்லது பல்வேறு மாகாணங்களில் மூன்றில் இரண்டு மாகாணங்களின் சட்ட மன்றங்களி விண்ணப்பம் செய்துகொண்டால், அப்போது காங்கிரஸ் திருத்தத் தீர்மானங்களைக் கொண்டுவரக்கூடிய ஒரு மாநாட்டைக் கூட்டும். இவற்றுள் எவ் வழியில் கொண்டுவரப்பட்ட திருத்தத் தீர்மானமும், பல்வேறு மாகாணங்களின் நான்கில் மூன்று பங்கின் சட்டசபைகளாலோ அல்லது நான்கில் மூன்று பங்கு மாகாணங்களில் கூட்டப்பட்ட மாநாடுகளினுலோ ஒப்புக்கொள்ளப்படுமானல் அப்போது அது, இந்த அரசியலமைப்புச் சட்டத்தின் ஒரு பகுதியாக ஆகிவிடும்; இவ் வகைகளுள் எவ் வகையையும் திருத்தத் தீர்மானத்துக்கு ஒப்புதல் அளிக்கப்படுவதற்காகக் காங்கிரஸ் கையாளலாம்: ஆனல், ஆயிரத்து எண்ணூற்று எட்டாம் ஆண்டிற்கு முன்னல் செய்யப்படும் எந்தத் திருத்தமும் முதல் பிரிவில், ஒன்பதாம் உட்பிரிவிலுள்ள முதலாவது விதியையும் நான்காவது விதியையும் எவ் வகையிலும் பாதிப்பதாக இருக்கக்கூடாது; மேலும், எந்த மாகாணத்திலிருந்தும், அதனுடைய ஒப்புதலில்லாமல், அதற்கு செனட் மன்றத்தில் மற்ற மாகாணங்களோடு உள்ள ஒத்த பிரதிநிதித்துவ உரிமையானது எடுக்கப்பட மாட்டாது. [illegible] —க்கிய அமெரிக்க நாட்டின் அரசியலமைப்புச் சட்டத்தின் 5ஆம் பிரிவு, [illegible] எழுதிய சட்டநூல் (Jurisprudence) (1879) பக்கம் 278; பிரைஸ் [illegible] மெரிக்க நாடு, (1910)

சட்டமன்றுமாகிய காங்கிரஸ் (congress) மாற்றியமைப்பதற்குச் சட்டப் படியான அதிகாரத்தைப் பெற்றிருக்குமாஞல், நியூயார்க், மஸ்ஸாசு-ஸெட்ஸ் மற்றும் இவைபோன்ற மாகாணங்களுக்கு, அரசியலமைப்பின் மூலமாக வழங்கப்பட்டுள்ள சுதந்தரத்தைக் காப்பாற்றுவதற்குச் சட்டப்படியான பொறுப்பு இல்லாமல் போய்விடும்; அந் நிலையில் மாகாணங்களெல்லாம், இப்பொழுது ஸ்காலட்லாந்து எவ்வாறு பாராளு மன்றத்தின் இறைமை அதிகாரத்துக்குக் கட்டுப்பட்டு இருக்கிறதோ, அதேபோலக் காங்கிரசின் இறைமை அதிகாரத்துக்குக் கட்டுப்பட்டு இருக்கும்; ஐக்கிய அமெரிக்கா அப்பொழுது ஒரு கூட்டரசு நாடாக இல்லாமல், ஓர் ஒற்றை அரசு நாடாக (unitarian) ஆகிவிடும். இதற்கு நேர்மாருக, மாகாணங்களில் ஏதேனும் ஒன்றின்—தென் கரோலிஞவின் —சட்டமன்றமானது, தனது சொந்த விருப்பத்தின்பேரிலேயே அரசியலமைப்புச் சட்டத்தை மாற்றுமேயாஞல், அப்பொழுது நடுஅரசாங்கத்தின் அதிகாரமானது—சட்டபடியாகப் பார்க்குமிடத்து—கற்பனேயானதாகப் போய்விடும்; அப்பொழுது ஐக்கிய அமெரிக்க நாடு ஒரே தேசிய இணேப்பு என்ற நிலேயிலிருந்துமாறி, நிலேயில்லாத உடன்படிக்கையொன்றிஞல் பிணேக்கப்பட்ட, பல சுதந்தர நாடுகள் சேர்ந்த ஒரு தொகுதியாக ஆகிவிடும். எனவே, அரசியலமைப்பை மாற்றி அமைக்கும் அதிகாரமானது, அரசியலமைப்புக்கும் அப்பால் வைக்கப்பட்டிருக்கிறது; மேலும், இவ் வதிகாரமானது நாம் இங்கு விளக்குவதற்கு எடுத்துக்கொண்ட கருத்துக்கு முரண்பாடு இல்லாமல் அதனேடு பொருத்தமானதாக இருக்கும்படி வைக்கப்பட்டிருக்கிறது; அமெரிக்க ஐக்கிய நாட்டில், சட்டப்படியான இறைமை அதிகார மானது, ஐக்கியநாட்டில் எக் காலத்திலும் சேர்ந்திருக்கின்ற பல்வேறு மாகாணங்களில் அல்லது மாநில அரசுகளில் முக்கால் பங்கை உடைய மாநில அரசாங்கங்களில்தான் தங்கி இருக்கிறது: இதற்கு ஏற்பவே, அரசியலமைப்பை மாற்றும் அதிகாரம் வைக்கப்பட்டிருக்கிறது. இவ்வாறு முடிவான உயர்தரமான சட்டமியற்றும் அதிகாரம் அரசியல் அமைப்புக்குப் புறம்பாக ஒரு சபையில் வைக்கப்பட்டிருப்பதால், ஒரு வியத்தகு விளேவு தோன்றுகிறது. ஓரரசு முறையில் (unitarian system) இருப்பதைப் போலவே, கூட்டரசு, முறையிலும் ஓர் இறைமை அதிகாரி இருக்கிறுர்; ஆயினும், கூட்டரசு நாட்டில் இறைமை அதிகாரி யானவர் எளிதில் குடிகளால் அணுகக்கூடாத ஏதேச்சாதிகாரியாக இருக்கிறுர்; அவர் ஆங்கிலப் பாராளுமன்றத்தைப்போல, எப்பொழுதும் விழிப்பாக இருக்கும் சட்டமியற்றும் அதிகாரியாக இல்லாமல், எப்பொழுதும் உறங்கி இருக்கும் அரசராக இருக்கிறுர். ஐக்கிய அமெரிக்கநாட்டின் இறைமை அதிகாரியானவர் ஒரு நூற்றுண்டுக்கால அளவில் ஒரே ஒரு தடவைதான் செயல்படக்கூடிய அளவுக்கு எழுப்பப்பட்டிருக்கிறுர். அவருடைய உறக்கத்தைக் கலேப்பதற்கு ஓர் உள்நாட்டுப் போரென்ற இடிமுழக்கமே தேவைப்பட்டது; மேலும்,

எதிர்காலத்திலும் ஒரு புரட்சியின் வருகையினால்தான், இவ் வதிகாரி மீண்டும் செயல்படுவதற்கு விழித்தெழுவார் என்றும் ஐயமின்றிக் கூறலாம். ஆயினும், பல ஆண்டுகளுக்கு உறங்கும் அரசர் உயிரோடு இருக்காத அரசருக்கே ஒப்பாவார். ஒரு கூட்டரசு அரசியலமைப்பு மாற்றப்படும் தகுதிஉடையது; ஆயினும், இதே காரணத்தினால் அது மாற்றப்படாதிருப்பதற்குரிய தகுதியை உடையது.[1]

## கூட்டரசு அரசியலமைப்பிலுள்ள ஒவ்வொரு சட்டமன்றமும் ஒரு கீழ்ப்பட்ட சட்டமியற்றும் மன்றமே

ஒரு கூட்டரசு அரசியலமைப்பின்படி அமைந்திருக்கும் ஒவ்வொரு சட்டசபையும், ஒரு கீழ்ப்பட்ட நிலையிலுள்ள சட்டமியற்றும் மன்றமே (a subordinate law-making body) ஆகும்;[2] அதனுடைய சட்டங்களெல்லாம் உப சட்டங்களின் (by-laws) இயல்பையே உடையன; அவையெல்லாம் அவற்றை இயற்றிய சட்டமன்றத்துக்கு, அரசியலமைப்பினால் அளிக்கப்பட்டுள்ள அதிகாரத்துக்கு ஒத்து, அல்லது அடங்கி இருந்தால்தான் செல்லுபடியாகும்; அத்தகைய அதிகாரத்தின் எல்லைகளை அவை மீறுமானால், அவை செல்லுபடியாகாதனவாக, அரசியல் அமைப்புக்கு முரணானவையாக ஆகிவிடும்.

'அமெரிக்க ஐக்கிய நாட்டிலுள்ள சட்டமன்றத்தை, ஓர் ஆங்கில இரயில்வேக் கழகத்தோடும் அல்லது ஒரு நகராட்சி மன்றத்தோடும் ஒப்பிடுவது பொருத்தமற்றதாகும்.[3] என்பது உண்மையேயாயினும், இத்தகைய ஒப்புமை உண்மையே.[4] காங்கிரஸ் சட்டமன்றமானது தனது சட்டமியற்றும் அதிகாரங்களுக்கு உட்பட்டு, ஐக்கிய நாட்டிலுள்ள ஒவ்வொருவரையும் கட்டுப்படுத்தவல்ல சட்டங்களை நிறைவேற்றமுடியும். இதுபோலவே, கிரேட் ஈஸ்டர்ன் இரயில்வேக் கழகமும் பிரிட்டிஷ் நாடுகளிலுள்ள ஒவ்வொருவரையும் கட்டுப்படுத்த

[1] செனட் உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்கும் பணியை, மாகாணச் சட்டசபைக்கு வழங்கும் ஐக்கிய அமெரிக்க நாட்டின் அரசியலமைப்புப் பிரிவுகளை, அத்தகைய தேர்ந்தெடுக்கும் பணியை மாகாண மக்களுக்கே மாற்றும் திருத்தத் தீர்மானமானது (ஏழாவது திருத்தம்) 1913ஆம் ஆண்டில் மிக எளிதாக நிறைவேற்றப்பட்டதை நாம் கவனித்தல் வேண்டும்.

[2] ஐக்கிய அமெரிக்கநாட்டில் இவ் வகையாகத்தான் இது கருதப்படுகிறது; ஆனால், அவ்வாறுதான் அது இருத்தல் வேண்டுமென்ற கட்டாயம் இல்லை. கூட்டரசிலுள்ள சட்டமன்றம் இறைமை அதிகாரத்தை உடையதாக இருக்கலாம்; எனினும், அதனுடைய அதிகாரங்களெல்லாம், மாகாணங்களின் உரிமைகளெல்லாம் அரசியலமைப்புச் சட்டத்தின் மூலமாக நடைமுறையில் பாதுகாக்கப்படக்கூடியவையாக அமைக்கப்பட்டுள்ளன. இந்த நிலைமை ஜெர்மனியப் பேரரசில் இருந்தது.

[3] இதற்கு முன்னர்க் கூறப்பட்ட குறிப்பைப் பார்க்கவும் ('சட்டமியற்றும் மன்றம்' என்பதன் பொருளுக்குக் கொடுக்கப்பட்ட விளக்கக் குறிப்பு).

[4] ஜென்னிங்ஸ் எழுதிய, The Law and the Constitution (1952), (பக்கம் 145—146) பார்க்கவும்.

வல்ல சட்டங்களை நிறைவேற்றக்கூடும். காங்கிரசுக்கு அளிக்கப் பட்டுள்ள சட்டமியற்றும் அதிகாரங்களுக்கும் புறம்பாகக் காங்கிரசால் நிறைவேற்றப்பட்ட ஒரு சட்டம் இருக்குமானால், அது அரசியல மைப்புக்கு முரணானதாக ஆகி, செல்லுபடியாகாததாகிவிடும்; கிரேட் ஈஸ்டர்ன் இரயில்வேக் கழகத்துக்குப் பாராளுமன்றச் சட்டத்தினால் அளிக் கப்பட்ட அல்லது அக் கழகத்தின் சட்ட அமைப்பினால் அளிக்கப்பட்ட அதிகாரங்களையும் மீறிய ஒரு சட்டத்தை அக் கழகம் நிறைவேற்றுமானால், அச் சட்டமும் செல்லுபடி யாகாததாகிவிடும்: காங்கிரசினால் நிறை வேற்றப்படும் சட்டம், காங்கிரசின் சட்டம் என்றழைக்கப்படுகிறது; அது சட்டவரம்புக்கு அப்பாற்பட்டதாயின், அது அரசியலமைப்புக்கு முரணானதென்று (unconstitutional) கூறப்படுகிறது; கிரேட் ஈஸ்டர்ன் இரயில்வேக் கழகத்தால் நிறைவேற்றப்படும் சட்டமானது, ஒரு துணை அல்லது உப சட்டம் (by-law) எனப்படும்; அது சட்டத்துக்கு அப்பாற்பட்டதாயின், அது அரசியலமைப்புக்கு முரணானதென்று கூறப்படாமல், செல்லுபடி ஆகாததெனக் கூறப்படும். சொற்களுக் கிடையே உள்ள இவ் வேறுபாடுகள், அவைகளால் உணர்த்தப்படும் பொருள்களுக்கு இடையேயுள்ள ஒற்றுமையை மறைக்க முடியாது. காங்கிரசின் சட்டங்கள் அல்லது நியூயார்க் அல்லது மஸாசுசெட்ஸ் சட்டமன்றத்தின் சட்டங்கள் உண்மையில் உப சட்டங்களே ஆகும்; அவை செல்லுபடி ஆக்கக்கூடியவையா என்பது அரசியலமைப்பினால் காங்கிரசுக்கோ அல்லது மாகாணச் சட்டமன்றங்களுக்கோ கொடுக்கப் பட்டுள்ள அதிகார வரம்புக்கு, அவை உட்பட்டிருக்கின்றனவா என்பதைப் பொறுத்திருக்கிறது. கிரேட் ஈஸ்டர்ன் இரயில்வேக் கழகத்தினருடைய வண்டியில், பயணச்சீட்டு இல்லாமல் பயணம் செய்பவர்களின்மீது தண்டப்பணத்தை அக் கழகத்தின் உப சட்டங்கள் விதிக்கின்றன; இவையும் சட்டங்களே; எனினும், அவை அக் கழ கத்தின் அரசியலமைப்பாக இருக்கும் பாராளுமன்றச் சட்டத்தினால், அக் கழகத்திற்கு அளிக்கப்பட்டுள்ள அதிகாரங்களுக்கு அடங்கியனவாக இருப்பதன்மூலமே, அவை செல்லுபடியாகும் தன்மையைப் பெறு கின்றன. உண்மையில், காங்கிரசும், கிரேட் ஈஸ்டர்ன் இரயில்வேக் கழகமும் கீழ்த்தரநிலையிலுள்ள சட்டமியற்றும் மன்றங்களே அன்றி வேறல்ல. அவைகளுடைய அதிகாரங்கள், தன்மையைப் பொறுத்த வரையில் (kind) வேறுபட்டிராமல், அளவைப் பொறுத்தவரையில் (in degree) யுனைடெட் கிங்டத்தின் இறைமை பாராளுமன்றத்தின் அதிகாரத்தினின்றும் வேறுபட்டு இருக்கின்றன.[1]

[1] இதற்கு ஒப்புமையாக நகராட்சி மன்றங்களின் உப சட்டங்களையும் அவை செல்லுபடியாததற்கு, அம் மன்றங்களுக்கு அளிக்கப்பட்டுள்ள அதிகாரங்களை அவை சார்ந்திருத்தலையும் காண்க. Johnson v. The Mayor of Croydon (1886); The Queen v. Powell (1884)

### அதிகாரங்களைப் பகிர்ந்தளித்தல். (Distribution of powers)

கூட்டரசு அமைப்பின் ஒரு முக்கிய இயல்பு, அதிகாரங்களைப் பகிர்ந்தளிப்பது என்பதாம். தேசிய அரசாங்கத்துக்கும், பல்வேறு மாகாண அரசாங்கங்களுக்கும் இடையே அதிகாரத்தைப் பகிர்ந்தளிப்பது என்பது தான், ஒரு கூட்டரசு நாட்டை அமைப்பதன் முக்கிய நோக்கமாகும். நடு அரசாங்கத்துக்கு அளிக்கப்படும் அதிகாரங்களெல்லாம் உண்மையில் பல்வேறு மாகாண அரசாங்கங்களுடைய அதிகாரத்துக்கு ஏற்படுத்தப் பட்ட வரம்புகளாக அமைகின்றன. மேலும், மாகாணங்களினால் பெறப்பட்டுள்ள உரிமைகளில் தலையிடுவதற்கு, நடு அரசாங்கத்துக்கு வாய்ப்பு இருத்தல் கூடாது என்பது நோக்கமாக இருந்தலால், அதனுடைய செயல்படும் எல்லையானது, கடுமையாக வரையறுக்கப்பட வேண்டிய கட்டாயம் தோன்றுகிறது. எடுத்துக்காட்டாக ஐக்கிய அமெரிக்க நாட்டின் அரசியலமைப்பு, ஐக்கிய அரசாங்கத்துக்கே அல்லது ஐக்கிய அரசாங்கத்தின் நிருவாகம், சட்டமன்றம், நீதிமன்றம் ஆகியவற்றுக்குத் தனிப்பட்ட, நுட்பமாக வரையறை செய்யப்பட்ட அதிகாரங்களை வழங்குகிறது; அவ் வரசியலமைப்பே, 'ஐக்கிய அரசாங்கத்துக்கு அரசியலமைப்புச் சட்டத்தினால் வழங்கப்படாதனவும், மாகாணங்களுக்குக் கொடுக்கப்படுதல் கூடாது எனத் தடை செய்யப் படாதனவும், ஆகிய அதிகாரங்கள் முறையே மாகாணங்களுக்கு அல்லது மக்களுக்கு ஒதுக்கி வைக்கப்பட்டிருக்கின்றன,' என்று கூறுகிறது.[1]

### உண்மையில் அதிகாரப் பிரித்தளிப்பு தேவையான அளவுக்கும் மேலாகச் செய்யப்பட்டுள்ளது

மேற்கூறிய செய்திகளே ஒரு கூட்டரசு அரசியலமைப்பிற்கு இன்றியமையாத அதிகாரப் பிரித்தளிப்பின் சாரமாகும். ஆனால், அதிகாரங்களைக் குறிப்பிட்டுக் கூறுவதிலும் வரையறை செய்வதிலும் உள்ள கொள்கை,

[1] ஐக்கிய அமெரிக்கநாட்டு அரசியலமைப்பின் 10ஆவது திருத்தம். சுவிஸ் நாட்டு அரசியலமைப்பிலும், 1867ஆம் ஆண்டின் பிரிட்டிஷ் வட அமெரிக்கச் சட்டமன்ற கனடிய அரசியலமைப்பிலும் (91, 92ஆவது பிரிவுகள்) இதையொத்த பிரிவுகளைக் காண்க.

எனினும், ஐக்கிய அமெரிக்க நாட்டின் அரசியலமைப்புக்கும், கனடிய டொமினியனின் அரசியலமைப்புக்கும் கொள்கையளவில் ஒரு முக்கிய வேறுபாடு உண்டு. ஐக்கிய அமெரிக்க நாட்டின் அரசியலமைப்பானது, திட்டவட்டமாக தேசிய அரசாங்கத்துக்கு வழங்கப்படாத அதிகாரங்களையெல்லாம் பல்வேறு மாகாணங்களுக்கென ஒதுக்கி வைத்துள்ளது. கனடிய அரசியலமைப்போ திட்டவட்டமாக, டொமினிய அரசாங்கத்துக்கே. மாகாணங்களுக்கெனத் தனியாகக் கொடுக்கப்படாத அதிகாரங்களை வழங்குகிறது. இவ்வளவில் சுவிஸ் அரசியல் அமைப்பு ஐக்கிய அமெரிக்கநாட்டின் அரசியலமைப்பைப் பின்பற்றுகிறது. ஆஸ்திரேலியக் காமன்வெல்த்தின் அரசியலமைப்பு, நடைமுறையில் ஐக்கிய அமெரிக்கநாட்டின் எடுத்துக்காட்டைப் பின்பற்றுகிறது. காமன்வெல்த்தின் பாராளுமன்றத்துக்களிக்கப்பட்டுள்ள அதிகாரங்களெல்லாம் அளவில் பெரியனவாக இருந்தாலும், அவை தெளிவாக வரையறுக்கப்பட்டிருக்கின்றன. மாகாணங்களுக்கு ஒதுக்கப்பட்டுள்ள அதிகாரங்கள் வரையறுக்கப்படவில்லை. காமன்வெல்த் அரசியலமைப்பின் 51, 52, 107ஆம் பிரிவுகள்.

கூட்டரசு அமைப்பின் இயல்போடு மிகவும் பொருத்தமாக இருக்கின்றன. ஆகையால், அக் கொள்கையானது, அரசியலமைப்பின் தேவைக்கும் மீறிய அளவில் கையாளப்படுகிறது. இவ்வகையாகப் பார்த்தால், ஐக்கிய அமெரிக்க நாட்டின் நடு அரசாங்கத்துக்கு அரசியலமைப்பினல் கொடுக்கப்பட்டுள்ள அதிகாரமானது, ஒரு குறிப்பிட்ட அதிகாரியிடமோ அல்லது பல அதிகாரிகளடங்கிய குழுவினிடமோ குவிக்கப்படாமல் இருப்பது தெரியவருகிறது. குடியரசுத் தலைவருக்குக் (President) குறிப்பிட்ட சில உரிமைகள் இருக்கின்றன. அவற்றில் காங்கிரஸ் சட்டமன்றமோ, நீதித்துறையினரோ தலையிட இயலாது. காங்கிரசுக்கு உண்மையில் மிகவும் வரையறுக்கப்பட்ட சட்டமியற்றும் அதிகாரமே உண்டு, ஏனெனில், அது பதினெட்டு விஷயங்களின் மீதுதான் சட்டங்களைச் செய்யலாம். எனினும், அது தன்னுடைய அதிகார எல்லைக்குள் குடியரசுத் தலைவரினின்றும், கூட்டரசு நீதிமன்றங்களினின்றும் சுதந்தரமாகச் செயல்படுகிறது: இதுபோலவே, நீதித்துறையும் தனக்குரிய அதிகாரங்களைப் பெற்றுள்ளது. இது குடியரசுத் தலைவரோடும் காங்கிரசோடும் ஒத்தநிலையில் இருக்கிறது; அதனுடைய அதிகாரம் அரசியலமைப்புச் சட்டத்திலிருந்து நேராகப் பெறப்படுவதாகையால், அச் சட்டத்தைத் தெளிவாக மீறினல் அல்லாமல், அதனுடைய அதிகாரத்தில் நிருவாகமோ அல்லது சட்டமன்றமோ தலையிட்டு அதை அழிக்க முடியாது. மாகாணங்களெல்லாம் கூட்டரசாக இணைந்து இருக்கும் போது, இந்த இணைப்பு முழுவதன்மீதும், அதனுடைய பல்வேறு பாகங்களின்மீதும் சில கோட்பாட்டு விதிகளும், சில நீதிக் கொள்கைகளும் கையாளப்படுதல் வேண்டும்; இந்த அரசியலமைப்பு எளிதில் மாற்றப்பட முடியாதபடி, இறுக்கமாக (inflexibility) இருப்பதனலேயே அரசியல் அமைப்பின் பிரிவுகளோடு சில கொள்கைகளை அல்லது கோட்பாடுகளைச் சேர்த்துள்ளனர். இக் கோட்பாடுகளெல்லாம், தன்மையளவில் அரசிய அமைப்புச் சட்டங்களாகா. எனினும், இவ்வாறு சேர்க்கப்பட்டமையால், அவை ஏற்றுக்கொள்ளப்பட்டுக் கையாளப்பட வேண்டியவை ஆகின்றன; இதே காரணத்தினல்தான் கூட்டரசு அரசாங்கத்தின் அதிகாரத்தின்மீதும், அதிலுள்ள பல்வேறு மாகாணங்களின் அதிகாரத்தின்மீதும் மேலும் கூடுதலாகச் சில கட்டுப்பாடுகள் விதிக்கப்படுகின்றன. அமெரிக்க ஐக்கியநாட்டின் அரசியலமைப்பானது, காங்கிரசும்[1] பல்வேறு மாகாணங்களும்[2] சில சட்டங்களைச் செய்வதினின்றும் அவற்றைத் தடுக்கின்றது. அத்தகைய சட்டங்களாவன - ஒருவருக்குக் கொலைத் தண்டனை விதிக்கும் சட்டம் (bill of attainder), நடந்துமுடிந்த ஒரு செயலைக் குற்றமாக்கும் சட்டம் (Ex post facto law) பிரபுநிலைப் பட்டத்தைக் கொடுக்கும் சட்டம், ஏதாவதொரு மாகாணத்தி

[1] ஐக்கிய அமெரிக்கநாட்டின் அரசியலமைப்புச் சட்டம், பிரிவு 1, 9.

[2] ஐக்கிய அமெரிக்கநாட்டின் அரசியலமைப்புச் சட்டம், பிரிவு, 1, 10.

னின்றும்[1] ஏற்றுமதியாகும் பொருள்களின்மீது வரியை விதிக்கும் சட்டம் முதலியவை; மேலும், ஐக்கிய அமெரிக்க நாட்டின் அரசியலமைப்புச் சட்டமானது, ஒவ்வொரு மாகாண அரசாங்கத்தின் செயல்களுக்கும், நீதி நடவடிக்கைகளுக்கும் முழுமதிப்பும் கொடுக்கப்படுதல் வேண்டுமெனக் கூறியும், ஒப்பந்தங்களின்[2] கடமைகளை நீக்கவல்ல சட்டங்களை மாகாணங்கள் நிறைவேற்றலாகாதபடி அவற்றைத் தடுத்தும்; மாகாணங்கள் தம்முள் ஏதேனும் அமைதி உடன்படிக்கையோ, நேச உடன்படிக்கையோ அல்லது இணைப்பரசு ஒப்பந்தமோ செய்யாதபடி அவற்றைத் தடுத்தும், சில ஏற்பாடுகளைச் செய்கிறது; இவ்வாறாக அது ஐக்கியநாட்டின் ஒவ்வொரு பகுதியிலும் நீதியின் அடிப்படைக் கொள்கைகளும், தடையற்ற வாணிப உரிமையும், தனி மனிதர் சொத்து உரிமைகளும் முழுமையாக மதிக்கப்படுதல் வேண்டுமென வழி செய்கிறது. மேலும், அது போர்க் கருவிகளை வைத்துக்கொண்டு பயன் படுத்துவதற்கு ஒவ்வொரு குடிமகனுக்கும் உள்ள உரிமையானது மீறப் படலாகாதெனவும்; அதே சமயத்தில், காங்கிரசின் இரு சட்டமன்றங்களில் எதனுடைய உறுப்பினரும், அம் மன்றத்தின் மூன்றில் இரண்டு பங்கு உறுப்பினர்களுடைய ஒப்புதல் இல்லாமல், அந்த மன்றத்திலிருந்து வெளியேற்றப்படலாகாது எனவும் உறுதியாகக் கூறுகிறது. மற்றக் கூட்டரசு நாடுகளின் அரசியலமைப்புகள், சட்ட வலிவுள்ளவையாகக் (legal sanctity) கருதப்படுகின்ற சில கொள்கைகளை அல்லது சிறுவிதிகளை அமெரிக்க ஐக்கியநாட்டின் அரசியலமைப்பு செய்திருப்பதைவிட, அதிகமாகத் தங்களுடைய அரசியலமைப்பு விதிகளினூடே சேர்த்துள்ளன; இவ்வாறு, 'பொறுப்பாக' அளிக்கப்பட்ட உரிமைகள் சுவிஸ் அரசியலமைப்பில் நிறையக் காணப் படுகின்றன.

கூட்டரசுத் தத்துவத்துக்கும் (federalism), 'அதிகாரங்களின் வரம்புக்'கும் தொடர்பு உண்டு; ஐக்கிய அமெரிக்கக் கூட்டரசில், கூட்டரசின் அரசியலமைப்புக் கொள்கைகள், அதன் மாகாண அரசியலமைப்புகளைப் பாதிப்பதைக் காணும் எந்த ஆங்கில ஆய்வாளரும், இதைவிட, மேற்கூறிய தொடர்பைக் காட்டக்கூடிய சிறந்த எடுத்துக் காட்டு வேறெதுவும் இருக்க முடியாதென்பதைக் காண்பார். எந்த ஒரு மாகாணத்தின் சட்டமன்றத்துக்கும், அமெரிக்கக் குடியரசின் அரசியலமைப்பின் மூலமாக மாகாணங்களுக்கு வழங்கப்பட்டுள்ள 'மாகாண இறைமையின்' (state sovereignty) முழு அதிகாரங்களும் கிடையாது; ஒவ்வொரு மாகாணச் சட்டமன்றமும் அம் மாகாணத்தின்

[1] ஐக்கிய அமெரிக்கநாட்டின் அரசியலமைப்புச் சட்டம், பிரிவு, 1, 9.

[2] ஐக்கிய அமெரிக்க நாட்டின் அரசியலலைப்புச் சட்டம், பிரிவு, 1, 10

அரசியலமைப்பிற்குக் கீழ்ப்பட்டதாகவே இருக்கிறது.[1] நியூயார்க் அல்லது மஸாசுசெட்ஸ் மாகாணத்தின் சாதாரணச் சட்டமன்ற மானது, ஐக்கிய அமெரிக்க நாட்டின் அரசியலமைப்பை மாற்ற முடியாததுபோலவே, தனது மாகாணத்தின் அரசியலமைப்பையும் மாற்றமுடியாது; அந்த ஐக்கியநாட்டில் எந்த ஒரு மாகாண அரசாங்க மும் கூட்டரசு அமைப்பிலேயே நிறுவப்பட்டிருக்கிறது. இதைவிடக் கவனிக்கத்தக்கது என்னவெனில், மக்களுக்கு மிக முக்கியமானதாகக் கருதப்படும் எந்தவிதிகளையும் மாற்றமுடியாதவாறு அவற்றுக்கு அரசியல் அமைப்பின் தன்மையைக் கொடுப்பதில் (Constitutional immutability) ஐக்கியக் குடியரசின் அரசியலமைப்பைக்காட்டிலும், மாகாண அரசியல் அமைப்புகள் மிகவும் தீவிரமாக இருந்து வந்துள்ளன. இவற்றை மிக நுட்பமாக இங்கே விளக்க இயலாவிட்டாலும், இவ்வாறு பொதுவாகக் கூறுதல் பொருத்தமே ஆகும். இல்லினாய்ஸ் மாகாணம் தனது அடிப் படைச் சட்டங்களான அரசியலமைப்போடு தூக்கும் கருவிகளைப் (elevators) பாதிக்கும் விதிகளையும் சேர்த்துள்ளது.

ஆயினும், மற்ற சில நிலைகளிலுள்ளதுபோல, மேற்கூறப்பட்ட நிலையிலும் காரணத்தையும், காரியத்தையும் தெளிவாகப் பிரித்தறிவதில் மிகவும் கடினமான தடைகள் இருக்கின்றன. ஒரு கூட்டரசு அரசாங்க அமைப்பானது, அதிலுள்ள பல்வேறு மாகாணங்களின் அரசியல் அமைப்புகளையும் பாதித்திருப்பதைப்போலவே, மாகாண அரசியல் அமைப்புகளில் முன்னரே இருந்துள்ள இயல்புகள் அல்லது தன்மைகள் ஐக்கிய அரசாங்க அமைப்பில் ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கின்றன என்பதும் உண்மையே. அமெரிக்க ஐக்கியநாட்டின் மிகத் தனிப்பட்ட நிறுவனமாகிய கூட்டரசு நீதிமன்றத்தைப் (Federal court) பற்றிய கருத்தே, இக் குடியரசை நிறுவியவர்களுக்காகவேனும், 1789ஆம் ஆண்டிற்குமுன்னர் மாகாண நீதிமன்றங்களுக்கும், மாகாணச் சட்ட மன்றங்களுக்கும் இடையே நிலவிய தொடர்பிலிருந்து தோன்றியிருக்கக் கூடுமென்று தெரிகிறது;[2] இதனை நாம் விரைவில் காண்போம்.

[1] இதனை ஆஸ்திரேலிய அரசியலமைப்புச் சட்டத்தின்மூலமாக (106, 107 பிரிவுகள்) மாகாணப் பாராளுமன்றங்களுக்குக் கொடுக்கப்பட்டுள்ள வரம்பற்ற அதிகாரங்களோடு முரண்பாடாகப் பார்க்கவும்; ஆஸ்திரேலிய அரசியலமைப்பு மாகாணங்களின் அரசியலமைப்புகளை நீக்கவில்லை. அமெரிக்கச் சட்ட அறிஞர்கள் மாகாண அரசியலமைப்புகளைக் கையாளும்போது, எவ்வாறு கூட்டரசுத் தத்துவத்தின் இயல்பை மனத்தில் கொண்டிருந்தார்களோ அதே போல, ஆஸ்திரேலியக் காமன்வெல்த்தைத் தோற்றுவித்த ஆஸ்திரேலிய அரசிய லமைப்புச் சட்ட அறிஞர்கள் ஆங்கிலப் பாராளுமன்ற இறைமை என்ற மரபைத் தங்களுடைய மனத்தில் கொண்டிருந்தார்கள்.

[2] அமெரிக்கக் கூட்டரசுக் கோட்பாட்டை ஆய்வுசெய்யும் ஐரோப்பிய அறிஞர்கள், மாகாண அரசியலமைப்புகள் செயல்படுவதையும் அதன் விளைவு களையும்பற்றி எதுவும் கூறாமல், மாகாணச் சட்டமன்றங்களின் செயலின் முக்கியத்துவத்தைப் புறக்கணித்து விடுகின்றனர். Boutmy எழுதிய (1888) நூலைப் பார்க்கவும். நன்றாகச் செயல்முறையில் இயங்குகின்ற கூட்டரசின் அரசியலமைப்பின் எந்தப் பிரிவும், ஏதாவது ஒரு மாகாண அரசியலமைப்பிலிருந்து

**அதிகாரப் பகிர்ந்தளிப்பே கூட்டரசு அரசாங்க வடிவத்தை ஓரரசு அரசாங்க வடிவத்தினின்றும் வேறுபடுத்திக் காட்டுகிறது**

எல்லா வகையிலும் அரசாங்கத்தின் செயல்திறனை வரம்புக்கு உள்ளாக்கியும், அரசின் ஆற்றலை ஒருவருக்கொருவர் சமநிலையிலும், சுதந்தரமாகவும் செயல்படக்கூடிய அதிகாரிகளிடையே பிரித்தும் வைக்கின்ற கூட்டரசுத் தத்துவத்தின் இயல்பை நாம் ஊன்றிக் கவனித்தல் வேண்டும்; ஏனெனில், இவ் வியல்புதான் அமெரிக்காவைப்போல அல்லது சுவிட்சர்லாந்தைப்போன்றுள்ள ஒரு கூட்டரசு அமைப்புக்கும், இங்கிலாந்தில் அல்லது ரஷ்யாவில் இருக்கும் ஓரரசு அரசாங்கமுறைக்கும் (unitarian system of govt.) உள்ள முக்கியமான வேறுபாடாக அமைந்துள்ளது. ஆங்கில அரசியலமைப்பானது, அதிகாரங்களின் சமநிலையில் (balance of powers) அமைந்திருப்பதாகவும், நிருவாக, சட்டமன்ற, நீதிமன்ற உறுப்புகளைத் தனித்தனியாகப் பாகுபாடு செய்துவைத்திருப்பதாகவும் நாம் கூறுகிறோம். இச் சொற்களுக்கு ஓர் உண்மையான பொருள் உண்டு. ஆயினும், இங்கிலாந்தைக் குறிப்பிட இச் சொற்களைக் கையாளும்போது, இவற்றுக்கு உள்ள பொருள் ஐக்கிய அமெரிக்க நாட்டுக்கு இவற்றைக் கையாளும்போதுள்ள பொருளினின்றும் முற்றிலும் வேறானதாகும். ஆங்கில அரசின் எல்லா அதிகாரமும் ஏகாதிபத்தியப் பாராளுமன்றத்தில் குவிக்கப்பட்டுள்ளன; எனவே, அரசாங்கத்தின் எல்லாத்துறைகளும் பாராளுமன்றத்தின் எதேச்சாதிகாரத்துக்குச் சட்டப்படியாகக் கட்டுப்பட்டுள்ளன. நமது நீதிபதிகள் சுதந்தரமாக இருக்கின்றனர் என்பதற்கு, அவர்கள் தங்களுடைய அலுவலை நிரந்தரமான கால அடிப்படையில் (permanent tenure) பெற்றுள்ளனர் என்றும், அரசர் அல்லது அமைச்சரவை ஆகியவற்றின் நேரான ஆதிக்கத்திற்கும் அப்பாற்பட்டவர்களென்றும் பொருள்; ஆனால், நீதித்துறையானது, பாராளுமன்றத்துக்கு ஒத்தநிலையில் இல்லை; அதனுடைய அலுவல்கள் எந் நேரத்திலும் ஒரு பாராளுமன்றச் சட்டத்தினால் மாற்றப்படுதல்கூடும்; இத்தகைய சட்டமும் வேறெந்தச் சட்டத்தையும் மீறியதாகாது. இதற்கு நேர்மாறாக அமெரிக்கக் கூட்டரசின் நீதித்துறையோ, குடியரசுத் தலைவரோடும் காங்கிரசுச் சட்டமன்றத்தோடும் ஒத்த நிலையிலிருக்கிறது; மேலும், ஒரு புரட்சியின்மூலமாக அல்லாமல் குடியரசுத் தலைவராலோ அல்லது காங்கிரசுச் சட்டமன்றத்தாலோ, நீதித்

---

பெறப்பட்டதாகவோ அல்லது குறிப்பாகக் காட்டப்பட்டதாகவோ இருப்பதாகும் என்ற கருத்து உண்மையே. இடர்ப்பாடாகச் செயல்படுகிற ஒவ்வொரு பிரிவும், முன் நிகழ்வு அல்லது மேற்கோள் (precedent) எதுவும் இல்லாமல், அரசியலமைப்பு மன்றம் (Convention) தானே கண்டுபிடித்துக்கொண்ட சட்டப் பிரிவு ஆகும்.'—பிரைஸ் எழுதிய American commonwealth (1910), vol. I page 35. அமெரிக்க அரசியல் நிறுவனங்களை முன்னரே படித்தவர்களுக்கும், 'ஐக்கிய அமெரிக்க நாட்டின் அரசியலமைப்பின் முக்கியமான இயல்புகளெல்லாம், அவற்றை வரைந்தவர்களுக்கு மாகாண அரசாங்கங்களின் இயல்புகளினாலேயே உணர்த்தப்பட்டுள்ளன' என்ற உண்மையை முதன்முதலாக விளக்கிக் காட்டுவதே பிரைஸ் எழுதிய நூலின் தனிச்சிறப்பு ஆகும்.

துறையின் எந்த ஓர் அதிகாரத்தையும் எடுத்துவிடமுடியாது. எனவே, நம் நாட்டில் நிருவாகமும் (executive) சட்டமன்றமும் (legislature) இரு வேறுபட்ட கூறுகளாக இருக்கின்றன; ஆனால், அவை 'அமெரிக்காவில், குடியரசுத் தலைவர் காங்கிரசின் இரு மன்றங்களினின்றும் தனித்துச் சுதந்தரமாக இருக்கின்றார் என்ற பொருளில் வேறுபட்டு இல்லை பொதுமக்கள் மன்றமானது (House of Commons) ஆட்சி அலுவல்களில் தலையிடுகிறது; உண்மையில் அமைச்சரவையானது, சட்ட மன்றத்தினால்தான் அலுவலில் அமர்த்தப்பட்டு நீடித்து இருக்கும் படியும் செய்யப்படுகிறது; தற்காலத்தில் எந்த ஒரு காபினெட்டும் (Cabinet) புதிதாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு பொதுமக்கள் மன்றத்தினால் கண்டனத்திற்கு உள்ளாக்கப்பட்டால் (Censured) அது ஒரு வாரம்கூட அதிகாரத்தை வைத்திருக்க முடியாது. அமெரிக்காவில், குடியரசுத் தலைவருடைய மிகவும் கடுமையான எதிர்ப்பாளர்களாக (opponents) இருப்பவர்களுக்கு, செனட் மன்றத்திலும் பிரதிநிதிகள் மன்றத்திலும் பெரும்பான்மை ஆதரவாளர்கள் இருந்தபோதிலும் குடியரசுத்தலைவர் தனது அலுவலை நிலையாகத் தன்னிடம் வைத்திருந்து, தன் மிக முக்கிய அலுவல்களைச் செய்ய இயலும். சுருங்கச்சொல்லில் ஓரரசு முறை என்பது, அரசாங்கத்தின் ஆற்றல் எல்லாம் யாவருக்கும் தெரியக் கூடிய ஓர் இறைமை அதிகாரியிடத்து அவர் பாராளுமன்றமாயினும் சரி—அல்லது சார் அரசராயினும் சரி—'குவிந்திருத்தல்' என்று பொருள்படும். கூட்டரசு முறை என்பது, 'அரசாங்கத்தின் ஆற்றலை எல்லாம் அரசியலமைப்புச் சட்டத்தினால் தோற்றுவிக்கப்பட்டு, அதனால் கட்டுப்படுத்தப்பட்டும் ஒன்றுக்கொன்று ஒத்த நிலையிலும் உள்ள பல்வேறு உறுப்புகளிடையே பிரித்தளித்தல்' என்று பொருள்படும்.

### நீதிமன்றங்களின் அதிகாரம்

பெல்ஜியத்திலும், ஃபிரான்சிலும் இருப்பதுபோன்று இறுக்கமான (rigid) அரசியலமைப்பு எந்த நாட்டில் இருந்தாலும், அதனுடைய பிரிவுகள் சாதாரணச் சட்டமன்றத்தினால் திருத்தி அமைக்கப்படாமல் இருக்கும்போது, அரசியலமைப்புச் சட்டத்துக்குப் பொருத்தமில்லாத அல்லது முரண்பாடான சட்டம் இயற்றப்படுவதினின்றும் பாதுகாப்பை ஏற்படுத்திக் கொள்ளவேண்டிய கட்டாயம் தோன்றுகிறது; இந்த நோக்கத்தை நிறைவேற்றிக் கொள்ளுவதற்தாக, பெல்ஜிய, ஃபிரெஞ்சு அரசியலறிஞர்கள் யாதொரு கருவியையும் அல்லது நிறுவனத்தையும் ஏற்படுத்தவில்லை; எனவே, அவர்கள், 'அரசியலமைப்புக்குரிய முழுமதிப்பையும், ஒழுக்கச்சார்பான அல்லது அரசாங்கச் சார்பான கட்டுப்பாடுகளின் மூலமாகப் (moral or political sanctions) பெறுதலே போதுமானது' என்று கருதினார்கள் எனவும், 'பாராளுமன்றத்தின்மீது விதிக்கப்படும் வரம்புகள் அல்லது கட்டுப்பாடுகளெல்லாம் கொள்கையின் குறிக்கோள்களே தவிர (maxims of policy)

உண்மையில் சட்டங்களாகா' என்று கருதினர்களெனவும் நாம் முடிவாகக் கூறலாம். குறைந்த அளவு அறுபது ஆண்டுகளுக்கு மேற்பட்ட காலத்தில், பெல்ஜிய நாட்டின் எந்த நீதிபதியும், அந் நாட்டின் எந்தப் பாராளுமன்றச் சட்டத்தையும் அரசியலமைப்புக்கு முரணானதெனத் தீர்ப்புக் கூறவில்லையென்று சொல்லப்படுகிறது நாம் முன்பே பார்த்துள்ளபடி, ஃபிரெஞ்சு தேசியச் சட்டமன்றத்தினல் நிறைவேற்றப்பட்டு, அரசாங்கச் சட்ட நூலில் சேர்க்கப்பட்டு, அரசாங்கத்தின் ஆற்றலின்மூலமாக ஆதரவைப் பெற்றுள்ள எந்த ஒரு சட்டத்தையும், அது எவ்வளவுதான் அரசியலமைப்புக்கு முரணனதாயினும், எந்த ஒரு ஃபிரெஞ்சு நீதி மன்றமும் தள்ளிவிடுவதற்கு உரிமையுடையதாக இருக்காது, ஃபிரான்சில் அரசியலமைப்புச் சட்டத்தைப் பாராளுமன்றமானது மதிக்காமலிருப்பதனலெழும் இடையூறு, அரசியல் பூசல்களில் நீதிபதிகள் கலந்து கொள்ளுவதனல் எழும் இடையூறை விட, மிகக் குறைவானதே என்று ஃபிரெஞ்சு அரசியலறிஞர்கள் எண்ணி இருக்கலாம்; இவ்வாறுதான் டிடாக்விலி எண்ணினர். சுருங்கச் சொல்லில், ஃபிரான்சும், பெல்ஜியமும் ஓரரசு அரசியலமைப்பில் ஆட்சி செய்யப்படுகின்றனவாகையால், இவை ஒவ்வொன்றிலும் காணப்படுகின்ற பாராளுமன்றத்தின் இறைமையல்லாத இயல்பு, அவற்றின் அரசாங்க அமைப்பில் தற்செயலாகத் தோன்றியதல்லாமல், அதனுடைய முக்கிய இயல்பாக அமைந்திருக்கவில்லை. கூட்டரசுமுறையில் நிலைமை நேர்மாருக இருக்கிறது. இம் முறையில் அரசியலமைப்பின் சட்டப்படியான மேலான தன்மையே (supremacy of the constitution), இத்தகைய அரசுமுறை இயங்குவதற்கு இன்றியமையாததாக இருக்கின்றது; ஐக்கிய அமெரிக்கக் கூட்டரசு நாட்டினைத் தோற்றுவித்தவர்களுடைய சிறப்பு அல்லது புகழுக்கே காரணம், அவர்கள் தங்களுடைய அரசியலமைப்புச் சட்டமானது பெயரளவிலும் நடைமுறையிலும் நாட்டின் தலைசிறந்த சட்டமாக ஆவதற்கு வேண்டிய ஏற்பாடுகளைக் கண்டுபிடித்து ஏற்றுக்கொண்டதுதான். இந்த நோக்கத்தை அவர்கள், யாவருக்கும் மிகத் தெளிவாகத் தெரியக்கூடிய ஒரு கொள்கையைக் கடைப்பிடிப்பதன் மூலமாகவும், இக் கொள்கையை நிறைவேற்றி வைக்கக்கூடிய தக்க ஒரு கருவியைக் கண்டுபிடித்ததன் மூலமாகவும் அடைந்தனர்.

## நீதிமன்றங்களின் அதிகாரம் எவ்வாறு கையாளப்படுகிறது

இந்தக் கொள்கையானது, ஐக்கிய அமெரிக்க நாட்டின் அரசியல் அமைப்புச் சட்டத்தில் மிகத் தெளிவாகக் குறிப்பிடப்படுகிறது. அதனுடைய 6ஆவது பிரிவு பின்வருமாறு கூறுகிறது: 'இந்த அரசியல் அமைப்புச் சட்டமும், இதனை ஒட்டி ஐக்கிய அமெரிக்க நாட்டில் செய்யப்படும் சட்டங்களும் நாட்டின் மேலான சட்டமாக அமையும்; மேலும், இதற்கு முரணுக எந்த மாகாணத்தினுடைய அரசியலமைப்புச் சட்டமும்

மற்றச் சட்டங்களும் இருந்தாலும், இதுவே ஒவ்வொரு மாகாணத்திலுள்ள நீதிபதிகளையும் கட்டுப்படுத்தும்.'[1] இச் சொற்றொடர்களின் உட்கருத்து எவருக்கும் மயக்கமில்லாத வகையில் தெளிவாகத் தெரிகிறது. சான்சலர் கென்ட் என்ற ஆசிரியர் இதனை விளக்கிப் பின் வருமாறு கூறுகிறார்: 'ஐக்கிய அமெரிக்க நாட்டின் அரசியலமைப்புக்கு முரணாக இருக்கும் காங்கிரசுச் சட்டசபையின் ஒவ்வொரு சட்டமும், மாகாணச் சட்டமன்றங்களின் சட்டங்களும், அவ்வாறு முரணாக இருக்கும் எந்த மாகாண அரசியலமைப்பின் எந்தப் பிரிவும், உண்மையில் செல்லுபடியாகாதவை ஆகும்.'[2] ஆகையால் நியூயார்க்போன்ற எந்த ஒரு மாகாணத்திலும், அல்லது ஐக்கிய அமெரிக்கநாட்டின் உயர்தர நீதிமன்றத்திலும் (Supreme C urt) உள்ள எந்த ஒரு நீதிபதிக்கும் சட்டப்படியாக உள்ள கடமை தெளிவாக அமைந்து இருக்கிறது. ஐக்கிய அமெரிக்க நாட்டின் அரசியலமைப்புக்குப் பொருந்ததாத எந்தச் சட்டத்தையும்—அது காங்கிரசிடமிருந்தோ அல்லது மாகாணச் சட்ட மன்றங்களிலிருந்தோ வந்தாலும் —செல்லுபடி ஆகாததெனத் திர்ப்புக்கூற நீதிபதி கடமைப்பட்டுள்ளார். இந் நிலையில் அவருடைய கடமையானது, இங்கிலாந்தில் கிரேட் ஈஸ்டர்ன் அல்லது வேறு எந்த இரயில்வேக் கழகத்தாலும் நிறைவேற்றப்பட்ட ஓர் உப சட்டம் செல்லுபடி ஆகுமா எனத் தீர்ப்புக்கூறுவதற்கு ஆங்கில நீதிபதிக்கு உள்ள கடமையை ஒத்துத் தெளிவாக இருக்கிறது: ஓர் ஆங்கில நீதிபதி, ஒரு வழக்கில் தீர்ப்புக் கூறும்போது, அவ் வழக்குக்குப் பொருந்தக்கூடிய ஒவ்வொரு பாராளுமன்றச் சட்டத்துக்கும் எவ்வாறு கட்டுப்பட்டுத் தீர்ப்புக் கூறுவாரோ அதுபோலவே, அமெரிக்க நீதிபதியும் தீர்ப்புக் கூறுகையில், அரசியலமைப்பின் விதிகளுக்குக் கட்டுப்பட்டே கூறவேண்டும்.

### அரசியலமைப்பின் தலையாய தன்மை, உயர்நீதி மன்றத்தைத் தோற்றுவிப்பதன்மூலம் நிலைபெறுகிறது

இக் கொள்கையை மிகத் தெளிவாக அவர்கள் விதித்திருப்பது ஒரு பெரிய காரியமாகும்; ஆயினும், இக் கொள்கையானது யாவரையும் கட்டுப்படுத்தும்படி எவ்வாறு உறுதி செய்துகொள்வது என்பதுதான் பெரியதொரு கேள்வியாகும்; ஏனென்றால், கூட்டரசு அரசாங்கத்தினைச் சார்ந்துள்ள நீதிபதிகள் அரசியலமைப்புச் சட்டத்தை நடு அரசாங்கத்திற்குச் சாதகமாக இருக்கும்படியே விளக்குவார்கள் என்ற ஓர் இடர்ப்பாடும், மாகாணங்களினால் அமர்த்தப்பட்ட நீதிபதிகள் அரசியலமைப்புச் சட்டத்தை, மாகாண உரிமைகள் அல்லது நலன்களுக்குச் சாதகமாக இருக்கும்படியே விளக்குவார்கள் என்ற இடர்ப்பாடும் தோன்ற இட

[1] ஐக்கிய அமெரிக்கநாட்டின் அரசியலமைப்பு, 6ஆவது பிரிவு (உப பிரிவு, 2)

[2] Kent, Commentaries, (1873) vol. I, para, 314.

மிருக்கிறது. உயர்நீதி மன்றத்தையும் கூட்டரசு நீதித்துறையையும் தோற்றுவிப்பதன் மூலமாக இக் கேள்விக்குத் தீர்வு காணப்பட்டது.

### உயர்தர நீதிமன்றத்தின் இயல்பும் அதன் செயலும்

உயர்தர நீதிமன்றத்தினுடைய இயல்பையும், நிலைமையையும்பற்றி, நாம் இங்கு எடுத்துக்கொண்ட நோக்கத்துக்குப் பொருத்தமாகக் கீழ்க் கண்டவற்றைமட்டுமே கூறுதல் போதுமானது. இந்த நீதிமன்ற மானது, அரசியலமைப்புச் சட்டத்திலிருந்தே தோன்றியதாக இருக் கிறது: எனவே, அது குடியரசுத் தலைவரோடும், காங்கிரசுச் சட்ட மன்றத்தோடும் ஒத்த நிலையில் உள்ளது; அதனுடைய உறுப்பினர்கள் கூட்டரசு நீதித்துறையிலுள்ள ஒவ்வொரு நீதிபதியையும்போல, தங்க ளுடைய அலுவல்களைத் தங்களுடைய நன்னடத்தைக் கால அளவில் செய்து வருகின்றனர்; அவர்களுடைய சம்பளங்கள் அவர்களுடைய அலுவல் காலத்தில் குறைக்கப்படுவதற்குரியன அல்ல.[1] உயர்தர நீதி மன்றமானது, கூட்டரசு நீதித்துறை முழுவதற்கும் தலைமையாக இருக் கிறது; ஐக்கிய அமெரிக்க நாடு முழுவதிலும், கூட்டரசு நீதித்துறை யானது, தனதுகீழ்த்தர நீதிமன்றங்களின் மூலமாகத் தனது அதிகாரத்தை விரிவாகக் கையாண்டு, மாகாண அலுவலருடைய உதவியைப்பெறாமல், தன் சொந்த அலுவலர்களின் உதவியினாலேயே, தனது தீர்ப்புகளை நிறைவேற்ற முடியும். உயர்தர நீதிமன்றமானது, முதல்நிலையிலேயே தீர்ப்பு வழங்கக்கூடிய முறைமை அதிகாரத்தைப் பெற்றிருந்தாலும் மேல் முறையீட்டுத் தீர்ப்புகளை வழங்கக்கூடிய (appellate character) அதனுடைய அதிகாரத்திலிருந்தே அதனுடைய முக்கியத்துவம் தோன்றுகிறது: அரசியலமைப்புக்குக் கொடுக்கவேண்டிய விளக்கங் களைப் பொறுத்த எல்லா விஷயங்களிலும், ஐக்கிய அமெரிக்க நாட்டி லுள்ள எந்தக் கூட்டரசு நீதிமன்றமும் அல்லது மாகாண நீதிமன்றமும் கூறும் தீர்ப்புக்கு எதிராக, மேல்முறையீடுகளைக் கேட்கக்கூடிய உயர்தர, கடைசியான நீதிமன்றமாக அது இருக்கிறது. உண்மையில் அரசியல் அமைப்புக்கு முடிவான விளக்கங் கூறுபவராக அது இருக்கிறது: எனவே, காங்கிரசுச் சட்டமன்றத்தினாலோ அல்லது ஒரு மாகாணச் சட்ட மன்றத்தினாலோ (எடுத்துக்காட்டாக நியூயார்க்) நிறைவேற்றப்பட்ட ஒரு சட்டம், அரசியலமைப்புச் சட்டத்துக்கு ஒத்ததா, இல்லையா என்று கடைசியாகத் தீர்ப்புக் கூறக்கூடிய ஒரு மேல்முறையீட்டு நீதிமன்றத்தின் நிலைமையை நாம் விளங்கிக் கொள்ளுவதற்கு, ஐக்கிய அமெரிக்க நாட்டில், வழக்குத் தொடுப்பதற்கு இருவகைப்பட்ட நீதிமன்றங்கள் இருக்கின்றன என்பதையும், அவையே அரசியலமைப்புச் சட்டத்தி னின்றும் தங்களுடைய அதிகாரத்தைப் பெறுகின்ற கீழ்த்தரக் கூட்டரசு நீதிமன்றங்களெனவும், நியூயார்க் அல்லது மஸ்ஸாசுஸெட்ஸ் போன்ற மாகாண அரசியலமைப்புகளினால் தோற்றுவிக்கப்பட்டு, அவற்றின்படி

[1] ஐக்கிய அமெரிக்க நாட்டின் அரசியலமைப்பு, பிரிவு 3, உப பிரிவுகள் 1, 2.

இயங்குகின்ற மாகாண நீதிமன்றங்களெனவும்படும் என்பதையும் நினைவில் கொள்ளவேண்டும்; கூட்டரசு நீதித்துறையின் முறைமை அதிகாரமும், மாகாண நீதித்துறையின் முறைமை அதிகாரமும் பல வழக்குகளில் ஒத்து இயங்கக்கூடியவாக இருக்கின்றன; எவ்வாறெனில் ஐக்கிய அமெரிக்க நாட்டின் சட்டங்களின் கீழும், அரசியலமைப்பின் கீழும் எழக்கூடிய வழக்குகளைப்பற்றியே கூட்டரசு நீதிமன்றங்களின் முறைமை அதிகாரம் முக்கியமாகக் செலுத்தப்பட்டாலும், அது வழக்கிடும் கட்சிகளின் தன்மையையும் பொறுத்து அமைகிறது; எந்த மாகாண நீதிமன்றத்தாலும் தீர்க்கப்படமுடியாத சில வழக்குகள் இருந்த போதிலும், ஒரு கூட்டரசு நீதிமன்றத்தில் கொண்டுவரப்படக்கூடிய வழக்குகளை ஒரு மாகாண நீதிமன்றமானது ஏற்றுக் கொள்ளலாம்; எவ் வகையில் அது காங்கிரசினால் நிறைவேற்றப்பட்ட ஒரு சட்டத்திற்கு அல்லது மாகாணச் சட்டத்திற்கு உள்ள செல்லுபடியாகும் தன்மை, அரசியலமைப்பினால் ஏற்பட்டதா என்று ஆராயும்பொறுப்பைப் பெற்றிருக்கிறது. உயர்தர நீதிமன்றமானது, கீழ்த்தரக் கூட்டரசு நீதிமன்றங்களின் தீர்ப்புக்கு எதிராக மேல் முறையீடுகளைக் கேட்கும் நீதிமன்றமாக இருத்தல் வேண்டுமென்பது, எவருக்கும் வியப்பை அளிக்காது. ஆனால், (எடுத்துக்காட்டாக நியூயார்க்) மாகாண உயர்நீதி மன்றங்கள் காங்கிரசின் சட்டங்களையோ அல்லது அரசியலமைப்பின் பிரிவுகளையோ விளக்கி அல்லது அவற்றை ஆதாரமாகக்கொண்டு, தீர்ப்புகளை வழங்கும் போது, அவறிற்கெதிரான மேல் முறையீட்டு நீதிமன்றமாக உயர்நீதி மன்றம் இருக்கிறதென்பதுதான் இங்குக் கவனிக்கப்படவேண்டியதாகும். ஒரு மாகாண நீதிமன்றத்தின் தீர்ப்பினால் பாதிக்கப்பட்ட ஒரு கட்சி, எந்தெந்த வழக்குகளில் ஐக்கிய அமெரிக்க நாட்டு உயர்நீதி மன்றத்திற்கு மேல்முறையீடு செய்ய உரிமையுடையது என்பது 1789ஆம் ஆண்டு செப்டம்பர் 24ஆம் தேதி நிறைவேற்றப்பட்ட காங்கிரசின் சட்டமொன்றில் விதிக்கப்பட்டிருக்கிறது; இச் சட்டத்தின் 25ஆம் பிரிவு பின்வருமாறு கூறுகிறது: 'எந்த ஒரு மாகாணத்தின் உயர்நீதி மன்றத்திலும் எந்த ஒரு வழக்கிலும் அளிக்கப்படும் முடிவான தீர்ப்பானது, ஐக்கிய அமெரிக்க நாட்டு அரசாங்கத்தினால் செய்யப்பட்ட உடன்படிக்கை, சட்டம் அல்லது அதிகாரம் ஆகியவை செல்லுபடியாகாதவை என, மாகாண நீதிமன்றத்தில் ஆராயப்பட்டபின் அளிக்கப்பட்டால், அத் தீர்ப்பு, சட்டத்தைப் பொறுத்தவரையில் தவறுடையதென ஐக்கிய அமெரிக்க நாட்டின் உயர்நீதி மன்றத்தில் மேல் முறையீட்டுக்காகக் கொண்டுவரப்படலாம்; அல்லது மாகாண அரசாங்கத்தின் ஆணையானது, ஐக்கிய அமெரிக்க அரசாங்க உடன்படிக்கைகள், சட்டங்கள் அல்லது அரசியலமைப்பு ஆகியவற்றுக்கு முரணானதென்று வழக்குப் போடப்பட்டு, அவ் வழக்கில் மாகாண அரசாங்க ஆணை செல்லுபடியாகுமெனத் தீர்ப்புக் கூறப்பட்டாலும்; ஐக்கிய அமெரிக்க அரசாங்கத்தின் ஆணையின்பேரில் பெறப்படும் எந்த அலுவலும் அல்லது

சலுகையும் அல்லது சட்டமும் அல்லது உடன்படிக்கையும் அல்லது அரசியலமைப்பும் செல்லுபடியாகாதென வழக்குத் தொடரப்பட்டு, அவ் வழக்கில் மேற்கூறிய உரிமை, சலுகை முதலியவற்று எதிராகத் தீர்ப்பளிக்கப்பட்டாலும்; அத் தீர்ப்பு மேல் முறையீட்டுக்காக உயர்நீதி மன்றத்திற்காகக் கொண்டுவரப்படலாம்.'[1] இச் சட்டத்தில் காணப் படும் விதிமுறைச் செய்திகளை (technicalities) நீக்கிவிட்டால், அதனுடைய பொருள் இதுதான். எடுத்துக்காட்டாக, நியூயார்க் போன்ற மாகாண உயர்நீதி மன்றத்தில் வரும் ஒரு வழக்கில் ஈடுபட்டுள்ள ஒரு வழக்காளி தனது உரிமை அல்லது பாதுகாப்புக்கு அரசியல் அமைப்பையோ அல்லது அதன்படி செய்யப்பட்டுள்ள சட்டத்தையோ ஆதாரமாகக் கொண்டிருந்தால், அவருடைய நிலைமை இவ்வாறிருக்கும். அளிக்கப்படும் தீர்ப்பு அவருக்குச் சாதகமாக இருந்தால், அதற்கு மேல் முறையீடு தேவையில்லை: தீர்ப்பு அவருக்கு எதிராக இருந்தால், அமெரிக்க ஐக்கிய நாட்டின் உயர்நீதி மன்றத்திற்கு மேல் முறையீடு செய்துகொள்ள அவருக்கு உரிமையுண்டு. மாகாண நீதிமன்றங்கள் தங்களுடைய அலுவல்களைச் செய்வதில் அரசியலமைப்பின் பாதுகாவலர் களாக இருக்கும்படி ஊக்குவிக்கப்படுகின்றன என்பதையும், இதன் மூலமாக உயர்நீதி மன்றமானது, அரசியலமைப்பைப் பொறுத்த எல்லாக் கேள்விகளிலும் முடிவான நீதிமன்றமாக இருக்கிறதென்பதையும், இவற்றை மேலோட்டமாகப் பார்க்கின்ற எந்த வழக்கறிஞரும் அறிந்து கொள்ளுவார்.

அரசியலமைப்பின்கீழ்ப் பணிசெய்யும் பல்வேறு அதிகாரிகளுடைய உரிமைகளைப்பற்றியும், சட்டங்கள் அரசியலமைப்புக்கு ஒத்திருக்கின் றனவா என்பதைப்பற்றியும் தீர்ப்புக் கூறுவதற்கு ஒவ்வொரு நீதி மன்றத்திற்குள்ள அதிகாரமும், கடைசியாக உயர்நீதி மன்றத்திற்கு உள்ள அதிகாரமும் அடிக்கடி கையாளப்படாமல், வெகு அரிதாக எப்போதாயினும் கையாளப்படுகிறது என்பதாக எவரும் எண்ணக் கூடாது; ஏனெனில், இங்கிலாந்தில் அரசியின் நீதிமன்றமானது, ஓர் இரயில்வேக் கழகத்தின் உட்சட்டத்தைச் செல்லுபடியாகாதெனத் தீர்ப்புக் கூறினல், அது எவ்வாறு எவருக்கும் வியப்பை அளிக்காதோ, அதேபோல மேற்கூறிய அதிகாரமும் ஐக்கிய அமெரிக்க நாட்டின் குடிகளிடையே எவ்வித வியப்புணர்ச்சியையும் தூண்டாமல் அடிக்கடி கையாளப்படுகிறது. மிக முக்கியமான விளைவுகளை உண்டாக்கக்கூடிய விஷயங்களை அமெரிக்க நீதிமன்றங்கள் கையாண்டு வந்துள்ளன; ஐக்கிய அமெரிக்க அரசாங்கத்தால் செலுத்தப்படவேண்டிய கடன் களுக்கு[2] முதலிடம் கொடுப்பதற்கு காங்கிரசுக்கு உரிமை உண்டு

[1] Kent, Commentaries (1873) vol. I paras, 299, 300.

[2] Kent எழுதிய விளக்கம், paras, 244—248

எனவும்; சட்டப்படியாக ஒரு பாங்கைக்[1] காங்கிரசு நிறுவக்கூடும் என்வும்; அரசியலமைப்பினால் விதிக்கப்பட்ட ஒரே விகித வரிமுறைக் கொள்கைகளுக்கு (principles of uniformily of taxation) முரணுகை இல்லாமல், காங்கிரஸ் வரிகளை விதிக்கவும், வாங்கவும் கூடுமெனவும் நீதி மன்றங்கள் தீர்மானித்துள்ளன; இராணுவத்தைச் செலுத்துவதற்கு உரிமையுடையவர் எவர் என்பதையும்;[2] பிரிவினை உரிமையின்மீது நடைபெற்ற போர்க்காலத்தில் (war of secession) காகிதப் பணம் வெளியிடுவதற்குக் காங்கிரசு கையாண்ட அதிகாரம் செல்லுபடியாகுமெனவும்[3] நீதிமன்றங்கள் தீர்ப்பளித்துள்ளன. மேலும், நீதிமன்றங்கள் ஐக்கிய அமெரிக்க அரசாங்கத்தின் அதிகாரத்தை எவ்வளவு கடுமையாக வரையறுத்துள்ளனவோ, அதுபோலவே பல்வேறு மாகாணங்களின் அதிகாரத்தையும் வரையறுத்துள்ளன. நடந்துமுடிந்த செயலைக் குற்றமாக்கும் எந்த சட்டத்தையும் (expost facts laws) எந்த மாகாணத்தினின்றும் ஏற்றுமதியாகும் பொருள்களின்மீது சிறிதளவிலும் வரிவிதிக்கும் ஒவ்வொரு சட்டத்தையும்; ஒப்பந்தங்களில் நிறைவேற்றப்பட வேண்டிய கடமைகளைத் தள்ளுபடி செய்யும் மாகாணச் சட்டங்களையும், நீதிமன்றங்கள் அரசியலமைப்புச் சட்டத்திற்கு முரணானவை என்று தீர்ப்பளித்துத் தள்ளுபடி செய்திருக்கின்றன. சுருக்கமாகக் கூறினால் நீதி நிலைநிறுத்தப்படுவதும், உள்நாட்டில் தடையற்ற வாணிபம் நடைபெறுவதும், சொத்துரிமைகளுக்குப் பொதுவாக மதிப்பு இருப்பதும் நீதிமன்றங்கள் அளித்த தீர்ப்புகளினால்தான்; அண்மையில் அளிக்கப்பட்ட ஒரு தீர்ப்பு 'பொது நலனுக்கு முரணானதென்று நீதிபதிகளுக்குத் தோன்றக்கூடியவகையில், தனியார் சொத்தைப் பயன்படுத்துவதைத் தடுக்கும் சட்டங்கள் அரசியலமைப்புக்கு ஒத்தனவே' என்று நிலைநாட்டுவதற்கு நீதிமன்றங்கள் ஆயத்தமாய் இருப்பதைக் காட்டுகிறது.[4] மேலும், அரசியலமைப்பின் பிரிவுகளை நாட்டின் முக்கியச் சட்டமாகச் செயல்படுத்தியும், அதன்மூலமாக ஒவ்வொரு அதிகாரியையும் அவரவருக்குரிய அதிகார எல்லையில் வைத்தும், நீதிமன்றங்கள் கையாளுகின்ற அதிகாரமானது, ஐரோப்பிய விமர்சகர்களுக்குத் (critics) திகைப்பையும் வியப்பையும் அளிக்கக்கூடிய அளவுக்கு எளிதாகவும் ஒழுங்காகவும் கையாளப்படுகின்றது. இதற்குக் காரணம், அமெரிக்க ஐக்கிய நாட்டில் நீதிபதிகள் அரசியலமைப்பின் செயலைக் கட்டுப்படுத்தும்போது, அவர்கள் நீதி வழங்கும் அலுவல்களைச் செய்வதும், அவர்கள் தங்கள்

[1] Kent *எழுதிய விளக்கம்*, paras, 248—254

[2] Kent *எழுதிய விளக்கம்*, paras, 262—266

[3] Story, Commentaries on the Constitution (1873) vol. II ; sections 1116, 1117. Hepburn *v.* Griswold (1870) 8 Wallace 603, Knox *v.* Lee (1871) 12 Wallace 457 வழக்குகளைப் பார்க்கவும்.

[4] Munn *v.* Illinois (1877) 4 Otto 113. *தலைமை நீதிபதி மார்ஷல் அளித்த தீர்ப்புகளைப் பார்க்கவும். இவை* The Writings of John Marshall upon the Federal Constitution, (1839) *என்ற நூலில் காணப்படுகின்றன.*

முன்னுள்ள வழக்குகளேயன்றி வேறெதனையும் தீர்மானிக்காததும்தான். உயர்தர நீதிமன்றமானது, காங்கிரசின் சட்டங்கள் செல்லுபடியாகா தவை எனத் தீர்ப்பளிப்பதாகக் கூறப்படுகிறது இயல்பே; ஆனால், நடைமுறையில் இவ்வாறில்லை. நீதிமன்றம் காங்கிரசின் எந்தச் சட்டத்தின் மீதும் நேரடியாக எந்தத் தீர்ப்பையும் கூறுவதில்லை. நீதிமன்றம் செய்வது என்னவென்றால், ஒரு குறிப்பிட்ட வழக்கில், A என்பவர் X என்பவருக்கு எதிராகத் தீர்ப்பைப் பெறுவதற்கு உரியவரா அல்லது இல்லையா என்று தீர்மானிப்பதுதான்; ஆனால், இவ் வழக்கைத் தீர்மானிக்கும்போது, நீதிமன்றம் 'ஒரு குறிப்பிட்ட காங்கிரசின் சட்டமானது, காங்கிரசுக்கு அரசியலமைப்பினால் அளிக்கப்பட்ட அதிகாரங்களையும் மீறிய சட்டமாகும் என்ற காரணத்தினால், அந்தக் குறிப்பிட்ட காங்கிரசின் சட்டத்தை எடுத்துக்கொள்ளாமல் விட்டுவிடலாம்' என்று தீர்ப்புக் கூறுகிறது.[1]

## ஐக்கிய அமெரிக்க அரசியலை நிறுவியவர்களுடைய உண்மையான சிறப்பு

மேற்கூறிய கருத்து உண்மையில் ஒரு வேறுபாடே அன்று எனவும், அது ஒரு சிறு பாகுபாடுதான் எனவும் எவரேனும் எண்ணினால், அவர் அரசியலை நன்கு அறியாதவரே ஆகிறார்; அத்தகையவர், நீதிமன்றமானது நீதிவழங்கும் அலுவலைமட்டுமே செய்வதன்மூலமாக அதனுடைய அதிகாரம் எவ்வளவுக்கு வளர்ச்சியடைகிறது என்பதையும் அறியாதவராகிறார். ஆயினும், டி டாக்விலியைப்போல, ஐக்கிய அமெரிக்க அரசியலைத் தோற்றுவித்த அரசியலறிஞர்களுடைய அறிவுத்திறனைப் பாராட்டிக்கூறும் ஆசிரியர்களும், அவ் வரசியலறிஞர்களுடைய புதுமைக் கருத்துகளை மிகைப்படுத்திக் கூறுகின்றனர். உண்மையில் அவர்களுடைய சிறப்பு என்னவெனில், அவர்கள் ஆங்கிலச் சட்ட முறையினின்றும் வழி உரிமையாகப்பெற்ற சில கருத்துகளைத் தங்களுடைய புதிய குடியரசின் புதிய சூழ்நிலைகளுக்குப் பொருந்தக் கையாண்ட திறமைதான். ஆங்கில நடவடிக்கை முறையின் மரபை நன்கு அறிந்த எவருக்கும், எந்த நீதிமன்றமும் தன் முன்னுள்ள வழக்கைத் தவிர, வேறெதனையும்பற்றித் தீர்ப்பு வழங்குவதென்பது நடைபெற இயலாத ஒரு செயலாகவே தோன்றும். ஒரு பட்டயத்தின்படி (charter) ஆளப்படும் எந்த ஒரு குடியேற்றநாட்டிலும் அப் பட்டயத்தின் விளைவாக, அக் குடியேற்றநாட்டுச் சட்டத்தின் செல்லுபடியாகும் தன்மை (validity) அரசருடைய ஆலோசனைக்குழு அல்லது பிரிவி கௌன்சிலினால் ஆராயப்படுவதாகிறது; குடியேற்ற நாட்டில் வாழும் எவருக்கும் இந் நிலை தெரியும்; எனவே, அத்தகையோருக்கு அரசியலமைப்புச் சட்டத்தினால், வரம்பு செய்யப்பட்ட

[1] இதற்கு இரண்டாம் இயலைப் பார்க்கவும்.

அதிகாரங்களை உடைய குடியேற்றநாட்டுச் சட்டமன்றங்களினால் நிறைவேற்றப்பட்ட சட்டங்கள் அரசியலமைப்புக்கு ஒத்திருக்கின்றனவா என்று, குறிப்பிட்ட வழக்குகளில் தீர்ப்புக்கூறும் அதிகாரத்தை நீதிமன்றத்துக்கு வழங்குவது வியப்பை அளிக்காது; ஏனெனில், குடியேற்றநாட்டுச் சட்டமன்றங்களின் அதிகாரமானது, பட்டயத்தினால் அல்லது பாராளுமன்றச் சட்டத்தினால் வரம்புக்குள்ளாக்கப்பட்டுள்ளது. ஃபிரெஞ்சுப் பாராளுமன்றங்களின் மரபை அறிந்த ஒரு ஃபிரெஞ்சுச் சட்ட அறிஞருக்கு, இதெல்லாம் புரிந்துகொள்ள இயலாத செய்தியாகும். ஆனால், உப சட்டங்களை (by-laws) ஆங்கில நீதிமன்றங்கள் எவ்வாறு கருதுமோ, அதைப்போலவே அமெரிக்கக் குடியரசை நிறுவியவர்கள், காங்கிரசின் சட்டங்களைக் கருதினர் என்பதையும், அவர்கள் உயர்தர நீதிமன்றத்தை நிறுவியபோது, பிரிவி கௌன்சிலினுடைய அலுவலர்களைத் தங்களுடைய கருத்தில் கொண்டிருத்தல் கூடுமென்பதையும்: ஓர் ஆங்கிலச் சட்ட அறிஞர் நன்கு அறிந்து கொள்ளுவார். மேலும், மாகாண அரசியலமைப்புக்கு முரணான மாகாணச் சட்டமன்றங்களின் சட்டங்கள், அரசியலமைப்பு மாறுபட்டவையெனவும், எனவே செல்லுபடியாகா எனவும் சில மாகாண நீதிமன்றங்களால் தீர்ப்பளிக்கப்படுவதற்குக் காரணமாக இருந்த சில வழக்குகளையும் அமெரிக்கக் குடியரசை நிறுவியவர்கள் நன்றாக நினைவில் வைத்திருக்கக்கூடும் என்பதும் தெளிவு. ஒரு சட்டம் அரசியலமைப்புக்கு ஒவ்வாததெனத் தீர்ப்பளிக்கப்படுவதற்குக் காரணமாக இருந்த முதல் வழக்கு, 1786 ஆம் ஆண்டிலிருந்து எழுந்ததென்று கூறப்படுகிறது; இது ரோட் ஐலண்ட் (Rhode Island) என்ற மாகாணத்தில் நடைபெற்றது. அக் காலத்திலும், 1842 ஆம் ஆண்டுவரையிலும் அது இரண்டாம் சார்லஸ் அரசருடைய பட்டயத்தின்கீழ் ஆட்சிசெய்யப்பட்டு வந்தது. 1787-ல் சட்டமன்றத்தின் ஒரு சட்டம் அரசியலமைப்புக்கு ஒத்ததன்று என்பதாக, வடகரோலினா மாகாணத்தின் நீதிமன்றங்களினால் தீர்ப்பளிக்கப்பட்டது.[1] அதுபோலவே 1788-ல் வர்ஜீனியா மாகாணத்தின் நீதி மன்றங்களும் ஒரு மாகாணசட்டத்தின்மீது தீர்ப்பளித்தன.[2] ஐக்கிய அமெரிக்க நாட்டின் அரசியலமைப்பானது, 1789 ஆம் ஆண்டுவரை ஏற்றுக்கொள்ளப்படவில்லை; ஒரு சட்டம் அரசியலமைப்புக்கு ஒத்துள்ளதா என்ற கேள்வியை உடையதும், உயர்தர நீதிமன்றத்தால் தீர்க்கப்படுவதற்கு முதன்முதலில் வந்ததுமான, மார்பரிக்கும் மாடிசனுக்குமிடையே தோன்றிய வழக்கு, 1803 ஆம் ஆண்டு தீர்க்கப்பட்டது.[3]

[1] Martin, 421

[2] Virginia Cases, 198.

[3] Cranch 137, சட்டமன்றங்களின் சட்டங்களை அரசியலமைப்புக்கு ஒத்தவை அன்று எனப் பண்டைய மாகாண நீதிமன்றங்கள் தீர்ப்புக் கூறிய விவரங்களை எல்லாம், இந் நூலாசிரியர் அறிவதற்கும் வேறு பயனுள்ள சில திறனாய்வுகளை அறிவதற்கும் உதவியாக இருந்தவர், ஹார்வார்ட் பல்கலைக் கழகப் பேராசிரியர் தாயேர் என்பவர் ஆவர் (Professor Thayer).

அமெரிக்காவின் பெயர்பெற்ற அரசியலறிஞர்களுடைய கருத்துகள் எல்லாம் ஆங்கிலச் சட்டத்தின்றும் வருவிக்கப்பட்ட கருத்துகள்தாம் என்ற போதிலும், அவர்கள் இப் பழங்கருத்துகளுக்கு முற்றிலும் புதிய விரிவான பொருளைக் கொடுத்தனர்; மேலும், உலக வரலாற்றிலேயே முதன்முதலாக அவர்கள் 'நாட்டின் சட்டம்' என்ற முழுமையான பொருளில் இருக்கக்கூடியதாக ஓர் அரசியலமைப்பை அமைத்தனர்; இவ்வாறு செய்ததன்மூலமாக அவர்கள் தற்காலக் கூட்டரசுத் தத்துவத்தை உண்டாக்கினர். எவ்வாறெனில், கூட்டரசுக் கோட்பாட்டின் முக்கியமான இயல்புகளெல்லாம்—அரசியலமைப்பின் தலைமையான தன்மை —அதிகாரங்களைப் பகிர்ந்தளித்தல்—நீதி மன்றங்களின் அதிகாரம்—முதலியவை எல்லாம், சிற்சில மாறுதல்களுடனே ஆகிலும், ஒவ்வொரு சரியான கூட்டரசு நாட்டிலும் காணப்படுகின்றன.

**கனடிய டொமினியன்**

இப்பொழுது கனடிய டொமினியனைப்பற்றிச் சிறிது ஆராய்வோம். 1867ஆம் ஆண்டின் பிரிட்டிஷ் வட அமெரிக்கச் சட்டத்தின் முன்னுரையில் வெகு நுட்பமாக வரையறுக்கப்படாமல், பின் வருமாறு கூறப்பட்டுள்ளது, 'இப்போதைய டொமினியன் மாகாணங்கள் ஒரே டொமினியனாக இணைந்திருப்பதற்குத் தங்களுடைய விருப்பத்தைத் தெரிவித்துள்ளனர்; மேலும், யுனைடட் கிங்டத்தின் (United Kingdom) அரசியல் அமைப்பைக் கொள்கையளவில் ஒத்திருக்கும் ஓர் அரசியலமைப்பையும் அவை விரும்புகின்றன.' சட்ட முன்னுரைகளெல்லாம் முழு உண்மையையே வெளிப்படுத்துதல்வேண்டும் என்றிருக்குமாயின், மேற்கூறிய முன்னுரையில் (Preamble) 'Kingdom' அல்லது 'அரசு' என்ற சொல்லுக்கு மாறாக 'States' அல்லது 'மாகாணங்கள், என்றிருத்தல் வேண்டும்; ஏனென்றால், டொமினியனின் அரசியலமைப்பானது அதனுடைய முக்கியமான தன்மைகளைப் பொறுத்தவரையில் ஐக்கிய அமெரிக்க நாடுகளின் அரசியலமைப்பைப் பின்பற்றியே அமைக்கப்பட்டுள்ளது. இதனை மறுத்துரைக்கும் கனடியத் திறனாய்வாளரின் கருத்துக்கு ஆதாரமில்லை என்று எனக்குப் படுகிறது.[1] அமெரிக்க ஐக்கிய நாட்டின்

[1] கனடிய அரசியலமைப்பின் இயல்பைப்பற்றி இந் நூலாசிரியர் கொண்டுள்ள கருத்துக்கும், அதனைப்பற்றித் தக்க புலமையும், நட்புள்ளமும் கொண்ட கனடியத் திறனாய்வாளர்கள் கொண்ட கருத்துக்கும் இடையே உள்ள வேறுபாடு, பின்வருமாறு சுருக்கமாக விளக்கிக் கூறப்படுகிறது: 'டொமினியனின் அரசியல் அமைப்பிலுள்ள கூட்டரசு இயல்பினை நாம் கவனித்தால், அது அமெரிக்க ஐக்கிய நாட்டின் அரசியலமைப்பை அப்படியே முழுக்கமுழுக்கப் பின்பற்றியது என்றில்லாவிட்டாலும், அது அமெரிக்க அரசியலமைப்பை ஒட்டியதே என்றுதான் நாம் கருதுதல் வேண்டும். இப்பொழுதைய அலுவலைப் பொறுத்தவரையில், கனடிய அரசியலமைப்பு முழுவதும் ஒரு கூட்டரசு அரசாங்கமுறையென்றே கருதப்படுகின்றது. எனவேதான டொமினியனின் அரசாங்கம் ஐக்கிய அமெரிக்க அரசாங்க அமைபபை ஒட்டி அமைக்கப்பட்டுள்ளதென்ற எனது கருத்துக்கு இடமிருக்கிறது. இக் கருத்து சரியானதென்றே நான் இன்னும் கருதுகிறேன. இதற்கு மாறாக, நாம் கனடிய நிருவாக உறுப்பை, அமெரிக்க நிருவாக உறுப்போடு ஒப்பிட்டால். உடனே, கனடிய அரசாங்க முறையானது, இங்கிலாந்தில் இருப்

அரசியல் நிறுவனங்களுக்கும், டொமினியனின் அரசியல் நிறுவனங்களுக்குமிடைட்யே கவனிக்கத்தக்க அளவுக்கு வேறுபாடுகள் உள்ளன என்பது உண்மையே. ஆனால், 1867ஆம் ஆண்டின் பிரிட்டிஷ் வட அமெரிக்கச் சட்டத்தைப் படிப்பவர் எவருக்கும் அதனை இயற்றியவர்கள் அமெரிக்க அரசியலமைப்பையே தங்களுடைய நினைவில் வைத்திருந்தனர் என்பதையும், கனடா ஒரு சுதந்தர நாடாக இருந்து வந்திருக்குமாயின், அது ஐக்கிய அமெரிக்க நாட்டிற்கு இருப்பதைப்போன்ற ஓர் அரசியலமைப்பின்படியே, ஓர் இணைப்பரசாக ஆளப்பட்டிருக்கும் என்பதையும் உணர்வர். அரசியலமைப்பே நாட்டின் சட்டமாக இருக்கிறது; அது, 1867ஆம் ஆண்டின் பிரிட்டிஷ் வட அமெரிக்கச் சட்டத்தின் மூலமாக அனுமதிக்கப்படுகின்ற ஒரு சிலவரம்புகளில் அல்லாமல், டொமினியன் பாராளுமன்றத்தாலோ[1] அல்லது மாகாணப் பாராளுமன்றத்தாலோ[2] மாற்றப்பட முடியாததாகும். அது இறைமை அதிகாரத்தை உடைய பிரிட்டிஷ் பாராளுமன்றத்தால்மட்டுமே மாற்றப்படக் கூடியதாக இருக்கிறது. இந் நிலைமை கனடிய டொமினியன் ஒரு சார்புநாடாக (dependency) இருப்பதனால் தோன்றவில்லை கனடாவைப்போல நியூஸிலாந்தும் ஒரு குடியேற்றநாடு; ஆனால், கனடியப் பாராளுமன்றத்தினால் தனது குடியேற்றநாட்டு அரசியலமைப்பை மாற்ற முடியாமலிருக்கும்போது, நியூஸிலாந்து பாராளுமன்றத்தினால் தனது அரசியலமைப்பை அரசருடைய இசைவைப்பெற்று மாற்ற

[1] 1949ஆம் ஆண்டின் இரண்டாம் எண்ணுள்ள பிரிட்டிஷ் வட அமெரிக்கச் சட்டத்தைப் பார்க்கவும்; இது அரசியலமைப்பை மாற்றுவதற்கு டொமினியன் பாராளுமன்றத்துக்கு அதிகாரம் வழங்குகிறது. இந்தப் புதிய அதிகாரத்தினின்றும் ஒரு சில விஷயங்கள் விலக்கப்பட்டுள்ளன; இவ் விஷயங்களெல்லாம் 1867ஆம் ஆண்டு பிரிட்டிஷ் வட அமெரிக்கச் சட்டத்தின் 92ஆம் பிரிவின்படி மாகாணச் சட்டமன்றங்களின் தனிப்பட்ட அதிகாரத்தில் அடங்கியுள்ளன. மேலும், இப் புதிய அதிகாரத்தினின்றும் மாகாண அரசாங்கங்களின் சட்டப்படியான உரிமைகளும் சலுகைகளும் பள்ளிக்கூடங்களையும் ஆங்கில, ஃபிரெஞ்சு மொழிகளைக் கையாளுவதையும் பொறுத்த விஷயங்களும், ஆண்டுதோறும் பாராளுமன்றத்தைக் கூட்டுதல் வேண்டுமென்ற நிலையும், டொமினியன் பாராளுமன்றத்தின் கூடுதலான கால அளவும் விலக்கப்பட்டுள்ளன; இவையெல்லாம் வெஸ்ட்மின்ஸ்டரில் செய்யப்படும் சட்டத்தினால்தான் மாற்றப்படமுடியும்.

[2] 1867ஆம் ஆண்டின் பிரிட்டிஷ் வட அமெரிக்க சட்டத்தின் எப் பிரிவுகள் கூறப்பட்டிருந்தாலும், ஒவ்வொரு மாகாணத்தின் சட்டமன்றமும், தனது அரசியலமைப்பை லெஃப்டினன்ட் கவர்னர் அலுவல் நீங்கலாக மாற்றியமைப்பதற்குச் சட்டம்செய்ய அதிகாரம் பெற்றிருக்கிறது. இச் சட்டத்தின் 92ஆம் பிரிவைப் பார்க்கவும்.

---

பதைப்போன்ற, பாராளுமன்றக் காபினெட் அரசாங்க முறையையொட்டி அமைந்திருக்கிறதென்றும், அது அமெரிக்காவிலுள்ள குடியரசுத் தலைவருடைய அரசாங்க முறையை ஒட்டி அமைந்திருக்கவில்லை என்றும் நாம் காண்கிறோம். இந்தக் கருத்தின் வாயிலாகவே, கனடிய அரசியல் நிறுவனங்கள் கனடியத் திறனாய்வாளர்கள் ஆராய்ச்சி செய்கின்றனர் என்பதாகக் கனடிய நிறுவனங்களைப்பற்றி நன்கு அறிந்த ஒரு நண்பர் எனக்குக் கூறுகிறார்; டொமினியனின் அரசியலமைப்புக்கு, 1867ஆம் ஆண்டின் பிரிட்டிஷ் வட அமெரிக்கச் சட்டத்தின் முன்னுரையில் கொடுக்கப்பட்டுள்ள விளக்கத்திற்குக் காரணம், மேற்கூறிய கருத்தே ஆகும். இக் கருத்து சரியானதே; இதற்கு இடங்கொடுத்து, இந் நூலின் முற்பதிப்புகளில் கூறப்பட்ட விளக்கங்கள் சிறிது மாற்றப்பட்டிருக்கின்றன.

முடியும். ஆகவே, டொமினியன் முழுவதிலும் அதன் அரசியலமைப்பே நாட்டின் மாற்றமுடியாத சட்டம் என்ற முழுப்பொருளில் இருந்து வருகிறது. இதே சட்டத்தின் கீழே, நாம் எதிர்பார்க்கிறபடி ஒன்றுக்கொன்று தனித்த, ஒத்த நிலையிலுள்ள பல்வேறு நிறுவனங்களிடையே அதிகாரங்கள் பிரித்தளிக்கப்படுகின்றன; ஐக்கிய அமெரிக்க நாட்டின் அரசியலமைப்பானது, கூட்டரசு அரசாங்கத்துக்குக் கொடுக்கிற அதிகாரங்களைக்காட்டிலும், டொமினியன் அரசாங்கத்துக்கும் பாராளுமன்றத்துக்கும் அதிக அளவில் அதிகாரங்கள் கொடுக்கப்பட்டுள்ளன; இவை மாகாணங்களுக்கு ஒதுக்கிவைக்கப்பட்டுள்ள அதிகாரங்களைக் காட்டிலும் அதிகமானவை.[1] இது மாகாணச் சட்டங்களை டொமினியன் அரசாங்கம் ஏற்றுக்கொள்ளாமல் தள்ளிவிடுவதற்கு[2] உள்ள அதிகாரத்தில் தெளிவாகக் காணப்படுகிறது.[3]

அரசியலமைப்பை விளக்குவதற்காக நீதிமன்றங்களை வேண்டிக்கொள்ளும் அவசியத்தைத் தடுப்பதற்காகவே, மேற்கூறிய உரிமையானது கொடுக்கப்பட்டது போலும்; இந்த இணைப்பரசை நிறுவியவர்கள், 'டொமினியனிலுள்ள பல்வேறு சட்டமன்றங்களுடைய அதிகாரங்களை வரையறை செய்வதில் தக்க கவனம் செலுத்தினாலே, நடு அரசாங்கத்திற்கும் மாகாண அரசாங்கங்களுக்கும் இடையே இடர்ப்பாடான அதிகார முரண்பாடு எதுவும் தோன்றாமல் தடுக்கலாம்' என்று திடமாக நம்பினர்.[4] எனினும், கூட்டரசுக் கோட்பாட்டினுடைய தன்மையைப் பற்றி அவர்கள் சரிவரத் தெரிந்துகொள்ளாத காரணத்தால், அவர்கள் கொண்டிருந்த மேற்படி நம்பிக்கையானது பயனற்றுப்போய்விட்டது; சட்டமன்றங்களினால் இயற்றப்பட்ட சட்டங்களினுடைய அரசியல் அமைப்புக்கு ஒத்ததன்மையை விளக்க எழுந்த வழக்குகளைப்பற்றிய அறிக்கைகள் நிறைந்த இரண்டு பெரும் நூல்கள் மேற்படி நம்பிக்கை பயனற்றுப் போய்விட்டதைக் காட்டுகின்றன: மேலும், டொமினியன் பாராளுமன்றமும் மாகாணப் பாராளுமன்றங்களும் பெற்றிருக்கின்ற அதிகாரங்களைப்பற்றிக் கொடுக்கப்பட்டுள்ள தீர்ப்புகள் அடங்கிய நீண்டபட்டியலும், மேற்படி நம்பிக்கை பயனற்றுப் போய்விட்டதைக் காட்டுகிறது; மேற்படி தீர்ப்புகளெல்லாம் டொமினியனுடைய உண்மையான உயர்தர நீதிமன்றத்தினால், அதாவது பிரிவி கௌன்சிலினுடைய நீதிக்குழுவினால் அளிக்கப்பட்ட தீர்ப்பாகும். ஐக்கிய அமெரிக்க நாட்டில் இருப்பதைப்போலவே, கனடாவிலும் நீதிமன்றங்

[1] 1867ஆம் ஆண்டின் பிரிட்டிஷ் வட அமெரிக்கச் சட்டம், பிரிவுகள், 91, 92.

[2] 1867ஆம் ஆண்டின் பிரிட்டிஷ் வட அமெரிக்கச் சட்டம், பிரிவுகள், 56, 90.

[3] Bourinot எழுதிய 'Parliamentary Procedure and Practice in the Dominion of Canada, பக்கம், 76 பார்க்க.

[4] Bourinot, page, 694.

களே அரசியலமைப்புக்கு விளக்கம் கூறுபவர்களாக அமைந்துவிட வேண்டிய கட்டாயம் இருக்கிறது.[1]

## சுவிஸ் இணைப்பரசு

சுவிஸ் நாட்டின் கூட்டரசுக் கோட்பாடும், அட்லாண்டிக் சமுத்திரத்திற்கு அக்கரையிலுள்ள கூட்டரசு அரசாங்கமுறையின் முக்கியத் தன்மைகளை எல்லாம், குறிப்பிடத்தக்க சில மாறுதல்களோடு பெற்றிருக்கிறது.[2] இங்கும் அரசியலமைப்பே நாட்டின் தலைசிறந்த சட்டமாக இருக்கிறது; அது கூட்டரசின் சட்டமன்றங்களினால் மட்டுமோ அல்லது கான்டன் என்று சொல்லப்படுகிற மாகாணச் சட்டமன்றங்களினால்மட்டுமோ மாற்றப்பட முடியாததாகும்; அரசியலமைப்பானது[3] தேசிய அரசாங்கத்திற்கும் மாகாணங்களுக்கும் அதிகாரங்களைப் பகிர்ந்தளித்துச் செயல்படச் செய்கிறது; நேரடியாகவோ மறைமுகமாகவோ அரசியலமைப்பானது, தனக்குக்கீழ் இயங்குகின்ற ஒவ்வோர் அதிகாரியினுடைய அதிகாரத்தையும் குறிப்பிட்டுக் கூறி, வரம்பையும் சுட்டிக் காட்டுகிறது. சுவிட்சர்லாந்திலுள்ள பொது அரசாங்கமானது அமெரிக்காவிலுள்ளதைப்போல, ஒரு கூட்டரசுச் சட்டமன்றம், ஒரு கூட்டரசு நிர்வாகம், ஒரு கூட்டரசு நீதிமன்றம் ஆகிய மூன்று உறுப்புகளையும் பெற்றிருக்கிறது.

சுவிஸ் கூட்டரசுக் கோட்பாட்டிற்கு ஒரு தனிப்பட்ட இயல்பை அளிக்கக்கூடிய வியத்தகு புதுமைகளைப்பற்றி விவரமாக எழுதுவதற்கு இது சமயமன்று; ஆயினும், இந்த இயலின் எல்லைக்குள் சுவிஸ் இணைப்பரசின் அரசியலமைப்பானது, ஐக்கிய அமெரிக்கநாட்டின் அரசியல் அமைப்பினின்றும் இரண்டு முக்கியமான வகைகளில் மாறுபடுகிறது என்பதைமட்டும் இங்குக் குறிப்பிடலாம். முதலாவதாக, இந் நாட்டின் அரசியலமைப்பானது, அமெரிக்காவிலும் கனடாவிலும் இருப்பதைப் போல, அரசாங்கத்தின் நிருவாகத்துறையையும் நீதித்துறையையும் மிகத் துல்லியமாகப் பாகுபாடு செய்யவில்லை; நிருவாகத்துறையானது, 'ஆட்சித்துறைச் சட்டம்' (administrative law) என்ற தலைப்பில் நீதி இயல்புசார்ந்த சில அலுவல்களைச் செய்கிறது; இவ்வாறு, எடுத்துக்

[1] கனடிய அரசியலமைப்பைப்பற்றி அறிவதற்கு W.P.M. Kennedy என்பவர் எழுதிய, The Constitution of Canada 1534—1937 (1938) என்ற நூலையும், R. M. Dawson என்பவர் எழுதிய, The Government of Canada, (1956) என்ற நூலையும் பார்க்கவும்.

[2] சுவிஸ் அரசியலமைப்பைப்பற்றி அறிய, C. Hughes என்பவர் எழுதிய, The Federal Constitution of Switzerland (1954) என்ற நூலைப் பார்க்கவும்.

[3] இந்தக் கருத்துக்குச் சிறிது விளக்கம் தேவைப்படுகிறது. கூட்டரசின் சட்டமன்றமானது, வாக்காளர்களும் பெரும்பான்மையான மாகாணங்களும் ஒப்புதல் அளித்தால் அரசியலமைப்பை மாற்றக்கூடிய அதிகாரத்தைப் பெறுகிறது. நடைமுறையில் கூட்டரசுச் சட்டமன்றமே மிக முக்கியமான அலுவல்களைச் செய்கிறது.

காட்டாக, 1839 ஆம் ஆண்டுவரையில் சமய நிறுவனங்களினுடைய உரிமைகளைப்பற்றிய[1] கேள்விகளை அது தீர்த்துவைத்தது. நிருவாகத் துறையினுடைய அதிகார வரம்பையும், கூட்டரசு நீதிமன்றத்தின் அதிகார எல்லையையும்பற்றிய எல்லாக் கேள்விகளையும் பொறுத்த வரையில் அவற்றைத் தீர்க்கக்கூடிய உயர்தர நீதி அதிகாரி, கூட்டரசின் சட்டமன்றமே ஆகும். அந்த நீதிமன்றத்தின் நீதிபதிகளெல்லாரும் கூட்டரசின் சட்டமன்றத்தால் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். அவர்கள் அரசாங்கத் தொடர்புபற்றிய பொதுச் சட்டத்தைப்பற்றிய (public law) கேள்விகளைத் தீர்ப்பதிலேயே மிகுதியும் ஈடுபட்டுள்ளனர்; எனவே, மிகவும் செயலறிவுமிக்க அரசியலறிஞரான, டாக்டர் டப்ஸ் என்பவர், தனியார் வாழ்க்கைபற்றிய சட்டங்களில் எழும் வழக்குகளைத் தீர்ப்பதற்கு (matters of private law) நீதிபதிகளுக்கு அதிகாரம் இருத்தல் வேண்டுமெனக் கூறுகிறார். 'கூட்டரசு நீதிமன்றத்தின் தீர்ப்புகள், அரசாங்க அலுவலரால்தான் நிறைவேற்றி வைக்கப்படுகின்றன' என்பதையும், மேற்கூறிய செய்தியோடு சேர்த்து நாம் காணுமிடத்து, அரசாங்கத்தின் நீதித்துறையை, நிருவாகத்துறையினின்றும் தனியாகப் பிரித்துவைப்பதில் அமெரிக்க அரசியலறிஞர்கள் வெற்றியடைந்ததைப்போல, சுவிஸ் அரசியலறிஞர்கள் வெற்றியடையவில்லை என்பதும், சுவிஸ் அரசியலறிஞர்கள் இவ்வாறு தவறியதுதான், அவர்களுடைய அரசியலமைப்பில் ஒரு பெரும் குறையாகக் காணப்படுகிறது என்பதும் நமக்குத் தெரிய வருகின்றன. இரண்டாவதாக, இந்த அரசியலமைப்பானது, கூட்டரசு நீதிமன்றத்தைக் கூட்டரசுச் சட்டமன்றத்தினின்றும் தனியாகப் பிரித்து, அதனோடு ஒத்த சுதந்தரநிலையில் வைக்கவில்லை. அந்த நீதிமன்றம், கூட்டரசுப் பாராளுமன்றத்தினால் நிறைவேற்றப்பட்ட சட்டங்கள் அல்லது ஆணைகள் அரசியலமைப்புக்கு ஒத்து இருக்கின்றனவா என்று ஆய்வுசெய்து தீர்ப்புக் கூறமுடியாது.[2] இதனால் அமெரிக்கக் காங்கிரசைப் போலல்லாமல், ஸ்விஸ் கூட்டரசுச் சட்டமன்றமானது இறைமை உடைய ஒரு மன்றம் என எவரும் எண்ணுதல்கூடும்; ஆனால், உண்மையில் இது இவ்வாறு அன்று. சட்டமன்றத்தினால் நிறைவேற்றப்படும் சட்டங்களையெல்லாம் அரசியலமைப்புக்கு ஒத்தவை என்பதாகக் கூட்டரசு நீதிமன்றமானது ஏற்றுக்கொள்ளுதல் வேண்டுமென்பதற்குக் காரணம் என்னவென்றால், கூட்டரசுச் சட்டமன்றம் அரசியலமைப்பின் பிரிவுகளை மீறுதபடி, தடுப்பதற்குரிய தடைகளையெல்லாம் அரசியல்

[1] இத்தகைய கேள்விகளைத் தீர்க்கும் அதிகாரம் 1893ஆம் ஆண்டுவரையில் கூட்டரசின் ஆலோசனை மன்றத்தின் ஆலோசனைபெற்ற கூட்டரசின் சட்ட மன்றத்தைச் சேர்ந்திருந்தது. இப்பொழுது அது கூட்டரசின் நீதிமன்றத்தைச் சேர்ந்துள்ளது. Lowell எழுதிய, Governments and Parties in Continental Europe (1896) vol. ii (pp. 217, 218) பார்க்கவும்.

[2] டப்ஸ் எழுதிய, Constitution Federale, (p. 92—95) என்ற நூலைப் பார்க்கவும். இதற்குக் காரணம் அதனுடைய எல்லாச் சட்டங்களும் பெரும்பாலான மக்களுடைய மறைமுகமான ஒப்புதலைப் பெற்றிருப்பதுதான். இவ்வாறு இல்லாவிட்டால், அவற்றை மாற்றுவதற்கு ஒரு குடியொப்பம் (referendum) வைக்கப்படும்.

அமைப்புச் சட்டமே ஏற்படுத்தியுள்ளது. சுவிஸ் குடிமக்களில் பெரும்பாலானவருடைய ஒப்புதலைப் பெறாமலும், பெரும்பாலான மாகாணங்களின் ஒப்புதலைப் பெறாமலும் எந்தச் சட்டத்தையும் திருத்துதல் என்பது நடைபெறாது; கூட்டரசுச் சட்டமன்றத்தினால் நிறைவேற்றப்பட்ட ஒரு சாதாரணச் சட்டமானது, குடிமக்களுக்குரிய தள்ளுரிமை (veto) அதிகாரத்தின்மூலம் சட்டப்படியாகத் தள்ளுபடி செய்யப்படலாம். சுவிஸ் சட்டமன்றத்தின் அதிகாரமானது, பெயரளவில் அமெரிக்கக் காங்கிரசின் அதிகாரத்தைவிடக் கூடுதலாகவே இருக்கிறது: ஏனெனில், உண்மையில் சுவிஸ் சட்டமன்றமானது, காங்கிரசைவிட வலுக்குறைவானது. எவ்வாறெனில் இவை ஒவ்வொன்றிலும், சாதாரணச் சட்டமன்றத்தின் செயலைக் கட்டுப்படுத்தக்கூடியவரும், சட்டமியற்றக்கூடியவருமாகிய இறைமை அதிகாரி பின்னணியில் இருக்கிறார்; இந்த இறைமை அதிகாரியை அமெரிக்காவில் செய்வதைவிட, மிக எளிதாக சுவிட்சர்லாந்தில் செயல்படும்படிச் செய்யலாம். ஓர் இறைமை அதிகாரி தமது நோக்கத்தை மிக எளிதாக நிறைவேற்றக் கூடிய ஆற்றலுடையவராய் இருக்கும்போது, அவர் தம் உரிமைகளைத் தற்காத்துக் கொள்ளுதற்குத் தனது செயல்வலியை நம்பி இருத்தல் கூடும்; இத்தகைய இறைமை அதிகாரி, அமெரிக்காவில் வெகு அரிதாக, பல இடையூறுகளைத் தாண்டிச் செயல்படும்போது, நீதிமன்றங்கள், அரசியலமைப்புப் பிரிவுகளின்மூலமாக வெளிப்படுத்தப்படும் இவ் வதிகாரியின் நோக்கங்களுக்குப் பாதுகாவலராக இருப்பது இயற்கையே.

### கூட்டரசுக் கோட்பாட்டுமுறைக்கும் பாராளுமன்ற இறைமைக்கும் உள்ள ஒப்புமை

நாம் எல்லாக் கூட்டரசு அரசாங்கமுறைகளுக்கும் பொதுவான இயல்புகளைச் சட்டத்தின் கோணத்திலிருந்து இதுவரை ஆய்வு செய்தோம்; ஆயினும், இந்த ஆய்வு சட்டத்தின் அடிப்படையில் நமக்கு ஈடுபாட்டை அளிக்காமல், கூட்டரசு அரசாங்கமுறையின் சிறப்பியல்புகளையும், பாராளுமன்ற இறைமை முறையின் சிறப்பியல்புகளையும் ஒப்பிடக்கூடிய சில முடிவுகளைச் சுட்டிக் காட்டுகின்றன.

### கூட்டரசு அரசங்கத்தின் வலுவின்மை

கூட்டரசு அரசாங்கம் என்றால் வலியற்ற அரசாங்கம் என்ற பொருளை உணர்த்துகிறது.[1]

[1] இந்த வலியற்ற நிலைமை இரண்டு காரணங்களினால் தோன்றுகிறது; முதற் காரணம், நடு அர ாங்கத்துக்கும் மாகாணங்களுக்கும் அதிகாரங்களைப் பிரித்தளிப்பது; இரண்டாவது காரணம், அதிகாரங்களைத் தேசிய அரசாங்கத்தின் பல்வேறு உறுப்பினர்களிடையே (எடுத்துக்காட்டாகக் குடியரசுத் தலைவருக்கும், செனட்டுக்கும்) பிரித்தளிப்பது. வலியற்ற நிலைமையின் முதற்காரணம் கூட்டரசு முறையின் இயல்பிலேயே காணப்படுகிறது; வலியற்ற நிலைமையின்

அரசின் எல்லா அதிகாரங்களையும், ஒருவருக்கொருவர் சமநிலையிலும் தனித்துமுள்ள அதிகாரிகளிடையே பிரித்து அளிப்பதனுல், எந்த ஓர் அதிகாரியும் ஓரரசு அரசியலமைப்பின்கீழ் இயங்கும் இறைமை அதிகாரிக்கு இருக்கும் அளவுக்கு, அதிகாரத்தைக் கையாள முடியாத நிலைமை தோன்றுகிறது. தடைகள், சமநிலைகளடங்கிய ஒரு கோட்பாட்டினை ஒட்டி (a scheme of checks and balances) நாட்டின் பொது அரசாங்கத்தின் ஆற்றல் மாகாண அரசாங்கங்களுக்கு எதிராகச் செலுத்தப்பட வேண்டியிருப்பதால், அவ் வாற்றல் ஓரளவு வீணுக்கப்பட வழி உண்டாகிறது. ஆகையால் எப்பொழுதும் ஒரு கூட்டரசு நாடானது, ஒரே அளவு வளங்களுள்ள ஓரரசு நாடுகளைவிட, ஒரு குறைபாடு உடையதாகவே எப்போதும் இருக்கும். ஐக்கிய அமெரிக்க நாட்டிற்கோ, சுவிஸ் இணைப்பரசுக்கோ இவ் வகையில் ஏற்பட்டுள்ள அனுபவம் மேற்கூறிய முடிபை மாற்றவில்லை. அமெரிக்க ஐக்கிய நாட்டிற்கு அருகில் வலிமிக்க நாடுகள் இருந்து அச்சுறுத்தவில்லை; எனவே, அதற்கு அயல்நாட்டுக் கொள்கையெதுவும் தேவையில்லை.[1] சுவிட்சர்லாந்து நாடானது வலிமிக்கவையும் சில காலங்களில் பகைமை உடைய நாடுகளால் சூழப்பட்டிருந்தபோதிலும், அரசியலமைப்பை ஒட்டிய ஏற்பாடுகளில் அல்லாமல், வேறுபல சூழ்நிலைகளின்மூலமாக அது தனது சுதந்தரமான நிலைமையைப் பாதுகாத்துக் கொள்ளுகிறது. கூட்டரசு அமைப்பில் காணப்படும் மாகாணப் பொருமைகள் பூசல்கள் சுவிஸ் குடியரசை வெளிப்படையாகத் தெரியக்கூடியவகையில் வலியற்றதாக ஆக்கவே செய்கின்றன. நிருவாக சபையில் ஒவ்வோர் உறுப்பினரும் வெவ்வேறு மாகாணத்தைச் சேர்ந்தவராக இருத்தல்வேண்டுமென்பது

[1] இத் தொடரின் பிற்பகுதி, 1885-ல் இருந்ததைவிட, 1908ஆம் ஆண்டில் உண்மைக்கு மாருனது என்றுகொள்ள இடமிருக்கிறது.

---

இரண்டாம் காரணம் (தர்க்க முறையாகப் பார்த்தால்) கூட்டரசு முறையின் இயல்பில் அமைந்திருக்கவில்லை. கூட்டரசு அரசியலமைப்பில், தேசிய அரசாங்கத்தின் முழு அதிகாரமும் ஒரே ஆள் அல்லது குழுவில் விட்டுவைக்கப்படக் கூடும்; ஆனுல், பல்வேறு மாகாணங்களும் தங்களுடைய மாகாண உரிமைகளில் நடு அரசாங்கம் தலையிட்டுவிடுமென்று அஞ்சுவதால், இத்தகைய அதிகாரக் குவிப்பு நடைபெருமற் போகிறதென்று நாம் உறுதியாகக் கூறலாம்.

பல்வேறு அரசுகளும் ஒரே நாடாக இணையும் இயல்போடு சாதாரணமாக இல்லாமலிருக்கும்போது, அவற்றை இணைப்பதற்கு ஒரு கூட்டரசு முறை உதவி செய்வதால், கூட்டரசு அரசாங்கம் வலியற்ற அரசாங்கம் என்ற கருத்து வரையறைக்குள்ளான ஒரு கருத்துதான். கூட்டரசுமுறையின் ஒன்றுபடுத்தும் ஆற்றல் வலியற்றதாக இருக்கலாம்; ஆனுல், இணைக்கப்படவேண்டிய சூழ்நிலையில் கூட்டரசுமுறையே வலிமிக்கதாக இருக்கிறது. வேறுபட்ட அளவுகளில் சுதந்தரமுடைய பல்வேறு அரசுகளை அவை விரும்பாத அளவுக்கு அரசியல் இணைப்பை வலுக்கட்டாயமாக அவற்றின்மீது புகுத்துவதன் தீயவிளைவுகளை ஹெல்வெட்டிக் (சுவிஸ்) குடியரசு எடுத்துக்காட்டுகிறது. (இந்தக் கடைசிப் பத்தியில் கூறப்பட்டுள்ள கருத்து, ஐக்கிய அமெரிக்க நாட்டிற்குத்தான் மிகவும் பொருந்தும்; சுவிஸ் சட்ட அறிஞர்களின் கருத்துப்படி சுவிட்சர்லாந்தில் கூடடரசுமுறை என்பது வலியற்ற அரசாங்கம் என்ற பொருளில் இல்லை.—பதிப்பாசிரியர்.)

மேற்கூறிய கருத்துக்கு ஓர் எடுத்துக்காட்டு. இந்த விதியானது உயர் தரத் தகுதியுடைய அரசியலறிஞரை அரசாங்கத்தில் சேராதபடி தடுக்கக் கூடும். இவ் வகையாக அது அரசின் வலிமைக்குத் தேவையான மூல ஆதாரங்களைக் குறைத்தல்கூடும். காபினெட்டின் ஒவ்வோர் உறுப்பினரும் ஒவ்வோர் உள்ளூர்ப் பிரிவு அல்லது கௌன்டியைச் சேர்ந்தவராயிருத்தல் வேண்டுமென்ற விதி. ஆங்கிலருக்கு மிகவும் பொருத்தமற்றதாகக் காணப்படும். ஆயினும், இந்தப் பொருத்தமற்ற தன்மை சுவிஸ் அரசியலறிஞர்களின்மீது திணிக்கப்பட்டுள்ளது; இது பொதுப் பணியின் திறன் கூட்டரசு உணர்ச்சியை நிலைநிறுத்தும்பொருட்டு, அழிக்கப்பட்டுள்ளதைக் காட்டும் பல நிகழ்ச்சிகளுள் ஒன்று. மேலும், ஓரரசு முறையைநோக்கி வளர்கின்ற ஒருவகைப்பட்ட குடியாட்சிக் கூட்டரசு அமைப்பின்கீழ், சுவிட்சர்லாந்து ஆளப்படுகிறது. அங்குச் செய்யப்படும் ஒவ்வொரு சட்டத் திருத்தமும் மாகாணங்களின் சுதந்தரத்தைக் குறைக்கும்முறையில், தேசிய அரசாங்கத்தின் அதிகாரத்தை வளர்க்கிறது. இது, நாட்டை அயல்நாடுகளின் தாக்குதல்களினின்றும் காப்பதற்கு வலுப்படுத்தும் நோக்கத்திறல் தோன்றியதாகும். இது வேறொரு சூழ்நிலையினால் விளைந்தாகவும் இருக்கலாம். கூட்டரசு முறையானது, அரசாங்கத்தின் ஒவ்வோர் ஆட்சித்துறையினுடைய அதிகாரங்களையும் குறிப்பிட்டுக் கூறியும், அவ்வகையாக வரம்புகளுக்கு உட்படுத்தியும் வைப்பதனால், அரசாங்கம் எதிலும் தலையிடுவதற்கோ அல்லது செயல்படுவதற்கோ உதவியாக இல்லை. ஆகையால் தனியாரால் செய்யப்படுகின்ற சில அலுவல்களை ஒரு கூட்டரசு அரசாங்கமானது, நாட்டு நலனின்பொருட்டு ஏற்றுப் பணிகளைச்செய்ய இயலாது. இது கூட்டரசுமுறையின் ஒரு சிறப்பாக இருக்கலாம்; எனினும், இக் காலக் குடியாட்சியாளர்களால் ஏற்றுக்கொள்ளப்பட முடியாத ஒரு சிறப்பாக இது உள்ளது ஒரே நாட்டில் அல்லது ஒரே தலைமுறையில், ஊடுருவிக் காணப்படுகின்ற, வியக்கத்தக்கவகையில் ஒன்றுக்கொன்று முரணான, பொதுமக்கள் கருத்தோட்டங்களுக்குச் சிறந்த ஓர் எடுத்துக்காட்டு என்னவெனில், இங்கிலாந்தில் கூட்டரசுமுறைக்கு, மக்களிடையே ஒரு தெளிவற்ற ஆதரவான மனப்பான்மையும், அதே சமயத்தில் தடையற்ற வாணிபக் கோட்பாடுகளுக்கு (doctrines of laissez-faire) எதிர்ப்பான மனப்பான்மையும் காணப்படுவதேயாகும். அரசியலில் நடைமுறை நிலைமையை அல்லது மரபு நிலைமையை (status quo) நிலைநிறுத்தும் பொருட்டு ஏற்படுத்தப்பட்டுள்ள ஒரு முறையானது, மிக விரிந்த அளவில் சமுதாய மாறுதல்களைச்செய்ய உதவும் திட்டங்களோடு பொருந்தாத ஒன்று ஆகும்.

## கூட்டரசுக் கோட்பாட்டின் பழைமைப்போக்கு

கூட்டரசு முறையானது, பழைமை மனப்போக்கை (conservatism) உண்டாக்குகிறது.

இப் போக்கு பல்வேறு காரணங்களினால் எழுந்ததாகும். நாம் முன்பே பார்த்ததுபோல, ஒரு கூட்டரசு நாட்டினுடைய அரசியலமைப்பானது, பொதுவாக ஓர் எழுதப்பட்ட அரசியலமைப்பாகமட்டும் அல்லாமல், ஓர் இறுக்கமான (rigid) அரசியலமைப்பாகவும் இருத்தல் வேண்டும்; அதாவது அது எந்தச் சாதாரணச் சட்டம் இயற்றும் முறையினாலும் மாற்றப்படமுடியாத அரசியலமைப்பாக இருத்தல்வேண்டும். இவ்வாறு, கூட்டரசின் நிறுவனங்களுக்கு முக்கியமாக ஓர் இறுக்கமான தன்மை இருப்பதனால், 'அரசியலமைப்பில் சேர்க்கப்பட்டிருக்கிற எந்த விதியும் மாற்றப்பட முடியாதது, புனிதமானது' என்ற ஓர் எண்ணம் மக்களுடைய மனங்களில் பதிந்துவிடுகிறது என்பது உண்மையே. அமெரிக்க அரசியல் நிலையை மேலோட்டமாகப் பார்த்தாலும், அரசியலமைப்பு என்பது திருத்தப்படமுடியாதபடி அமைக்கப்பட்ட ஒன்று என்ற கருத்து, பொதுமக்கள் எண்ணத்தில் எவ்வளவு ஆழமாகப் பதிந்திருக்கிறது என்பதை நாம் காணலாம். அரசியல் அமைப்பை மாற்றுவதிலுள்ள இடர்ப்பாடு பழமைநோக்குள்ள மனப்பான்மையை வளர்க்கிறது; பழைமைப் போற்றும் தேசிய மனப்பான்மை அரசியலமைப்பை மாற்றுவதிலுள்ள இடர்ப்பாட்டை இரட்டிப்பாக்குகிறது. பெருமக்கள் மன்றமானது (House of Lords) பல நூற்றாண்டுகளாக இருந்துவந்துள்ளது; அமெரிக்காவின் செனட் மன்றமும் இதுவரை நூறு ஆண்டுக்களுக்கு மேலாக இருந்துவந்துள்ளது; ஆயினும், பெருக்கள் மன்றததை மாற்றி அமைப்பதோ அல்லது நீக்கிவிடுவதோ, செனட்டின் அமைப்பை மாற்றுவதைவிட, மிக எளிதான ஒரு செயலாக இருக்கும். இதனோடு நாம் சேர்த்துச் சொல்லவேண்டிய வேறொரு செய்தி என்னவெனில், ஒரு கூட்டரசு அரசியலமைப்பானது, பொதுவான கொள்கைகளை விதிக்கிறது என்பதும்; இவை இவ்வாறு அரசியலமைப்பில் சேர்க்கப்பட்டிருப்பதனால், இவற்றுக்கு மக்கள் மூடத்தனமான காரணமற்ற மதிப்பை அளிக்க நேரிடுகிறதென்பதும்; இதனால் நடைமுறையில் இவை ஆய்வு செய்யப்படுவதற்கோ, மாற்றப்படுவதற்கோ இடமில்லாமற் போய்விடுகிறது என்பதுதான். ஒப்பந்தங்களில் அடங்கிய கடமைகளைச் சட்டங்கள் மாற்றக்கூடாது' என்ற ஒரு கொள்கையானது, அமெரிக்கருடைய கருத்து முழுவதிலும் மேலோங்கிஇருக்கிறது. இத்தகைய கொள்கையினால் தோன்றும் பழைமையான மனப்போக்கு, அரசியலமைப்புச் சட்டத்தின் பிரிவை இயற்றும்போது, எவ்வளவுதூரம் அதனைப் பாதிக்கிறது என்பதை நாம் கீழ்க்கண்டவாறு ஆராய்ந்தால் ஓரளவு உணரலாம். இதனைப்போன்ற ஏதேனுமொரு கொள்கையானது, சட்டப்படியாக நீதிமன்றங்களைக் கட்டுப்படுத்தும் என்பதாக இங்கிலாந்தில் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்குமாயின், ஐரிஷ் நிலச்சட்டம் அரசியலமைப்புக்கு ஒத்ததாக இல்லாமலும், செல்லுபடி ஆகாமலும் போயிருக்கும்; 1869 ஆம் ஆண்டின் ஐரிஷ் கிறித்தவத் திருச்சபைச் சட்டம், (Irish Church Act) பெருமளவிலேனும் சட்ட அடிப்படையில்

வீணாகப்போன காகிதமாகவே போயிருக்கும்; மேலும், பல்கலைக் கழகங்களைச் சீர்திருத்துவதற்குச் சட்டங்களை இயற்றும்போது, ஆங்கிலப் பாராளுமன்றம் கையாண்டவழியில் பெரிய இடர்ப்பாடு தோன்றியிருக்கும். அண்மையில் வெகுவிரைவாகச் செய்யப்பட்ட ஆங்கிலப் பாராளுமன்றச் சட்டங்களையெல்லாம் தடைப்படுத்துவதற்கு ஐக்கிய அமெரிக்க நாட்டின் அரசியலமைப்பில் சேர்க்கப்பட்டுள்ள பல பொதுவான கொள்கைகளில் ஒன்றைமட்டும் இங்கிலாந்தில் ஏற்றுக் கொண்டால் போதும்.

### கூட்டரசு அமைப்பின் சட்டமனப்பான்மை, (Legal spirit of federalism)

கடைசியாகக் கூட்டரசு அமைப்பானது, சட்டமனப்பான்மையை (legalism)—அதாவது, அரசியலமைப்பில் நீதிமன்றமானது மேலோங்கி நிற்கும் இயல்பை—மக்களிடையே பரவி இருக்கும் சட்டநூல் உணர்வைக் காட்கிறது.

ஐக்கிய அமெரிக்க நாட்டைப்போன்ற ஓர் இணைப்பரசிலே (confederation) நாட்டின் அரசியலமைப்பு ஏற்பாடுகளெல்லாம் இயங்குவதற்கு அச்சாணியாக நீதிமன்றங்கள் இருக்கின்றன என்பது தெளிவாக இருக்கிறது இறைமை அதிகாரமானது, தனது அதிகாரத்தை வெகு அரிதாகக் கையாளுகிற ஒரு குழுவினிடமே விட்டுவைக்கப்பட்டிருக்கின்றது: அதனால் அது மறைமுகமாக இருக்கின்ற ஒன்றே (potential existence) ஆகும்; நாட்டிலுள்ள எந்தச் சட்டமன்றமும் உப சட்டங்களை அன்றி, வேறெதனையும் செய்ய முடியாத, ஒரு கீழ்த்தர நிலையிலுள்ள சட்டமியற்றும் மன்றமேயன்றி வேறில்லை; மேலும் நிர்வாக உறுப்பினுடைய அதிகாரங்களும் அரசிய லமைப்பினால் வரம்புக்கு உள்ளாக்கப்பட்டிருக்கின்றன. அரசியல் அமைப்பை விளக்குவோர்கள் நீதிபதிகளே ஆவர். ஆகையால் நீதிமன்ற மானது அரசாங்கம், சட்டமன்றம் ஆகிய இரண்டின் அதிகாரத்துக்கும் உள்ள வரம்புகளைத் தீர்மானிக்கக்கூடும், தீர்மானிக்கவும் வேண்டும்; அதனுடைய தீர்ப்புக்கெதிராக மேல் முறையீடு எதுவும் கிடையாது: எனவே, நீதிபதிகளடங்கிய நீதிமன்றமானது, அரசியலமைப்பின் பாது காவலராக மட்டுமல்லாமல், ஒரு குறிப்பிட்ட சூழ்நிலையில் அரசியலமைப் பிற்கு மேம்பட்டவராகவும் (master) ஆகின்றது என்ற விளைவு தோன்று கிறது.[1] கூட்டரசுக் கோட்பாட்டிற்கும் நீதித்துறையின் புகழ்மிக்க

[1] 'அரசியலமைப்பிற்கு மேம்பட்டவர்' என்ற இந்தத்தொடர் மிகைபடக் கூறிய தொடர் என்பதாகக் குறைகூறப்பட்டுள்ளது. (Sidgwick, Elements of Politics (1897), (P. 616). இந்தக் கருத்து மிகக் கடுமையானது என்பதில் ஐயமில்லை; எனினும், சரியாக உணரப்பட்டால் இது சரியானதே என்பதைத் தெரிவிக்க வேண்டியிருக்கின்றது; சிட்ஜ்விக் கூறுவதுபோல்: நீதிபதிகள் தவறான நடத்தையின் காரணமாகத் தண்டிக்கப்படுவதற்கு உரியவராயிருப்பதாலும், உயர்தர நீதிமன்றத்தின் தீர்ப்பு, புரட்சியைத் தூண்டிவிடக்கூடும் என்ற அச்ச

நிலைமைக்குமுள்ள தவிர்க்கமுடியாத தொடர்பைத் தற்கால சுவிட்சர்லாந்தின் வரலாறு வலியுறுத்துவதைப்போல, வேறு எதுவும் காட்டவில்லை. சுவிஸ் அரசியலமைப்பை எழுதிய, 1848ஆம் ஆண்டின் அரசியல் அறிஞர்கள் தங்களுடைய கூட்டரசு நீதிமன்றத்துக்கு (Bundesgericht) அமெரிக்க உயர்தர நீதிமன்றத்துக்கு இருப்பதைவிட, மிகக்குறைந்த அதிகாரம் உள்ள ஒரு நிலைமையையே அளிக்கவிரும்பினர். உண்மையில் அவர்கள், கூட்டரசுச் சட்டமன்றமானது, ஓரளவுக்காயினும் இன்று இருப்பதுபோல, ஒரு முடிவான மேல்முறையீட்டு நீதிமன்றமாக (final court of appeal) இருக்கும்படி செய்தனர். ஆயினும், நிலைமையின் தேவைகளை சுவிஸ் அரசியலறிஞர்களாலும் மறுக்க முடியவில்லை; 1874ஆம் ஆண்டில் செய்யப்பட்ட அரசியலமைப்புத் திருத்தம் கூட்டரசு நீதிமன்றத்தினுடைய அதிகாரத்தை மிகுதியும் கூடுதலாக்கிற்று,

---

மிருப்பதாலும், உயர்தர நீதிமன்றத்தினுடைய செயல் அதிகாரம் தடைப்படுத்தப்படுகிறது என்பது உண்மையே. இந்தத் தடைகளோடு கூடவே, மூன்றாவதும் இன்னும் வலிமிக்கதுமான ஒரு தடையும் சேர்த்துக் கூறப்படவேண்டும். நீதிமன்றங்களுடைய எண்ணிக்கையைக் காங்கிரஸ் மன்றம் உயர்த்தக்கூடும். ஒரு குறிப்பிட்ட வழக்கில் அதனுடைய தீர்ப்பு, பெருமக்கள் மன்றத்தின் தீர்ப்பு ஒரு முக்கியமான மேற்கோளாக அமைவதற்குரிய ஆற்றலைப் பெறுவதைப்போல, கொள்கை அளவிலேனும் ஓர் ஆற்றலைப் பெற்றிருக்கவில்லை; எனவே, உயர்தர நீதிமன்றமானது, ஐக்கிய அமெரிக்க அரசாங்கத்தைக் கட்டுப்படுத்துகின்ற அரசியல் கட்சியினுடைய கருத்துக்கு மாறாகத் தீர்ப்புகளைக் கூறினால், ஆளும் கட்சியினுடைய கருத்துகளை ஏற்றுக்கொண்ட சட்ட அறிஞர்களை நீதிமன்றததில் அமர்த்துவதன் மூலமாக மேற்கூறிய தீர்ப்புகள் மாற்றப்படலாம். (See Davis, American Constitutions; the Relations of the Three Departments as adjusted by a Century (1885) (p. 52-54) எனவே, உயர்தர நீதிமன்றமானது ஐக்கிய அமெரிக்க நாட்டின் இறைமை அதிகாரி என்று கூறுவது சரியன்று. இதனை உண்மையென உறுதியாகக் கூற வியலாது. என்றாலும், எந்த ஒரு குறிப்பிட்ட நேரத்திலும் நீதிமன்றமானது தனக்கு முன்வரும் எந்த ஒரு வழக்கின்மீதும் தீர்ப்புக்கூறி, அதன்மூலமாக அரசியலமைப்பு செயல்படுகின்ற வகையைத் தீர்மானிக்கமுடியும் என்பதும் உண்மையே. எடுத்துக்காட்டாக டிரெஸ்காட் வழக்கில் கூறப்பட்ட தீர்ப்பும், இவ் வழக்கைத் தீர்ப்பதில் கூறப்பட்ட நீதிபதிகளின் கருத்துகளும், அடிமைகளை உடையவர்களும், அடிமைத் தளையை ஒழிப்பவர்களும், அரசியலமைப்பிற்கு விளக்கம் கொடுப்பதற்குப் பெரிதும் உதவி செய்தன. நீதிமன்றத்தை அரசியலமைப்பிற்கு மேம்பட்டவராகக் கூறுவதனால், ஒழுங்கற்ற முறையிலோ, அது அதிகாரங்களைக் கையாளுகிறது என்பதாகக் குறிப்பிட்டதாகாது. தனது தீர்ப்பினால் ஏன் முறைக்கிளர்ச்சி தோன்றக்கூடும் என்ற அச்சத்தைக் கருத்தில்கொண்டு, உயர்தர நீதிமன்றம் தன் தீர்ப்புகளை வழங்கியிருத்தல் கூடும். எதேச்சாதிகாரிகளுளெல்லாம் மிக்க வலிமையுடையதாகிய இவ் வுயர்தர நீதிமன்றம், தன்னுடைய முழு அதிகாரத்தையும் கையாளுவதினின்றும் தடுப்பது இத்தகைய அச்சவுணர்வேயாகும். ஐக்கிய அமெரிக்க நாட்டின் இறைமை அதிகாரியாக இல்லாத உயர்தர நீதிமன்றம், ஓர் இறைமை அதிகாரியின் அதிகாரத்தை மட்டுப்படுத்துகிற தடைகள் எதுவுமில்லாமல், தன் அலுவல்களைச் செய்கிறதென்பதாக இங்குக் கூறவில்லை. மேலும், உயர்தர நீதிமன்றம் தன்னிடம் ஒப்படைக்கப்பட்டுள்ள எல்லா அதிகாரத்தையும் எவ்வளவிற்குக் கையாளமுடியுமென்பதை நாம் ஆராயுமிடத்து, காங்கிரசின் அதிகாரத்துக்குள்ள அரசியலமைப்பு வரம்புகளைப்பற்றியும், மற்ற கேள்விகளைப்பற்றியும் நீதிமன்றம் கொண்டுள்ள கருத்துகள் பெரும்பாலான அமெரிக்கக் குடிமக்களால் ஏற்றுக்கொள்ளப்படமாட்டா என்று கருத இடமில்லை. சுருங்கச்சொல்லில் எப்பொழுதாவது, அரசியலமைப்பைப்பற்றிக் குடியரசுத தலைவர் அல்லது காங்கிரஸ் கொண்டுள்ள கருத்தினின்றும் மாறுபட்ட கருத்தை நீதிமன்றம் கொண்டிருக்குமானால், அது தனது கருத்துக்குப் பெரும்பாலான மக்களுடைய ஆதரவைப் பெறுமென்பது உண்மையே.

**நீதிமன்றத்தின் இத்தகைய நிலைமையினால் தோன்றும் கேடுகள்**

கூட்டரசு நிறுவனங்களின்கீழே, நீதித்துறையானது அரசியலமைப்பின் முக்கியத்துவம் முழுவதையும் தாங்கிநிற்கிறது என்ற உண்மையிலிருந்து, ஒரு புதிய இடையூறு தோன்றுகிறது; இவ்வாறு இல்லாவிட்டால், நீதிமன்றமானது தனக்களிக்கப்பட்ட கடமையைச் செய்வதற்குத் தக்க வலியற்றுப்போய்விடும். ஐக்கிய அமெரிக்க நாட்டில் செய்யப்பட்ட அளவுக்கு வேறு எந்த நாட்டிலும் மிக்கத் திறமையோடு ஒரு புனிதமானதும், சக்தி வாய்ந்ததுமான ஒரு தேசிய நீதிமன்றம் அமைக்கப்படவில்லை; மேலும், நாம் முன்பே பார்த்துள்ள படி, அமெரிக்காவில் அரசியலமைப்பின் பாதுகாப்பானது, உயர்தர நீதிமன்றத்தினிடம் மட்டுமல்லாமல் நாட்டின் ஒவ்வொரு நீதிபதியினிடத்தும் ஒப்படைக்கப்பட்டிருக்கிறது. எனினும், உயர்தர நீதிமன்றமும், தன்மீது விதிக்கப்பட்ட கடமைகளை ஆதரித்து நிற்கமுடியாதென்பதும் தெளிவாகத் தெரிகிறது. பல்வேறு கடனடைப்புபற்றிய வழக்குகளிலும், அண்மையில் நடைபெற்றமுன் இல்லியனாய்ஸ்[1] வழக்கைப் போன்ற வேறு வழக்குகளிலும் வழங்கப்பட்ட வெவ்வேறு வகையான தீர்ப்புகள், 'நாணயமான நீதிபதிகளெல்லாம் மிகவும் நாணயமானவர்கள்தாம் என்பதையும் அவர்கள் கொள்கைபற்றியும் அரசியல் திறம்பற்றியும் எழும் வழக்குகளைத் தீர்க்கும்போது அரசியல் உணர்வும், அரசாங்கக் காரணங்களும் தம்முள் மிக்கோங்கி இருப்பதற்குக் காரணமாக இருப்பார்கள்' என்பதையும் காட்டுகின்றன. இத்தகைய ஓரஞ்சார்ந்த மன இயல்பு தெளிவாகத் தெரியவரும்போது, நீதிமன்றமானது தனது ஒழுக்கச்சார்பான அதிகாரத்தை இழந்துவிடுகிறது; கொள்கையின் அடிப்படையில் சரியென ஒப்புக்கொள்ளப்படக்கூடிய தீர்ப்புகள், சட்டத்தின் அடிப்படையில் ஒப்புக்கொள்ளப்பட முடியாமல் இருந்தால், அவை சீற்றத்தையும் ஐயப்பாட்டையும் தூண்டுவது இயல்பே. உயர்தர நீதிமன்றமானது, தன்னிடம் நிறைவேற்றப்படுவதற்காக ஒப்படைக்கப்பட்ட பொறுப்புகளை நிறைவேற்றுவதற்குரிய வலிமையைப் பெற்றிருக்கவில்லை என்பதையும், தொடக்கத்திலிருந்தே அது எப்போதாயினும் ஒரு மாகாணத்தோடு முரண்பாடு கொள்ளும்போது, அது வலியிழந்து நிற்கிறதென்பதையும், அல்லது அப்போது அது கூட்டரசின் நிர்வாக அதிகாரியின் ஆதரவைப் பெறமுடியாது என்பதையும், அது எப்போதும் மெய்ப்பித்துக் கொண்டிருக்கிறது என்பதாக அமெரிக்கத் திறனாய்வாளர்கள் கூறுகின்றனர் இத்தகைய குற்றச்சாட்டுகளெல்லாம் இப் பெரிய நீதிமன்றத்தின் அமைப்பிலுள்ள வலியற்ற பகுதியைச் சுட்டிக்காட்டுகின்றன என்பதில் ஐயமில்லை. ஒரு மாகாணத்தைப் பாதிக்கும் அதனுடைய தீர்ப்புகளைச் செயல்படுத்துவதற்கு வேண்டிய வழிகளைக் குடியரசுத் தலைவர் கொடுக்கமறுத்தால்,

[1] (1877) 4 Otto, 113.

அதனுடைய தீர்ப்புகள் வலியற்றனவாகிவிடும். இப்பொழுது கூறப்படும் பண்டைய ஒரு நிகழ்ச்சியின்படி, 'ஜான் மார்ஷல் தமது தீர்ப்பை வழங்கிவிட்டார்; அவரால் முடியுமானால், அவர் தமது தீர்ப்பைச் செயல்படுத்திவைக்கட்டும்,' என்பதாகக் குடியரசுத் தலைவர் ஜாக்ஸன் கூறினாராம்;[1] மேற்படி தீர்ப்பு செயலில் நிறைவேற்றி வைக்கப்படவே இல்லை. ஆனால், இவ் வைக்கிய அமெரிக்க நாட்டின் தொடக்கநாளில் கூறப்பட்டுவந்த குறைகள் மிகைபடக் கூறியனவாக இருக்கலாம்.[2] நீதிமன்றம் எச்சரிக்கையாக இருப்பதில் காட்டும் வளர்ச்சியை, நீதிமன்றத்தின் வலுக்குறைவான தன்மையைக்காட்டும் ஓர் அடையாளமாகச் சாதாரண மக்கள் தவறாகக் கருதியிருக்கலாம். ஒரு கூட்டரசின் முறையில் உயர்தர நீதிமன்றத்தைப்போன்ற ஓர் உறுப்பை ஏற்படுத்துகிற காரணங்கள், அத்தகைய உறுப்புக்கு வேண்டிய முடிவான ஆற்றலைத் தருகின்ற ஒரு நூலாதாரத்தையும் ஏற்படுத்துகின்றன என்பதையும் அயலவர்கள் காணுதல் வேண்டும். உயர்தர நீதிமன்றமும், அதனைப்போன்ற மற்ற நிறுவனங்களும் கூட்டரசு ஒப்பந்தத்தைக் காப்பனவாக இருக்கின்றன. அத்தகைய ஒப்பந்தத்தின் செல்லுபடியாகுந் தன்மையானது, நாளாவட்டத்தில் பல்வேறு மாகாணங்களின் உரிமைகளுக்கு அளிக்கப்பட்டுள்ள உறுதிமொழியே அல்லது உத்தரவாதமே ஆகும். கூட்டரசு அரசியலமைப்பானது, ஒழுங்காகப் பின்பற்றப்படவேண்டும் என்று விரும்புகிற ஒவ்வொருவரும், கூட்டரசு நீதிமன்றங்களின் தீர்ப்புகள் ஏற்றுக்கொள்ளப்பட வேண்டும் என்பதிலேயே நாட்டமுடையவராக இருப்பர். ஆகையால், ஐக்கிய அமெரிக்க நாட்டு மக்கள் எல்லாரும் சமநிலை அரசுமுறையான கூட்டரசுக் கோட்பாட்டைப் பாதுகாக்க விரும்பும்வரையில், அவர்கள் கூட்டரசு நீதிமன்றத்தின் அதிகாரத்தை ஆதரித்து நிற்குமாறு, நடு அரசாங்கத்தை முடிவாகக் கட்டாயப்படுத்துவாரென்று நாம் உறுதியாகக் கூறலாம். நீதிமன்றத்தைப்பற்றிக் குறை கூறுகிறவர்கள், அமெரிக்க மக்கள் மாகாண உரிமைகளைப்பற்றிக் கவனமில்லாமல் இருந்துவிடுவார்களென்று கூறவும் முற்படுகின்றனர். இத்தகைய கூற்று உண்மையாகவோ அல்லது உண்மையாக அல்லாமலோ இருக்கலாம். இத்தகைய விஷயத்தைப்பற்றி எந்த ஆங்கிலத் திறனாய்வாளரும் துணிவாக எதுவும் கூறமுடியாது. ஒரு கூட்டரசு நீதிமன்றம் செயல்படுவதைப்பற்றிக் குற்றச்சாட்டுகள் கூறப்படுகின்றன; ஆனால், இக் குற்றச்சாட்டுகள் ஒரு கூட்டரசு நீதிமன்றம் என்ற நிறுவ

[1] சம்னர் எழுதிய, 'ஆண்ட்ரு ஜாக்ஸன்' (1882) என்ற நூலை (p. 182) பார்க்கவும்.

[2] Davis என்பவர் எழுதிய, American Constitutions : The Relations of the Three Departments as adjusted by a Century (1885); பக்கங்கள் 55-57) என்ற நூலைப் பார்க்கவும். டேவிஸ் ஐக்கியநாடு நிறுவப்பட்ட நாளிலிருந்து நடு அரசாங்க நீதிமன்றத்தின் அதிகாரமும் பல்வேறு மாகாணங்களின் நீதிமன்றங்களின் அதிகாரமும் நிலையாக வளர்ந்துள்ளன என்பதாகக் கூறுகிறார்.

னத்துக்கு எதிராக எதனையும் கூறவில்லை; எவ்வாறெனில் அவை 'ஐக்கிய அமெரிக்க நாடானது உண்மையில் ஒரு கூட்டரசு நாடாக இல்லாமல் போகும்போது, ஒரு கூட்டரசு நீதிமன்றமும் தேவையற்றதாகவும், பயனற்றதாகவும் போய்விடும்,' என்ற மிகத் தெளிவான உண்மையைத் தவிர வேறு எதனையும் நிறுவவில்லை. ஓர் ஓரரசுக் குடியரசில் ஒரு கூட்டரசு நீதிமன்றத்துக்குத் தக்க இடம் கிடையாது.

மேலும், நீதிபதிகள் நீதித்துறைசாராத வேறு ஓர் அதிகாரியினால் தான் அலுவலில் அமர்த்தப்படுதல் வேண்டும். நீதி மன்றம் வழங்கும் தீர்ப்புகள் அரசாங்கத்தின் செயலைக் கட்டுப்படுத்தக்கூடும் என்ற நிலைமையில், நிர்வாகத்தினுடைய கருத்துகளோடு உண்மையிலேயே ஒத்திருக்கக்கூடிய நீதிபதிகளை அமர்த்தல் வேண்டும் என்ற தவிர்க்க முடியாத ஒரு சோதனை தோன்றுகிறது. மிஸ்டர் பிளெய்ன் என்பவரைக் குடியரசுத் தலைவராகத் தேர்ந்தெடுத்ததற்கு ஓர் எதிர்வாதமாகக் கூறப்பட்டது என்னவெனில், அவர் குடியரசுத்தலைவர் என்றமுறையில் நான்கு நீதிபதிகள் அமர்த்துவதற்காகப் பெயர் குறிப்பிடக்கூடிய வாய்ப்பைப் பெறுகிறார் என்பதும்; இரயில்வேக் கழகங்களோடு தொடர்புடைய இத்தகைய ஓர் அரசியல்வாதி, வாணிபக் கழகங்களுக்குச் சாதகமாகச் சட்டத்தை மாற்றக்கூடிய ஆட்களைக்கொண்டே உயர்தர நீதிமன்றத்தை நிரப்பிவிடக்கூடும் என்பதும் ஆகும். இத்தகைய குற்றச்சாட்டு ஆதாரமற்றதாக இருக்கலாம்; எனினும், இத்தகைய குற்றச்சாட்டு கொண்டுவரப்பட்டது என்ற உண்மையும், குடியரசுக் கட்சியினரும்கூட, குடியாட்சிக் கட்சியைச் சேர்ந்தவர்களை ஐக்கிய அமெரிக்க நாட்டின் உயர்தர நீதிமன்றத்திலிருந்து ஒதுக்கிவைக்க முடியாத காலம் வந்துவிட்டது என்று கூறியதும் நமக்குச் சில உண்மைகளைத் தெளிவாகக் காட்டுகின்றன; சட்டமன்றத்தைவிட நீதிமன்றங்களையே அரசியலமைப்பின் தீர்ப்பாளர்களாக ஆக்குவதனால் விளையும் நன்மைகளுக்கெதிராக, அவ்வாறு செய்வதனால் விளையும் சில குறிப்பிட்ட தீங்குகளையும் கவனித்தல் வேண்டும் என்பதையே மேற்கூறிய உண்மைகள் காட்டுகின்றன.

### சட்டநூல்பற்றிய உணர்வு இல்லாவிட்டால், கூட்டரசுமுறை இருத்தல் இயலாது

'ஒரு கூட்டரசு முறையானது, சட்டநூல் உணர்வை நிரம்பப் பெற்றும், சட்டத்தை மதிக்கக்கூடிய பயிற்சியைப்பெற்றும் உள்ள சமுதாயங்களிடையேதான் வளர்ச்சியடைய முடியும் என்பது அரசியல் கோட்பாட்டினுடைய எந்த முடிவையும்போல மிகத்தெளிவான ஒன்று ஆகும். சட்டம் இயற்றுதலுக்கு மாறாகச் சட்டப்படி வழக்குநடத்தும் இயல்பைக் கூட்டரசு முறையானது ஏற்படுத்துகிறது; சட்டத்திற்கு அஞ்சி நடக்கும் மக்களைத் தவிர, வேறு எவரும் ஒரு வழக்கில் அளிக்கப்படும் தீர்ப்பை ஒரு சட்டம் இயற்றப்பட்டதற்கு

ஒப்பானதாகக் கருதமாட்டார். ஐக்கிய அமெரிக்க நாடானது, கூட்டரசு முறையை வேறு எந்த நாட்டோடும் ஒப்பிடக்கூடாத அளவுக்கு, வெற்றியாக நிறைவேற்றி வந்துள்ளதற்கு முக்கிய காரணம், ஐக்கிய அமெரிக்க நாட்டின் மக்கள் இப்போதுள்ள வேறெந்த நாட்டினரைக்காட்டிலும் மிக அதிகமான அளவில் சட்டக் கருத்து களோடு ஒன்றி இருப்பதுதான். பல்வேறு மாகாணங்களின் அரசிய லமைப்புகளில் இருந்தோ அல்லது கூட்டரசு அரசியலமைப்பின் பிரிவுகளிலிருந்தோ தோன்றும் அரசியலமைப்புபற்றிய வழக்குகள் நாடோறும் நீதிமன்றங்களின் அன்றாட அலுவல்களாக அமைந் திருக்கின்றன. எனவே, குடிமக்கள் எல்லாரும் அரசியலமைப்பு அறிந்தவர்களாக ஆகிவிடுகின்றனர்; சீனர்களை நாட்டில் குடியேறச் செய்யும் உரிமையைப்போன்று, குடிகளிடையே மிகத் தீவிரமான உணர்வைத் தூண்டிவிடும் விஷயங்களெல்லாம், நீதித்துறையினாலேயே தீர்க்கப்படுகின்றன; நீதிமன்றத்தால் வழங்கப்படும் தீர்ப்புக் குடிகளால் ஏற்று நடத்தப்படுகின்றது. இவ்வாறு அவர்கள் ஏற்று நடத்துவதற்குக் காரணம், பொதுச் சட்டமுறையின் சட்டக் கருத்துகளை அமெரிக் கர்கள் மரபுரிமையாகப் பெற்றிருப்பதுதான்; பொதுச் சட்டமுறையின் கருத்துகளை. உலகத்திலேயே, 'மிகவும் சட்டப்படியாக அமைந்த சட்டம்' எனக் கருதலாம். சட்டத்திற்கும், நீதிக்கும் மதிப்புக்கொடுப் பதில் சுவிஸ் மக்கள் அமெரிக்கர்களைவிட, மிகவும் பின்னிலையில் இருப் பவர்களென்பதாக டி டாக்வில்லி வெகுகாலத்துக்கு முன்பே கூறினர். கடந்த அறுபது ஆண்டுகளின் நிகழ்ச்சிகள் சுவிஸ் மக்களுடைய சட்டத் துக்குக் கட்டுப்படும் தன்மையை அவர் குறைத்துச் சொன்னார் என்று காட்டுகின்றன. ஆயினும், ஸ்விட்சர்லாந்துக்குப் பழக்கமான சட்டமானது, நிர்வாகத்துக்கு மிகவிரிவான நிலைமைக்கேற்ற விசேட அதிகாரங்கள் இருப்பதை ஒப்புக்கொள்கிறது; மேலும், அது நீதிபதியின் அலுவல்களை முற்றிலும் அரசாங்கத்தின் அலுவல்களிலிருந்து தனியே பிரித்துவிடவில்லை. முற்றிலும் கூட்டரசு இயல்பையுடைய ஓர் அரசு முறைக்கு இன்றியமையாது இருப்பது, நீதிமன்றங்கள் முழு அதிகாரங் களைப் பெற்றிருப்பதுதான்; இதனைப் பெற்றிருக்காததனால், நாம் எதிர்பார்க்கிறபடி, இந்த இயல்பைப் பொறுத்தவரையில், சுவிஸ் கூட்டரசு முறையானது, தவறு அல்லது குறைபாடு உடையதாக ஆகிறது. ஆயினும், நீதிமன்றத் தீர்ப்புகளுக்கு மதிப்புக் கொடுப்பதில் சுவிஸ் மக்கள் அமெரிக்கர்களை ஒத்து இருக்காவிட்டாலும், அவர்கள் சட்டங்களை மதிக்கும் மக்களே ஆவர். நாடுகள் பலவற்றில் குடிகளில் பெரும்பாலோர், நீதிமன்றங்களுக்கு மிகப்பெரிய அளவில் அரசியல் ஆதிக்கத்தை விட்டுவிட விரும்புவார்களா, என்று நாம் ஐயுறலாம். ஆனால், தவறான தீர்ப்பாக இருந்தாலும், அந்தத் தீர்ப்பினுடைய முடிவான தன்மையை ஏற்றுக்கொள்ளாத எந்த நாட்டவரும் ஒரு கூட்டரசு நாட்டின் பகுதியாக அமைவதற்குத் தகுதிபெற்றவராக ஆக மாட்டார்.

பாகம் II

# சட்டத்தின் இறைமை

## 4. சட்டத்தின் இறைமை: அதன் இயல்பும் பொதுப் பயன்களும்[1]

### சட்டத்தின் இறைமை

இங்கிலாந்தை நார்மானியர்கள் வென்ற காலந்தொட்டு இன்றுவரை அதன் அரசியல் நிறுவனங்களை அணிசெய்து வருகின்ற தனிச் சிறப் பியல்புகள் இரண்டாகும்.

மத்திய அரசரங்கத்தின் இறைமை என்பது அவற்றுள் ஒன்றாகும். அது எல்லாம் வல்லது: எவராலும் மறுக்கொணாதது: நாடெங்கும் தங்கு தடையின்றிச் செலுத்தப்பட்டு வருவது; நாட்டின் அல்லது நாட்டு மக்களின் இவ் விறைமையானது, நம் நாட்டு வரலாற்றுக் காலத்தின் தொடக்கத்தில் இறைவர் அல்லது மன்னராலேயே செலுத்தப்பட்டு வந்தது. மன்னரே நாட்டின் சட்டங்களுக்கெல்லாம் மூலமாய்த் திகழ்ந்து வந்தார். நாட்டுமக்களிடையே அமைதியையும் ஒழுங்கையும் நிலைநாட்டி வந்தவரும் அவரே. நீதி மன்றங்களில் வழங்கப் பெறுகின்ற 'ஆதியிலிருந்தே அதிகாரமனைத்துக்கும் இருப்பிட மாயும் பிறப்பிடமாயும் விளங்கிவருபவர் அரசரேயாவார்[2] என்ற

[1] டைஸி (Dicey) என்பாரின் நூலினை, சிறப்பாக அவரது நூலின் இப் பகுதியைத் திறனாய்ந்தவர்களுளெல்லாம் தலைசிறந்தவர், சர். ஐவொர் ஜென்னிங்ஸ் (Sir Ivor Jennings) என்பவராவார். அவரது கருத்துகள் எவராலும் மறுக்க முடியாத் தன்மையன. The Law and the Constitutions 'சட்டமும் அரசியலமைப்பும்' என்ற நூலையும் (4ஆவது வெளியீடு, (1952). அத். i. ii. vi; பிற் சேர்க்கை ii) 'பொது ஆட்சிமுறை' (Public Administration) என்ற நூலில் எழுதப்பட்டுள்ளன. 'டைஸியைப்பற்றிய பாராட்டு' (In Praise of Dicey) என்ற கட்டுரையை (தொகுதி XI, நெ. 2, ஏப்ரல் (1953) சிறப்பாகப் பார்க்கவும்.

[2] ஆண்டு நூல்களைப் பார்க்கவும். (XXIV. எட்வர்ட் III. க்னீஸ்ட் (Gneist) என்பார் எழுதிய, Englische Verwaltungsrecht, (1867) என்ற நூலில் மேற்கோளாகத் தரப்பட்டது. தொகுதி:1, பக். 454.

மூதுரையானது, ஆதியில் அனைவரும் ஒப்பமுடிந்த ஒரு பெரும் உண்மையாகவே விளங்கி வந்தது. மன்னரால் செலுத்தப்பட்டுவந்த இவ் விறைமையானது, நாளடைவில் பாராளுமன்றத்தினரின் கைகளுக்கு மாறிவிட்டது. மன்னரது இறைமை என்பது மாறி இன்று அது பாராளுமன்றத்தின் இறைமையாக விளங்குகிறது. இத்தகைய இறைமையின் இயல்பையே சென்ற அத்தியாயங்களில் படித்தோம்.[1]

சட்டத்தின் இறைமை அல்லது சட்டத்தின் ஆட்சி என்பது இங்கிலாந்தின் சிறப்பியல்புகளில் இரண்டாவதாகும். முற்கூறப்பட்ட முதலாம் சிறப்பியல்போடு இது நெருங்கிய தொடர்புடையதொன்று. நம்நாட்டு அரசியல் அமைப்பின் தனிச் சிறப்பாக விளங்கும் இப் பண்பை, நீதி மன்றங்களில் வழங்கப்பெறும் பின்வரும் பழமொழியானது நன்கு விளக்கா நிற்கும். 'சட்டம்தான் மன்னருடைய தலை சிறந்த உடைமையாகும். மன்னர்களும் அவர்தம் குடிமக்களும் ஒருங்கே ஆளப்பெறுவது அச் சட்டத்தினால்தான். சட்டமின்றேல் மன்னர்களில்லை; மன்னர்களின் உரிமையுமில்லை.'[2]

'சட்டத்தின் இறைமை' என்பதன் இயல்பை விளக்குவதே இக் கட்டுரையின், இப் பகுதியின் நோக்கமாகும். அல்லது தனி மனித உரிமைகள் நம் நாட்டில் எவ்வெவ்வகையில் பல் முகத்தானும் பாது காக்கப்பட்டு வருகின்றன என்பதை விளக்குவான் வந்ததே இக் கட்டுரை என்றும் கூறலாம்.'

## சட்டத்தின் இறைமை பிற நாட்டவர் கண்களுக்குப் புலப்பட்ட விதம்

ஆங்கிலேயர்களின் பழக்க வழக்கங்களைக் கண்ணுற்ற பிறநாட்டு அறிஞர்களில் பலர், சான்றாக வால்டேர், (Voltaire) டிலோம், (De Lolme) டி டாக்குவில்லி (de Tocqueville) போன்றவர்கள் இங்கிலாந்தின் ஆட்சிமுறையில், சட்டத்தின் இறைமையானது மேலோங்கி நிற்பதைக் கண்டு பெரிதும் இறும்பூதெய்தியுள்ளனர். ஐரோப்பாவில் வேறெங்குமே காணப்பெறாத அளவுக்கு இங்கிலாந்தில் சட்டத்தின் ஆட்சி நிலவுவதைக் கண்ட அவர்கள், ஆங்கிலேயர்களையும் விஞ்சும் வகையில் ஆங்கில அரசியலமைப்புமுறையில் அப்படியே சொக்கி விட்டனர் என்று கூறலாம். ஆங்கிலேயரின் பழக்க வழக்கங்களிலும், ஏன், உணர்விலும் கூட, விரவிக்கிடக்கும் சட்ட மனப்பான்மையைக் கண்ணுற்ற பிறநாட்டவர்கள், எத்தகைய வியப்பும் திகைப்பும் எய்தினார்கள் என்பதை டி டாக்குவில்லி என்பார் எழுதியுள்ள நூலொன்றில்

[1] முதற் பாகம் பார்க்கவும்.

[2] ஆண்டு நூல்கள் XIX. ஹென்றி VI. முன்சொல்லப்பட்ட க்னீஸ்ட் என்பாரின் நூலில் பேசப்பட்டுள்ளது: தொகுதி 1, பக். 455.

தெள்ளத் தெளியக் காணலாம். நூதனமான அந் நூற்பகுதியில் அவர் இங்கிலாந்தையும் சுவிட்சர்லாந்தையும் ஒப்பிடுகின்றார். 1836ஆம் ஆண்டளவில் இங்கிலாந்தில் நிலவிவந்த சட்டங்களிலும், வழக்கங்களிலும் விரவிநின்ற ஓர் உள்ளுணர்வை, அதே நேரத்தில் சுவிட்சர்லாந்தில் காணப்பட்ட உணர்வோடு அவர் ஒப்பிடுகின்றார்.

**சுவிட்சர்லாந்தில் சட்டத்துக்குக் காட்டப்படும் மரியாதை குறைவாக இருப்பதையும், அதற்கு முற்றிலும் மாறானநிலை இங்கிலாந்தில் நிலவுவதையும்பற்றி டி டாக்குவில்லியாரின் கருத்து**

'யான் ஈண்டு சுவிட்சர்லாந்தோடு'[1] ஒப்பிடப்போவது அமெரிக்க ஐக்கிய நாடுகளையன்று; அந் நாட்டை, கிரேட் பிரிட்டனேடுதான் ஒப்பிடப்போகின்றேன். இந்த இரு நாடுகளையும் நீங்கள் சற்றே ஆராய்ந்து பார்ப்பீர்களேயானாலும், அன்றி இந் நாடுகளினூடே சிறிதே சென்று பார்ப்பீர்களேயானாலும்கூட, அவைகளுக்கிடையே வியக்கத் தக்க வேறுபாடுகள் பல இருப்பதைக் கண்டிப்பாக உணர்வீர்களென் பதே என் முடிவாகும். இரு நாடுகளையும் மொத்தமாகப் பார்க்கும் போது இங்கிலாந்தானது, ஹெல் வெடிக் குடியரசைவிடப் பெருமளவுக்குக் குடியரசுத் தன்மை பொருந்தியதாகவே காணப்படுகிறது. இவ் விரு நாடுகளுக்குமுள்ள வேற்றுமைகள் அவைகளின் நிறுவனங்களில்தான் பெரிதும் காணப்படுகின்றன; அதிலும் அவர்களின் பழக்க வழக்கங்களில்தான், சிறப்பான முறையில் அவ் வேற்றுமைகள் காணப் படுவதாகக் கூறலாம்.

1. பிரசுர உரிமை என்பது, மிக அண்மையில்தான் பல சுவிஸ் காண்டன்களுக்குக் கிட்டியுள்ளது.

2. தனிமனித உரிமைகள் என்பன இன்னும் பல காண்டன்களுக்குத் தக்கவாறு உத்தரவாதமளிக்கப்பெறவில்லை. இன்றைக்கும் கூட அரசாங்கம் நினைத்தால், அங்கு எப்பேர்ப்பட்டவரையும் பிடித்து ஒருவித விசாரணையுமின்றிச் சிறையில் அடைக்க இயலும்.

3. பொதுவாகக் கூறப்போனால், நீதிமன்றங்களுக்கு இன்னும் முழு அளவில் சுதந்தரநிலை அங்குக் கிட்டவில்லை என்றே கூறலாம்.

4. ஜுரி முறை, அல்லது நடுவர் குழு ஒன்றன்மூலம் வழக்குகளை விசாரித்துத் தீர்வுகாணும் முறையானது, பல காண்டன்களுக்குத் தெரியாததொன்றாகவே இருக்கின்றது.

[1] டி டாக்குவில்லியின் இந்தக் கருத்துகள் எல்லாம், 1908ஆம் ஆண்டைய சுவிட்சர்லாந்துக்கு ஒரு சிறிதும் பொருந்துவன அல்ல. சுவிஸ் கூட்டாட்சி அரசியலமைப்பானது ஏற்பட்ட 1848ஆம் ஆண்டுக்கு முற்பட்ட காலத்துக்கே அவர் கூற்றுகள் பொருந்துவனவாகும்.

5. அரசியல் உரிமைகள் என்றால் என்னவென்று தெரியாத ஒரு நிலையிலேயே, பல காண்டன்களில் வாழ்ந்த மக்கள் முப்பத்தெட்டு ஆண்டுகளுக்கு முன்பு இருந்ததாகத் தெரிகிறது. ஆர்கா, துர்கா, டெஸ்ஸின், வாட் போன்ற காண்டன்களிலும், ஜூரிச், பெர்ன் போன்ற காண்டன்களில் ஒரு சில பகுதிகளிலும் இத்தகைய நிலைமைதான் நெடுநாட்களாக நீடித்துவந்தது.

மேற்கூறப்பட்ட கருத்துகள் யாவும் அரசியல் நிறுவனங்களை விடப் பழக்கவழக்கங்களுக்குத்தான் பெரிதும் பொருந்துவனவாகும்.

(i) சுவிஸ் காண்டன்கள் பலவற்றுள் வதியும் மக்களுக்குச் சுயாட்சியில் ஒரு சுவையோ அல்லது விருப்பமோ ஒரு சிறிதும் இருப்பதாகத் தெரியவில்லை. அத்தகைய ஆட்சியில் ஒரு பழக்கத்தையேனும் அவர்கள் ஏற்படுத்திக்கொண்டதாகக் காணோம். நெருக்கடியான சமயங்களில் அவர்கள் பொதுக் காரியங்களில் அக்கறை காட்டுகின்றனர். ஆனால், சாதாரண சமயங்களில், அவர்கள் அதைப்பற்றிச் சிறிதும் கவலைப்படுவதாகக் காணோம். அரசியல் உரிமைகளில் உள்ள வேட்கையும், பொதுக் காரியங்களில் பங்கெடுத்துக்கொள்ள வேண்டுமென்ற ஆர்வமும் ஆயுள் முழுவதிலும் ஆங்கிலேயர்களை ஆட்டிப்படைப்பதுபோல் அவர்களை வாட்டுவதில்லை.

(ii) மிக அண்மையில் கிட்டியதொன்று ஆகையால், பிரசுர உரிமையானது, சுவிட்சர்லாந்தில் தவறான வழியில் பயன்படுத்தப்படுகிறது. சுவிஸ் செய்தித்தாள்கள், ஆங்கிலச் செய்தித்தாள்களைவிடப் புரட்சிகரமான கருத்துகளை வெளியிடுகின்றன. என்றாலும், அவை ஆங்கிலச் செய்தித்தாள்களைப்போல் நடைமுறைக்கொத்த கருத்துகளை அவ்வளவாக வெளியிடுவதாகக் காணோம்.

(iii) சங்கங்களை அமைத்துக்கொள்ளும் உரிமையைப்பற்றிப் ஃபிரெஞ்சு மக்களைப்போன்றே சுவிஸ் மக்களும் கருதுவதாகத்தெரிகிறது. அதாவது, புரட்சிக்கு இட்டுச்செல்லும் ஒரு சாதனமாக அவ் வுரிமையை சுவிஸ் மக்கள் நினைக்கிறார்களேயன்றி, மெதுவாகவும் அதேசமயம் நிச்சயமாகவும் குறைகளைக் களைந்துகொள்வதற்கு ஏற்ற ஒரு கருவியாக அவர்கள் அதைக் கருதுகிறார்களில்லை. சங்கங்களை அமைக்கின்ற கலையும், அவைகளை அமைத்துக்கொள்கின்ற உரிமையும் இன்னும் சுவிஸ் மக்களுக்குச் சரிவரப் புரியாதவைகளேயாகும்.

(iv) ஆங்கிலேயரிடம் காணப்படுகின்ற நீதியின்மேல் ஆர்வம் என்னும் அந்தத் தனிப்பண்பை, நாம் சுவிஸ் மக்களிடம் காண இயலாது. அவர்களது அரசியலமைப்பில்கூட, நீதி மன்றங்களுக்கு உரிய இடம் அளிக்கப்பெறவில்லை. பொதுமக்கள் கருத்தை

உருவாக்குவதில் அவை செய்யும் பணி ஒன்றுமில்லை என்றே கூறலாம். நீதியின்மீது ஓர் ஆர்வம், அரசியல் அரங்கில் அமைதியாகவும் சட்ட நீதியாகவும் நீதிபதிகளை உலவவிடுதல் இவைகளே சுதந்தரமாக வாழும் ஒரு சமுதாயத்தின் தனிப் பண்புகளாம் என்றால் அது மிகையாகாது.

(v) இறுதியாக, நான் கூற விழைவது என்னவெனில், இங்கிலாந்துக்குச் செல்லும் பிற நாட்டவர்களைப் பெரிதும் கவர்வதாய் அமைந்துள்ள சில பண்புகள், சுவிஸ் மக்களிடையே ஒரு சிறிதும் காணப்படவில்லை என்பதாகும். ஆங்கில மக்களுக்கு இயல்பாகவே நீதியின்மீது ஏற்படுகின்ற மதிப்பு, சட்டத்தின்மீது ஏற்படுகின்ற ஆர்வம், வன்முறைகளின்மீது தோன்றுகின்ற வெறுப்பு ஆகிய பண்புகளில் சுவிஸ் மக்களுக்கு இதயபூர்வமான ஈடுபாடே கிடையாதென்று கூறலாம். இத்தகைய பண்புகளில்லாத ஒரு நாடு, சுதந்தரமாக வாழத் தகுதியற்றதென்றே கருதத்தகும்.

என் மனத்திரையில் பதிவுபெற்றுள்ள இக் கருத்துகளை ஒரு சில சொற்களில் சுருக்கிக்கூற விழைகின்றேன்.

அமெரிக்க ஐக்கிய நாடுகளினூடே பயணம்செய்ய நேரிடும் ஒவ்வொரு பிரயாணியும், அமெரிக்க மக்களின் பழக்க வழக்கங்களில் எல்லாம் விரவிக்கிடக்கின்ற சுதந்தர வேட்கையையும், சுயேச்சை உணர்வையும் கண்டு, அப்படியே தன்னையுமறியாமல் அவற்றில் கவர்ச்சியுற்று அவற்றைப் போற்ற ஆரம்பித்துவிடுகிறான். இத்தகைய சுதந்தர ஆர்வமுள்ள மக்கள், உண்மையிலேயே ஒரு குடியரசு அரசாங்கத்தின் கீழன்றி வேறெந்தவகையான ஆட்சியின்கீழும் இருக்கமுடியாது என்ற எண்ணம், தானாகவே அப்பிரயாணியின் மனத்தில் ஏற்பட்டுவிடுகிறது. இதுபோன்றே, ஆங்கிலேயர்களைக் கண்ணுறும் அனைவரும், அவர்கள் ஒரு சுதந்தர நாட்டில்தான் வாழ்ந்துகொண்டிருக்கமுடியும் என்ற எண்ணத்தைக் கொள்வரென்பது உறுதி. ஆனால், இதேபோல சுவிஸ் மக்களைப் பார்த்து எவரும் அவர்களைச் சுதந்தரப் பிரியர்கள் என்று கூறிவிடமுடியாது. சுவிஸ் மக்களிடையே சுதந்தர விருப்பமானது இன்னும் நன்கு வேரூன்றவில்லை என்றுதான் கூறவேண்டும். ஏதோ ஒரு புரட்சியின் விளைவாக, சுவிஸ் காண்டன்கள் பலவற்றிலுள்ள குடியரசு நிலையங்கள் திடீரென்று குலைந்து போய்விடுமானால், நீண்ட நாட்களுக்கு அம் மக்கள் குடியரசில் நிலைத்த ஆர்வம் கொண்டிருப்பர் என்றும் அதை மீண்டும் பெற முயற்சிசெய்வார்களென்றும் கூறமுடியாது விரைவிலேயே அங்கு, குடியரசுக்கு ஒரு முற்றுப்புள்ளி வைக்கப்படுமென்பது உறுதி. அதோடு அங்குவாழ் மக்கள், வெகுவிரைவில் சுயேச்சையற்ற அடிமை வாழ்க்கைக்குத் தங்களைப் பழக்கப்படுத்திக்கொண்டு விடக்கூடுமென்றும் கூறலாம். ஆனால், இங்கிலாந்திலும், அமெரிக்க ஐக்கிய நாடுகளிலும் சுதந்தரமானது மக்களின் பழக்க வழக்கங்களில்தான்

பெரிதும் காணப்படுகின்றதேயன்றி வெறும் சட்டங்களால்மட்டும் அவை பெறப்படுவனவாகா. சுவிட்சர்லாந்திலோவெனில், சட்டங்களால்தான் சுதந்திரம் காணப்படுகிறதேயன்றி, பழக்கவழக்கங்களில் அவை அதிகம் இடம்பெறக் காணவில்லை.[1]

## டி டாக்குவில்லி என்பாரின் கூற்றுகளுக்கும் சட்டத்தின் இறைமை என்பதில் அடங்கியுள்ள பொருளுக்குமுள்ள தொடர்பு

நாம் எடுத்துக்கொண்டுள்ள பொருளுக்கு, டி டாக்குவில்லியின் சொற்கள் இரு வகைகளில் ஏற்புடைத்தாகத் தோன்றுகின்றன. முதலாவதாக, அவர்தம் சொற்கள் இங்கிலாந்தின் தனிப்பெருஞ் சிறப்பாக மிளிரும் சட்டத்தின் இறைமை, அதன் ஆதிக்கம் அல்லது ஆட்சியை நமக்குத் தெள்ளத்தெளிவாக எடுத்துக் காட்டி விடுகின்றன. அடுத்தாற்போல், அவர்தம் சொற்கள் ஆங்கில தேசிய சீலத்தில் மிகமிகத் தெளிவற்றநிலையில் காணப்படுகின்ற ஒரு பண்பின் மீது நமது கவனத்தைத் திருப்பிவிடுகின்றன. அப் பண்பின் இருப்பைப்பற்றி நாம் எவ்வளவு எளிதில் உணர்ந்துகொள்கிறோமோ, அவ்வளவு எளிதாக அதைச் சித்திரித்துக் காட்டுவது முடியாத காரியமாகிவிடுகிறது. டி டாக்குவில்லி என்ற அறிஞர்கூட, ஆங்கிலப் பழக்கவழக்கங்களில் காணப்படும் சிறப்பியல்பொன்றன் இருப்பை நன்கு உணர்ந்திருந்தபோதிலும்கூட, அதைத் திட்டவட்டமாக வரையறுக்க முடியாமல் திகைப்பதை நாம் பார்க்கிறோம். அவர் ஆங்கிலேயரிடையே காணப்படுகின்ற சுயாட்சிப் பழக்கம், சட்டமனப் பாங்கு, நீதிக்கு மரியாதை ஆகிய பண்புகளை ஒன்றோடொன்று கலந்து குழப்புகிறார். இந்த உள்ளக் கிளர்ச்சிகள் யாவும் ஒன்றுக்கொன்று நெருங்கிய தொடர்புடையவைதான் என்றாலும் அவற்றை ஒன்றிலிருந்து மற்றொன்றைத் தனித்தனியே பிரித்துணர முற்படும்போது, எவருமே சிறிது தடுமாற்றமடையக்கூடும். டி டாக்குவில்லி போன்ற நுண்மாண் நுழைபுலம் வாய்ந்த திறனாய்வாளர்களே, ஆங்கிலேயரின் வாழ்க்கைமுறையில் காணப்பெறும் தலையாயதொரு சிறப்புப் பண்பை விவரிப்பதில் சற்றுத் தடுமாறுகிறார் என்பதைப் பார்க்கும்போது, நம்மைப் போன்றவர்கள் அதை விளக்கமுற்படுவது எவ்வளவு கடினம் என்பது சொல்லாமலே போதருகின்றது. ஆங்கிலேயர்கள் சட்டத்தின் ஆட்சியை விரும்புகின்றவர்கள்; சட்டத்தின் இறைமை என்பது ஆங்கில அரசியல் நிறுவனங்களின் தனிச் சிறப்பாகும் என்றெல்லாம் நாம் பேசுகின்ற பொழுது, நாம் பேசுகின்ற சொற்களை உண்மையிலேயே நாம் புரிந்துகொண்டுதான் பேசுகிறோமா என்பது பெரிதும் ஐயப்பாட்டிற்குரியதேயாகும். உண்மையில் அத்தகைய சொற்களைப் பயன்படுத்துவோரில்

[1] டி டாக்குவில்லி என்பார் எழுதிய (Œuvres completes) என்ற நூல் (14 ஆவது வெளியீடு ; 1864) தொகுதி viii-ஐப் பார்க்க. (Melanges historiques). பக்கங்கள் 455-457-ஐயும் பார்க்க.

பலருக்கு, அவை மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தனவாகத் தோன்றிய போதிலும், பெரிதும் தெளிவற்றனவாயும், ஐயம் நிரம்பியனவாகவுமே இருக்குமென்பது தேற்றம். எனவே, 'சட்டத்தின் இறைமை அல்லது சட்டத்தின் ஆதிக்கம்' என்ற சொற்கள் குறிக்கின்ற பொருளின் முக்கியத்துவம் முழுவதையும் நாம் உணர்ந்து போற்றவேண்டுமானால், முதலில் நாம் அச் சொற்களை ஆங்கில அரசியலமைப்பை ஒட்டிப் பயன்படுத்தும்போது, என்ன பொருளில் அவற்றை வழங்குகிறோம் என்பதைத் திட்டவட்டமாகத் தீர்மானித்துக்கொள்ளவேண்டும்.

## சட்டத்தின் இறைமை என்பதின் மூன்று பொருள்கள்

சட்டத்தின் இறைமை அல்லது சட்டத்தின் ஆட்சி என்பது ஆங்கில அரசியலமைப்பின் தனிச்சிறப்பாகும் என்று நாம் கூறுகின்ற பொழுது, பொதுவாக நாம் குறைந்தது மூன்று பொருள்களை ஒரே சொற்றொடரில் உள்ளடக்கிப் பேசுகின்றோம், அவை மூன்றும், பார்வைக்கு ஒன்றுபோல் தெரிந்தாலும், உண்மையில் தனிப்பட்ட இயல்புகளையுடைய கருத்துகளாகும்.

## அரசாங்கத்தைப் பொறுத்தவரையில் யதேச்சாதிகாரம் அதன்பால் காணப்படாமை

சட்டத்தை ஒருவன் மீறினான் என்பது திட்டவட்டமாக நிலைநாட்டப்பட்டாலன்றி, அவனுக்கு யாரும் எவ்விதத் தீங்கும் ஏற்படுத்த முடியாதென்பது, மேற்சொன்ன மூன்று பொருள்களுள் ஒன்றாகும். அதன்படி ஒருவன் சட்டத்தைமீறிய குற்றமானது, சாதாரண நீதிமன்றங்களில் சாதாரணச் சட்டமுறைப்படி எடுக்கப்படும் நடவடிக்கைகள் மூலமாக நன்கு தெளிவாகத் தீர்மானிக்கப்படவேண்டும். அங்ஙனம் தீர்மானிக்கப்பட்டபின்பே, அவனை அரசாங்கம் தண்டிக்க முடியும். அதுவரை அவனுடைய உடலுக்கும் உடைமைக்கும் ஊறு செய்ய ஒருவராலும் முடியாது. இந்தக் குறிப்பிட்ட பொருளில் வழங்கப்படும்போது, சட்டத்தின் ஆட்சியானது, ஏனைய யதேச்சாதிகாரமான ஆட்சிமுறைகளுக்கு முற்றிலும் மாறுபட்டிருப்பதை எளிதில் உணரலாம். அதிகார பீடத்திலுள்ளவர்கள், வற்புறுத்தி மக்கள்மீது தமது தன்னிச்சா அதிகாரங்களைத் திணிப்பதையும் அல்லது யதேச்சாதிகாரத்தை விரிவானமுறையில் செலுத்துவதையும் அடிப்படையாகக் கொண்டுள்ள அரசாங்கமுறைக்கும், சட்டத்தின் ஆட்சிக்குமுள்ள வேறுபாடு மலைக்கும் மடுவுக்குமுள்ள வேறுபாட்டைப் போன்றதாகும்.

## இங்கிலாந்துக்கும் ஐரோப்பியக் கண்டத்துக்குமிடையே தற்காலத்தே காணப்படும் வேற்றுமை

'சட்டத்தின் இறைமை' என்பது (நாம், அச் சொற்றொடரைத் தற்போது வழங்குகின்ற பொருளில்) ஆங்கில அரசியல் நிறுவனங்

களுக்கே உரியதொரு தனிப்பண்பு என்று நாம் கூறுவது இன்றைய ஆங்கிலேயர் பலருக்கு ஆரம்பத்தில் சற்று விந்தையாகத் தோன்றலாம். ஏனெனில், இக் காலத்தே, சட்டத்தின் இறைமை என்பது இங்கிலாந்துக்கே உரியதொரு தனிச்சொத்து என்று எண்ணுவதெல்லாம் மாறி, அது நாகரிகமும் கட்டுப்பாடும் செறிந்த எல்லா நாடுகளுக்குமே பொதுவானதொரு பண்பு என்ற எண்ணமே, எங்கும் தலைதூக்கி நிற்பதாகத் தெரிகிறது. இன்றைக்கு இருக்கின்ற ஐரோப்பாவின் நிலைமையைமட்டுமே கருத்திற்கொண்டு, சட்டத்தின் இறைமை என்பது எங்கெங்குக் காணப்படுகிறது என்பதை ஆராய்வோமானால், மேலே கூறப்பட்ட குறுகிய பொருளில்கூட, அவ் விறைமையானது எந்த ஒரு ஐரோப்பிய நாட்டிலும் காணப்படுவதாகத் தெரியவில்லை. சட்டத்தின் ஆட்சி என்பது இன்றைக்கும்கூட, இங்கிலாந்துக்கும் அல்லது இங்கிலாந்தின் மரபுகளை ஒட்டி வளர்ந்துள்ள அமெரிக்க ஐக்கிய நாடுகள்போன்ற நாடுகளுக்குமட்டுமே உரிய தனிச்சிறப்பாகத் திகழ்கின்றதேயன்றி, ஏனைய ஐரோப்பிய நாடுகளின் அவை இன்னும் வேரூன்றவில்லை. அந் நாடுகளில் ஆட்சிபுரியும் நிர்வாக நிறுவனங்கள் இன்னும் மனம்போன போக்கிலேயே தம் அதிகாரங்களைச் செலுத்தி வருகின்றன. ஆங்கில அரசாங்கமானது கொள்கையளவில் உரிமை கொண்டாடவோ, நடைமுறையில் கடைப்பிடிக்கவோ அஞ்சக்கூடிய ஒருசில தன்னிச்சா அதிகாரங்களை ஐரோப்பிய நாடுகளின் அரசாங்கங்கள் தாராளமாகச் செலுத்திவருவதைக் காண்கிறோம். மக்களை மனம்போன போக்கில் கைதுசெய்தல், தற்காலிகமாகச் சிறையில் அடைத்து வைத்தல், நாட்டைவிட்டே விரட்டிவிடுதல் போன்ற காரியங்களை, அவைகள் சர்வ சாதாரணமாகச் செய்துகொண்டு வருகின்றன. அத்தகைய அதிகாரங்களைச் சட்டரீதியாக உரிமை கொண்டாடக்கூட ஆங்கில அரசாங்கம் முன்வராதெனக் கண்டிப்பாகக் கூறலாம். அத்தகைய முறையில்தான், யதேச்சாதிகாரமானது ஐரோப்பிய நாடுகளில் தலைவிரித்தாடி வருகிறது. ஐரோப்பிய அரசியலை அடிக்கடி பரிசீலனை செய்துவரும் ஆங்கில வாசகர்களின் மனத்தில் தட்டுப்படக்கூடிய கருத்து இதுதான், எங்கெல்லாம் அரசாங்கமானது தன்னிச்சைக்கு உகந்தமுறையில் நடக்க இடமிருக்கிறதோ, அங்கெல்லாம் யதேச்சாதிகாரத்துக்கும் இடமேற்பட்டுவிடுகிறது என்பதே அவர்களின் திரண்ட கருத்தாகும். ஒரு நாட்டு அரசியலமைப்பானது, முடியரசாக இருப்பினும், குடியரசாக இருப்பினும், அந் நாட்டு அரசாங்கமானது, தான் தோன்றித்தனமாக அதிகாரங்களைச் செலுத்த ஆரம்பிக்குமானால், அங்கு வாழும் குடிமக்கள் சட்டப்படி அனுபவித்துவரும் விடுதலைக்குக் கட்டாயம் ஆபத்து ஏற்படக் கூடுமென்பதை, ஐரோப்பாவின் அரசியலை ஊன்றிப் படிக்கும் ஆங்கில வாசகர்கள் அனைவரும் தெள்ளத்தெளிய உணர்வரென்பது திண்ணம்.

**பதினெட்டாம் நூற்றாண்டில் இங்கிலாந்துக்கும் ஐரோப்பாக் கண்டத்துக்குமிடையே நிலவிய வேறுபாடுகள்**

இன்றைய ஐரோப்பாவின் (1908) நிலைமையைமட்டுமே கருத்திற் கொண்டுபேசுவோமேயானால், ஐரோப்பிய நாடுகளில் அநேகமாக எல்லாவற்றிலுமே, தற்போது சட்டத்தின் இறைமையானது நன்கு வேரூன்றி விட்டது என்று கூறிவிடலாம். தனி மனிதர்கள் அரசியலில் கலந்து கொண்டு, குட்டைகுழப்பாதிருக்கும்வரையிலும், சட்டத்தை ஒழுங்காகக் கடைப்பிடித்து வருகின்ற வரையிலும், அரசாங்கத்திடமோ அன்றி வேறெவரிடமோ அஞ்சவேண்டிய அவசியம் அந் நாடுகளில் தற்போது இல்லை. அப்படியிருக்கும்போது, இங்கிலாந்தில் மன்னரோ, நிர்வாக அமைச்சர்களோ அன்றி வேறெந்த அதிகாரியோ தன் விருப்பப்படி யதேச்சாதிகாரம் செலுத்த இயலாதிருக்கின்ற ஒரு நிலைமையைக் கண்ணுறும் வெளிநாட்டவர் பலரும் மூக்கின்மேல் விரலை வைத்துக்கொள்ளவும், அத்தகைய நிலையை ஆங்கில அரசியல் அமைப்புக்கே உரிய இன்றியமையாச் சிறப்பியல்பென அன்னார் கருதவும் நேர்ந்தது எங்ஙனம் என்பதைப் புரிந்துகொள்வது நமக்குச் சற்றுக் கடினமாகவே இருக்கிறது.[1]

இத்தகைய குழப்பமெல்லாம் ஒருங்கே ஒழிந்து, நமக்குத் தெளிவு ஏற்பட வேண்டுமானால், நாம் நமது சிந்தனையை ஓரளவு பின்னோக்கிச் செலுத்தவேண்டும். நமது அரசியலமைப்பைப்பார்த்து வெளிநாட்டவர்கள் போற்றவும் தூற்றவும் ஆரம்பித்த அக் காலத்துக்கு, அதாவது 18 ஆம் நூற்றாண்டுக்கு நம் மனத்தைப் பின்னோட விடுவோமேயானால், நம் ஐயங்கள் யாவும் அகன்றுவிடும். 18 ஆம் நூற்றாண்டில், ஐரோப்பிய நாடுகளில் ஆட்சிபுரிந்துவந்த அரசாங்கங்கள் பலவும், தம் ஆட்சியின்கீழ் வாழ்ந்த குடிமக்களை வாட்டிவதைத்துவந்தனவென்று கூற இயலாதெனினும், அக் குடிமக்களின் உரிமைகளுக்குத் தக்க பாதுகாப்பளித்தனவா என்பது ஐயப்பாட்டுக்குரியதேயாகும். உண்மையில் அக் காலத்தே அவை விருப்பம்போல் யதேச்சாதிகாரத்தையே செலுத்திக் கொண்டுவந்தன. இங்கிலாந்தில் அவர்களுக்குப் புதுமையாகத் தென்பட்டது அதன் நல்லியல்போ அல்லது தாராளத்தன்மையோ அன்று. ஆங்கில ஆட்சிமுறையில் நிலவிய சட்டமனப்பான்மையே அவர்களுக்குக் காணாததொரு காட்சியாகத் தென்பட்டது. வால்டேர் என்ற வரலாற்றறிஞர் இங்கிலாந்து வந்தபோது, அவரைக் கவர்ந்தது இச் சட்ட மனப்பாங்கேயாகும். அச் சமயத்தில் அவர், ஏதோ வல்லரசு

[1] சட்டத்தின் இசைவினைப்பெற்றுள்ள வினைகளைச் செய்வதில்தான் உண்மையான சுதந்தரம் அடங்கியுள்ளது. சட்டத்தால் தடுக்கப்படுகின்றவைகளைச் செய்கின்ற ஒருவன் எவ்விதச் சுதந்தரத்தையும் அனுபவிக்கமுடியாது. ஏனெனில், ஏனையவரும் அவனைப்போலவே தான்தோன்றித்தனமாக நடக்க ஆரம்பித்து விடுவார்கள். சட்டத்துக்கொத்த அரசியல் சுதந்தரமொன்றையே குறிக்கோளாகக்கொண்ட அரசியலமைப்பை உடையதொரு சமுதாயமும் இவ் உலகில் உள்ளது. 'ibid ch. v.—ஆங்கிலேயரே அத்தகைய சமுதாயத்தினர்.

தலைவிரித்தாடுகிற ஒரு நாட்டிலிருந்து விடுபட்டு, சட்டத்தின் ஆட்சி நிலவுகிற ஒரு நாட்டுக்குள் அடியெடுத்து வைத்துவிட்டதாகவே உணர்ந்தார். சட்டங்கள் ஓரளவு கடுமையாக இருந்தாலும்கூட, மனம்போன போக்கில் தான்தோன்றித்தனமாக நடந்துகொள்ளக் கூடிய அரசாங்கத்தினர் ஆட்சிபுரியும் ஒரு யதேச்சாதிகார நாட்டைவிட, சட்டத்தின் ஆட்சிக்கு மக்கள் உட்பட்டிருக்கும் நாடு எவ்வளவோ மேலானதென்ற எண்ணமும் அத்தகைய ஆட்சி நிலவும் நாடு ஒன்றுக்குத் தாம் வந்துள்ளோமென்ற உணர்வும்தான் அவர் உள்ளத்தே தலைதூக்கி நின்றன எனலாம்.[1] ஃபிரான்சுக்கும் இங்கிலாந்துக்கும் உள்ள அடிப்படையான வேற்றுமையை வால்டேர் இங்ஙனம் உணர்ந்ததற்குத் தக்க காரணங்களிருந்தன. 1717 ஆம் ஆண்டில் அவர் ஒரு சமயம் சிறைத் தண்டனைக்குட்பட்டார். அவர் எழுதியதாகக் கருதப்பட்ட ஒரு கவிதையின் காரணமாக அவரை அரசாங்கமானது பாஸ்ட்டீல் சிறைச் சாலையுள் தள்ளியது. ஆனால், உண்மையில் அவர் அக் கவிதையின் ஆசிரியரே அல்லர். அதில் தெரிவிக்கப்பட்டிருந்த கருத்துகளும்கூட அவருக்கு ஒரு சிறிதும் உடன்பாடில்லாதவைகளேயாம். அங்ஙனமிருந்தும், அவர் சிறைத் துன்பத்துக்கு ஆளாகவேண்டியிருந்தது. அதோடுகூட அப்போது ஃபிரான்சை ஆண்டுவந்த பாதுகாப்பாளரின் (Regent) ஏளனத்துக்கும் அவர் உட்பட நேர்ந்தது. இந்த நிகழ்ச்சி முழுவதிலும் ஆங்கிலேயரின் கண்களுக்கு மிக விசித்திரமாகத் தென்படக் கூடியது என்னவெனில், பாதுகாப்பாளர் இந் நிகழ்ச்சியை ஏதோ ஒரு கேலியாகப் பாவித்து நடந்துகொண்டதுதானாகும். 'நான் கண்டு கொண்டேன்' என்ற தலைப்பின்கீழ் எழுதப்பட்ட அவ் வசை பாடலின் ஆசிரியராகக் கருதப்பட்ட ஆசிரியரான வால்டேர், 'அவர் கண்டறியாத' சிறைச்சாலைக்கு விருந்தினராகப் போகப் போகிறார் என்று சிலேடையாகக் கூறி அம் மன்னர்பிரான் எள்ளி நகையாடினார்.[2] 1725 ஆம் ஆண்டில், ஃபிரெஞ்சு இலக்கிய உலகின் இணையற்ற வீரரெனத் திகழ்ந்த ஒரு கலாமேதையான வால்டேர், கோமகன் ஒருவரது

[1] அன்றைய நாடொன்றில் தம்மைப் புகலிடமடையச்செய்த கொடுமையான சூழ்நிலையின் பின்னணியில், இங்கிலாந்தின் நிலைமையை நோக்கிய வால்டேர் எனும் அறிஞர் பெரிதும் இறும்பூதெய்தினார். ஆங்கில நிறுவனங்கள்மீது அவருக்கு நன்மதிப்பும் அனுதாபமும் பெரிதும் ஏற்பட்டன. கொடுங்கோன்மைக்கு எள்ளளவும் இடமில்லாத ஒரு நிலைமை ஆங்கில நிறுவனங்களில் காணப்படுவதை உணர்ந்த அவர், அவற்றைப் பின்வருமாறு பாராட்டுகிறார்: 'இங்கே அறிவு உரிமையுடன் உலவுகிறது. கருத்து வெளியீட்டுக்கு இங்கே கட்டுப்பாடு எதுவுமில்லை. ஃபிரான்சிலிருப்பதைவிட மேலான சுதந்தரக் காற்றை இங்கே ஒருவன் உட்கொள்ள முடிகிறது. தனது தலையிலுள்ள மயிரில் ஒன்றைக்கூட எவனும் தொடமுடியாது என்ற வீறுப்புடன் தலைநிமிர்ந்து உலவும் குடிமக்களின் மத்தியில் உலவுவதை ஒவ்வொருவரும் இங்கு உணரலாம். மேலதிகாரிகளிடமிருந்து திடீரென்று வரக்கூடிய முத்திரையிட்ட ஆணைக் கடிதங்களுக்கு இங்கே இடமில்லை. தகுந்த காரணங்களின்றி யாரையும் கைது செய்தலென்பது இங்கு முடியாத காரியம்.

[2] Desnoiresterres Voltaire et la Societe au XVIII ieme Siecle (2nd edi., vol. 1) pp. 344-364

அவைக்களத்திலின்றும் நயவஞ்சகமாக அப்புறப்படுத்தப்பட்டதோடு கையாட்களால் அன்னாரின் தலைமைப் பிரபுவின் முன்னிலையிலேயே நையப் புடைக்கவும்பட்டார். தமக்கு ஏற்பட்ட அவமானத்தைக் குறித்து அவர் முறையிட்டுக்கொண்டபோது, அவருக்குக் கிடைத்தது சிறைத் தண்டனையேயன்றி வேறன்று. சட்டரீதியான முறையிலும் கௌரவமானவகையிலும் அவர் தம் குறைகளுக்குரிய பரிகாரங்களைத் தேடிக்கொள்ள முடியாமற்போயிற்று. இரண்டாம்முறையாக அவர் பாஸ்டைல் சிறைச்சாலைக்குள் தள்ளப்பட்டார். அவர் சிறைச்சாலைக்குள் வாட நேர்ந்தது அதுவே இறுதியானதாகும். ஏனெனில், அதன்பின் அவர் தாமாகவே நாட்டைவிட்டு வெளியேறிவிட்டார். இங்ஙனம் தாமாகவே தம்மை நாடுகடத்திக் கொண்டதாலேயே, அவர் தமது உடலையும் உடைமையையும் காப்பாற்றிக்கொள்ள முடிந்தது. எனினும், அவரது வாழ்நாளில் பெரும்பகுதியானது அவருக்கும் ஃபிரெஞ்சு யதேச்சாதிகாரத்துக்கும் நடைபெற்ற ஓயாத போராட்டத்திலேயே கழிந்துவிட்டது. தமது புகழின் வன்மையாலும், செல்வச் சிறப்பாலும், அறிவின் திறத்தாலும், எல்லையற்று அவருள்ளத்தில் உதித்துவந்த சமயோசிதமான உபாயங்களாலுமே, அவர் தற்காலிகச் சிறைவாசத்தைக்காட்டிலும் இன்னும் பன்மடங்கு அதிக கொடுமைவாய்ந்த தண்டனைகள் பலவற்றினின்றும் தப்பிக்க, முடிந்தது. இங்கிலாந்தில் நிலவிவந்த சட்டத்தின் இறைமையானது 18 ஆம் நூற்றாண்டில் வந்தவர்களுக்கு எத்தகையதொரு காணாத காட்சியாகத் தென்பட்டது என்பதை நன்கு அறிய விரும்புவோர், மோர்லி என்பாரால் எழுதப்பட்ட 'டை டெராட்' என்பாரின் வாழ்க்கை வரலாறு' (Life of Diderot) என்ற நூலைப் படித்துப் பார்க்க வேண்டும். டை டெராட் போன்ற ஃபிரெஞ்சு இலக்கிய மன்னர்கள் பலரது ஓயாத உழைப்பாலேயே கலைக்களஞ்சியம் (Encyclopedie) என்ற பெரு நூலானது வடிவெடுத்தது. இருபத்திரண்டு ஆண்டுகள் அவர்கள் இடைவிடாது உழைத்ததன் விளைவால் வெளிவந்த கலைக் களஞ்சியமானது, ஃபிரெஞ்சு நாட்டின் தலைசிறந்த எழுத்தாளர்கள் பலரும் தங்கள் கருத்துகளை அம்பலப்படுத்த அரசாங்கத்தோடு நடத்திய போராட்டத்தில் பெற்ற வெற்றியின் சின்னமேயன்றி வேறன்று. அப் போராட்டத்தில் அவர்கள் பட்ட துன்பங்கள் அல்லது பெற்ற வெற்றிகள் ஆகிய இரண்டுமே, ஃபிரெஞ்சு அரசாங்கத்தின் மனம்போன போக்கிற்கும் தான்தோன்றித் தனத்துக்கும் தக்க சான்றுகளாக விளங்குகின்றன எனலாம்.

மன்னர்களின் தான்தோன்றித்தனமென்பது, பதினைந்தாம் லூயி போன்ற வெறுக்கத்தக்க மன்னர்களிடம் மட்டுமே காணப்பட்ட ஒரு தீய பண்பு என்று கருதுவதற்கில்லை. ஃபிரெஞ்சு ஆட்சிமுறையிலேயே அப் பண்பானது இயல்பாகவே ஊறிக்கிடந்தது எனலாம். பதினாறும்

னாயி மன்னர் இயற்கையிலேயே கொடுமைவாய்ந்த அரசராயில்லாதிருந்தது போலவே, யதேச்சாதிகார மனப்பான்மையும் கொண்டவரல்லர் என்ற கருத்தானது, அறிஞர்களிடை உலவிவருகிறது. இருப்பினும், 1789ஆம் ஆண்டுவரையில், ஃபிரெஞ்சு முடியரசாட்சியில் சட்டத்தின் இறைமை என்பது சிறிதேனும் செயல்பட்டு வந்தது என்று கூறுவது பெரிதும் தவறானதாகும். நம் காலத்தே, க்ளெய்மாண்ட் (Claimant) என்பாரது வஞ்சகச் செயலானது எத்தகைய பரபரப்பை நாட்டில் ஏற்படுத்தியதோ, அதற்குச் சமமான சலசலப்பையே செவாலியர் டி இயான் (Chevalier D' Eon) என்பாரது அசட்டுத்தனங்களும், மனக் குறைகளும் அவரைச் சூழ்ந்திருந்த மர்மங்களும் ஒரு நூற்றாண்டுக்கு முன்னர் நாட்டில் ஏற்படுத்தின என்பதைப் பார்க்கிறோம். இவைகளைப்பற்றி எல்லாம் இன்றைக்கு நினைவுபடுத்திக் கொள்வதுகூட அவ்வளவு தேவையானதன்று. மற்றப்படி நாம் நினைவில் நன்கு பதித்துக்கொள்ளக்கூடிய ஒரே நிகழ்ச்சி யாதெனில், 1778ஆம் ஆண்டில் ஃபிரெஞ்சு ராஜதந்திரி ஒருவர் தக்க விசாரணையின்றிப் பலவகையிலும் துன்புறுத்தப்பட்டதேயாகும். ஜான்ஸன் ஆடம் ஸ்மித் (Adam Smith) கிப்பன், (Gibbon) கௌபர், (Cowper) பர்க், (Burke) மான்ஸ்ஃபீல்ட் (Mansfield) போன்ற தாராளக் கருத்துடைய அறிஞர்கள் வாழ்ந்துவந்த ஒரு காலத்தில், அமெரிக்க சுதந்தரப் போராட்டமானது தொடர்ந்து நடைபெற்றுக்கொண்டிருந்த வேளையில், ஃபிரெஞ்சுச் சட்டசபையான முப்பேராயம் (States General) கூட்டப்பட்டு பதினோராண்டுகள்கூட நிறையாத சமயத்தில், வீரமிக்க ஒரு அதிகாரியாயும் புகழ் மண்டிய ராஜதந்திரியுமாயுமிருந்த ஒருவர், அவர் செய்யாத அல்லது செய்ததாக நிரூபிக்கப்படாத ஓர் குற்றத்துக்காக, விசாரணை எதுவுமின்றி, மிகக் கொடியதோர் அவமானத்துக்கும் கழுவாய்க்கும் உட்படுத்தப்பட்டார் என்பதுவே நாம் மறக்கமுடியாததொரு நிகழ்ச்சியாகும். கீழை நாட்டுக் கொடுங்கோலராட்சியில்கூட[1] அத்தகைய சித்திரவதைகளுக்கு ஒருவர் உட்படுத்தப்பட்டிருக்கமாட்டார் என நாம் துணிந்து கூறலாம்.

மேற்கூறியவற்றால், ஃபிரெஞ்சு நாட்டில் 18ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில், ஏனைய ஐரோப்பிய நாடுகளில் காணப்பெறாத அளவுக்கு யதேச்சாதிகார அரசாங்கம் நடைபெற்றுவந்தது என்று யாரும் கருதிவிட வேண்டா. அப்படி யாரேனும் கருதுவார்களேயானால், அது ஐரோப்பிய நாடுகளில் அன்று காணப்பட்ட நிலைமையை உள்ளவாறு உணராததன் விளைவாகத்தான் இருக்கமுடியுமேயன்றி வேறன்று.

[1] lettres de cachet என்ற தனியாணைப் பத்திரங்கள்மூலம் மன்னர்கள் செலுத்திவந்த அதிகாரத்தைக் கைவிட, ஸ்டேட்ஸ் ஜெனரல் கூடிய பின்பும், மன்னர் தயங்கினர் என்பது, ஈண்டு குறிப்பிடத் தக்கது. 'Declaration des intentions du Roi' art 15, Plouard, Les Constitutions francaises' (1871-1876) என்ற நூலில் பக்கம். 10-ஐப் பார்க்கவும்.

உண்மையில் அன்று ஃபிரான்ஸில் சட்டத்துக்கும், பொதுமக்கள் அபிப்பிராயத்துக்கும் அளிக்கபபட்டுவந்த மதிப்பானது, ஸ்பெயினிலும், இத்தாலியிலும், ஜெர்மானியச் சிறு நாடுகளிலும் தரப்பட்ட மரியாதையைவிட மிகமிக அதிகமென்றே கூறத்தகும். ஃபிரான்ஸ்போன்ற பெரிய நாட்டில் காணப்பட்ட காரணத்தால், குன்றின்மேல் இட்ட விளக்கென உலகத்தாரின் கவனங்களைப் பெரிதும் கவர்ந்துவிட்ட கொடுங்கோன்மையின் தீமைகள் அனைத்தும், இன்னும் மிகமிக இழிவான முறையில் ஏனைய ஐரோப்பிய நாடுகளில் காணப்புட்டு வந்தன. அத்தீமைகள் யாவும் அளவுக்குமீறி அந் நாடுகளில் காணப்பட்ட காரணத்தாலோ என்னவோ, அவை ஏனைய மக்களின் கவனங்களை அவ்வளவாக ஈர்க்கவில்லை. உண்மையில், ஃபிரெஞ்சு மன்னரது அதிகாரத்தை அறிஞர்கள் கண்டித்த அளவுக்கு, அவரைவிடக் கொடுமையாகக் குடிமக்களை ஆண்டுவந்த எத்தனையோ பல சிற்றரசர்களின் தான்தோன்றித்தனத்தை அவர்கள் கண்டிக்கவில்லை என்றே தோன்றுகிறது. அங்ஙனம் அவர்கள் நடந்துகொண்டதற்குக் காரணம், ஃபிரெஞ்சு மன்னர்கள் ஏனைய முடியரசர்களைவிட, அதிகமாக யதேச்சாதிகாரம் செலுத்திவந்ததுதான் என்று கருதப்படுதற்கில்லை. பின் என்னவெனில் பண்டைய ஃபிரஞ்சு ஆட்சிமுறையானது கொடுங்கோன்மைக்கெல்லாம் தக்கதோர் எடுத்துக்காட்டாக விளங்கிவந்தமையும், ஃபிரெஞ்சு மக்கள் தங்களது பெருமைக்கேற்றவாறு கொடுங்கோன்மையிலிருந்து விடுபடப் பெரிதும் தகுதி வாய்ந்தவர்களென்று அனைவராலும் கருதப்பட்டதுமே, அங்ஙனம் ஃபிரெஞ்சு மன்னர்கள் கண்டிக்கப்பட்டமைக்குக் காரணமெனலாம். ஃபிரெஞ்சுப் பாஸ்ட்டீல் சிறையானது வீழ்ச்சியடைந்தபோது, ஐரோப்பிய மக்கள் அனைவரும் அதைக் குதூகலமாக வரவேற்றதன் காரணமும் அதுவேயாம். பாஸ்ட்டீல் சிறைக்கோட்டமானது பிடிபட்டபோது, அதில் பத்துக் கைதிகள் கூடக் காணப்படவில்லை. ஆனால், அதே சமயத்தில் நூற்றுக்கணக்கான கடனாளிகள் ஆங்கிலச் சிறைகளில் வாடிக்கிடந்தனர். எனினும், ஃபிரெஞ்சு மக்களது வெற்றியை, இங்கிலாந்து முழுவதுமே ஒரே ஆரவாரத்துடன் பாராட்டியது. அங்ஙனம் பாராட்டியபோது, அவர்கள் காட்டிய உற்சாகத்தையும் உணர்வையும், இருபதாம் நூற்றாண்டு ஆங்கிலேயர்கள் புரிந்துகொள்வதென்பதே சற்றுக் கடினம்தான். நன்றாகச் சிந்தித்துப் பார்க்கும்போதுதான், நாகரிக உலகின் மூலைமுடுக்குகளிலெல்லாம் அன்று வெளிப்பட்டதோர் உணர்ச்சிக்குக் காரணமென்ன என்பது தெளிவாக நம் உள்ளத்தில் தென்படுகிறது. ஆம்! பாஸ்ட்டீல் சிறைச்சாலையானது, அக் காலத்தே யதேச்சாதிகாரத்தின் புறச்சின்னமாகவே அனைவருக்கும் காட்சியளித்தது. அதன் வீழ்ச்சியை மக்கள் கொடுங்கோன்மையின் வீழ்ச்சியாகவே கருதி மகிழ்ச்சியுற்றனர். அதன் வீழ்ச்சியின் விளைவாக இங்கிலாந்தில் ஏற்கெனவே நிலவி வந்துள்ள சட்டத்தின் ஆட்சியானது, ஐரோப்பிய நாடுகளிலெல்லாõ

பரவவேண்டிய காலம் வந்துவிட்டதாகவே யாவரும் உணர்ந்தனர்.[1] உண்மையிலேயே நடைபெறப் போவதையே அவர்களும் அன்று உணர்ந்திருந்தனரென்பதை நாம் இன்று அறிகிறோம்.

### சாதாரண நீதிமன்றங்களில் வழங்கப்பெறும் சாதாரணச் சட்டங்களுக்கு ஒவ்வொரு குடிமகனும் கட்டுப்பட்டவன்

'சட்டத்தின் இறைமை' என்பது நம் நாட்டின் சிறப்பியல்பு என்று நாம் கூறுகின்றபொழுது, நாம் கருதுகின்ற இரண்டாவது பொருள்[2] என்னவெனில், சட்டத்துக்கு மேலானவர்கள் நம்மிடையே ஒருவரும் இல்லை என்பதோடு மட்டுமன்றி, இங்கே வாழும் ஒவ்வொரு மனிதனும், அவனது சமூக அந்தஸ்து அல்லது நிலை எதுவாக இருப்பினும், அவன் நாட்டின் சட்டங்களுக்குக் கட்டுப்பட்டவன் என்பதும், சாதாரண சட்டங்களுக்குக் கட்டுப்பட்டவன் என்பதும், சாதாரண நீதிமன்றங்களின் அதிகார வரம்புக்குட்பட்டவன் என்பதும் (இது முன்பு சொல்லப்பட்டதினின்றும் வேறுபட்டது) ஆகும்.

சட்டத்தின்முன் சமத்துவம் என்ற கருத்தை அல்லது சாதாரண நீதிமன்றங்களால் கையாளப்பெறும் சாதாரண சட்டங்களுக்கு யாவருமே பொதுவாகக் கட்டுப்பட்டவர்கள் என்ற கருத்தை நடைமுறையில் கடைப்பிடிக்கும்போது, ஆங்கிலேயர்கள், அக் கருத்தால் குறிக்கப்பெறும் பொருளின் எல்லையையே எட்டிவிடுகிறார்கள் எனலாம். நம்மிடையே சட்டத்தின் முன், பிரதம மந்திரியிலிருந்து, சாதாரண தாணுக்காரன் அல்லது வரி தண்டுபவன்வரை எல்லா அரசாங்க அதிகாரிகளும் சமமேயாகும். அவ் வதிகாரிகளில் எவர் சட்டத்தை மீறிய செயலில் இறங்கினாலும், சாதாரண ஏனைய குடிமக்களைப்

[1] ஃபிரெஞ்சுக்காரரின் அடிமைநிலையை, ஆங்கிலேயர் எங்ஙனம் உணர்ந்தனர் என்பதை அறிய விரும்புவோர், 'உலகக் குடிமகன்' (The Citizen of the World) என்ற தமது நூலில், கோல்ட்ஸ்மித் (Goldsmith) என்பார் எழுதியுள்ள நான்காவது கடிதத்தைப் பார்க்கவும். அதே நூலில் முப்பத்தெட்டாவது கடிதத்தில் ஃபெர்ரர்ஸ் (Ferrers) பிரபு இங்கிலாந்தில் சிரச்சேதம் செய்யப்பட்டதையும், ஃபிரான்ஸில் பிரபு ஒருவர் அரசகுடும்பத்தின் உறவினர் என்ற காரணத்தால், கொலை ஒன்றை மிகத்துணிவோடு செய்வதற்கு அனுமதிக்கப்பட்டதையும் அவர் ஒப்பிட்டுள்ளதைப் பார்க்கவும். பொதுவாக ஐரோப்பாவில் நிலவிவந்த ஓர் உணர்ச்சியை அறிந்துகொள்வதற்கு டி டாக்குவில்லி என்பார் எழுதியுள்ள (Œuvres completes. 14 ஆம் வெளியீடு, 1864) தொகுதி VIII என்ற நூலையும் Melanges historiques என்ற நூலில், பக்கங்கள் 57-72-ஐயும் பார்க்கவும். இந்தப் பொருளில் சட்டத்தின் இறைமை என்பது வழங்கப்படும்போது, சட்டத்தின் நடைமுறையை விலக்கிவைக்கும் அதிகாரமானது, அரசாங்கத்துக்கோ அல்லது அதன் ஊழியர்களுக்கோ இல்லை என்பது பெறப்படும். உரிமைகள் மசோதாவின் (Bill of Rights) முகப்புரையைப் பார்க்கவும். ஸ்டப்ஸ் (Stubbs) என்பார் தொகுத்துள்ள, குறிப்பிட்ட சில சாசனங்கள் (Select Charters) (8 ஆவது வெளியீடு 1900) பக். 523-ஐப் பார்க்கவும். மில்லர், க்ஞக்ஸ் என்பார் பற்றிய வழக்கு (Miller v. Knox 1838), 6 ஸ்காட் Scott, 1-ஐப் பார்க்க. அட்டர்னி-ஜெனரல், கிஸ்ஸான் பற்றிய வழக்கு (Attorney-General v. Kissane (1893) 32 L. R. Ir. 220-ஐயும் பார்க்கவும்.

[2] முதலாவது பொருள் என்ன என்பதை அறிய பக்கம் 188 பார்க்கவும்.

போலவே அவர்களும் தாங்கள்செய்த குற்றத்துக்குப் பொறுப்பு ஏற்க வேண்டியவர்களாகின்றார்கள். வழக்குமன்ற அறிக்கைநூலின் ஏடுகளை நாம் புரட்டிப் பார்ப்போமேயானால், அங்கே பதியப்பெற்ற வழக்குகளில் பல, அரசாங்க அதிகாரிகளைப்பற்றியவாக இருப்பதைக் காணலாம். அவ் வதிகாரிகள் எங்ஙனம். தங்களுடைய கடமைகளை நிறைவேற்றும்பொழுது, சட்டத்தால் அனுமதிக்கப்படும் அதிகார வரம்பை மீறிச் செயல்பட்டுவிட்டதற்காக, நீதிமன்றங்களின் முன் கொணர்ந்து நிறுத்தப்பட்டனர் என்பதையும், பின்னர் அவர்கள் எங்ஙனம் தண்டனைக்கு ஆளானார்கள் என்பதையும், சில சமயங்களில் அவர்களது செய்கையால் விளைந்துவிட்ட தீங்குக்கேற்ற இழப்பீடு செலுத்தும்படி அவர்கள் எங்ஙனம் வற்புறுத்தப்பட்டனரென்பதையும் நாம் அவ் வறிக்கை நூல்களிற் பரக்கக் காணலாம். குடியேற்றநாட்டு ஆளுநர்,[1] அமைச்சர்[2] இராணுவ அதிகாரி[3] போன்ற பெரிய அதிகாரிகளும்கூட, சட்டத்தால் அனுமதிக்கப்படும் அளவுக்கே தங்கள் அதிகாரத்தைச் செலுத்தமுடியும். சட்டவரம்பை மீறி நடந்து கொண்டுவிட்டால், அவர்களும் அதிகாரத்திலில்லாத சாதாரண குடிமக்களைப்போலவே, தாம் செய்த குற்றத்துக்குப் பொறுப்பேற்க வேண்டியவர்களாகின்றார்கள். அப் பேரதிகாரிகளுக்குக்கீழே வேலை பார்க்கும் சிற்றதிகாரிகளும்கூட, அம்மாதிரியே தம்மால் செய்யப்பட்ட வரம்புமீறிய செயல்களுக்குப் பொறுப்பேற்க வேண்டியவர்களே அவர்கள் தங்கள் மேலதிகாரிகளின் ஆணைகளை நிறைவேற்றும்போது தாம், சட்ட வரம்புக்கப்பாற்பட்ட காரியங்களில் ஈடுபட நேர்ந்து விட்டது என்று சாக்குப்போக்குச் சொல்லித் தமக்குற்ற பொறுப்பி னின்றும் வழுவிக்கொள்ளமுடியாது. இஃதிங்ஙனமாக, அதிகாரிகளிற் சிலர், சான்றாக இராணுவ வீரர்கள்[4] தேசிய திருச்சபையின் குருமார்கள், போன்றவர்கள் தனிப்பட்ட ஒருசில சட்டங்களுக்குட்பட்டிருக்கிறார் ளென்பதும் உண்மைதான். ஏனைய குடிமக்களைக் கட்டுப்படுத்த ஒரு சில சட்டங்களுக்கு அவர்கள் உட்பட்டுள்ளார்கள். அவற்றை மீறும்போது அவர்களை விசாரிக்க, தனிப்பட்ட நீதிமன்றங்களும் இருக் கின்றன. அந் நீதிமன்றங்கள் ஏனைய சாதாரண குடிமக்களை விசாரிக்கவோ, தண்டிக்கவோமுடியாது. நாட்டின் ஆட்சிமுறையைச் செலுத்துகின்ற சில அதிகாரிகள், ஓரளவுக்கு ஆட்சித்துறைச் சட்டம் (Administration Law) என்று சொல்லப்படக்கூடிய ஒருவகைத் தனிப் பட்ட சட்டங்களுக்கு இங்ஙனம் உட்படுகிறார்கள் என்று கூறலாம்.

[1] Mostyn v. Fabigas (1774) I Cowp. 161; Musgrave v. Pulido (1879) 5 App. Cas. 102r GovernorWall's Case (1802) 28 St, Tr. 51.

[2] Entick v. Carrington (1765) 19 St. Tr. 1030; K. & L. 174

[3] Phillips v. Eyre (1867) L. R. 4 Q. B 225; K. & L. 492.

[4] *சட்டத்தில் இராணுவ வீரர்களுக்கு அளிக்கப்பட்டுள்ள இடம் என்ன என்பதை அறிய, அத்தியாயம் VIII-ஐயும் IX-ஐயும் பார்க்கவும்.*

ஆனால், இப்படி இருக்கின்ற ஒரு நிலைமையானது, இங்கிலாந்தில் வாழும் குடிமக்கள் அனைவரும் நாட்டின் பொதுச்சட்டத்திற்குக் (common law) கட்டுப்பட்டவர்கள் என்ற கொள்கைக்கு முரண்பட்டதாகாது. ஏனெனில், இராணுவ வீரரும், மதகுருமாரும் தாங்கள் வகிக்கின்ற பதவியின் காரணமாக, ஒருசில தனிப்பட்ட சட்டங்களுக்கும் பொறுப்பு களுக்கும் உட்பட்டிருந்தாலும், ஏனைய குடிமக்களின் கடமைகளும் பொறுப்புகளும் (பொதுவாகக் கூறுமிடத்து) அவர்களுக்கும் உண்டு. அதிகாரிகள் என்றமுறையில், ஏனைய குடிமக்களைப் பாதிக்காத ஒரு சில தனிப்பட்ட சட்டப் பொறுப்புகளுக்கு ஆளாகின்ற அவர்கள், நாட்டின் குடிமக்கள் என்றமுறையில் சாதாரண சட்டப்பொறுப்பு களுக்கும் ஆளாகின்றார்கள். அப் பொறுப்புகளிலிருந்து அவர்கள் எவ்வாற்றேனும் தப்பிக்க இயலாது.

### இம் முறையைக் கடைப்பிடிப்பதில் இங்கிலாந்துக்கும் ஃபிரான்சுக்கும் உள்ள வேறுபாடுகள்

சட்டத்தின் இறைமை (நாம் அதை இப்பொழுது வழங்குகின்ற பொருளில்) என்பது நாகரிகம் பொருந்திய சமுதாயங்கள் யாவற்றுக்கும் பொதுவானதொரு பண்பு என்றே, ஒவ்வோர் ஆங்கிலேயனும் இயல் பாகவே எண்ணுகிறான். ஆனால், அப்படிப்பட்ட ஊகமானது தவறான தோன்றும். ஏனெனில், அதிகாரிகளுக்கு ஒரு நீதி, அதிகாரிகளல்லா தார்க்கு ஒரு நீதி என்ற நிலையானது பல ஐரோப்பிய நாடுகளில் இன்னும் நின்று நிலவிவருவதைக் காணலாம். பிரபுக்களும் மதகுருமார்களும் பிறரும் சட்டத்தை எதிர்க்கும் உரிமை பெற்றிருந்த காலமானது (இக் காலமாக 16ஆம் நூற்றாண்டிலேயே இங்கிலாந்தில் மாறிவிட்டது) ஐரோப்பிய நாடுகள் பலவற்றுள், எப்போதே, அதாவது 18ஆம் நூற்றாண்டின் இறுதியிலேயே, மலையேறிவிட்டதென்பது உண்மை தான். ஆனால், இன்றைக்கும்கூட, பல ஐரோப்பிய நாடுகளில், எல்லாரும் ஒரே வகையான சட்டத்துக்குக் கட்டுப்பட்டவர்களென்ற நிலையோ, நீதி மன்றங்கள் நாடெங்கும் இறைமை செலுத்துகின்ற நிலையோ ஏற்படவில்லை என்றுதான் கூறவேண்டும். ஐரோப்பிய நாடு களுக்கு ஒரு முன்மாதிரியாக ஃபிரான்ஸை எடுத்துக்கொண்டு பார்ப்போ மானால், அங்குள்ள அரசாங்க அதிகாரிகள் அனைவரும் (நாட்டுப் பணிக்கென நியமிக்கப்பட்டுள்ள எல்லாரையும் இச் சொல் குறிப்பதாகக் கொள்ளவேண்டும்.) அதிகார பீடத்தில் அமர்ந்துள்ளவர்கள் என்ற முறையில், நாட்டின் சாதாரண சட்டங்களின் கட்டுப்பாடுகளினின்றும், சாதாரண நீதிமன்றங்களின் அதிகார வரம்பினின்றும் ஓரளவு விலக்கம் பெற்றுள்ளார்கள் என்று கூறலாம். மேலும், ஒரு சில சமயங்களில் ஆட்சித்துறை நிறுவனங்களால் (official bodies) அமல் நடத்தப்படு கின்ற ஆட்சித்துறைச் சட்டங்களுக்கு (official law)[1] மட்டுமே

[1] சட்டத்தின் ஆட்சிமுறைக்கும், பிறநாட்டில் வழங்கிவரும் ஆட்சித்துறைச் சட்டத்துக்கும் உள்ள வேறுபாட்டை ஆசிரியர் உணர்ந்தவகையை அறிய அத். XII-ஐப் பார்க்கவும்.

அவர்கள் கட்டுப்பட்டுள்ளார்கள் என்றும், அல்லது கட்டுப்பட்டிருந் தார்கள்[1] என்றும் ஓரளவு திண்ணமாகக் கூறமுடியும்.

**அரசியலமைப்பைப்பற்றிய பொதுவிதிகள் யாவும், நாட்டின் சாதாரணச் சட்டங்களினின்றும் தோன்றியவைகளே**

'சட்டத்தின் இறைமை' என்பது அல்லது சட்ட உணர்வானது மேலோங்கி நிற்கின்ற ஒரு தன்மையானது, ஆங்கில நிறுவனங்களுக்கே உரிய தனிப்பண்பு என்று விளக்கப்படும்போது, நாம் இன்னும் கருதக் கிடக்கின்ற மூன்றாவது பொருள் ஒன்றும் உண்டு. முற்கூறப்பட்ட இரண்டு பொருள்களினின்றும் அது வேறுபட்ட தொன்றாகும். இப் பொருளில் பார்க்கும்போது, சட்டத்தின் இறைமையானது, அரசியல் அமைப்பு முழுவதிலும் விரவிக்கிடக்கின்றதொரு பண்பு என்று கூறலாம். ஏனெனில், தனி மனிதர்களின் உரிமைகள்பற்றிய நீதிமன்றத் தீர்ப்பு களினின்றும் பிறந்ததொன்றே நம் அரசியலமைப்பாகும். பிறநாடுகளில் போல் அரசியலமைப்பினின்றும் இங்குத் தனிமனித உரிமைகள்பற்றிக் கொணரப்படுகின்ற குறிப்பிட்ட சில வழக்குகளில், நீதிபதிகள் அவ் வுரிமைகளைத் தீர்மானிக்கும் முகத்தான் வெளியிடுகின்ற தீர்ப்புகளின் விளைவாகவே, நமது அரசியலமைப்பின் பொதுக்கோட்பாடுகள் (சான்றாக உடல் உரிமை, பொதுக்கூட்ட உரிமை போன்றன) தோன்றியுள்ளன.[2] ஆனால், பிறநாடுகளிலோவெனின் தனிமனித உரிமைகளுக்கேற்ற பாது காப்பானது (அவை இன்று இருப்பதுபோன்று) அரசியல் அமைப்பின் பொதுக்கோட்பாடுகளிலின்றே பிறக்கின்றன் அல்லது பிறப்பதுபோல் தோன்றுகின்றன எனக் கூறலாம்.

'அரசியல் அமைப்பானது மனிதமுயற்சியால் உண்டாக்கப்பட்ட தொன்றன்று; அது தானாகவே வளர்ந்ததொன்று' என்று சொல்லப் படுகிற கூற்றில் பொதிந்துகிடக்கும் உண்மையொன்றின் ஒரு சிறு

[1] 'சட்டமும் அரசியலமைப்பும்' (The Law and the Constitution) (4ஆவது வெளியீடு, 1952) என்ற நூலில் பக்கம் 214-ஐப் பார்க்கவும். et seq. ஆரம்பத்தில் வந்த வெளியீடுகளில், 'அல்லது கட்டுப்பட்டிருந்தார்கள்' என்ற சொற்கள் காணப்படவில்லை என்று, சர். ஐவார் ஜென்னிங்ஸ் என்பார் குறிப்பிடுகின்றார். 'ஓரளவு' விலக்கம் பெற்றுள்ளார்கள் என்ற சொற்களும் இத்தகைய தன்மை யினவே யாகும். Cf. 6ஆவது வெளியீடு பக்கம் 190, 7ஆவது வெளியீடு பக்கம் 190 இவற்றில் சொல்லப்பட்டுள்ளவைகளை ஒப்பிடவும்.

[2] Cf. Calvin's Case (1608) 7 Co. Rep. la; Campbell v. Hall (1774) Lofft. 655; K. & L. 487; Wilkes v. Wood (1763) 19 St. Tr. 1153 Mostyn v. Fabrigas (1774) 1 Cowp. 161. உரிமைகள் விண்ணப்பம், உரிமைகள் மசோதா போன்ற பாராளுமன்ற அறிவிப்புகள்கூட, ஏறக்குறைய நீதிபதிகளின் தீர்ப்புகளை ஒத்தவைகளேயாம். (அரசியலமைப்பின் பொதுவிதிகள் என்று ஆசிரியர் இந்தக் கட்டத்தில் குறிப்பிடும்போது, தனிமனித உரிமைகளைக் காப்பதற்கான வழிமுறைகளையே அவர் கருதுகிறார் என்பது, அவர் கொடுக்கும் சான்றுகளிலிருந்து நன்கு பெறப்படுகின்றது. ஆனால், பாராளுமன்றத்தின் இறைமையானது. நீதிபதிகளின் தீர்ப்பொன்றாலேயே தோன்றியது என்று கூற முடியாது நீதிபதிகளின் சுதந்தரமென்பதும் வாரிசுரிமை நிர்ணயச் சட்டம் (Act of Settlement, 1701) என்ற பாராளுமன்றச் சட்டமொன்றால் பெறப் பட்டதேயாகும்.-பதிப்பாளர்.

பகுதியே மேலே சொல்லப்பட்டதனின்றும் பெறப்படுகின்றது எனலாம். இக் கூற்றனது வழக்காற்றில் சாதாரணமாக வழங்கப்படுவதென்றாலும், எவரும் அதைத் தவருகப் புரிந்துகொள்வதற்கு நிறைய இடமுண்டு. இக் கூற்றினை இலக்கியமுறையில் சொல்லுக்குச்சொல் பொருள்பிரித்துப் பார்ப்போமேயானல், அது அறிவுக்குச் சிறிதும் ஒவ்வாதிருப்பதாகவே தோன்றும். ஏனெனில், நாமறிந்தவரையில் அரசியல் நிறுவனங்கள் என்பவை எல்லாம் மனிதனது சீரிய முயற்சியினின்றே பிறந்திருக்கின்றன. (இந்தக் கோட்பாடானது, சில சமயங்களில் புறக்கணிக்கப்படலாம்.) மனிதனது விருப்பத்திலிருந்துதான் அவை தோன்றி நிலைபெற்றுள்ளன. மற்றப்படி திடீரென்று அவை, மக்கள் முன்னிலையில் தோன்றியதாகத் தெரியவில்லை. கோடை காலத்தில் ஒரு நாள், காலையில் கண்விழித்தெழுந்தபோது, அவை திடீரென்று முளைத்தெழுந்து அவர்கள் கண்களின்முன் காட்சியளிக்கவில்லை. மேலும், ஒரு முறை நட்டுவிட்டால், பின்னர் அதை நட்டவர்கள் தூங்கிக்கொண்டிருக்கும்போது, தாமாகவே வளர்ந்துகொண்டிருக்கக் கூடிய மரங்களோடும் அவைகளை நாம் ஒப்பிடுதற்கில்லை. ஏனெனில் மனிதர்கள் தாமாகவே முன் வந்து செய்கின்ற முயற்சியின்[1] விளைவாகவே அரசியல் அமைப்புக் கட்டடத்தின் ஒவ்வொரு தளமும் அமைக்கப்படுகிறது என்பதையும், ஒவ்வொரு நாட்டின் அரசியலமைப்பும் இன்றைய நிலையில் இருப்பதற்கு மனிதர்களின் உழைப்பே காரணமென்பதையும் நாம் அறிவோம்.

இஃது இங்ஙனமாயினும், ஒரு நாட்டின் அரசியல் அமைப்பானது, தானகவே வளர்ச்சியுறுவதொன்றென்றும், மக்களது வாழ்க்கையோடு பின்னிப் பிணைந்துகொண்டு அது வளர்கின்ற காரணத்தால், மனிதனது ஆற்றலாலும் விருப்பத்தாலும் அது ஏற்பட்டதாகக் கருத முடியாதென்றும் கூறுவதில் ஓரளவு உண்மை இருக்கத்தான் செய்கிறது. ஆனல், அவ் வுண்மையானது சற்றே தெளிவற்ற நிலையிலும் துல்லியமற்ற முறையிலுமே ஒருசில அரசியலமைப்புகளுள், நாம் இங்கிலாந்தின் அரசியலமைப்பை ஒரு சிறந்த எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம். நம் நாட்டு அரசியலமைப்பானது, சட்டமன்றத்தில் கொண்டு வரப்படுகிற ஏதோ ஒரு மசோதாவின்மூலம் திடீரென்று ஒரேசமயத்தில் உண்டாக்கப்பட்ட பின் என்னவெனில் நாளாவட்டத்தில் தனி மனிதர்கள் தங்கள் உரிமைகளைக் காத்துக்கொள்வதற்காக நீதிமன்றங்களில் நிகழ்த்திய போராட்டங்களின் விளைவாகவே அது ஏற்பட்டுள்ளது. சுருக்கமாகக் கூறப்போனல், நமது அரசியலமைப்பானது நீதிபதிகளால் ஆக்கப்பட்டதோர் அரசியலமைப்பு எனலாம். நீதிபதிகளால் ஆக்குகின்ற

[1] *மில் என்பார் எழுதிய,* 'Considerations on Representative Gove:nment' (*பிரதிநிதித்துவ ஆட்சிபற்றிய சில கருத்துகள்*) என்ற நூலைப் பார்க்கவும் (3ஆவது வெளியீடு, 1865).

சட்டங்களில், இயல்பாகவே காணப்படக்கூடிய குறைகளும் நிறைகளும் அதில் ஒருங்கே காட்சியளிக்கின்றன.

## ஆங்கில அரசியலமைப்புக்கும், பிறநாட்டு அரசியலமைப்புகளுக்கு முள்ள வேற்றுமைகள்

எனவேதான் இங்கிலாந்தின் அரசியலமைப்பிற்கும், பிறநாட்டு அரசியலமைப்புகள் பலவற்றுக்கும் குறிப்பிடத்தக்க வேற்றுமைகள் பல காணப்படுகின்றன.

பிறநாட்டு அரசியலமைப்பாளர்கள் எல்லாம், தங்கள் அரசியல் அமைப்புகளில் உரிமைகள்பற்றிய அறிவிப்பு அல்லது வரையறுப் பொன்றை அநேகமாகச் சேர்த்துள்ளார்கள். அவர்களுக்கு மிக விருப்ப மான அத்தகைய அறிவிப்புகள் எதுவும் ஆங்கில அரசியலமைப்பில் காணக்கிடையாததொன்ருகும். உரிமைகளைப்பற்றிய கோட்பாடுகள் எதுவேனும் ஆங்கில அரசியலமைப்பில் காணப்படுமேயானுல், அவை அநேகமாக நீதிபதிகளின் தீர்ப்புகளினின்றும் பிழிந்தெடுக்கப்பட்ட பொதுவிதிகளாகவே இருக்கும்; அல்லது சிலசமயங்களில் அவை பாராளுமன்றச் சட்டங்களினின்றும்கூடப் பெறப்படலாம். ஆனல், அத்தகைய சட்டங்கள்கூட, குறிப்பிட்ட சில குறைகளைக் களைவதற் கென ஏற்படுத்தப்படுபவை ஆதலால், நீதிபதிகளின் தீர்ப்புகளைப் போலவே காணப்படுவன. உண்மையில் அவை, பாராளுமன்றம் என்னும் உயர்நீதிமன்றத்தால் அறிவிக்கப்படும் தீர்ப்புகளேயன்றி வேறல்ல. இங்ஙனம், ஆங்கில அரசியலமைப்பில் உரிமைகள்பற்றிய தனிப்பட்ட அறிவிப்பு எதுவும் இல்லாவிடினும், அவை நீதிபதிக ளாலும், பாராளுமன்றத்தாலும் அவ்வப்போது வெளியிடப்படும் கொள்கைகளில் பொதிந்துகிடப்பதை அறிகின்ரேம். நீதிபதிகளால் ஆக்கப்பட்ட சட்டங்களிலிருந்து பெறப்படுகின்ற கோட்பாடுகளைப் போன்றே, அவை பல பொதுவிதிகளின் வடிவில், அதாவது நீதிமன்றங் களின் தீர்ப்புகளினின்றும் சலித்தெடுக்கப்பட்ட பொதுமைக் கொள்கை களின் உருவில்தான் நமது அரசியலமைப்பில் இடம்பெற்றுள்ளன. இதே கருத்தை இன்னொரு வகையாகக் கூறப்போனல், தனிமனித உரிமைகளுக்கும் அரசியலமைப்புக்கும் உள்ள தொடர்பானது, சட்ட சபையால் ஏற்படுத்தப்படும் தனிப்பட்ட சட்டமொன்றின் விளைவாகத் தோன்றியுள்ள, பெல்ஜிய நாட்டு அரசியலமைப்புப்போன்ற அரசியல் அமைப்புகளில் அமைந்துள்ளமுறைக்கும், நீதிபதிகளால் வெளியிடப் படும் தீர்ப்புகளின் அடிப்படையில் ஏற்பட்டுள்ள இங்கிலாந்தின் அரசியல் அமைப்புப்போன்ற அமைப்புகளில் காணப்படுகிறமுறைக்கும் பெருத்த வேறுபாடு உள்ளது எனலாம். இங்ஙனம் இங்கிலாந்துக்கும் ஏனைய ஐரோப்பிய நாடுகளுக்குமுள்ள வேற்றுமையை, அரசியலமைப்புக்கும் தனிமனித உரிமைகளுக்குமுள்ள தொடர்பின் அடிப்படையிலும்

எடுத்துக் காட்டலாம். சட்டசபையானது வேண்டுமென்றே பிறப்பித்த ஒரு சட்டத்தின் விளைவாகத் தோன்றியுள்ள அரசியலமைப்புக்குத் தக்கதொரு சான்றாக எடுத்துக்கொள்ளக்கூடிய பெல்ஜிய அரசியல் அமைப்பில், தனிமனித உரிமைகள் என்பன அரசியலமைப்பிலிருந்தே பெறப்படுகின்றன. அங்குத் தனிமனிதர்களின் உடலுரிமையானது, அரசியல் அமைப்பாலேயே பாதுகாக்கப்படுகின்றதென அறுதியிட்டுக் கூறலாம். ஆனால், இங்கிலாந்திலோவெனின், அதே உடலுரிமையானது நீதிபதிகளின் தீர்ப்புகளினின்றும் பெறப்பட்டு, உடலுரிமைச் சட்டங்களால் மேலும் விரிவாக்கப்பட்டும் அல்லது உறுதியாக நிலைநிறுத்தப் பட்டும் வருவதைக் காணலாம். அதன் காரணமாக அவ் வுரிமையானது அரசியலமைப்பின் ஒரு பிரிக்கமுடியாத பகுதியாக ஆகிவிட்டிருப்பதையும் நாம் காண்கிறோம். அளவையியல் சூத்திரங்களைச் சட்டவியல் சிக்கல்களுக்குத் தீர்வுகாணப் பயன்படுத்துவது தகுமேயானால், பெல்ஜிய நாட்டு அரசியலமைப்புக்கும் ஆங்கில அமைப்புக்குமுள்ள வேறுபாட்டைப் பின்வருமாறும் விளக்கலாம் பெல்ஜியம் நாட்டில் தனிமனித உரிமைகள் என்பன, அரசியலமைப்புக் கொள்கைகளினின்றும் வகுப்பு வழிமுறையில் உய்த்துணரப்படுகின்றன. ஆனால், இங்கிலாந்திலோவெனின், அதன் அரசியலமைப்புக் கொள்கைகள் என்பன, குறிப்பிட்ட, சில தனிமனிதர்களின் உரிமைகள்பற்றி நீதிமன்றங்கள் அறைந்து கூறிய, குறிப்பிட்ட தீர்ப்புகளினின்றும் தொகுப்புவழி முறையில் தொகுத்துணரப்படும் கொள்கைகளாகவோ, அன்றிப் பொதுப்படைக் கூற்றுக்களாகவோதான் மிளிர்கின்றன.

இங்கு, கூறப்பட்டுள்ள வேற்றுமையானது வெறும் புற வேறுபாடு அல்லது ஏட்டளவான வேறுபாடு என்பது உண்மைதான். ஏனெனில், சுதந்தரமானது இங்கிலாந்தில் எத்தகைய பாதுகாப்புடன் விளங்குகிறதோ அதே அளவு பாதுகாப்புடன்தான் பெல்ஜியத்திலும் திகழ்கிறது. இது இங்ஙனமிருக்கும்வரை, சுதந்தரமானது பாதுகாக்கப்பெறும் முறையைப்பற்றிய வேற்றுமையை அதிகம் பாராட்டத் தேவையில்லை தான். உடலுரிமை என்பது அரசியலமைப்பில் நன்கு உத்தரவாதம் அளிக்கப்பட்டுள்ளதால்தான் பெல்ஜியத்தில் தனிமனிதர்கள், அரசாங்கத்தாரால் மனம்போனபடியெல்லாம் யதேச்சையாகச் சிறையிடப் படுவதினின்றும் காப்பாற்றப் படுகின்றார்கள் என்று கூறுவதும், அல்லது அங்ஙனம் அவர்கள் காக்கப்பெறும் உரிமையானது நாட்டின் சாதாரண சட்டங்களினின்றும் பெறப்படுகின்ற காரணத்தாலேயே இங்கிலாந்தில் உடலுரிமை அல்லது யதேச்சையாகச் சிறையிடப்படா உரிமையானது, நாட்டு அரசியலமைப்பின் ஒரு பகுதியாக விளங்குகின்றது என்று கூறுவதும் ஏறத்தாழ ஒன்றேயாகும். தனி மனிதர்களின் உரிமைகள் நல்ல முறையில் உண்மையாகவே பாதுகாக்கப்பட்டு வரும்வரை, இந்தப் புறவேற்றுமைகள் அவ்வளவாகப் பாராட்டப்படவேண்டிய அவசிய

மில்லைதான். என்றாலும், ஒரு நாட்டில் வாழும் மக்களுக்கு, உடலுரிமை, வழிபாட்டுரிமை போன்ற உரிமைகள் தக்கவாறு கிட்டுமா கிட்டாதா என்ற கேள்விக்கேற்ற பதிலானது, அந் நாட்டு அரசியலமைப்பை ஆக்க முனைந்த அறிஞர்கள், உரிமைகள்பற்றிய அறிவிப்பு அல்லது வரையறுப்புகளோடு, தங்கள் பணியைத் தொடங்கினரா அல்லது அவ் வுரிமைகளை நடைமுறையில் நடத்துதற்கும், பெறுதற்குமான வழி முறைகளையும் நிவாரணங்களையும் வகுத்தபின், அப் பணியைத் துவக்கினரா என்கிற கேள்விக்குக் கிடைக்கும் பதிலைப் பொறுத்தே பெரிதும் அமையும் என்பது ஒருதலை. இங்ஙனம் நோக்குழி,பிறநாட்டுஅரசியலமைப்பாளர்கள் பலரும், உரிமைகள்பற்றிய அறிவிப்புகளை முகப்பில் வைத்தே, தங்கள் பணியை ஆரம்பித்துள்ளதைக் காண்கிறோம். இதற்காக நாம் அவர்களைக் குறைகூறுவதில் சிறிதும் பயனில்லை. ஏனெனில், அவர்கள் தங்களது சூழ்நிலையால் உந்தப்பட்டே அத்தகைய காரியத்தில் ஈடுபட்டுள்ளார்கள். மேலும், சட்டங்களைப்பற்றிய பொதுவான கொள்கைகளை முதலில் வகுப்பதே சட்டத்தை ஆக்குவோரின் இயல்பானதும், முறையானதுமான கடமை என்ற எண்ணமானது, அக் கால அரசியல் அமைப்பாளர்களிடம் (constitutionalists) பரவலாகக் காணப்பட்டதும் அவர்களது செய்கைக்கு ஒரு காரணமெனலாம். ஆனால், ஐரோப்பிய வரலாற்றை ஓரளவேனும் படித்தறிந்த எவரும், பிறநாட்டு அரசியலமைப்பாளர்கள் பலரும் உரிமைகளைப்பற்றிய பொதுக்கொள்கைகளை வரையறுப்பதிலேயே தங்கள் காலத்தை எல்லாம் கடத்திவிட்டார்களே யன்றி, அங்ஙனம் அவர்கள் வரையறுத்து அறிவித்த உரிமைகள் நடைமுறையில் அமல் நடத்தப்படுதற்குத் தகுந்த நிவாரணங்களை வகுத்தளிப்பதில், அவ்வளவாகக் கவனம் செலுத்தவில்லை என்பதை எளிதில் உணரலாம். சான்றாக 1791ஆம் ஆண்டு ஃபிரெஞ்சுப் புரட்சிக்கால அரசியலமைப்பானது, மனச்சான்றுரிமை, (liberty of conscience), பிரசுர உரிமை, (liberty of the press), பொதுக்கூட்ட உரிமை (right of public meeting) அரசாங்க அலுவலர்களின் பொறுப்பு[1] போன்ற உரிமைகளைப்பற்றிப் பறைசாற்றியது. ஆனால், ஃபிரெஞ்சுப் புரட்சியானது, உச்சக்கட்டத்தில் இருந்தபோதுங்கூட அவ் வுரிமைகளில் எதுவும் நடைமுறையில் அமல் செய்யப்படவில்லை என்பது உண்மை. ஃபிரெஞ்சுப் புரட்சி நடைபெற்றுவந்த அந்தக் காலத்தைப்போன்று இந்த உரிமைகளில் ஒன்றுகூடச் சரிவரப் பாதுகாக்கப்பெறாத ஒரு காலம் அல்லது இவ் வுரிமைகளில் ஒன்றுகூட முற்றுமே இல்லாதிருந்த ஒரு காலம் என்பதை வரலாற்றிலேயே இல்லை என்று அறுதிடலாம். இன்றைக்கும் கூட இச் சுதந்தரங்களிற் பல, அல்லது உரிமைகளிற் பல, ஆங்கில முடியரசில் பாதுகாக்கப்பெறுமளவுக்கு, ஃபிரெஞ்சுக் குடியரசில் பாதுகாக்கப்பெறவில்லை என்பதை இரு நாட்டு அரசியல்

[1] Plouard, Les Constitutions Francaises (1871-1876) பக்கங்கள் 14-16: Duguit et Monnier, Les Constitutions et les principales lois politiques de la France depuis 1789 (1898) பக். 4, 5.

நிறுவனங்களையும் நன்கு உற்றுநோக்குவோர்க்குத் தெள்ளிதின் புலப் படும். ஆனால், அதே சமயம் இங்கிலாந்தின் அரசியலமைப்பை நுணுகி ஆராய்வோமானால், அங்கு அமல் நடத்தப்படவேண்டிய ஓர் உரிமையும், அவை அமல் நடத்தப்படுவதற்கான வழிமுறைகளும் ஒன்றுக்கொன்று பிரிக்கமுடியாதபடி பின்னிப் பிணைந்துகிடப்பதை அறியலாம். இங்ஙனமிருப்பதுதான், நீதிபதிகளால் ஆக்கப்பெறும் சட்டங்களின் தனிப்பட்ட வலிமையாகுமென்றால் மிகையாகாது. 'உரிமையுள்ள விடத்து அதனை அடைவதற்கான வழிமுறையுமுண்டு.' (ubi jus ibi remedium) என்ற மூதுரையானது, இந் நோக்கத்துடன் பார்க்கப் படும்போது வெறும் சொல்லலங்காரக் கற்பனை என்பதைவிடப் பெரிதும் முக்கியத்துவமுடைய தொன்றாக ஆகிவிடுகிறது. அப் பழமொழியை ஆங்கில அரசியலமைப்புச் சட்டத்தோடு பொருத்திப் பார்க்கும்போது பின்வரும் பொருள் நமக்குக் கிடைக்கிறது. நாம் இன்று அரசிய லமைப்பு என்று கூறிக்கொள்கிற நிறுவனங்களையும், சிக்கல் நிரம்பிய சட்டத் தொகுதிகளையும், படிப்படியாக ஆக்குகின்ற உழைப்பில் ஈடு பட்ட அரசியலறிஞர்கள், குறிப்பிட்ட சில உரிமைகளை நடைமுறையில் அமல்நடத்துவதற்கான நிவாரணங்களை வகுத்தளிப்பதிலேயே அல்லது (அதையே மறுபுறத்திலிருந்து பார்க்கும்போது) குறிப்பிட்ட சில தீங்கு களைத் தடுக்கு முறைகளை வகுத்தளிப்பதிலேயே, பெரும்பாலும் தங்கள் சிந்தனையையெல்லாம் செலுத்தினார்களேயன்றி, 'மாந்தரின் உரிமைகள்பற்றிய அறிவிப்பு' அல்லது 'ஆங்கிலேயரின் உரிமைகள் பற்றிய அறிவிப்பு' போன்ற பத்திரங்களை வெளியிடுவதில் ஒன்றும் அக்கறை காட்டவில்லை. உடலுரிமைச் சட்டங்கள் (Habeas Corpus Acts) எவ்விதமான கொள்கையையும் அறிவிக்கவில்லை. எவ்வித உரிமைகளையும் அவை வரையறுக்கவில்லை. ஆனால், நடைமுறையில் அவை உடலுரிமைக்கு உத்தரவாதமளிக்கும் ஒரு நூறு அரசியல் அமைப்பு விதிகளைவிடப் பன்மடங்கு பயனுள்ளவையாக விளங்கு கின்றன என்பதை யாரும் மறுக்கவொண்ணாது. இப்படி நாம் கூறும் போது, ஆங்கில நிறுவனங்களில் நீக்கமற நிறைந்துநிற்கும் சட்ட மனப் பான்மையின் விளைவால், உரிமைகளுக்கும் நிவாரணங்களுக்கும் அங்கு ஏற்பட்டுள்ள நெருங்கிய தொடர்பானது, எழுதப்பட்ட அரசியல் அமைப்புகளில் காணப்பெறாததும் பொருந்தாததுமாகுமென்று நினைத்து விடுவதும் தவறாகும். அமெரிக்க ஐக்கிய நாட்டிலும், அந் நாட்டில் அடங்கியுள்ள மாநிலங்களிலுமிருக்கின்ற அரசியல் அமைப்புகள், எழுதப் பட்டுள்ள பத்திரங்களில் அல்லது அச்சிடப்பட்டுள்ள பத்திரங்களில் (documents) தான் அடங்கியுள்ளன. மேலும், உரிமைகளைப்பற்றிய அறிவிப்புகளும்[1] அவற்றில் இடம்பெற்றுள்ளன. இதன் விளைவாக

[1] உரிமை விண்ணப்பம், (Petition of Right) உரிமைகள் மசோதா, (Bill of Rights) அதேபோன்று அமெரிக்காவின் உரிமைகள்பற்றிய அறிவிப்பு (Declaration of Rights) இவை எல்லாம், பிறநாட்டு அரசியல் அமைப்பாளர்களுக்கு நன்கு தெரிந்த ஒரு சில அறிவிப்புகளைப்போலவே, சிறப்பாக 1793ஆம் ஆண்டுப்

அங்கெல்லாம் உரிமைகளுக்குத் தக்க பாதுகாப்புகள் இல்லை என்று யாரும் கருதிவிடக் கூடாது. அமெரிக்க அரசியல் அமைப்பை அமைத்த அரசியல் விற்பன்னர்கள், அவ் வமைப்பில் அறிவிக்கப் பெற்றுள்ள உரிமைகளைச் சட்டரீதியில் அமல் நடத்துதற்கான வழிமுறைகளை எல்லாம், ஈடும்எடுப்புமற்ற முறையில் வகுத்தளித்துள்ளனர். சட்டத்தின் இறைமை என்பது, இங்கிலாந்துக்குமட்டுமேயன்றி, அமெரிக்காவுக்குமுரிய தனிப்பண்பு எனக் கூறுதல் மிகையாகாது.

பிற நாடுகள் பலவற்றுள் தனிமனித உரிமைகள் என்பன சான்றாக, உடல்உரிமை போன்றவை அந்தந்த நாட்டு அரசியல் அமைப்புகளாலேயே வழங்கப்படுவது வழக்கமாயிருக்கும்போது, இங்கிலாந்தில்மட்டும், நாட்டின் அரசியலமைப்பே, நீதிமன்றங்கள் தனிமனிதர்களுக்கு வழங்குகின்ற உரிமைகளின் பொதுக்கோட்பாடுகளால் ஆக்கப்படுகின்ற ஒருநிலை ஏற்பட்டுள்ளதானது, ஒரு முக்கியமான விளைவை உண்டாக்கியுள்ளதெனலாம். அரசியல் அமைப்புகளால் உத்தரவாதம் அளிக்கப்பெற்றுள்ள பொது உரிமைகள் யாவும் அடிக்கடி நிறுத்தி வைக்கப்படலாம். உண்மையில் வெளிநாடுகள் பலவற்றுள் இங்ஙனம் உரிமைகளை நிறுத்திவைக்கும் வழக்கமானது, ஓயாது கடைப்பிடிக்கப்படுவதைக் காணலாம். உரிமைகளைப் பற்றிய விதிகள் சாதாரண சட்டங்களோடு தொடர்பில்லாதவை என்றும், அத்தகைய சட்டங்களுக்குக் கட்டுப்படாதவை என்றும் அங்கெல்லாம் கருதப்படுகிறது. பெல்ஜிய அரசியலமைப்பில் தனிமனித உரிமை என்பதை 'உத்தரவாதமளிப்பதாகக்' கூறுவதொன்றே அத்தகைய உரிமைகள் பெல்ஜியத்தில் மதிக்கப்படு

---

∴பிரெஞ்சுப் புரட்சி சர்க்காரால் வெளியிடப்பட்ட 'மாந்தரின் உரிமைகள் பற்றிய அறிவிப்பு, (Declaration of the Rights of Man) என்ற புகழ்மிக்க அறிவிப்பைப் போலவே, பொதுப்படையான சில கொள்கைகளையே பறைசாற்றுகின்றன என்று சிலர் கூறக்கூடும். ஆனால், உரிமைகள் பற்றி, இங்கிலாந்திலும் அமெரிக்காவிலும், ஏனைய பிறநாடுகளிலும் காணப்படுகிற அறிவிப்புகள் யாவும் ஒன்றேபோல் வெளிப்பார்வைக்குத் தோன்றினும், அடிப்படையில் இங்கிலாந்தின் அறிவிப்புகளுக்கும் ஏனைய நாடுகளில் காணப்படும் அறிவிப்புகளுக்கும் ஒற்றுமையைவிட, வேற்றுமைகளே அதிகமெனக் கூறலாம். உரிமை விண்ணப்பம், உரிமைகள் மசோதா போன்றவை எல்லாம், அவ்வப்போது மன்னரால் கொண்டாடப்பெற்ற, உரிமைகளையும் அல்லது வழக்காறுகளையும் அவை சட்டத்துக்கு முரணானவை எனக் கண்டிக்கும் முகத்தான், நீதிபதிகளால் வெளியிடப்பட்ட தீர்ப்புகளே தவிர, வெளிநாட்டவர்கள் கருத்தில் கொள்கின்ற பொருளில் வகுக்கப்பட்டுள்ள, 'உரிமைகள்பற்றிய அறிவிப்புகளாகக்' கருதப் படத்தக்கவையல்ல. இந்த இரண்டு புகழ்மிக்க பத்திரங்களிலும் வருகின்ற ஒவ்வொரு உட்பிரிவும் (clause) அல்லது பெரும்பாலான உட்பிரிவுகளும், அரசரால் கொண்டாடப்பெற்றனவும், செயலாக்கப்பட்டவையுமான குறிப்பிட்ட தனிச்சிறப்பதிகாரங்களைக் கண்டிக்கும்முறையில் அமைந்துள்ளனவேயன்றி வேறல்ல. அமெரிக்க அரசியலமைப்புகளில் காணப்படுகிற உரிமைகள்பற்றிய அறிவிப்புகளுக்கும், ஐரோப்பிய நாடுகளில் காணப்படும் உரிமைகள்பற்றிய அறிவிப்புகளுக்கும் உண்மையான ஒற்றுமை உண்டு என்பதில் ஐயமில்லை. அவைகள் 18ஆம் நூற்றாண்டில் உலவிவந்த கருத்துகளின் விளைவால் ஏற்பட்டவையாகும். மேலும், அவை அரசியலமைப்புச் சட்டவிதிகளின் மூலமே, சட்டமன்றத்தின் நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்தவேண்டும் என்ற குறிப்பிட்ட ஒரு நோக்கத்தின் அடிப்படையில் ஏற்பட்டவைகளே என்றும் கூறலாம்

கின்ற முறைக்கும், இங்கிலாந்தின் வழக்குரைஞர்களால் (lawyers) கருதப்படுகின்ற முறைக்குமுள்ள வேறுபாட்டை நமக்குத் தெள்ளிதின் புலப்படுத்தி விடுகின்றது. இங்கிலாந்தில் ஓர் உரிமையானது மற்றொரு உரிமையைவிட, அதிகமாகப் பாதுகாக்கப்படுவதாகக் கூற இயலாது. ஏனெனில், இங்கு எல்லாவித உரிமைகளும் ஒரே அடிப்படையில் தான் அமைந்துள்ளன. அரசாங்கத்தால் யதேச்சையாகக் கைது செய்யப்படாதிருக்கவும், தேசத்துரோகமானதும் தெய்வ நிந்தனையுமான சொற்களையோ அல்லது அவதூறான கூற்றுகளையோ வெளியிட்டால், அதற்கேற்ற தண்டனையைப் பெறவேண்டும் அல்லது அவற்றால் ஏற்பட்ட இழப்புக்கேற்ற இழப்பீடு செலுத்தவேண்டும் என்னும் நிபந்தனைக்குட்பட்டு, ஒருவர் எந்தவிதமான பொருளைப் பற்றியும் தாராளமாகத் தம் கருத்துகளை வெளியிடவும், ஒருவர் தம் சொத்துகளைப் பிரியம்போல் அனுபவிக்கவும் இருக்கின்ற உரிமையானது. ஆங்கிலேயர்களுக்கு ஒரே ஓர் அடிப்படையிலேயே, அதாவது நாட்டின் சட்டங்களின் அடிப்படையிலேயே அமைந்துள்ளதாகக் கூறலாம். அரசியலமைப்பில் ஒரு வகையான உரிமைகளுக்கு அளிக்கப்பட்டுள்ள உத்தரவாதத்தைக்காட்டிலும் அதிகமான அளவில் இன்னொரு வகையான உரிமைகளுக்குப் பாதுகாப்பு அளிக்கப் பெறுகிறது எனக் கூறுவதானது, ஆங்கிலேயன் ஒருவனுக்கு இயற்கைக்கு மாறானதாயும், அறிவுக்கு ஒவ்வாததாயுமுள்ள ஒரு வெற்றுரையாகவே தென்படும். ஆனால், பெல்ஜிய அரசியலமைப்பில் இத்தகைய சொற்களுக்குத் திட்டவட்டமான பொருள் உண்டு. அங்கெல்லாம் உடல் உரிமையில் அரசாங்கம் தலையிட விரும்பி, அதற்கேற்ற ஒரு சட்டத்தைத் திடீரென்று கொண்டுவர முடியாது. அரசியலமைப்பையே திருத்தி அமைத்தால்தான் அது முடியக்கூடிய காரியம். அரசியல் அமைப்பைத் திருத்தவேண்டுமானால், அதற்கென அரசியலமைப்பால் வகுக்கப்பட்டுள்ள தனிப்பட்ட முறைகளால்தான் அது முடியுமே தவிர, வேறொன்றாலும் முடியாது. இஃதிங்ஙனமாயினும், நமது உடனடியான கவனத்துக்குரிய பொருள் இவையெல்லாமல்ல. நாம் கவனிக்கவேண்டிய பொருள் என்னவெனில் எங்கெங்கெல்லாம், தனிமனித உரிமையானது, அரசியலமைப்புக் கொள்கைகளினின்றும் பெறப்படுகின்றதோ, அங்கங்கெல்லாம் அவ்வுரிமையானது தற்காலிகமாக நிறுத்திவைக்கப்படுதற்கும் அல்லது ஒரேயடியாக நீக்கிவிடப்படுதற்கும் இடமுண்டு என்பதேயாம். அதற்கு மாறாகத் தனிமனித உரிமையானது, நாட்டின் சாதாரண சட்டத்திலேயே பொதிந்துகிடக்கின்ற காரணத்தால், அரசியலமைப்பின் ஒரு பகுதியாக எங்கு விளங்குகிறதோ, அங்கு அவ்வுரிமையானது எளிதில் அழிக்கப்படாது என்பதும், அப்படி அழிக்கப்படவேண்டுமாயின் நாட்டின் பழக்க வழக்கங்களிலும் நிறுவனங்களிலும் ஏற்படக்கூடிய

பெரியதொரு புரட்சியொன்றிலே[1] மட்டுமே அது முடியும் என்பதும் ஈண்டு நோக்கற்பாற்று. இங்கிலாந்தில் 'உடல் உரிமைச் சட்டம்' (Suspension of Habeas Corpus Act) நிறுத்தி வைக்கப்படுதற்கும், பிற நாடுகளில் 'அரசியலமைப்பால் அளிக்கப்பட்டுள்ள உத்தரவாதங்கள்' (constitutional guarantees) நிறுத்தி வைக்கப்படுதற்கும் ஓரளவு ஒற்றுமை உண்டென்பது உண்மையேயாகும். ஆனால், உடல் உரிமைச் சட்டம் நிறுத்திவைக்கப்படுவதால், ஏற்படக்கூடிய தீய பயனானது சாதாரணமாக யாவரும் எதிர்பார்க்குமளவு அவ்வளவு அதிகமானதன்று. அதன் பெயரில் தொனிக்கின்ற அளவுக்கு அதில் கடுமை இல்லை என்றே கூறலாம். பார்வைக்கு ஒரு கடுமையான சட்டமாக அது தோன்றினும், உண்மையில் உடலுரிமையைப் பாது காப்பதற்கான ஒரே ஒரு முறையைமட்டுமே தற்காலிகமாக அது நிறுத்திவைக்கிறது. உடலுரிமைச் சட்டமானது, நிறுத்தி வைக்கப் பட்டிருக்கும்போதுகூட, ஆங்கிலேயர், ஏனைய பிற உரிமைகளை எல்லாம் தாராளமாக அனுபவித்துவரலாம்.

## 'சட்டத்தின் இறைமை' என்பதன் பொருள்களைப்பற்றிய தொகுப்புரை

நாம் இதுகாறும் கூறியவற்றால், 'சட்டத்தின் இறைமை' என்பது மூன்று பொருள்களைத் தன்னகத்தேகொண்டு திகழ்வ தொன்று என்பது நன்கு பெறப்படுகின்றது. அல்லது நமது அரசிய அமைப்பின் அடிப்படைக் கொள்கையாக விளங்குகின்ற அவ் விறைமை யானது, மூன்று வெவ்வேறு நோக்குகளினின்றும் ஆராயப்படத்தக்கது என்றும் கூறலாம்.

இவற்றுள் முதலாவது பொருளாகக் கருதத்தக்கது என்ன வெனின், சட்டத்தின் இறைமை என்பது நாட்டில் வழங்கும் முறையான சட்டத்தின் முழுமையான இறைமை அல்லது வரம்பற்ற தனித்தலைமையைக் குறிக்கும் என்பதேயாம். மேலும், சட்டத்தின் இறைமையானது நிலவுகின்ற இடத்தில், யதேச்சாதிகாரத்தின் செல் வாக்கு ஒரு சிறிதும் செல்லாதென்பதும், அரசாங்கமானது தனது தனிச் சிறப்பதிகாரங்களைச் (prerogatives) செலுத்தவோ அல்லது தன்னிச்சையாக அதிகாரத்தை (discretionary powers) மிக விரிவான முறையில் பயன்படுத்தவோ இயலாதென்பதையும் இது குறிக்கும். இப்படிப்பட்ட ஒரு சட்டத்தின் ஆட்சியின் கீழ்தான் ஆங்கிலேயர்கள் வாழ்கின்றனர். சட்டத்தின் இறைமையன்றி வேறெந்த சக்தியின்

[1] போர்க்காலத்தில், உடலுரிமைச் சட்டம் எப்படி இயங்கவல்லது என்பதை அறிய, Wade and Phillips எழுதிய Constitutional Law (அரசியலமைப்புச் சட்டம்) என்ற நூலைப் பார்க்கவும் (5ஆவது வெளியீடு, 1955) பக்கங்கள் (382-385).

ஆதிக்கமும் இங்குக் கிடையாது என்று துணிந்து கூறலாம். சட்டத்தை மீறிய குற்றத்துக்காக ஒருவன் இங்குத் தண்டிக்கப்படலாம். ஆனால், வேறெதற்காகவும் ஒருவனைத் தண்டிப்பதென்பது இங்கு இயலாத காரியம்.

அடுத்தாற்போல், 'சட்டத்தின் இறைமை' என்பது சட்டத்தின்முன் சமத்துவம் என்ற பொருளைக் குறிப்பதாகக் கொள்ளலாம். அல்லது இங்கு வாழும் எல்லா வகுப்பினரும், நாட்டின் சாதாரண நீதிமன்றங்களால் வழங்கப்படுகின்ற, சாதாரண சட்டங்களுக்குச் சமமாகக் கட்டுப்பட்டவர்கள் என்ற பொருளை அது குறிப்பதாகவும் கொள்ளலாம். இப் பொருளில் வழங்கப்படும்போது, குறிப்பிட்ட ஒரு சிலர் சட்டத்தின் பிடியினின்றும் விலக்கம் பெறலாம் என்ற கருத்துக்குச் சிறிதும் சட்டத்தின் இறைமை நிலவுமிடத்தில் அரசாங்க அதிகாரிகளேயன்றி, வேறு பிறரோ, சாதாரண குடிமக்களின்மீது ஆணை செலுத்திவருகின்ற, சாதாரண சட்டங்களுக்குக் கீழ்ப்படிய வேண்டிய கடமையினின்றும் தப்பிக்க வழி இல்லை. அதோடு சாதாரண நீதிமன்றங்களின் அதிகார வரம்பிலிருந்தும் அவர்கள் தப்பிக்க முடியாது. 'ஆட்சித்துறைச் சட்டம்' (droit administratif) அல்லது 'ஆட்சித்துறை நீதிமன்றங்கள்'[1] (tribunaux administratifs) போன்றவைக்கு இணையான சட்டத்தையோ நீதிமன்றங்களையோ இங்கிலாந்தில் காண்டல் அரிது.

'ஆட்சித்துறைச் சட்டம்' என்பதன் அடிப்படையில் அமைந்து கிடக்கும் கருத்தைப்பற்றி, வெளிநாட்டவர்கள் அறிந்துள்ளது இதுவே. அதாவது, அரசாங்கமோ அல்லது அதன் ஊழியர்களோ சம்பந்தப்பட்ட வழக்குகள், உரிமை வழக்கு மன்றங்களில் (civil courts) விசாரிக்கப்படத்தக்கன அன்று. அத்தகைய வழக்குகள் உரிமை வழக்கு மன்றங்களின் அதிகார வரம்புக்கு உட்படாதவை. எனவே, தனிப்பட்ட நீதிமன்றங்களால் அல்லது ஏறத்தாழ அரசாங்க அதிகாரிகளின் குழுக்கள் எனக் கருதத்தக்க நிறுவனங்களாலேயே, அவை விசாரிக்கப்படத்தக்கவை. இத்தகைய கருத்தானது, ஆங்கிலேயர்களுக்கு முற்றிலும் தெரியாததொன்றாகும். இன்னும் சொல்லப்போனால், இத்தகைய எண்ணமானது, ஆங்கிலேயர்களின் மரபுகளுக்கும் பழக்க வழக்கங்களுக்குமே முற்றிலும் முரணானது என்று கூறலாம்.

இறுதியாக, 'சட்டத்தின் இறைமை' என்பதை நம் நாட்டு அரசியலமைப்பின் இயல்பை விளக்கக்கூடிய ஒரு சூத்திரமாகக் கருதலாமெனக் கூறலாம். நம் நாட்டு அரசியலமைப்புக்கும் பிறநாட்டு அரசியலமைப்பு

[1] அத்தியாயம் XII-ஐப் பார்க்கவும். அதோடு பக்கங்கள் cxiii et seq., A p, post என்பதையும் (Jennings) (ஜென்னிங்ஸ்) எழுதிய The Law and the Constitutions (சட்டமும் அரசியலமைப்பும்) என்ற நூலின் (4ஆவது வெளியீடு, 1952) பிற்குறிப்பு, ii.

களுக்குமுள்ள அடிப்படையான வேறுபாட்டை அறிய, இது பெரிதும் துணைசெய்கிறது. பிறநாடுகளில் அரசியல் அமைப்புச் சட்டம் என்று பேசப்படுவதெல்லாம், அரசியலமைப்புச் சட்டத்தொகுதி யொன்றின் பிரிக்கமுடியாத பகுதியாக விளங்குவதைக் காண்கிறோம். அதோடு குடிமக்களின் உரிமைகள் என்பனவும் அத்தகைய அரசியல் அமைப்பு களினின்றே பெறப்படுவதையும் நாம் பார்க்கிறோம். அதாவது, அங் கெல்லாம் அரசியலமைப்புகளே மக்களின் உரிமைகளுக்கு ஆதாரமாயிருக் கின்றன. ஆனால், நம் நாட்டிலோவெனின் அது தலைகீழ்ப் பாடமாகியிருப் பதையே அறிகிறோம். இங்கு, தனிமனித உரிமைகள் என்பவை, அரசியல் அமைப்பின் விளைவு என்பதற்குப்பதிலாக அதன் ஆதாரமாகத் திகழ் கின்றன. அரசியலமைப்பினின்றும் தனிமனித உரிமைகள் பெறப்படு கின்ற நிலைமாறி, தனிமனித உரிமைகளின் அரசியல் அமைப்பு ஏற்படு கின்ற நிலை ஏற்பட்டுள்ளது அதாவது இங்கு அரசியல் அமைப்பானது, தனிமனித உரிமைகளுக்கு ஆதாரமன்று; அவற்றின் விளைவு என்றும் கூறலாம். நீதிமன்றங்களில் வரையறுக்கப்பட்டு அமல் செய்யப்படுகின்ற அவ் வுரிமைகளே, நம் நாட்டு அரசியலமைப்புச் சட்டத்தின் அடிப்படை யாக விளங்குகின்றன. சுருங்கக்கூறுமிடத்து, இங்கு அரசாங்க ஊழியர் களுக்கெனத் தனிப்பட்ட சட்டங்கள் என்பது இல்லை. தனிப்பட்ட சாதாரண மக்களுக்கென ஏற்பட்ட சட்டங்களே, அவ்வப்போது நீதி மன்றங்களாலும் பாராளுமன்றத்தாலும் எடுக்கப்படும் நடவடிக்கைகள் காரணமாக, மேலும் மேலும் விரிவாகக்கப்பட்டு, நிர்வாக அரசாங்கத்தின் நிலையையும் அதன் ஊழியர்களின் நிலையையும் தீர்மானிக்கிற அளவுக்கு வளர்ந்துவிட்டது. இங்ஙனமாக நம்நாட்டு அரசியலமைப்பு என்பது, நாட்டின் சாதாரண சட்டங்களின் விளைவாகத் தோன்றியதொன்றே என்பது நன்கு பெறப்படுகின்றது.

**நம்நாட்டு அரசியலமைப்பின் முக்கியமான சட்டப்பகுதிகளை, 'சட்டத்தின் இறைமையானது' எவ்வளவு தூரம் பாதித்துள்ளது என்பது**

'சட்டத்தின் இறைமைபற்றிய பொதுப்படையான சித்தாந்தங்கள் நமக்கு அதிகம் துணைபுரிவனவாகா. அதன் இயல்பை விளங்கிக் கொள்ள அவை ஒரு சிறிதே பயன்படக்கூடியன. பல்வேறு சாயல் களிலும் வெவ்வேறு வளர்ச்சி நிலைகளிலும், அக் கோட்பாடனது என்னென்ன பொருள்களை உணர்த்துகிறது என்பதை, நாம் நன்கு புரிந்துகொள்ளவேண்டுமானால், நம் நாட்டு அரசியலமைப்பின் முக்கிய மான சட்டப்பகுதிகளை (provisions) அது எவ்வளவுதூரம் பாதித் துள்ளது அல்லது ஆட்கொண்டு வந்துள்ளது என்பதைத் தொடர்ந்து ஆராய்தல் வேண்டும். இனி வரப்போகும் அத்தியாயங்களின் பேசப் படும் பல்வேறு தலைப்புகளின் அடிப்டையில் இங்கிலாந்தின் சட்ட மானது, எங்ஙனம் தொழிற்படுகிறது என்பதை உன்னிப்பாகப் பரிசீலனை

செய்வதொன்றே அவற்றிற்குறிய சிறந்த வழியாகும். அத் தலைப்புகள் வருமாறு: உடல் உரிமை, கருத்து வெளியீட்டு உரிமை பொதுக் கூட்ட உரிமை, இராணுவச் சட்டத்தின் பயன், படைவீரர்களின் உரிமைகளும் கடமைகளும், பொது வருமானத்தைச் சேகரித்தலும் செலவழித்தலும் அமைச்சர்களின் பொறுப்புகள் என்பனவாகும். இத் தலைப்புகளின்கீழ் விவரிக்கப்படும் பொருள்களுக்கும் சட்டத்தின் இறைமைக்குமுள்ள தொடர்பை ஆராய்வதாலேயே, அவ் விறைமையின் உட்பொருளை நன்கு உணரலாகும். மேலும், அதன் உண்மையான இயல்பு இங்கிலாந்தில் எங்ஙனம் வெளிப்படுகிறது என்பதை, பிற ஐரோப்பிய நாடுகளில் பேசப்படும் ஆட்சித்துறைச் சட்டத்தோடு (droit administratif) அதை ஒப்பிட்டு, இரு வகையான முறைகளுக்குமுள்ள வேற்றுமையை எடுத்துக்காட்டுவதன் மூலமும் நன்கு அறிந்து கொள்ளலாம். இத் தலைப்புகள் யாவும், முறையாக ஒன்றன்பின் ஒன்றாக விளக்கப்படும். அப்படி விளக்கப்படும்போது, ஆங்கில நிறுவனங்களில் ஊடுருவி நிற்கும் ஒரு கொள்கைக்கு, அதாவது சட்டத்தின் இறைமை என்ற கோட்பாட்டுக்கு அவை எல்லாம் எப்படித் தக்க சான்றுகளாக அல்லது எடுத்துக்காட்டுகளாக விளங்கக்கூடும் என்பதைக் காண்பிப்பதே எனது நோக்கமாகும். மற்றபடி குடிமக்களின் உரிமைகளைக் காப்பதற்கென ஏற்பட்டுள்ள ஒவ்வொரு சட்டத்தைப்பற்றியும், சான்றாக உடல் உரிமைச் சட்டங்கள்போன்ற சட்டங்களைப்பற்றியும், நுணுக்கமாகவும், மிக விரிந்த அளவில் முழுமையாகவும் தகவல்களைத் தொகுத்துக் கூறுவது, எனது நோக்கமன்று என்பதை வாசகர்கள் நினைவில் வைத்துக்கொள்ளவேண்டும். சட்டத்தின் இறைமையானது ஆங்கில நிறுவனங்களில் நீக்கமறநிறைந்து தன்னாட்சி செலுத்தி வருவது இங்கே குறிப்பிடப்பட்டுள்ளது. அரசியலமைப்புச் சட்டத்தின் தலைப்புகள் அல்லது அரசியலமைப்பின் விதிகள் எவ்வளவு தெளிவாக விளக்கக் கூடும் என்பதைக் காட்டுவதொன்றே என் நோக்கமாகும்.[1] பிற்காலத்தே என்றோ ஒருநாள் நமது அரசியலமைப்பின் சட்ட

[1] சட்டத்தின் சமத்துவ ஆட்சிக்கு, இங்கிலாந்தில் புதியதோர் அபாயம் ஏற்பட்டுள்ளது. இதை சர். ஃபோலக் என்பார் பின்வருமாறு எழுதுகிறார்: 'சட்டமன்றமானது வாணிப வழக்குச் சட்டம் என்ற ஒரு சட்டத்தை 1906ஆம் ஆண்டில் ஏற்படுத்தி, அதன்மூலம் முதலாளிகள் தொழிலாளிகள் ஆகிய இரு சாராரின் கழகங்களுக்கும் அல்லது அவர்களின் நலன்களுக்காகப் பாடுபடக்கூடிய எல்லா மனிதர்களுக்கும் சட்டப் பொறுப்புகளினின்றும் சிறப்பான விலக்குரிமை அளித்துள்ளது. இப்படிச் செய்தல் தகும் என்றே, அம் மன்றம் நினைத்துள்ளதாகத் தெரிகிறது. ஆனால், நடைமுறையில் இதனால் அரசியல் அமைப்பில் ஏற்படக்கூடிய பலத்த தாக்குதலைச் சட்ட அறிவியல் ஒன்றும் சொல்வதற்கும் செய்வதற்கும் இல்லை. நீதித்துறையில் அதனால் ஏற்படும் சிக்கல்களைப் பற்றிய மேலும் தெரிந்துகொள்ள அல்லது ஆராயவேண்டுமானால், நாம் கடல் கடந்துசென்று அங்கு அது எங்ஙனம் செயல்படுகிறதென்பதைக் கவனிப்பதைத் தவிர வேறுவழியில்லை. அச் சிக்கல்களுக்குரிய பரிகாரங்களைக் காண நம் நீதிமன்றங்கள், சட்ட நியாயக் கொள்கைகளின் அடிப்படையில் பெரிதும் முயன்று வருகின்றன. (அம் முயற்சியில் அவை ஓரளவு வெற்றிபெற்றுள்ளன என்றே ஈண்டுக் குறிப்பிடவேண்டும்)' போலாக் (Pollock) என்பார் எழுதிய, 'தீங்கியல் சட்டம்', (Law a Torts) 8ஆவது வெளியீடு, 1908, பக்கம் v பார்க்கவும்.

மான்து. தொகுக்கப்படுமாயின் நான் இங்கே தந்துள்ள ஒவ்வொரு தலைப்பும் அச் சட்டத் தொகுதியின் ஒவ்வொரு சட்டப்பகுதியினுலும் ஆராயப்படுமென்பது உறுதி. இத் தலைப்புகளில் பல, பிறநாட்டு அரசியல் அமைப்புகளில் ஏற்கெனவே நன்கு விளக்கம் பெற்றுள்ளன. பெல்ஜிய நாட்டு அரசியலமைப்பில் அவை மிகச் சிறப்பான முறையில் எடுத்துக்காட்டப்பட்டுள்ளதை அறியலாம். அவ் வரசியலமைப்பானது, உண்மையில் நாம் மேலே கண்டுள்ளபடி ஆங்கில அரசியலமைப்புச் சட்ட இயலின் (constitutionalism) அதிமுக்கியமான கோட்பாடுகளின் சிறந்ததொரு சுருக்கமாகத் திகழ்கிறது. எனவே, நாம் ஆராய எடுத்துக் கொள்கிற ஒவ்வொரு தலைப்புக்கும் ஏற்புடைத்தான ஒரு சட்டப் பிரிவை, பெல்ஜிய நாட்டு அரசியலமைப்பிலிருந்தோ அல்லது வேறெந்த நாட்டு அரசியலமைப்பிலிருந்தோ எடுத்துக்கொண்டு அதை அத் தலைப் புக்கான சான்ருக மேற்கோள் காட்டி விளக்கிக்கொண்டு போவது நலமுடைத்தாகும். உடலுரிமை என்ற ஒரு தலைப்பைச் சான்ருக எடுத்துக்கொள்வோமாளுல், அவ் வுரிமைக்குப் பொருத்தமான பெல்ஜிய அரசியலமைப்புப் பகுதியை முதலில் நாம் பிரித்துக் கொள்ளவேண்டும். பின்னர், அப் பகுதியில் உள்ளடங்கிநிற்கும் கொள்கையானது, நம் சட்டங்களில் எப்படி இடம்பெற்றுள்ளது என்பதை ஆராயவேண்டும். நம் சட்டங்களில் அஃது ஏற்றுக் சொள்ளப்பட்டிருந்தால், எந்தெந்த வழிகளில் அது நடைமுறையில் பயன்படுத்தப்படுகிறது; அல்லது நீதி மன்றங்களால் அக் கொள்கை யானது எங்ஙனம் அமல் செய்யப்படுகிறது என்பதைக் கவனிக்க வேண்டும். இப்படியெல்லாம் நாம் நமது நாட்டு அரசியலமைப்புச் சட்டப்பகுதிகளைப் பிற நாட்டு அரசிலமைப்புப் பகுதிகளோடு ஒருங்கு வைத்து ஆராயாத காரணத்தால்தான், நமது அரசியலமைப்புச் சட்ட மென்ருல் என்ன என்பதே, பலருக்குச் சரிவரப் புரியாமல் இருக்கிறது. ஒன்றை மக்கள் ஒப்புக்கொள்ளவேண்டுமாளுல், அது இன்னென்ருேடு ஒப்பிடப்படுதல் வேண்டும் என்பது, ஏனைய துறைகளிற்போலவே இத் துறையிலும் இன்றியமையாததாகிறது.

# 5. உடல் உரிமை
# (The Right to Personal Freedom)

**பெல்ஜிய அரசியலமைப்பில் உடல் உரிமைக்கு அளிக்கப்பட்டுள்ள பாதுகாப்பு**

இங்கிலாந்தில் நீண்டநாட்களாகவே நின்று நிலவிவரும் ஒரு சில கொள்கைகளேயே, பெல்ஜிய நாட்டு அரசியலமைப்பின் ஏழாவது விதியானது, அந் நாட்டில் நன்கு நிலைநாட்டியுள்ளது. அவ் விதியில் அடங்கியுள்ள வாசகங்களேயும் ஆங்கில அரசியலமைப்புச் சட்டத்தில் காணப்படும் அவற்றையொத்த கூறுபாடுகளேயும் ஒப்பிட்டுப் பார்க்கும் போது புலப்படுகின்ற வேறுபாடுகளின்மூலம், ஆங்கில அரசியல் அமைப்பின் சில குறிப்பிடத்தக்க சிறப்பியல்புகள் வெளிப்படுகின்றன. அவை அங்ஙனம் வெளிப்படுத்தப்படுவது மிகவும் புதுமையாகக் காணப்படுவதால், அவ் வாசகங்களே ஈண்டு மேற்கோளாக அப்படியே தருதல் தகும்.

**ஏழாம் விதி**

'தனி மனித உரிமைக்கு இங்கு உத்தரவாதமளிக்கப்படுகிறது'.

'சட்டப்படி அல்லது யார்மீதும் இங்கு எவ்வித நடவடிக்கையையும் எடுத்தல் இயலாது. சட்டத்தால் விதிக்கப்பட்டுள்ள முறைப்படிமட்டுமே ஒருவர்மீது வழக்குத் தொடரவோ குற்றம் சாட்டவோ முடியும். குற்றம்செய்யுழி ஒருவர் கையுமெய்யுமாய்ப் பிடிபட்டாலன்றி, வேறு சந்தர்ப்பங்களில் யாரையும் கைதுசெய்தல் என்பது இங்கு முடியாத காரியம். நீதிபதி ஒருவரால் விடுக்கப்படும் ஆணையின்படிமட்டுமே ஒருவரைக் கைதுசெய்தல் கூடும். அங்ஙனம் கைது செய்யப்படுமுன், அவ் வாணையானது கைது செய்யப்படுபவரிடம் காட்டப்பெறல் வேண்டும். அல்லது கைது செய்யப்பட்ட இருபத்து நான்கு மணி நேரத்துக்குள்ளாகவாவது, அஃது அவரிடம் காண்பிக்கப்பெறல் வேண்டும்.'[1]

[1] Constitution de la Belgique, art. 7.

### இங்கிலாந்தில் அது பாதுகாக்கப்படும் விதம்

ஆங்கிலேயர்கள் இன்று நுகர்ந்துவருகின்ற உடலுரிமையானது, எழுதப்பட்டதொரு பத்திரத்தினின்றும் பெறப்படுவதொன்றன்று. எழுதப்பட்ட அரசியலமைப்பில் அடங்கியுள்ள ஒரு பொதுப்படையான கொள்கையினின்றும் அவ் வுரிமையானது பிறப்பதென்றும் கூற முடியாது. பெல்ஜிய அரசியலமைப்பின் ஏழாவது விதியைப்போன்றதொரு கூற்றை நம்முடைய சட்ட நூலினில் காணவேண்டுமானால் பேருரிமைப் பட்டயத்தில் (Magna Charta) புகழ்பெற்ற முப்பத்தொன்பதாவது[1] விதியில்தான் ஓரளவு காணமுடியும். அது வருமாறு;

'தன்னையொத்த நடுவர்களின் ட்டரீதியான தீர்ப்புகளின் படியோ, அன்றி நாட்டின் சட்டங்கள் அனுமதிக்கும் முறைப்படியோ எடுக்கப்படும் சட்ட நடவடிக்கைகளாலன்றி, இந் நாட்டின் சுயேச்சைக் குடிமகன் ஒருவனது உடலை யாரும் சிறைசெய்யவோ, வேறுவகையில் தடைசெய்யவோ இனி இங்கு முடியாது. மேற்சொன்ன முறைப்படிக் கன்றி ஒருவனது சொத்து பறிக்கப்படுவதும் நாடு கடத்தப்படுவதும், சட்டப் பாதுகாப்பினின்றும் விலக்கப்படுவதும் அன்றி வேறுவகையால் வதைக்கப்பட்டுக் கொல்லப்படுபவதும் இனி இங்கு நடைபெறாது. சட்டப்படிக்கன்றி நாம் இனி யார்மீதும் நேரில் படைஎடுக்க மாட்டோம். அன்றிப் படையை அனுப்பிப் பலவந்தப்படுத்தவும் மாட்டோம்.'

இக் கூற்றை உரிமை விண்ணப்பம் (Petition of Right) என்ற பட்டயத்தில் கூறப்பட்டுள்ளவைகளோடு சேர்த்துப் படிக்கவேண்டும். இந்தப் பாராளுமன்றச் சட்டங்கள் (இவைகள் அங்ஙனம் அழைக்கத் தகுமெனின்) ஏற்கெனவே நாட்டில் நிலவிவரும் ஓர் உரிமையை ஏட்டில் குறித்து வைத்துள்ளனவேயன்றி, புதிய உரிமை எதையும் மக்களுக்கு அளித்துவிடவில்லை, ஆனால், பெல்ஜிய அரசியலமைப்பில் வருகின்ற 'உத்தரவாதமளிக்கப்படுகிறது' (guaranteed) என்ற சொற்றொடரானது, நான் ஏற்கெனவே குறிப்பிட்டுள்ளபடி மிக மிக முக்கியத்துவம் வாய்ந்தது. ஏனெனில், அச் சொல்லிலிருந்து, உடலுரிமை என்பது, பெல்ஜியத்தில் ஒரு தனிப்பட்ட சிறப்புரிமை (privilege) என்பதும், சாதாரண சட்டங்களுக்கும் அப்பாற்பட்ட ஓர் அதிகாரத்தின் வாயிலாகவே, அது பெறப்படுகிறதென்பதும் தெள்ளிதின் புலப்படுகின்றது. இத்தகைய கருத்தெல்லாம் ஆங்கிலேயரின் இயல்பான மனப்போக்குக்குச் சிறிதும் ஒவ்வாததாகும். ஏனெனில், இங்கெல்லாம் உடலுரிமை என்பது ஏதோ ஒரு சிறப்புரிமை என்பதாகக் கருதப்

[1] ஸ்டப்ஸ் (Stubbs) என்பாரின், 'சில சிறப்புமிக்க பட்டயங்கள், (Select Charters) என்ற நூலைப் பார்க்கவும் (8ஆவது வெளியீடு, 1900) பக். 301.

படுவதில்லை. நீதி மன்றங்களால் நாள்தோறும் கையாளப்பெறுகிற சாதாரண சட்டங்களின் விளைவாகவே, அவ் வுரிமை ஈண்டு பெறப்படுகின்றது.[1] சுருங்கக் கூறப்போனால், இங்கு வழங்கப்படும் உடலுரிமையானது, தனிமனித உரிமைகள் என்பன அரசியலமைப்புச் சட்டத்தின் ஆதாரமேயன்றி, விளைவல்ல என்ற பொதுப்படைக் கொள்கையானது, ஒரு குறிப்பிட்ட துறையில் எங்ஙனம் நடைமுறையில் பயன்படுத்தப்படுகிறதென்பதைக் காட்டக்கூடிய தொன்றன்றி வேறன்று எனலாம்.

உடல் உரிமைபற்றியும் அல்லது வேறெந்த உரிமைபற்றியும் அரசியலமைப்பிலோ அல்லது வேறு பட்டயங்களிலோ பொறித்து வைத்தால்மட்டும் போதாது. அதனால் அவ் வுரிமைகளுக்கு எவ்வித மான பாதுகாப்பும் ஏற்பட்டுவிடாது. பெயரளவில்மட்டுமே அவை உரிமையளிக்கலாமேயன்றி, நடைமுறையில் பயனில்லாமல் போகக் கூடும். எனவே, அவை நடைமுறையில் பயன்தர வேண்டுமானால், அவ் வுரிமைகள் அரசியலமைப்பினின்றும் பிரிக்கமுடியாத பகுதிகளாக வெறும் பெயரளவிலன்றி உண்மையிலேயும் விளங்கவேண்டும். அங்ஙனம் உடலுரிமையானது ஒரு நாட்டிலுள்ள அரசியலமைப்பின் ஒரு பிரிக்கமுடியாத பகுதியாக விளங்குகிறதா, இல்லையா என்பதை அறிந்துகொள்ள விரும்பும் மாணவர் ஒவ்வொருவரும் முதலில் அவ் வுரிமையின் பொருள் என்னவென்பதை நன்கு தெரிந்துகொள்ள வேண்டும். அதன்பின், அதைவிட முக்கியமாக, அவ் வுரிமையானது நடைமுறையில் நன்கு பயன்படுதற்குத் தேவையான சட்டத்துக் கொத்த வழிமுறைகள் யாவை என்பதையும் அன்னவர் தெரிந்து கொள்ளவேண்டும்.

சட்ட முறைமை ஒன்றினாலன்றி[2] வேறெந்த முறையினாலும், ஒருவரது உடலானது கைதுசெய்யப்படவோ, சிறையிடப்படவோ அன்றி, வேறு எந்த வன்முறைக் கட்டுப்பாடுகளுக்கும் உட்படுத்தப் படவோ முடியாதபடி, காக்கின்ற ஓர் உரிமையே உடலுரிமை என்று இங்கிலாந்தில் பேசப்படுவதன் சாரமான பொருளாகும். ஒருவரது உடலானது, எவ்விதமான கட்டுப்பாட்டிற்கு உட்படுத்தப்படினும் அது சட்டவிரோதமென்பது, இங்கிலாந்தில் சொல்லாமலே போதரும்

[1] 1641ஆம் ஆண்டில் ஏற்பட்ட, விண்மீன் மண்டப நீதிமன்ற ஒழிப்புச் சட்டமானது (Star Chamber Abolition Act) குடிமகன் ஒவ்வொருவனும் மன்னருக்கும், மன்னரவைக்கும் எதிராகக்கூட, உடலுரிமை மனு ஒன்றை நீதிமன்றத்தில் தாக்கல் செய்யலாமென்ற உத்தரவாதத்தை அளிக்கிறது.

[2] சட்ட முறைமை என்றால் என்ன என்பதை அறிய, வேட், பிலிப்ஸ் என்ற இருவரும் எழுதிய அரசியலமைப்புச் சட்டம் (Wade and Phillips, Constitutional Law) என்ற நூலையும் (6ஆவது வெளியீடு, 1960) பக். 466 ff., 674-676 கென்னி (Kenny) என்பார் எழுதியுள்ள, 'கிரிமினல் குற்றவியல் சட்டத்தின் முக்கியக் கோட்பாடுகள்' (Outlines of Criminal Law)(17ஆவது வெளியீடு, 1958) பக். 535-540 என்ற நூலையும் பார்க்கவும்.—பதிப்பாசிரியர்.

ஓர் உண்மையாகும். இரண்டே இரண்டு சூழ்நிலைகளில்தான் ஒருவரது உடல் கட்டுப்பாடுகளுக்குட்படுத்தப்படுவது, சட்டப்படி நியாயமென அல்லது சட்டமுறைமை என (பொதுப்படையான சொற்களில் கூறப்போனல்) இங்கிலாந்தில் கருதப்படுகிறது. சிறையிடப்பட்ட அல்லது வேறு உடற்கட்டுப்பாடுகளுக்கு உட்படுத்தப்பட்ட ஒருவர் ஒன்று, ஏற்கெனவே சட்டத்தை மீறியதாகக் குற்றம்சாட்டப்பட்டு, விசாரணை செய்யப்படுதற்காக நீதிமன்றத்தின் முன்னிலைக்குக் கொண்டு வரப்படவேண்டிய நிலையிலிருப்பவராக இருக்கவேண்டும். அல்லது சட்டத்தை மீறியதற்காகக் குற்றவாளி என்று தீர்மானிக்கப்பட்டு நீதிமன்றத்தால் தண்டிக்கப்பட்டபின், அத் தண்டனையை அனுபவிக்க வேண்டிய நிலையிலிருப்பவராக அவர் இருக்கவேண்டும். இத்தகைய பொருளில் பார்க்கும்போது, உடல் உரிமை இங்கிலாந்தில் பின்வருமாறு பாதுகாக்கப்படுவதாகக் கூறலாம். சட்டரீதியான நடவடிக்கைகளால் அதாவது (மீண்டும் பொதுப்படையான சொற்களில் சொல்லும்போது) சட்டப்படி விடுக்கப்படும் பிடியாணை (legel warrant) போன்ற முறைகளாலன்றி வேறுவகைகளில் ஒருவர் கைதுசெய்யப்படுவதும் சிறையிடப்படுவதும் முடியாத காரியம். இக் கொள்கையானது இங்கிலாந்தில் மிகக் கண்டிப்பானமுறையில் கடைப்பிடிக்கப்படுகிறது. அதற்கும் மேலாக, அக் கொள்கையானது நடைமுறையில் அமலாக்கப்படுவதற்குத் தேவையான வழிமுறைகளும் அல்லது சாதனங்களும் இங்கு வகுத்தளிக்கப்பட்டுள்ளன. இத்தகைய வழிமுறைகள் இரண்டு ஆகும்.[1] ஒன்று. சட்ட விரோதமாகக் கைது செய்யப்பட்டதற்கோ, அன்றிச் சிறையிடப்பட்டதற்கோ தக்க நிவாரணத்தை (redress) நீதி மன்றங்களில் வழக்குத் தொடுப்பதாலும், வேறு நடவடிக்கைகளை எடுப்பதாலும் பெற்றுக்கொள்ளலாகும். இரண்டாவது, உடல் உரிமைக் கட்டளையைப் பயன்படுத்தி முறையற்ற சிறைத் தண்டனையினின்றும் விடுதலை பெறுதலாகும்.

## தவருகக் கைதுசெய்யப்பட்டதை நிவர்த்திக்க எடுத்துக்கொள்ளப் படவேண்டிய சட்ட நடவடிக்கைகள்

**1. கைதுசெய்யப்பட்டதற்குரிய நிவாரணம் (Redress) :** நிவாரணம் என்ற சொல்லை விரிவான பொருளில் பயன்படுத்தும்போது, பின்வருமாறு அதைக் கூறலாம்: அதாவது தீங்கிழைக்கப்பட்டவர் அதற்குரிய நிவாரணத்தைப் பெறவேண்டுமானுல், ஒன்று தீங்கிழைத்தவரைத் தண்டனைக்குள்ளாக்க வேண்டும். அல்லது இழைக்கப்பட்ட தீங்கினுல் ஏற்பட்ட சேதத்துக்குரிய இழப்பீட்டைப் பெறுதல் வேண்டும்.

[1] ஆசிரியர் தமது அடிக்குறிப்பில் தற்காப்பு அல்லது தனது சொந்த வலிமையைக்கொண்டு தனது உரிமைகளைப் பலவந்தமாகப் பெறல் என்ற மூன்றுவது வழியைப் பற்றியும் குறிப்பிடுகின்றுர்.—பதிப்பாசிரியர்.

ஒருவரது உடலுரிமையில், சட்டவிரோதமானமுறையில் யாரேனும் தலையிடுவார்களேயானால், அவ் வுரிமையைக் காத்துக்கொள்ள மேற் சொன்ன முறைகளில் எதை வேண்டுமானாலும் ஒருவர் இங்கிலாந்தில் பயன்படுத்திக் கொள்ளலாம். சான்றாக, சட்ட முறைமையன்றி X என்பவர் A என்பவரைத் தரையில் புரட்டிவிட்டுத் தாக்க முனைவதாக (assaults) வைத்துக்கொள்வோம். X என்பவர் தமது செய்கையின் மூலம் A என்பாரின் சுதந்தரத்தைப் பறித்துக் கொள்பவராகின்றார். அல்லது சட்ட இயல் கலைச்சொல்லைப் பயன்படுத்தும்போது, X என்பவர் A-ஐச் சிறைப்படுத்தியவராகின்றார் (imprisons). அது நீண்ட நேரத்துக்கோ அன்றி ஐந்து நிமிடங்களுக்குமட்டுமே இருப்பினும் சரியே. இத்தகைய சூழ்நிலையில் A என்பவர் தம் குறையைப் போக்கிக்கொள்ள இரண்டு விதமான வழிகளைக் கடைப்பிடிக்கலாம். ஒன்று, X என்பவர் தமது உடலைத் தாக்கமுனைந்தார் என்ற குற்றத்துக்காக, அவருக்கு நீதிமன்றத்தின்மூலம் தண்டனையை வாங்கித்தரலாம். அல்லது அத்துமீறல் (trespass) குற்றத்துக்காக X-ன்மீது நீதிமன்றத்தில் நடவடிக்கை எடுத்து, அவரது செய்கையால் ஏற்பட்ட சேதத்துக்கு ஏற்ற இழப்பீட்டை, ஜூரி அல்லது நடுவர் குழு தீர்மானிக்கிற அளவுக்குப் பெற்றுக்கொள்ளலாம். 1725-ல் வால்டேர் என்னும் அறிஞர், பாரிஸில் நடத்தப்பட்டதுபோன்று, இலண்டனில் ஒரு பிரபுவின் தூண்டுதலால் நடத்தப்பட்டதாக வைத்துக்கொள்வோம். அப்போது அவர்தம் குறையைத் தீர்த்துக்கொள்ள நண்பர்களின் நல்லெண்ணத்தையோ, அன்றி அமைச்சரவையின் தயவையோ நாடியிருக்கவேண்டிய அவசியமேற்பட்டிருக்காது. அவர் தமது குறைதீர மேற்கூறிய இரு முறைகளில் ஒன்றைக் கடைப்பிடித்திருக்கக்கூடும்.[1] தக்க நடவடிக்கைகளை எடுத்துக்கொள்வதன்மூலம் அவர் தம்மைத் தாக்கிய அனைவரையும் விசாரணைக்குக் கொண்டுவந்திருக்க முடியும். அவர் விரும்பியிருப்பின், அங்ஙனம் தம்மைத் தாக்கியவர்கள்மீது, மொத்தமாகவும் தனித்தனியாகவும் நீதிமன்றத்தில் நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கவும் கூடும். கையாட்களைக்கொண்டு தம்மை அடிக்கச்செய்த அப் பிரபுவின்மீதும், தம்மை அடித்த கையாட்கள்மீதும், அவரைச் சிறையில் தள்ளிய போலீஸார்மீதும் அல்லது சிறைக் காவலர்மீதும் அல்லது அவரைச் சிறையில் வைத்திருந்த சிறையதிகாரிமீதும் அவர் தனித்தனியே வழக்குத் தொடர்ந்திருக்கலாம். அத்துமீறிய குற்றத்துக்காக, வால்டேரால் எடுத்திருக்கப்படக்கூடிய நடவடிக்கையானது, நாட்டிலுள்ள ஒவ்வொருவர்மீதும் எடுக்கப்பட்டிருக்கலாம்; அல்லது சட்ட இயல் கலைச் சொல்லின்படி ஒவ்வொருவருக்கெதிராகவும்

[1] அமைச்சரவை பார்த்து அவருக்கு மன்னிப்பை வழங்கியிருக்கலாம். அல்லது nolle prosequi என்ற முறையைக் கடைப்பிடித்திருக்கலாம்; அதாவது அவர்மீது தொடரப்பட்ட வழக்கை மேற்கொண்டு தொடராது மறுத்திருக்கலாம். ஆனால், அது உரிமையியல் நீதிமன்றங்களின் (civil courts) நடவடிக்கைகளில் தலையிட்டிருக்கமுடியாது.

அது செல்லுபடியாகலாம் (lies) என்பது ஈண்டுக் குறிப்பாக உணர்தற் பாற்று. இத்தகைய நடவடிக்கைகள், குடியேற்றநாட்டு ஆளுநர்கள், அமைச்சர்கள், இராணுவ நீதிமன்றங்களால் விசாரிக்கப்பட்டு, அந் நீதி மன்றங்களின் சட்டத்துக்கு உட்படாமற்போன இராணுவ அதிகாரிகள் போன்ற பேரதிகாரிகள்மீதும் சிற்றதிகாரிகள்மீதும் எடுக்கப்படலாம்; எடுக்கப்பட்டும் இருக்கின்றன. ஈண்டு, சட்டத்தின் இறைமை என்பதன் மூன்றுவது பண்பு ஒன்றும் நமக்குப் புலப்படுகிறது. அதாவது, வால்டேர் என்பார், இங்கிலாந்திலிருக்கும்போது, ஃபிரான்ஸில் அவர் அடைந்த அதே இடையூற்றுக்கு ஆளாகி இருப்பாரே யானால், அவர்தம் எதிரிகளில் எவரும், தாங்கள் தங்களது பணிமுறைக் கொத்த (official) செயலில் ஈடுபட்ட காரணத்தாலும், மேலதிகாரி களின்[1] ஆணைகளுக்கேற்ப நடந்துகொண்ட காரணத்தாலுமே அவருக்குத் தீங்கிழைக்க நேர்ந்துவிட்டது என்று கூறித் தம் பொறுப்புகளினின்றும் தப்பித்துக்கொண்டிருக்க இயலாது. அதோடு, தங்களது குற்றத்தின் பெறுமானம் எவ்வளவு என்பதைத் தீர்மானிக்கும் பொறுப்பு, அதிகாரிகள் அடங்கிய நிர்வாக நீதிமன்றமொன்றைச் சேர்ந்தது என்றும் அவர்கள் கூறியிருக்கமுடியாது. நமது எடுத்துக் காட்டை மீண்டும் தொடர்வோமானல், வால்டேர் என்பார் இங்கி லாந்தில் இன்னலுற்றிருந்திருப்பாரேயானல், தம்மைத் தாக்கியவர்கள் ஒவ்வொருவரையும், சிறையில் வைத்திருந்தவர்களையும் சேர்த்துச் சாதாரண நீதிமன்றங்கள் முன்னிலையில் கொணர்ந்து நிறுத்தியிருக்கக் கூடும். அங்கு அவர்கள், சட்டத்தைமீறிய செயலில் ஈடுபட்டுவிட்ட ஒருவர், தம் பணியைச் செய்வதில் ஏற்பட்ட ஆர்வங்காரணமாகவும், அன்றி மேலதிகாரிகளின் ஆணைகளுக்குக் கீழ்ப்படியவேண்டிய கட்டாயம் காரணமாகவுமே, தாம் அங்ஙனம் செய்யநேர்ந்துவிட்டது என்று கூறுவதானது, சட்டப்படியோ, அன்றி அறநெறிப்படியோ ஏற்றுக் கொள்ளக்கூடிய சாக்குப்போக்காகும் என்று கனவிலும் கருதாத நீதிபதிகள் முன்பும், நடுவர் குழு அல்லது ஜூரி முன்பும் விசாரிக்கப் பட்டிருப்பர் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

ஒருவரது உடலுரிமையில் சட்டவிரோதமானமுறையில் யாரேனும் தலையிட்டால், அதனல் ஏற்படக்கூடிய சேதத்துக்கேற்ற நிவாரணத்தை நீதிமன்றங்கள் எப்படிப் பெற்றுத்தருகின்றன என்பதுபற்றிய ஆராய்ச் சியை விடுத்து மேலே போகுமுன், நாம் நன்கு கவனிக்கவேண்டிய இரு பெருங் கொள்கைகள் உள்ளன. நம் நீதிபதிகள் வெகு கண்டிப் பாகக் கடைப்பிடித்துவரும் கொள்கைகளுள், அவை மிக முக்கியத் துவம் வாய்ந்தவைகளாகும். அவை நம்நாட்டு அரசியலமைப்புச்

[1] ஃபிரெஞ்சுக் குற்றவியல் சட்டத்தொகுதியின் 114ஆவது பிரிவோடு ஒப்பிட்டு, இரண்டுக்குமுள்ள வேறுபாட்டை நோக்கவும்.

சட்டத்துக்கே அடிப்படையானவை எனலாம். அவை நன்கு கடைப்பிடிக்கப்படுகின்றதன் விளைவாகவே, நம் நாட்டில் சட்டத்தின் ஆட்சி நிலவுகிறது. அதனாற்றான் அரசாங்கத்தின் யதேச்சாதிகார ஆட்சி ஓரளவு தடைப்படுகிறது. இக் கொள்கைகளுள் முதலாவதாக எண்ணத்தக்கது, நம் நாட்டில் தீங்குசெய்த ஒவ்வொருவரும் அவர்கள்செய்த தீங்கிற்காகத் தனித்தனியே பொறுப்பேற்கவேண்டியவர்கள் என்பதாகும். இங்கு ஒருவர்செய்த குற்றத்துக்காக இன்னொருவர் பொறுப்பு ஏற்பதென்பது நடவாத காரியம். சட்டத்தைமீறிய ஒருவர், மேலதிகாரி ஒருவரது ஆணையின்படியே அங்ஙனம் செய்ய நேர்ந்து விட்டது என்று கூறித் தப்பிக்க முடியாது. மேலதிகாரி ஆணையிட்டிருந்தாலும் இல்லாவிட்டாலும், அவரவர் செய்த குற்றத்துக்கு அவரவரே பொறுப்பாளிகளாவர். சான்றாக, வால்டேர் என்பார், இங்கிலாந்திலே சிறைப்பட்டிருப்பாரேயானால், அவர் தமக்குற்ற அவமானத்துக்குக் காரணமாயிருந்த ஒவ்வொருவர்மீதும் தனித்தனியே நடவடிக்கை எடுத்திருக்க முடியும். அவரவர்செய்த குற்றத்துக்கு அவரவரே தனிப்பட்ட முறையில் பொறுப்பாளியாவர் என்ற கொள்கை, இங்கிலாந்தில் நன்கு வேரூன்றியிருப்பதால்தான், அரசாங்க அதிகாரிகள் பலரும் அரசாங்கத்தின் ஆணைகள் என்ற போர்வையில் நுழைந்துகொண்டு, சட்டத்தை மீறிய செயல்களில் ஈடுபடுவது அங்குத் தடுக்கப்படுகிறது. சட்ட முறைமையற்ற செயல்களுக்கு, இறைமையின் கட்டளைகள் ஒரு காப்பாகாது என்ற கொள்கையானது, தனிப்பட்டவர்களின் தனிப்பொறுப்பு என்ற கோட்பாட்டினின்றே பெறப்படுகின்றது. அங்ஙனமே, நம் அரசியல் அமைப்பின் ஒரு பெருஞ் சிறப்புக் கொள்கையென விளங்கும் அமைச்சர்களின் பொறுப்பும் கூட, ஒருவர் தாம்செய்த தீங்குக்குத் தாமேதான் பொறுப்பாளி என்ற சாதாரணக் கொள்கையின் அடிப்படையிலேயே இயங்குகிறது. நம்நாட்டு அரசியலமைப்பின் போற்றத்தக்க இரு கொள்கைகளில் இரண்டாவதாகக் கருதப்படத்தக்கது என்னவென்னில், இங்கு ஒருவருக்கு இழைக்கப்பட்ட தீங்கு எத்தகையதாயிருப்பினும், ஒருவித பேதமுமின்றி அவ்வத் தீங்குக்கேற்ற நிவாரணத்தை நீதிமன்றங்கள் வழங்குகின்றன என்பதாகும். செய்யப்பட்ட தீங்கு பெரிதாயிருப்பினும் அல்லது சிறிதாயிருப்பினும் அத் தீங்கின் விளைவாக, ஒருவரது உரிமைக்கு உற்ற ஊனத்துக்கேற்ற நிவாரணத்தை ஒருவர் இங்கிலாந்தில் எதிர்பார்க்கலாம். வால்டேர் என்பார், நையப்புடைக்கப்பட்டது, சிறைப்பட்டது ஆகிய இவையெல்லாம் உண்மையில் அனைவராலும் கண்டிக்கத்தக்க பெருந் தீங்குகள் என்பதில் ஐயமில்லை. ஆனால், அத்தகைய பெருந் தீங்குகளுக்காகமட்டுமே இங்கிலாந்தில் ஒருவர் நீதிமன்றத்துக்குப் போகமுடியுமென்றும் அவற்றிற்கேற்ற நிவாரணத்தைப் பெறமுடியுமென்றும் கருதுவது தவறாகும். நம் நாட்டு நீதிமன்றங்களின் அன்றாட வழக்கங்களை நன்கு அறியாதவர்களே அங்ஙனம் கருதுவர். ஒருவரது உடலுரிமைக்குற்ற இன்னல் எவ்வளவு

சிறியதாயிருப்பினும்கூட, அத்துமீறல் குற்றத்துக்காகவும், முறையற்ற சிறைவைப்புக்காகவும், இன்னல் இழைத்தவர்கள்மீது வழக்குத் தொடரவும், நடவடிக்கை எடுத்துக்கொள்ளவும், ஒருவருக்குப் பூரண சுதந்தரம் இங்கிலாந்தில் இருக்கின்றது. உண்மையில் இங்குள்ள நீதிமன்றங்களில், தாக்கமுனைதல், முறையற்ற சிறைவைப்புபோன்ற தீங்குகளையொட்டித் தாக்கல்செய்யப்படும் நூறு வழக்குகளில் தொண்ணூற்றொன்பது வழக்குகள், கேவலம் சிறுசிறு இடையூறுகளைப்பற்றியனவாகவே இருப்பதைக் காணலாம். முரடன் ஒருவன், இன்னொருவனைத் தாக்கி வீழ்த்திவிட்டதற்காகவும், தாணுக்காரன் ஒருவன் இன்னொருவனைச் சட்டத்துக்கு விரோதமாகக் கைதுசெய்துவிட்டதற்காகவும், பள்ளியாசிரியர் ஒருவர், மாணவன் ஒருவனை வழக்கமாக அவனைப் பள்ளியிலிருந்து வெளியேவிடும் நேரத்துக்குமேல், அதிகமாக அரைமணிநேரம் ஓர் அறையில்போட்டுப் பூட்டி வைத்துவிட்டதற்காகவும்,[1] இன்னும் இப்படிப் பல சிறிய காரணங்களுக்காகவும், நீதிமன்றங்களில் வழக்குகள் தொடரப்படுவதை நாம் காணலாம். சுருங்கக் கூறின், X என்பவர் A என்பவரது உடலுரிமையில் எவ்வளவு சிறிய அளவில் தலையிட்டாலும், குற்றமிழைத்தவர் நீதிமன்ற நடவடிக்கைகளுக்கு உட்படவேண்டியவர் என்பதும், குற்றமிழைக்கப்பட்டவர் தமக்கு ஏற்பட்ட அல்லது ஏற்பட்டதாகக் கருதப்படுகிற தீங்கினுக்கேற்ற இழப்பீட்டினைப் பெறத்தக்கவர் என்பதும், குற்றம் சிறியதாயிருப்பினும், குற்றமிழைக்கப்பட்டவர் ஜூரிகளின் அனுதாபத்தைப் பெறமுடிந்தால், பெருத்ததோர் இழப்பீட்டுத் தொகையைப் பெற முடியுமென்பதும், இந் நாட்டில் மாற்றமுடியாத உண்மைகளாகும் எனலாம். இங்கிலாந்தின் சட்டமானது, ஏனைய உரிமைகளைப் போலவே, உடலுரிமையையும் எல்லாவிதமான இடையூறுகளிலிருந்தும் பாதுகாக்கிறது. உடலுரிமைக்கு ஏற்படும் ஊறு அற்பமேயெனினும், பெரியதோர் இடைற்யூறுக்கு எத்தகைய நிவாரணத்தை வழங்குமோ, அத்தகைய முறையிலேயே (அதே அளவு அல்லது ஒரே அளவான தண்டனையையோ, அபராதத்தையோ விதிக்குமென்பது என் கருத்தன்று) நிவாரணத்தை இங்கிலாந்தின் சட்டம் வழங்குகிறது. இங்ஙனம் வழங்கப்படுவது இங்கு சர்வ சாதாரணமாகிவிட்டபடியால், நாம் அதை ஒரு பொருட்டாக எண்ணுவதுகூடக் கிடையாது. இருப்பினும், நம் நாட்டில் சட்டத்தின் தனித் தலைமையை, இக் கொள்கையைப்போல், நன்கு நிலைநாட்டிய வேறு கொள்கைகள் இல்லை என்றே கூறலாம். செய்யப்பட்ட குற்றங்கள் பெரியனவாயிருப்பினும், சிறியனவாயிருப்பினும் அவையாவும், ஒரேவகையான நீதிமன்றங்களில் ஒருவகையான கோட்பாடுகளின் துணைகொண்டு விசாரிக்கப்படுவன என்ற இக் கொள்கையொன்றே, நம் நாட்டுச் சட்டமுறைக்குத் தெரிந்ததாகும். மற்றபடி, சில தனிப்பட்ட குற்றங்கள், சில தனிப்பட்ட நீதிமன்றங்

[1] Hunter v. Johnson (1884) 13 Q. B. D. 225.

களால்[1] மட்டுமே விசாரிக்கப்பட்டுத் தண்டிக்கப்படலாமென்ற கொள்கையானது, ஆங்கிலச் சட்டங்களால் அறியப்பட்டதொன்று ஆகும்.

தவறான முறையில் சிறைவைக்கப்பட்ட ஒருவர், சிறையினின்றும் விடுதலையடைந்தபின், தன்னைச் சிறை வைப்பதற்குக் காரணமாயிருந்தவர்மீது, குற்றவியல் (criminal) வழக்கைத் தொடர்ந்து, அவரை நீதிமன்றங்களின்முன் விசாரிக்கச் செய்யவும் அல்லது தனக்கு ஏற்பட்ட தீங்கிற்கேற்ற இழப்பீட்டுத் தொகையை நீதிமன்ற நடவடிக்கைகள்மூலம் பெறவும், ஒரு மனிதனுக்கு இங்கிலாந்தில் தரப்பட்டுள்ள உரிமையானது ஒரு பாதுகாப்பாகாது. சான்றாக, X என்பவர் A என்பவரைச் சிறை வைத்துள்ளார் எனக் கொள்வோம். A என்பவர் சிறையிலிருக்கும்வரை X-ன் மீது எந்த நடவடிக்கையும் எடுக்கமுடியாது. சிறையிலிருந்து வெளிவர முடியாது எனத் தெரியும்வரை, A என்பவர் தாம் விடுதலையடையக் கூடுமாயின் X-ன்மீது வழக்குத் தொடர்ந்து தண்டனையையோ, அபராதத்தையோ அவர்மீது சுமத்த முடியும் என்று நினைப்பதாலும் அறிவதாலும் ஒன்றும் பயனில்லை. A என்பவருக்கு முதலில் தேவையானது விடுதலையாகும். அவ் விடுதலை கிடைக்கும்வரையில் அதை அவரிடமிருந்து பறித்துக்கொண்ட எதிரியை எவ்வாறேனும் தண்டிக்க அவர்தம் இயலாது. வால்டேர் என்பார் சிறைக்குள் வாடிக்கொண்டிருந்தபோது, தாம் வெளியே போகமுடியுமானால் தம் எதிரிகளிடமிருந்து இழப்பீட்டைப் பெறமுடியும் என்பது அவருக்குத் தெரிந்திருக்குமானால், அதனால் அவருக்கு எவ்வித ஆறுதலும் ஏற்பட்டிருக்காது. அவர் சிறையினின்றும் வெளிப் போந்தால், அதனால் அவர்தம் எதிரிகள் தண்டிக்கப்படலாம்; அல்லது அன்னாரிடமிருந்து தக்க இழப்பீடுகளை அவர் பெறலாம் என்ற ஒரு நிலைமையானது, அவருக்கு உண்மையில் நன்மைக்குப் பதிலாகத் தீமையை விளைவித்திருக்கும் என்பதில் ஐயமில்லை. ஏனெனில், வெளியே வந்தால்தானே தம்மீது அவர் அவர் நடவடிக்கை எடுக்க இயலும் என்பதை அறிந்த அவர்தம் எதிரிகள், அவரை அவரது வாழ்நாளனைத்தும் சிறைக்கைதியாகவே வைத்திருக்க முயன்றிருப்பாரென்பது திண்ணம். எனவே, ஒருவரது சட்டரீதியான சுதந்தரத்தில் குறுக்கிடுசெய்வதைத் தண்டிப்பதால்மட்டுமே அவரது சுயேச்சைக்குத் தக்க பாதுகாப்பு ஏற்பட்டுவிடுமென்று கூறுவதற்கில்லை. சுதந்தரமானது நன்கு பாதுகாக்கப்பெற வேண்டுமானால், நாட்டின் சட்டங்கள், தனிமனிதரின் சுதந்திரத்தில் தலையிடுவோரைத் தக்கவாறு தண்டிக்க வழிசெய்வதோடு

[1] பண்டைய ஃபிரெஞ்சு முடியரசில், பெருங்குற்றம் செய்த பெரும் பிரமுகர்கள் தனிப்பட்டமுறையில் தண்டிக்கப்பட்ட ஒரு நிலையை இதனோடு ஒப்பிட்டு, இரு முறைகளுக்குமுள்ள வேற்றுமையை அறியவும்; அதோடு ஃப்ளஸியர் (Flecheir ) என்பார் எழுதிய, Memoires de Flechier sur les grands jours d' Auvergne, e 1665 (1856) என்ற நூலையும் பார்க்கவும்.

நிறுத்திக்கொள்ளாமல், சட்ட முறைமைக்கு மாறாகச் சிறைவைக்கப் படுபவர்கள் விடுவிக்கப்படுதற்கும் வழிவகுக்கவேண்டும். அதற்குத் தக்க உத்தரவாதத்தை அரசியலமைப்புச் சட்டம் வழங்கவேண்டும். அத்தகைய உத்தரவாதத்தை அளிப்பதற்கென்று ஏற்பட்டவைதான், மாண்புமிக்க உடலுரிமைச் சட்டமும், உடலுரிமைக் கட்டளையு மாகும்.

## II. உடலுரிமைக் கட்டளை[1] (Writ of Habeas Corpus)

உடலுரிமைக் கட்டளையானது தோன்றி வளர்ந்த வரலாற்றை விரித்துரைப்பதோ, அன்றி அதுபற்றி ஆக்கப்பட்ட சட்டங்களை ஒட்டிய தகவல்களனைத்தையும் தொகுத்துக் கூறுவதோ, நான் ஈண்டு நிகழ்த்தப்போகும் சொற்பொழிவுகளின் பொருள் வரம்புக்குப் புறம் பானவையாகும். உடல் உரிமைச் சட்டங்கள்பற்றியும், கட்டளைகள் பற்றியும் நுணுக்கமான தகவல்களை அறிய விரும்புவோர், சட்டவியல் பற்றிய சாதாரண பாடபுத்தகங்களைப் பார்க்கவேண்டுவது அவசியம். இங்கு என் நோக்கமெல்லாம், உடல் உரிமையானது, இங்கிலாந்தில் எங்ஙனம் உத்தரவாதமளிக்கப் பெறுகிறதென்பதைப் பொதுவான முறையில் விளக்குவதேயன்றி வேறன்று. ஆகவே, பின்வரும் விவரங்களை யான் முதலில் யாவரது கவனத்துக்கும் கொண்டுவர விரும்புகின்றேன். அதாவது, முதலாவதாக அக் கட்டளையின் இயல்பைப்பற்றியும், இரண்டாவதாக, உடல் உரிமைச் சட்டநிறுத்தம் என்று அழைக்கப் படும் (அவ்வளவு துல்லியமாக அல்ல) செய்கையால் விளையக்கூடிய திட்டவட்டமான பயன் என்ன என்பதைப்பற்றியும் இறுதியாக உடல் உரிமைச் சட்டத்தை நிறுத்திவைக்கும் சட்டத்துக்கும், இழப் பீட்டுச் சட்டத்துக்கும் (Act of Indemnity) உள்ள தொடர்பைப் பற்றியும் ஈண்டுக் கூறலாமென்றிருக்கிறேன். இவை அரசியலமைப்புச் சட்டத்தோடு மிக நெருங்கிய இணக்கமுடையவையாகும்.

### கட்டளையின் இயல்பு

சட்டக் கோட்பாடுகளைப்பற்றிய நுணுக்கங்களைத் தக்க சான்று களுடன் விளக்கிக்காட்டுவதில், சட்டப்பத்திரங்களுக்கு ஈடானவை எவையுமில்லை. எனவே, பின்வரும் உடல் உரிமைக் கட்டளையின் படி (copy) ஒன்றைக் கவனமாகப் பரிசிலனைசெய்வது நமக்குப் பெரிதும் பயன் தரும்.

[1] *விண்மீன் மண்டப நீதிமன்ற ஒழிப்புச் சட்டம்* (Star Chamber Abolition Act) 1641 ; s 8., *உடலுரிமைச் சட்டங்கள்*, 1679, 1816, 1862 ; *வேட், பிலிப்ஸ் என்போர்* (Wade and phillips) *எழுதிய, அரசியலமைப்புச் சட்டம்* (Constitutional Law) 5ஆவது வெளியீடு. 1955, பக். 370-476 ; ஃபார்ஸைத் (Forsyth) *எழுதிய 'அரசியலமைப்புச் சட்டம்பற்றிய வழக்குகளும் கருத்துகளும்'* (Cases and Opinions in Constitutional Law) (1869) *அத்* XVI.

'இறைவன் அருளால், கிரேட் பிரிட்டன் என்ற ஐக்கிய அரசுக்கும், அயர்லாந்துக்கும் அரசியாக வீற்றிருப்பவரும், சமயக்காவலருமான விக்டோரியா,

ஜெர்ஸி சிறையின் காவலரான J. K-.வுக்கும் சொல்லப்பட்ட தீவின் வைகவுண்ட் பிரபுவான J. C.-க்கும் வாழ்த்துடன் வழங்கும் கட்டளை. இதோ, நீங்கள் உங்களது கட்டுக்காவலில் நமது சிறையில் அடைத்து வைத்துள்ளதாகச் சொல்லப்படும், C. C. W. அல்லது அவர் வேறு எப் பெயரில் அறியப்பட்டிருப்பினும், அழைக்கப்பட்டிருப்பினும் அன்னாரது உடல், அவர் ஏன், என்றைக்குச் சிறைப்பட்டார் என்ற தகவல்களுடன், நம் வெஸ்ட்மின்ஸ்ட்டர் நீதி மன்றத்தில் அடுத்த ஜனவரி மாதம் 18ஆம் நாளன்று கொணர்ந்து, நம் முன் நிறுத்தும்படிக்கு ஆணையிடுகிறோம். அங்கே அவரைப் பற்றி எந்தப்படிக்கு நீதி மன்றமானது தீர்மானிக்கிறதோ, அந்தப்படிக்கு அவர் அவைகளுக்கெல்லாம் உட்படுமாறும் நாம் இக் கட்டளையை இடுகின்றோம். இதோ இக் கட்டளையைப் பெற்றுக்கொள்ளுமாறு பணிக்கிறோம். சான்றுளர் தாமஸ் டென்மன் பிரபுவின் முன்னிலையில், வெஸ்ட்மின்ஸ்டரில், நமது ஆட்சியின் எட்டாவது ஆண்டு டிசம்பர் மாதம் 23ஆம் நாளன்று வெளியிடப்பட்டது.

நீதி மன்றத்தால்
ராபின்ஸன்.[1]

C. C. W. என்பாரது வேண்டுகோளுக்கிணங்க,
R. M. R.

W. A. L., 7, கிரேஸ் இன்ஸ்கொயர், இலண்டன்
சொல்லப்பட்ட C. C. W.-இன் வழக்குரைஞர்.

இப்பத்திரத்தின் தன்மை என்ன என்பது அதைப்பார்த்த உடனே பளிரென்று தெரியக்கூடியதொன்று. இது ஒரு குறிப்பிட்ட வழக்கில், இராணியாரின் உயர்நீதி மன்றத்தால் இடப்பட்ட கட்டளையாகும். அதன்படி, சிறைப்பட்ட ஒருவரை நீதிமன்றத்தின் முன்னிலைக்குக் கொண்டு வரும்படி, சிறைப்பட்டவரது 'உடலைக் கொணர்ந்து நிறுத்தும் படி' என்றும் கூறலாம். அதனாற்றான் 'உடலுரிமைக் கட்டளை' எனப்படுகிறது. சிறைக்காவலர்மீது ஓர் ஆணை பிறப்பிக்கப்படுகிறது. அதன் மூலம் சிறைப்பட்டவர் ஏன் அங்ஙனம் சிறைசெய்யப்பட்டார் என்பதை

[1] காரஸ் வில்சனின் வழக்கு (1845, Carus Wilson's Case) 7 Q. B 984 பக் 988. இந்தக் குறிப்பிட்ட வழக்கில், கட்டளையானது சிறை செய்யப்பட்டவரது உடலை நீதிமன்றத்தின்முன் ஒரு குறிப்பிட்ட நாளில் கொணரும்படி சிறைக்காவலரை ஏவுகிறது. சாதாரணமாகக் கட்டளையைப் பெற்ற அக் கணமே சிறைப்பட்டவரை நீதிமன்றத்தின்முன் கொணரும்படி ஆணையிடுவதுதான் அதன் மரபாகும்.

அறிந்துகொள்ளவும், அதன்பின் சட்டமுறைப்படி அவரை நடத்தவும் ஒரு வாய்ப்பை நீதிமன்றத்துக்கு அளிக்கவேண்டும் என்பதும் அக் கட்டளையின் நோக்கமென்பது புலப்படுகிறது. இந்த நடவடிக்கை அனைத்தின் சாரம் இதுவே. அதாவது, உடல் உரிமைக் கட்டளையொன்றின் மூலமாக, சிறைவாய்ப்பட்ட ஒருவரைச் சிறையினின்றும் விடுவித்து, நீதிமன்றத்தின்முன் மெய்யாகவே கொண்டு வந்தபின், ஏன் அவர் சிறைசெய்யப்பட்டார் என்பதற்குரிய காரணத்தை அறிந்துகொள்ளலாம். காரணம் சரியானதாக இல்லாவிட்டால், சிறைப்பட்டவர் அக் கணமே விடுதலை செய்யப்படுவார். போதிய காரணமிருந்தால், சட்டப்படி என்னென்ன முறையில் அவர் நடத்தப்படவேண்டுமோ, அம் முறையில் அவர் நடத்தப்படுவார். சான்றாக, அவர் விரைவிலே விசாரணைக்குக் கொண்டுவரப்பட ஏற்பாடு செய்யப்படும்.

கட்டளையானது, சிறைப்பட்டவரது சொந்த விண்ணப்பத்தின் பேரிலோ, அன்றி அவரது சார்பாகசிற்கும் வேறொருவரது விண்ணப்பத்தின்பேரிலோ வெளியிடப்படலாம். அன்றி (சிறைப்பட்டவர் நடவடிக்கை எடுக்க இயலாதவராயிருப்பின்) அவர் சிறைப்பட்டது சட்டவிரோதமானது என நம்புகின்ற ஏதாவதொரு மனிதரின் விண்ணப்பத்தின் பேரிலும்கூட, அக் கட்டளையானது இடப்படலாம். உயர்தர நீதிமன்றமே அக் கட்டளையை வெளியிடுகிறது. விடுமுறைக் காலமாயிருந்தால், நீதிபதி ஒருவர் அதை வெளியிடலாம். ஆனால், ஒரு நீதிமன்றமோ அல்லது நீதிபதியோதான் அக் கட்டளையை எந்தச் சமயத்திலும் வெளியிட முடியும். அதுவும் சிறைப்பட்டவரது உரிமையானது தவறானமுறையில் பறிக்கப்பட்டுள்ளதென்பதை, அவரது வாக்கு மூலத்தைக்கொண்டே அறிந்துகொண்ட பின்னர்த்தான், அங்ஙனம் கட்டளையிடலாம். கண்டிப்பாகச் சொல்லப்போனால், இங்ஙனம் கட்டளையிடுவதானது 'தானாகவே வழக்கமாக நடைபெறுவதொன்று' என்று கருத இடமில்லை. ஏனெனில், கட்டளை பிறப்பிக்கப்படுமுன், சிறைவாசமானது சட்ட விரோதமாகவே நேர்ந்துள்ளது என்பதற்கு ஏதாவது காரணம் காண்பிக்கப்படவேண்டும். ஆனால், இத்தகைய கட்டளையைப் பெறுவது ஒவ்வொருவரின் 'உரிமையின் பாற்பட்டது' என்று கூறலாம். அதாவது இக் கட்டளையை வேண்டுகின்ற ஒருவர், உண்மையிலேயே தமது சுதந்தரத்தைச் சட்டவிரோதமானமுறையில் இழந்துள்ளார் என்பது உள்ளங்கை நெல்லிக்கனிபோல் தெளிவாகத் தெரியுமாயின், எந்தச் சமயத்திலும் நீதிமன்றமானது கட்டளையைப் பிறப்பிக்கலாம். அரசாங்க அதிகாரியாக இருப்பினும் அல்லது ஒரு தனிப்பட்ட மனிதராக இருப்பினும், யாவர்மீதும் இக் கட்டளையானது பிறப்பிக்கப்படலாம். ஆனால், அவர் இன்னொருவரைக் காவலில் வைத்திருப்பவராகவோ அல்லது வைத்திருப்பதாக எண்ணப்படுபவராகவோ இருக்கவேண்டும். கட்டளைக்கு எவராவது கீழ்ப்படிய மறுத்தால்

அவர் நீதிமன்றத்தை அவமதித்த குற்றத்துக்காக[1] விசாரணையின்றியே தண்டிக்கப்படலாம். பல சமயங்களில் குற்றமிழைக்கப்பட்டவருக்குக் குற்றமிழைத்தவர் பெரும் அபராதத்தொகையைச் செலுத்தவேண்டி வருவதுமுண்டு[2]. இவையனைத்தையும் பொதுப்படையான கூற்றுக் களில் சொல்லுவோமானால், அது பின்வருமாறு அமையும்: உயர்தர நீதிமன்றமும் அதற்குட்பட்ட கீழ்நீதிமன்றங்களும் உடல் உரிமைக் கட்டளையொன்றின்மூலமாகச் சட்டவிரோதமாகச் சிறைசெய்யப்பட்ட தாகக் கூறப்படும் எவரையும், தங்களது முன்னிலைக்கு கொண்டு வரும்படி செய்யும் உரிமை பெற்றவைகள். நீதிமன்றத்தின்முன் கொண்டுவரப்பட்ட பின்னர், சிறைசெய்யப்பட்டவர் எக் காரணத் துக்காக அங்ஙனம் சிறையிடப்பட்டாரென்பதை அம் மன்றமானது விசாரணை செய்யும். விசாரித்தபின். தனக்குச் சரியெனப்பட்டால், சிறைப்பட்டிருந்தவரை, அது அக் கணமே விடுதலை செய்துவிடலாம். எப்போதெல்லாம் ஒரு மனிதர் சட்ட விரோதமானமுறையில் தனது சுதந்தரத்தைப் பறிகொடுத்ததாகப் போதிய காரணங்களுடன் நீதிமன்றங் களில் முறையிட்டுக் கொள்கிறாரோ, அப்போதெல்லாம் இத்தகைய அதிகாரத்தைச் செலுத்தும் உரிமை நீதிமன்றத்திற்குண்டு. முறை யிட்டுக் கொள்பவர், குற்றமிழைக்கப்பட்டவரே யன்றி வேறு எவரா யிருப்பினும், இவ் வதிகாரத்தை நீதிமன்றங்கள் கையாளமுடியும்.

## உடலுரிமைச் சட்டங்கள்

உடலுரிமைக் கட்டளையைப் பெறுதற்கான உரிமையானது, மாண்புமிக்க 1679ஆம் ஆண்டு உடலுரிமைச் சட்டம்[3] ஏற்படுவதற்கு நெடுநாட்களுக்கு முன்னதாகவே, இங்கிலாந்தின் பொதுமைச் சட்டங் களில் இருந்து வந்திருக்கிறது. இருப்பினும் ஆங்கிலேயன் ஒவ்வொரு வனும் மேற்சொன்ன சட்டத்தின் அடிப்படையிலும், 1816 ஆம் ஆண்டில் ஏற்பட்ட உடலுரிமைச் சட்டத்தின் அடிப்படையிலுமே தனது உடலுரிமையானது பாதுகாக்கப்படுகிறது என்று நினைப்பது பலருக்கு வியப்பாக இருக்கலாம். அப்படிக் கருதிக்கொள்வது (நடை முறைக்கு ஏற்பப் பார்க்கப்போனால்) உண்மையில் சரியென்றேபடுகிறது. அதற்குக் காரணம் வருமாறு: 1679ஆம் ஆண்டுக்கு முன்னர் ஏதேதோ நியாயங்களையும் சாக்குப்போக்குகளையும் காட்டி, ஆட்சியா ளர்கள் உடலுரிமைக் கட்டளையானது, நடைமுறையில் பயன்படாத வாறு பார்த்துக்கொண்டு வந்தனர். அங்ஙனம் அக் கட்டளையானது பயன்

[1] The King v. Winton (1792) 5 T. R. 89; cf. *உடல் உரிமைச் சட்டம்* 1816 S. 2; *கார்னர்* (Corner) எழுதிய, '*இராணியாரின் உயர்தர நீதிமன்றத்தில் அரசாங்கச் சார்பில் கையாளப்படும் முறை*' (Practice of the Crown Side of the Court of Queen's Bench) 1844 என்ற நூலைப் பார்க்க.

[2] *உடல் உரிமைச் சட்டம்*, 1679. பிரிவு 4.

[3] *விண்மீன் மண்டப நீதிமன்ற ஒழிப்புச் சட்டம்*, 1641, 8ஆம் பிரிவைப் பார்க்கவும்.

படாதொழிய ஆட்சியாளர்கள் கையாளக்கூடிய பலவிதமான உபாயங்களையும் தடுக்கவேண்டியே உடலுரிமைச் சட்டங்கள் ஏற்பட்டன. நீதிபதிகள் மேற்சொன்ன கட்டளையைப் பிறப்பிக்காமல் இருக்கவும், அவசியமேற்பட்டால் சிறைசெய்யப்பட்டவரை விடுவிக்காமல் இருக்கவும் கடைப்பிடிக்கக்கூடிய உபாயங்களையும் அதே போலச் சிறைக்காவலரும் அல்லது சிறைப்பட்டவரைக் காவலில் வைத்திருக்கும் எவரும் அவரைக் காவலிலிருந்து விடுவிக்காமல் இருக்கக் கடைப்பிடிக்கக் கூடிய வெவ்வேறு தந்திரங்களையும் ஒருசேரத் தடுப்பதற்காகத்தான் மேற்சொன்ன உடலுரிமைச் சட்டங்கள் ஏற்பட்டன. இரண்டாம் சார்லஸ் காலத்தில் ஏற்பட்ட உடலுரிமைச் சட்டமானது, கிரிமினல் குற்றங்களுக்காகச் சிறைசெய்யப்பட்டவர்களுக்கே பொருந்துவதாகும். பின்னால் மூன்றும் சார்லஸ் காலத்தில் ஏற்பட்ட சட்டமானது, கிரிமினல் குற்றங்களுக்காகமட்டுமன்றி வேறுவகையான குற்றங்களுக்கும் பொருந்தும். ஆனால், அக் குற்றங்களின்மூலமாக ஒருவரது உரிமையானது பலவந்தமாகப் பறிக்கப்பட்டிருக்கவேண்டும்.

இவ் விருவகையான குற்றங்களைச் செய்தவர்களையும் நாம் தனித்தனியே எடுத்துக்கொண்டு ஆராய்வோம்.

## 1679ஆம் ஆண்டு உடலுரிமைச் சட்டம்

கிரிமினல் குற்றத்திற்காக ஒருவர் சிறையிடப்படுவதாக வைத்துக் கொள்வோம். சட்டப்படி அரசாங்கத்தார் வெளியிடப்படும் வாரண்ட் அல்லது பிடியாணை ஒன்றினலன்றி வேறுவகையில் அவர் சிறைசெய்யப் பட்டிருப்பாரானல், அவர் உடனே விடுதலையைப் பெறுவதற்கு உரிமை உடையவர். ஆனல், சட்டப்படி விடுக்கப்படும் பிடியாணை ஒன்றின் மூலமாக அவர் சிறைப்பட்டிருந்தால், அவரை உடனே விசாரணைக்குக் கொண்டுவருவதே அதன் நோக்கமாக இருக்கும். இந்தக் கட்டத்தில் அவருடைய நிலைமையானது அவரின்மீது சாட்டப்பட்டுள்ள குற்றத்தின் இயல்புக்கேற்ப மாறுபடும். ஒழுங்குதவறிய குற்றங்கள் (misdemeanours) என்று சொல்லப்படுகின்ற சாதாரணக் குற்றங்கள் அவர் மீது சாட்டப்பட்டிருந்தால், பிணை கொடுப்பதன்மூலம்[1] அவர் உடனே தனது விடுதலையைப் பெறலாம். வேண்டும்போது தான் சிறைக் காவலுக்கு மீண்டும் உட்படுவதாயும் தன்மீது சாட்டப்பட்ட குற்றங்களுக்காக விசாரணை நடைபெறும்போது தான் அவ் விசாரணைக்கு வருவதாயும் தக்க பிணையாட்களைக்கொண்டு உறுதி மொழியளித்தால் மட்டுமே அவருக்குச் (சட்ட இயல் கலைச்சொற்களைப் பயன்படுத்திக்

[1] *பிணையத்தைப்பற்றியறிய* ஹால்ஸ்பரி (Halsbury) என்பாருடைய இங்கிலாந்தின் சட்டங்கள் (Laws of England) என்ற நூலை (மூன்றாவது வெளியீடு, தொகுதி 10 1955-பக்கம் 373-37ஆம். வெட், பிலிப்ஸ் (Wade and Phillips) ஆகியோர் எழுதிய அரசியலமைப்புச் சட்டம் (Constituonal Law) என்ற நூலை (ஐந்தாவது வெளியீடு, 1955, பக்கம் 376 பார்க்கவும்.

கூறும்போது) பிணையத்தின்பேரில் (bail) அல்லது ஜாமீனில் விடுதலை பெற உரிமையுண்டு. இதற்குமாறாக தேசதுரோகம் (treasons) மாபெருங் குற்றங்கள் (felonies) போன்ற குற்றங்களுக்காக ஒருவர் சிறையிடப்பட்டிருந்தால், அவருக்குப் பிணையத்தின்பேரில் விடுதலை பெறுகின்ற உரிமை கிடையாது. கூடிய விரைவில் விசாரணைக்குக் கொண்டு வரப்படவேண்டும் என்று கோருவதற்குமட்டுமே அவர்களுக்கு உரிமையுண்டு. உடலுரிமைச் சட்டமானது தக்க முறையில் செயல்படாதபடி அதை மழுப்பிவிடுவதற்கு அதிகாரிகளுக்கு இதில் வழியுண்டு. சிறையிடப்பட்ட ஒருவர் எந்தப் பிடியாணைமூலம் சிறையிடப்பட்டாரோ, அந்த ஆணையானது சட்டப்படி செல்லுமா செல்லாதா என்பதை நீதிமன்றத்தார் நன்கு பரிசீலனைசெய்யாமல் விட்டு விடுவதாலும், ஆணையானது செல்லுபடியானதல்ல என்று தெரிந்தபின் சிறை செய்யப்பட்டவரை விடுதலைசெய்யாமல் விடுவதாலும் அல்லது சட்டப்படியே ஒருவர் சிறைசெய்யப்பட்டுள்ளார் என்பதைத் தீரவிசாரித்து அறிந்து கொண்டபின் அவரது குற்றத்தின் தன்மைக்கேற்ப அவரைப் பிணையத்தின்பேரில் விடுதலை செய்யாமலிருப்பதாலும் உடலுரிமைச் சட்டத்தில் ஏற்படக்கூடிய நற்பலன்களைத் தடுத்துவிட முடியும்.

இவ்விதம் அதிகாரிகள் பலவிதமான உபாயங்களாலும் உடலுரிமைச் சட்டத்தைப் பயனற்றதொன்றாகச் செய்துவிடுவதையும் அதன்மூலம் நீதி பொய்த்துப்போவதையும் தடுக்கவே, மேற்கண்ட சட்டம் வழிசெய்கிறது. நாட்டின் பொதுமைச் சட்டங்களும் பாராளுமன்றச் சட்டங்களும் சேர்ந்து, கிரிமினல் குற்றங்களுக்காகச் சிறைசெய்யப் படுவர்களுக்கு என வகுத்துள்ள சட்டத்தின் சாரம் வருமாறு: அத்தகைய கிரிமினல் குற்றவாளி எனக் கருதப்பட்ட ஒருவரைக் காவலில் வைத்திருக்கும் சிறையதிகாரி, நீதிமன்றம் ஆணையிட்டால், சிறையிடப் பட்டவரை உடனே நீதிமன்றத்தின்முன் கொணர்ந்து நிறுத்து வதோடுமட்டுமன்றி, அவர் சிறைவைக்கப்பட்டிருந்ததற்கான காரணத் தையும் காட்டவேண்டிய பொறுப்புடையவராவர். போதுமான காரணம் காட்டப்படவில்லையானால், சிறையிடப்பட்டிருந்தவர் உடனே விடுதலை செய்யப்படவேண்டியவராவர். போதுமான காரணம் காட்டப்பட்டிருந்தால், அவர்மீது சாட்டப்பட்ட குற்றத்தின் தன்மைக் கேற்ப நீதிமன்றத்தார் அவரை நடத்தவேண்டும். செய்யப் பட்ட குற்றம் சிறியதாயிருந்தால், விசாரணை ஆரம்பிக்கும்வரை தன்னைப் பிணையத்தின்பேரில் விடுதலைசெய்யுமாறு பொதுவாக வற்புறுத்திக்கூற அவருக்கு உரிமையுண்டு. தேசத்துரோகம், கொடுங்குற்றம்போன்ற பெருங்குற்றங்களாக இருந்தால், அவர் சிறைவைக்கப்பட்டபின் கூட்டப்படுகின்ற முதல் நீதிமன்றக் கூட்டத் திலேயே தன்னை விசாரிக்கும்படி வற்புறுத்தவும் அவருக்கு உரிமை

உண்டு. ஒருவேளை அங்ஙனம் கூடியவிரைவில் விசாரிக்கப்படுவது சற்றே ஒத்திப்போடவேண்டிய கட்டாயம் நேர்ந்தால், பிணையத்தின் பேரில் தன்னை அப்போதைக்கு விடுதலைசெய்யும்படி கோர அவருக்கு உரிமையுண்டு. அரசாங்கத்தின்சார்பில் வருகின்ற சாட்சிகள் நீதிமன்றத்திற்கு வர இயலாமற்போன காரணத்தால், விசாரணையானது ஒத்திப்போடப்பட்டால்மட்டுமே ஒருவர் மேற்சொன்ன உரிமையைக் கொண்டாடக்கூடும். அவரைச் சிறைப்படுத்திப்பின் கூட்டப்படுகின்ற இரண்டாவது நீதிமன்றக் கூட்டத்திலும் அவர் பிணையம் இல்லாமலேயே தமது விடுதலையைக் கோரலாம். ஆகவே, இதனுலெல்லாம் விளைகின்ற முடிந்த பயன் யாதெனில், உடலுரிமைச் சட்டமானது அமலில் இருக்கும்போது, கிரிமினல் குற்றத்திற்காகச் சிறைசெய்யப்பட்ட ஒருவரை, நீண்ட நாட்களுக்கு அரசாங்கமானது சிறையில் அடைத்துவைக்க இயலாது என்பது தான் ஆகும். ஏனெனில், பிணையத்தின்பேரில் தன்னை விடுதலை செய்யும்படி வற்புறுத்திக் கோரவும் அல்லது விரைவில் தன்னை விசாரணைக்குக் கொண்டுவரும்படி வற்புறுத்தவும் அன்னருக்குச் சட்டரீதியான வழிகள் உள்ளன.

## 1816ஆம் ஆண்டு உடலுரிமைச் சட்டம்

கிரிமினல் குற்றத்திற்காகவன்றி, வேறுவகைக் குற்றத்திற்காக ஒருவர் சிறைவைக்கப்பட்டிருப்பாரேயானுல், அவர் தம் உடலுரிமையைப் பாதுகாத்துக்கொள்ள வழிவகை செய்வதுவே 1816ஆம் ஆண்டு உடலுரிமைச் சட்டத்தின் நோக்கமாகும். அச் சட்டப்படி ஒருவர் மேற்சொன்னவகைக் குற்றத்திற்காகச் சிறைவைக்கப்பட்டது சட்டப்படி நியாயமா இல்லையா என்பதை உடனடியாகத் தெரிந்து கொள்ளலாம். சிறைப்பட்டது நியாயம் இல்லையெனத் தெரிந்தால், உடனே விடுதலை பெறலாம். ஒருவர், ஆங்கிலேயராக இருந்தாலும் அல்லது வெளிநாட்டினராக இருந்தாலும் சட்டவிரோதமாகச் சிறைவைக்கப்பட்டு, அதனுல் அவர்தம் விடுதலையை இழந்துவிட்டதாக, நீதிமன்றத்தில் யாரேனும் முறையிட்டுக்கொண்டால், உடனே நீதிமன்றமானது ஒரு கட்டளையைப் பிறப்பிப்பதன்மூலம், சிறைப்பட்டவரை நீதிமன்றத்தின்முன் கொணரவும், அவர் குற்றமற்றவர் என்று தெரிந்தால், அவரை உடனே விடுதலை செய்யவும் முடியும். சான்ருக, குழந்தையொன்று பலவந்தமாகப் பெற்றோர்களிடமிருந்து பிரிக்கப்பட்டுவிட்டதற்காகவும்[1] சாதாரண நிலையிலுள்ள ஒருவர், தவருகப்

[1] The Queen v. Nash (1883) 10 Q.B.D. 454; and cf. Re Agar-Ellis (1883) 24 Ch. D 317; Barnardo v. Ford (1892) A.C. 326; Barnardo v. Mc Hugh (1891) A.C. 388, The Queen v. Jackson (1891) 1 Q.B. 671; Cox v. Hakes (1890) 15 App. Cas. 506; *உடலுரிமைச் சட்டத்தின் உதவியின்றியே குழந்தைகளைக் காப்பதற்கு, சான்ஸரி நீதிமன்றம் பெற்றுள்ள அதிகாரத்தை* இதனுடன் ஒப்பிட்டுப் பார்க்கவும்.

*பிரிவி கௌன்சில் நீதிமுறைக் குழுவினிடம் நேர்முறையில் செய்துகொள்வது பற்றி அறிய, நைஜீரிய அரசாங்கத்திற்கும் எஸ்யூக்பாயி எலிகோவுக்கும்* (Eshugbayi Eleko) *நடைபெற்ற வழக்கை* (1928) A.C. 459-*ஐப் பார்க்கவும்.*

பைத்தியம் பிடித்தவரைப்போன்று நடத்தப்பட்டுச் சிறைப்படுத்தப் பட்டதற்காகவும், பெண் துறவி ஒருவர் கன்னியா மடத்திலிருந்து வெளியே செல்லமுடியாமல் தடுக்கப்பட்டதற்காகவும், தங்கள் தங்களது உடலுரிமை பறிக்கப்பட்டுப்போய்விட்டதாகக் கூறிக் குற்ற மிழைக்கப்பட்டோர், நீதிமன்றங்களிடம் முறையிட்டுத் தக்க நிவாரணங் களைப் பெறலாம். சுருங்கக் கூறுமிடத்து, தக்க காரணங்களுடன் ஓர் ஆண் அல்லது பெண் அல்லது ஒரு குழந்தை ஆகியோரின் சுதந்தர மானது பறிக்கப்பட்டுவிட்டது என்பதை யாரேனும் காட்டக்கூடு மானால், நீதிமன்றமானது, உடனே உடலுரிமைக் கட்டளை ஒன்றைப் பிறப்பித்துச் சிறைக்காவலில் வைக்கப்பட்டிருக்கும் நபரை, நீதிபதி களின்முன் கொணரச் செய்யவும், கொணர்ந்தபின் சட்ட முறைமை யின்றி அவர் சிறைவைக்கப்பட்டுவிட்டவர் எனத் தெரிந்தால் அவரை விடுவிக்கவும் அதிகாரம் பெற்றுள்ளது. 1816ஆம் ஆண்டுவரையில் கிரிமினல் அல்லாத வேறு குற்றங்களைச் செய்தவர்களுக்கு இத்தகைய உரிமைப் பாதுகாப்புகள் அவ்வளவாக இல்லையெனலாம். ஏனெனில், உடலுரிமைக் கட்டளையைப் பெறுவதற்கான சாதனங்கள் 1816ஆம் ஆண்டுக்குமுன்னர் அவ்வளவு நிறைவு[1] பெறவில்லை. அல்லது முழு வளர்ச்சி எய்தவில்லை. 1679ஆம் ஆண்டு உடலுரிமைச் சட்டத்தின் சீரிய பயனைக் கிரிமினல் அல்லாத குற்றங்களால் விளைந்த வழக்குகளும் பெறும்படி செய்ததே, 1816ஆம் ஆண்டுச் சட்டத்தால் ஏற்பட்ட முக்கிய விளைவாகும் எனலாம்.

ஆகவே, இன்றைய இங்கிலாந்தில் உடற் சுதந்தரமானது, சட்டத்தின்மூலமாக எவ்வளவு முடியுமோ, அவ்வளவு நிறைவாகப் பாதுகாக்கப்படுகிறது. அச் சுதந்தரத்தை நன்கு நடைமுறையில் அடைந்து அனுபவிப்பதற்கான உரிமையானது, இங்கிலாந்தில் முற்றிலும் ஒப்புக்கொள்ளப்படுகிறது. அவ் வுரிமையில் எவரேனும் தலையிட்டால், அவருக்குச் சிறைத்தண்டனை கண்டிப்பாகக் கிடைக்கும். அல்லது பெரும் அபராதம் அவர்மீது விதிக்கப்படும். ஒருவர் கிரிமினல் குற்றத்தைச் செய்திருந்தாலும் சரி, அல்லது சாதாரணக் குற்றத்தைச் செய்திருந்தாலும் சரி, அவர் சிறைப்படுத்தப்பட்டது அநீதியானது

[1] 1816ஆம் ஆண்டு ஏற்பட்ட உடலுரிமைச் சட்டமானது, இறுதியாக நிவர்த்தித்த இந்தக் குறையானது, உண்மையில் அவ்வளவு பெரியதொரு குறை யன்று. நடைமுறையில் அதனால் ஏற்பட்ட பயன் மிகச் சிறியதேயாகும். ஏனெனில், நீதிபதிகள் 1679ஆம் ஆண்டு உடலுரிமைச் சட்டத்தையே மேலும் விரிவாகப் பயன்படுத்திச் சட்டவிரோதமாகச் சிறைவாசம் நேர்ந்ததால் ஏற்பட்ட எல்லா வழக்குகளையும் விசாரித்துவந்தனர். பாராளுமன்றச் சட்டத்தின் அடிப்படையில் அல்லது நாட்டின் சாதாரணப் பொதுமைச் சட்டத்தின் அடிப் படையில், நீதிமன்றங்களால் வெளியிடப்பட்ட உடலுரிமைக் கட்டளைகளுக்கு மக்கள் கீழ்ப்படியும்படி நீதிபதிகள் வற்புறுத்திவந்தனர். 3 Bl., Comm. 138.

---

கிரிமினல் வழக்கு இல்லாமல் வேறுவகைக் குற்றங்களுக்காக மேல்முறையீடு செய்வதுபற்றி அறிய, ஆமண்ட் (Amand) என்பாருக்கும், நெதர்லாந்து அரசாங்கத்தின் உள்துறைச் செயலாளரும் பாதுகாப்பு அமைச்சராய் இருந்த வருக்குமிடையே ஏற்பட்ட வழக்கையும் பார்க்கவும். (1943) A.C. 147.

என்று சிறிதே ஐயப்பாடு தோன்றினாலும்கூட, அவர் தமக்குற்ற இன்னலுக்கேற்ற நியாயத்தைப்பெற, இங்கிலாந்தில் வழிவகை செய்யப் பட்டுள்ளது. அநீதி இழைக்கப்பட்டவருக்குச் சாதகமாக நடவடிக்கை எடுக்க யாரேனும் ஒருவர் முன்வருவாரேயானல், அவரது வழக்கானது, முறையே விசாரிக்கப்படுமென்பது திண்ணம். அத்துடன் விசாரிக்கப் பட்டவர் தவருகத் தீங்குற்றிருப்பாரேயானல், தமது விடுதலையை மீண்டும் பெறமுடியும் என்பது உறுதி. நாம் ஏற்கெனவே எடுத்துக் காட்டியுள்ள சான்றினை மீண்டும் எடுத்துக்கொண்டு, ஒருகணம் பார்ப்போமாக. பாரிசில் நடத்தப்பட்டதுபோன்று, வால்டேர் எனும் அறிஞர் இலண்டனில் நடத்தப்பட்டிருப்பாரேயானல், வெகு விரை விலேயே அவர்தம் விடுதலையை மீட்டுக்கொண்டிருப்பார் என்பது மிக மிகத் திண்ணமாகும். ஆனல், அதற்காக அவர் இன்றைய மூன்றும் ஜார்ஜ் காலத்து உடலுரிமைச் சட்டத்தின்படி, எடுத்திருக்கக்கூடிய நடவடிக்கைகளைவிட, மிகக் கடினமான நடவடிக்கைகளையே 1726ஆம் ஆண்டு எடுத்திருக்கக்கூடும் என்பதில் ஐயமில்லை. இருப்பினும் அவர் வாழ்ந்த காலத்திலுங்கூட, அவர்தம் நண்பர்களில் யாரேனும் ஒருவர் முயற்சி எடுத்திருந்தாலும் சட்டத்தை அவரால் அமல் நடத்தியிருக்க முடியும். 1772ஆம் ஆண்டில் ஜமாய்க்கா தீவிற்குப்[1] போவதற் காகத் தேம்ஸ் நதியில் தங்கியிருந்த கப்பல் சிறையொன்றில் அடை பட்டுக்கிடந்த, ஜேம்ஸ் சாமர்செட் என்ற அடிமை ஒருவர், உடலுரிமைச் சட்டத்தின் துணைகொண்டு தமது உடலுரிமையை அடைந்தது எவ்வளவு எளிதாயிருந்ததோ, அவ்வளவு எளிதாகவேனும் வால்டேரை விடுவித்திருக்கக்கூடுமென்பதில் ஐயமில்லை.

உடலுரிமைக் கட்டளையின் வரலாறு முழுவதையும் நாம் பார்க்கும் போது, இங்கிலாந்தின் அரசியலமைப்பில் சட்ட நிவாரணங்களுக்குப் பெரிதும் முதலிடம் அளிக்கப்பட்டுவந்தமை நன்கு தெரியவரும். அதாவது, சட்டரீதியான உரிமைக்குத் தக்க பாதுகாப்பளிக்கவும் அதன் மூலம் வெறும் பெயரளவில் இருந்த ஓர் உரிமையை, நடைமுறையில் உண்மையிலேயே பயன்படும் ஓர் உரிமையாக மாற்றியமைக்கவும் கடைப்பிடிக்கப்படவேண்டிய முறைகளுக்கு, இங்கிலாந்தில் எங்ஙனம் அதிகம் முக்கியத்துவம் கொடுக்கப்பட்டு வந்ததென்பதும் தெள்ளிதின் புலப்படும். உடல் உரிமைச் சட்டங்கள் என்பன, அடிப்படையிலேயே நடைமுறைச் சட்டங்களேயன்றி (procedure acts) வேறல்ல. ஏற்கெனவே இருக்கின்ற ஒரு முறையைத்தான் அது சிறிது வளப் படுத்தி அமைத்துள்ளதாகக் கூறலாம். யாவராலும் ஒப்புக்கொள்ளப் பட்டுள்ள உடலுரிமையினை நடைமுறையில் அமல் நடத்திவந்த சட்ட நிறுவனங்களுக்குத் துணைநின்று அவற்றை இன்னும் நல்லமுறையில் செயல்படுமாறு செய்வதே அதன் நோக்கமாகும். வழக்குரைஞர்களின்

1. சாமர்செட் வழக்கு, (Sommersett 's Case) 1772; 20 St. Tr. 1.

ஆதரவின்பேரில் ஏற்படுகின்ற சட்டங்கள், பொதுவாகக் காணப்படுவதுபோன்றே. இச் சட்டமும் நடைமுறையில் ஏற்படுகின்ற ஒரு சில சிக்கல்களைத் தீர்ப்பதற்காக ஏற்பட்டவையேயன்றி வேறல்ல. எனவேதான், இரண்டாம் சார்லஸ் காலத்து ஏற்பட்ட உடல் உரிமைச் சட்டமானது, பெரிதும் குறைபாடுள்ளதாயும் மிகக்குறுகிய அளவில் பயன்படத்தக்கதாகவும் இருந்தது. சட்ட விரோதமாகச் சிறையிடப்பட்டவரை வெளிவிடுவிக்கும் உரிமையைப் பெறுவதற்கான வழிமுறைகள் நன்கு செம்மையடைய, ஆங்கிலேயர்கள் ஏறக்குறைய ஒன்றரை நூற்றாண்டுக்காலம் காத்திருக்க நேர்ந்தது. ஆனால், அடிப்படை உரிமையொன்றை வழக்குரைஞர்களின் பார்வையோடு அணுகுகின்ற இம் முறையில் பல குறைகள் இருந்தபோதிலும், அதில் இருக்கக்கூடிய ஒரே சிறப்பு என்னவெனில், சரியான ஒரு காரியத்துக்காகச் சட்டமானது பயன்படுத்தப்படுகிறது என்பதேயாகும். உடல் உரிமையானது நாட்டில் நிலவுகின்றது என்று கூறிவிடுவது எளிது. ஆனால், அதில் இலாபம் ஒன்றுமில்லை. அவ் வுரிமையை நடைமுறையில் அமல் செய்வதுதான் உண்மையில் கடினமானதாகும். இக் கடினமான பணியையே நம்நாட்டு உடல் உரிமைச் சட்டங்கள் நாள்தோறும் செய்துவருகின்றன. அதன் விளைவாக ஆங்கிலேயருடைய சுதந்தரமானது, உரிமைகளைப்பற்றிய அறிவிப்பு ஒன்றை வெளியிட்டுள்ள, பிற நாடுகளில் காணப்படுவதைவிடச் சிறந்தமுறையில் பாதுகாக்கப்படுகின்றன. வெளிநாடுகளில் பெரிதும் பறைசாற்றப்படுகின்ற 'மனிதனின் உரிமைகள்' பற்றிய அறிவிப்புப்போன்ற பத்திரங்களைவிட, நம் நாட்டு உரிமைச் சட்டங்கள் உண்மையில் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தவை என்று ஒருவர் துணிந்து கூறலாம். அதோடு நம் நாட்டிலே ஏற்பட்டுள்ள உரிமை விண்ணப்பம், உரிமைகள் மசோதா போன்ற புகழ்மிக்க சட்டப்பத்திரங்களைக் காட்டிலும்கூட, அவை பெரிதும் முக்கியத்துவம் வாய்ந்தவை என்றும் கூறலாம். அதே சமயத்தில் இந்த உரிமைப் பத்திரங்களும் உடல் உரிமைச் சட்டங்களும் சேர்ந்து, நம் நாட்டு அரசியலமைப்பானது நீதிபதிகளால், ஆக்கப்பட்டதொரு, சட்டம்[1] என்பதை நமக்கு நன்கு புலப்படுத்துகின்றன என்பதும் உண்மை.

## நீதிபதிகளின் அதிகாரத்தை உடலுரிமைக் கட்டளையானது பாதிக்கும் விதம்

ஆங்கில அரசியலமைப்பைத் திறனாய்கின்ற ஒவ்வொருவரும், உடல் உரிமைச் சட்டங்கள் குடிமக்களின் சுதந்தரத்தை எங்ஙனம் பாதுகாக்

[1] 1804ஆம் ஆண்டு ஜெர்மானியப் பேரரசு அமைப்போடு, (பிரிவுகள் 60-63) ஒப்பிடவும். அதனபடி அரசாங்கமானது, சட்டமுறைமையன்றி மக்களைச் சிறைப்படுத்துவதைத் தடுக்கின்ற அதிகாரமானது, செனட் மன்றக் குழு ஒன்றுக்குத் தரப்பட்டுள்ளது. ப்ளோவார்டு (Plouard) எழுதிய, Les Constitutions françaises (1871-1876), என்ற நூலில் பக்கம் 161 பார்க்கவும்.

கின்றன என்பதை நன்கு உணர்ந்துள்ளனர். ஆனால், அவர்கள் நன்கு கவனியாமல் விட்டுவிட்ட உண்மை ஒன்றுண்டு. உண்மையில் அது திறனாய்வாளர்களால் கூர்ந்து கவனிக்கப்படத் தக்கதாகும். உடலுரிமைக் கட்டளையை வெளியிடுகின்ற உரிமையானது, அவ்வப்போது பாராளுமன்றச் சட்டங்களால் நன்கு வலிவுறுத்தப்பெற்று, நீதித் துறைக்கும் நிர்வாகத்துறைக்குமுள்ள தொடர்பை எங்ஙனம் முழுமையாகத் தீர்மானிக்கிறதென்பதுவே அவ் வுண்மையாகும். இக் கட்டளையை அமல் நடத்தும்போது, நீதிமன்றமானது நிர்வாகத்தின் செயல்களைக் கட்டுப்படுத்த நேர்ந்துவிடுகிறது. உரிமைக் கட்டளைக்குப் பணியும்படி நிர்வாக அதிகாரிகள் வற்புறுத்தப்படுகின்றனர். கட்டளை பிறப்பிக்கப்பட்ட உடன், சிறையதிகாரிகள் சிறைப்பட்டவரைத் தற்காலிகமாக விடுவிக்க வேண்டியுள்ளது. பின்னர் நீதிமன்றத்தார் அவரை நிரபராதி எனத் தெரிந்தால், நிரந்தரமாகவும் விடுதலை செய்து விடலாம். அப்படி விடுதலை செய்வதன்மூலம் அரசாங்கமும், அதன் ஊழியர்களும் சட்டத்துக்குப் புறம்பானமுறையில் எவரையும் தண்டிக்க முடியாதபடி நீதிமன்றம் செய்துவிடுகிறது. நீதிபதிகள் பார்த்து எங்ஙனம் விளக்கம் கூறுகின்றார்களோ, அதன்படியே சட்ட மென்பது ஏற்படுவதால், சட்டத்துக்குக் கீழ்ப்படியும் நிர்வாக அதிகாரிகள், ஒருவகையில் நீதிபதிகளுக்கு அல்லது நீதிமன்றங்களுக்குப் பணிவதாகவே ஆகிவிடுகிறது. இங்ஙனம் நீதிபதிகள் நேர்முகமாக இல்லாவிடினும் மறைமுகமாக, ஆனால் உண்மையிலேயே நிர்வாகத் தினரின் செய்கைகளைக் கட்டுப்படுத்துகின்றனர்; அல்லது மேற் பார்வையிடுகின்றனர் எனக் கூறலாம். அரசாங்கம் செய்கிற ஒவ்வொரு காரியத்தையும் நன்கு பரிசீலனை செய்து, அது சட்டத்துக்கொவ்வாத தாயிருந்தால் அதை ரத்துசெய்கின்ற அதிகாரத்தையும் நீதிமன்றம் பெற்றுள்ளது. இவ் வதிகாரமானது. நடைமுறையில் செயல்படுத்தப் படாததால், வழக்கிழந்து போனதொன்றன்று. அடிக்கடி இவ் வதிகார மானது, நம் நாட்டில் செலுத்தப்பட்டு வந்ததொன்றாகும், மிகமிக முக்கியமான காரியங்களிலெல்லாம் இது பயன்படுத்தப்பட்டுள்ளது. இத்தகைய அதிகாரமொன்று நீதிமன்றங்களுக்கு உண்டு என்ற எண்ணமே, நிர்வாகத்தின் அத்துமீறிய செயல்களைக் கட்டுப்படுத்தப் போதுமானதாயுள்ளது. உடலுரிமைக் கட்டளையின்மூலம் 'நீதி நிறுவனமானது' (அமெரிக்க முறையில் கூறுவோமானால்) எங்ஙனம் நிர்வாகத்தின் செயல்களைக் கட்டுப்படுத்த முடியும் என்பதை ஓரிரு சான்றுகளைக்கொண்டு நன்கு விளக்கலாம். 1839 ஆம் ஆண்டில் தேசத்துரோகக் குற்றத்துக்காக நாடுகடத்தப்பட்ட ஒரு சில கனடியக் கலகக்காரர்கள், தங்கள் தண்டனையை அனுபவிப்பதற்காக வான் டய மன்ஸ்லாந்து என்னும் தீவைநோக்கிப் பயணம் போய்க்கொண்டிருந் தனர். வழியில் அவர்களது கப்பல் லிவர்ப்பூல் துறைமுகத்தில் நின்றது. தக்க காவலுடன் அக் கலகக்காரக் கைதிகள் கப்பலில் சிறைவைக்கப்

பட்டிருந்தனர். அவர்கள் லிவர்ப்பூலுக்கு வந்திருப்பதை அறிந்த அவர்களின் நண்பர்களில் சிலர், அவர்கள் நாடுகடத்தப்படுதற்கு ஏதுவாயிருந்த நீதிமன்றத் தீர்ப்பானது, சட்டப்படி செல்லாதது என்று நீதிமன்றத்தாரிடம் முறையிட்டுக்கொண்டார்கள். இம் முறையீட்டுக்குச் செவிசாய்த்து நீதிமன்றத்தாரும் உடல் உரிமைக் கட்டளையொன்றைப் பிறப்பித்தனர். அதன் விளைவாகக் குற்றவாளிகள் சிறையினின்றும் விடுவிக்கப்பட்டு, நிதி நீதிமன்றத்தின் (Court of Exchequer) முன் விசாரணைக்குக் கொண்டுவரப்பட்டனர். விசாரணையும் நடைபெற்றது. குற்றவாளிகளின் நிலைமை முழுவதையும் நன்கு ஆராய்ந்தபின் நீதிமன்றத்தார், அவர்கள் சிறைப்பட்டது சட்டப்படி நியாயமே என்று தீர்ப்பளித்தனர். ஆனால், ஒருவேளை நீதிமன்றத்தாரின் தீர்ப்பு அதற்கு மாறாக இருந்திருக்குமேயானால், அக் கன்னடியர்கள் அக் கணமே விடுவிக்கப்பட்டிருப்பார்கள்.[1] 1859 ஆம் ஆண்டில் இந்தியாவில் பணிபுரிந்துவந்த ஆங்கில அதிகாரி ஒருவர் கொலைசெய்த குற்றத்திற்காக நான்கு ஆண்டுகள் சிறைத்தண்டனை விதிக்கப்பெற்றார். பின்னர் அவர் அத் தண்டனைக் காலத்தை முற்றிலும் கழிப்பதற்காக இராணுவக் காவலுடன் இங்கிலாந்துக்கு அனுப்பப்பட்டார். அவர் அங்ஙனம் இந்த நாட்டில் அடியெடுத்துவைக்க அனுமதித்த கட்டளையானது, அரசியல் மரபுப்படி முறைதவறியதாகும். எனவே, உடலுரிமைக் கட்டளை ஒன்றன்மூலம் அவர் இராணியாரின் உயர்தர நீதிமன்றத்தின்முன் கொண்டுவரப்பட்டபொழுது, அரசியல் மரபுக்கு ஒவ்வாத முறையில் அவர் கைதுசெய்யப்பட்டார் என்ற ஒரே காரணத்தின்பேரில் விடுதலை அளிக்கப்பட்டார்.[2] நிர்வாக காரியங்களில் நீதிமன்றங்கள் தலையிடுகின்ற நிகழ்ச்சிக்குச் சான்றாக, அரசாங்கமானது கட்டாயமாக ஆள் சேர்க்கும் பணியில் ஈடுபடும்போது, ஏற்படுகின்ற வழக்குகளைக் காட்டலாம். இத்தகைய வழக்குகளில் உடல் உரிமைக் கட்டளையின் மூலமாக நீதிமன்றத்தின்முன் ஆட்கள் கொணரப்படும்போதெல்லாம் நீதிமன்றங்கள் அவ் வாட்கள் கட்டாயமாகக் கைப்பற்றப்பட்டது சட்டபடி நியாயமா, அல்லவா என்பதை, அடிக்கடிஆராய்வதையும், அது நியாயமாய் இருந்தால் அங்ஙனம் கைப்பற்றும் உரிமையை அரசாங்கங்கள் எவ்வளவுதூரம் செலுத்தமுடியும் என்பதை அவைகள் தீர்மானிப்பதையும் காணலாம். இக் குறிப்பிட்ட நிகழ்ச்சியில் (இது முற்றிலும் தனிப்பட்டதொரு நிகழ்ச்சியாகும்) நீதிபதிகள் அரசாங்கத்தின் தனிச் சிறப்பு உரிமையையும், எதேச்சாதிகாரத்தையும் ஆதரிக்கும்வகையில் நடந்துகொண்டார்கள் என்றாலும், அவ் வதிகாரமானது நாட்டின் மரபுகளும் அல்லது பாராளுமன்றச் சட்டங்களும்.[3] இடமளிக்கும்

[1] கன்னடியச் சிறைக் கைதிகளைப்பற்றிய வழக்கு, (1839) 5 M. & W. 32.

[2] In re Allen (1860) 30 L.J. (Q.B.) 38.

[3] கடற்படைக்குக் கட்டாயமாக ஆள் சேர்ப்பதுபற்றிய வழக்குகளில் வருகிற உடலுரிமைக் கட்டளைகளின் வகைகளை அறிய பின்கண்டவற்றைப் பார்க்கவும்.

அளவுக்கே செலுத்தப்படுதற்கு அவர்கள் மிகக் கண்டிப்பானமுறையில் வரையறுத்திருப்பது ஈண்டு நோக்கற்பாற்று. 'மேலும், நாம் ஏற்கெனவே குறிப்பிட்டுள்ளபடி சிவில் நீதிமன்றங்களின் அதிகாரமானது, உண்மையில் நடைமுறையில் அமல்செய்யப்படாத போதும்கூட, மறைமுகமாக அரசாங்கத்தின் செயல்களைக் கட்டுப்படுத்தி வருகின்றது. 1854 ஆம் ஆண்டு, இரஷ்யக் கடற்படை வீரர்களின் கூட்டமொன்று, பிழைப்பதற்கொரு வழியுமின்றி, கில்ட்ஃபோர்டு நகரின் தெருக்களில் திரிந்து கொண்டருந்தது. இரஷ்யக் கடற்படை அதிகாரி ஒருவர் தற்செயலாக அவர்களைப் பார்த்தார். பார்த்தவுடன் அவர்கள் ஆங்கிலத்துறைமுகத்தில் வந்து தங்கியிருந்த இரஷ்யப் படைக்கப்பல் ஒன்றிலிருந்து, சொல்லாமல்கொள்ளாமல் ஓடிவந்துவிட்ட, கடற்படை வீரர்கள் என்பதை நன்கு அடையாளம் கண்டுகொண்டார். உடனே, அவர் அருகிலுள்ள போலீஸ் மேலதிகாரியிடம் இதுபற்றிய தகவலைத் தெரிவித்தார். அவ் வதிகாரியின் துணைகொண்டு அவர் அக் கடற்படை வீரர்களை மீண்டும் போர்ட்ஸ்மவுத் துறைமுகத்துக்கே அனுப்பி வைத்தார். இங்ஙனம் அவர் செய்தது சட்டபடி சரியா அல்லவா என்ற கேள்வி இச் சமயத்தில் எழுந்தது. சட்ட அதிகாரிகள் கலந்தாலோசிக்கப் பட்டனர். அவர்கள், இரஷ்யக் கடற்படை வீரர்கள் அவர்களின் மேலதிகாரியிடம் ஒப்படைக்கப்பட்டதும், அதன்பின் அவர்கள் இரஷ்யக் கப்பலுக்கு அனுப்பிவைக்கப்பட்டதும் எல்லாமே சட்ட விரோதமெனக் கூறிவிட்டனர். இரஷ்ய வீரர்கள் போர்ட்ஸ்மவுத் துறைமுகத்தை அடையத் துணைபுரிந்த போலீஸார், அவர்களது செய்கை காரணமாகச் சட்டவரம்பை மீறிவிட்டதாக நீதிமன்றம் அறிவித்தது.[1] எனவே, இரஷ்யக் கடற்படை வீரர்கள் சிறையினின்றும் விடுதலை பெற்றனர். உடலுரிமைக் காப்பைக் கோரி அவ் வீரர்கள், ஓர் உடல் உரிமைக் கட்டளையைப் பிறப்பிக்குமாறு மனுச் செய்திருந்தாலும் அதேமாதிரி விடுதலைபெற்றிருப்பார் என்பது உண்மைதான். இதனை யெல்லாம் தெற்றெனத் தெளிவாவது என்னவெனின், இங்கு நீதிபதிகள் நிர்வாகத்தின் செயல்களைப் பலவகையிலும் கட்டுப்படுத்தும் ஓர் அதிகாரத்தைப் பெற்றுள்ளார்கள் என்பதேயாம். வெளிநாடுகளிலோவெனில் இத்தகையதொரு செயலை நீதித்துறையின் வரம்புக்கு அப்பாற்பட்டதொன்றென்றும், முற்றிலும் நிர்வாகத்துறை சம்பந்தப்பட்டதொன்று என்றும் கருதியிருப்பர். இன்னும் நிர்வாக சம்பந்தமான காரியங்களில் நீதிபதிகள் தலையிடுவதற்கு மிகச் சிறந்த சான்றுகள் வேண்டுமென்றால், அவற்றை நாம் வெளிநாட்டவரை வெளிநாட்டாரிடமே ஒப்படைக்கும்

[1] ஃபார்ஸைத் (Forsyth) என்பார் எழுதிய, *'அரசியலமைப்புச் சட்டம்பற்றிய கருத்துகளும், வழக்குகளும்'* (1869) (Cases and Opinions in Constitutional Law) (1869) பக். 468.

---

The Case of Pressing Mariners (1743) 18 St. Tr. 1323; Stephen. Commentaries (14th ed., 1903) vol. ii pp. 574, 575; cf. Corner, Forms of Writs and Other Proceedings on the Crown Side of the Court of the Queen's Bench (1844) p. 64

சட்டங்கள்பற்றிய (Extradition Acts) தீர்ப்புகளில் நன்கு காணலாம். ஒரு நாட்டில்வந்து புகலிடம் புகுந்துவிட்ட, வெளிநாட்டுக் கிரிமினல் குற்றவாளியை, நாட்டினின்றும் வெளியேற்றவோ அல்லது அவரது சொந்தநாட்டின் அரசாங்கத்திடம் ஒப்படைக்கவோ அரசாங்கத்துக்கோ அல்லது அதன் அதன் ஊழியர்களுக்கோ, எவருக்கும் எவ்வித உரிமையும் இல்லை.[1]

ஃபிரெஞ்சு நாட்டில் கொலை, கொள்ளை, கள்ளக் கையெழுத்திடல் போன்ற குற்றங்களைச் செய்துவிட்டு, யாரேனும் இங்கிலாந்துக்குத் தப்பி ஓடிவந்துவிடுவார்களேயானால், அரசாங்கம் பார்த்து அவர்களை அவர்களின் சொந்தநாட்டுக்கே திருப்பி அனுப்பிவிட முடியாது. விசாரணை செய்யப்படுதற்கும், தண்டனையளிக்கப்படுதற்கும் அவர்களைத் திரும்பவும் அவர்களின் சொந்த நாட்டுக்கே அனுப்பவேண்டுமானால், பாராளுமன்றத்தால் அதற்கென்று ஏற்படுத்தப்படும் சட்டங்களைக் கொண்டுதான், அரசாங்கம் அங்ஙனம் செய்யமுடியும். இங்ஙனம் வெளிநாட்டுக் கிரிமினல் குற்றவாளிகளை அவரவர் சொந்தநாட்டு அரசாங்கத்

[1] கீழ்க்கண்ட வழக்குகளைப் பார்க்கவும்.

The King v. Lundy (1690) 2 Ventris 314; The King v. Kimberley (1729) 2 Str. 848; East India Company v. Campbell (1749) 1 Ves. Senr. 246; Mure v. Kaye (1811) 4 Taunt. 34; and Chitty, Criminal Law (2 ஆவது வெளியீடு, (1826) பக். 14-16. இவைகளைப் பார்த்தால் வெளிநாட்டுக் குற்றவாளிகளைப் பொறுத்தவரையில், அவர்களை அவரவர் நாடுகளிடமே ஒப்படைத்துவிடுகிற அதிகாரம் நாட்டின் அரசாங்கத்துக்கு உண்டு என்பதும், அது நாட்டின் பொதுமைச் சட்டத்தாலேயே பெறப்படும் என்பதும் தெரியவரும். இத்தகைய கருத்தானது, ஒருகாலத்தில் சரியாக இருந்திருக்கக்கூடும். இருப்பினும் மேற்கூறியவற்றைப் பின்வருவனவற்றோடு ஒப்பிட்டுப் பார்க்கவும். The Queen v. Bernard (1858) Annual Register, Appendix to Chronicle, 310, at p. 328; for opinion of Campbell, C. J. cited In re Castioni (1891) I Q. B. 149, at p. 153, by Sir C. Russell, arguendo.)

எது எப்படியிருப்பினும் (ஒரு பெரிய அதிகாரியின் கூற்றுப்படி) மேற்சொல்லப்பட்ட அதிகாரம் இப்போது சட்டத்தில் வழக்கிழந்துவிட்டது. இவ்வதிகாரத்தின்படி யாரேனுமொருவரை மாஜிஸ்டிரேட் ஒருவர் கைதுசெய்வாரேயானால், அங்ஙனம் அவர் செய்தது சட்டப்படி சரியா இல்லையா என்ற கேள்வியானது நிச்சயம் எழுப்பப்படும். அக் கேள்விக்குத் தக்க பதில் கிடைக்கவில்லை என்றால், அதாவது சட்டத்தின் ஏதாவதொரு பிரிவின்படி, அங்ஙனம் கைது செய்யப்பட்டது தவறாகத் தெரியுமானால், கைதியானவர் மேல் நீதிமன்றங்களுக்கு முறையிட்டுக்கொண்டு, உடனே விடுதலையையும் பெற்றுக் கொள்ளலாம். கிளார்க் என்பார் (Clarke) எழுதியுள்ள, 'வெளிநாட்டவரை ஒப்படைத்தல்' (Extradition) என்ற நூலைப் பார்க்கவும். (4 ஆவது வெளியீடு, 1903) பக். 26.

Musgrove v. Chun Teeong Toy (1891) A. C. 272 என்ற வழக்கைப் பார்க்கவும். இவ் வழக்கானது பின்வரும் உண்மையை வற்புறுத்துகிறது. அந்நியர் ஒருவர், ஃபிரிட்டிஷ் பிரதேசத்தில் நுழைய எத்தகைய சட்டரீதியான உரிமையும் இல்லை அது நன்கு வற்புறுத்துகிறது. மேலும், அது ஒரு காலத்தில் அரசாங்கமானது அந்நியர்களைப் பிரிட்டிஷ் பிரதேசத்தினின்றும் அப்புறப்படுத்தும் உரிமையைப் பெற்றிருந்தது என்பதையும் மறைமுகமாகப் புலப்படுத்துகிறது. தற்போது அந்நியர்களை உள்ளேவிடுவதும் அல்லது அப்புறப்படுத்துவதும் பாராளுமன்றச் சட்டத்தின்படி நடைபெறுவதொன்றாகப் போய்விட்டது. 1914, 1919 ஆம் ஆண்டுகளில் ஏற்பட்ட அந்நியர்கள் தடைச் சட்டங்களால் கிடைக்கப்பெறும் அதிகாரங்களின் அடிப்படையில் ஏற்பட்ட, 1953 ஆம் ஆண்டு அந்நியர்கள் பற்றிய கட்டளையைப் (Aliens Order) பார்க்கவும்-பதிப்பாசிரியர்.

தாரிடம் ஒப்படைக்க இயலாத ஓர் இக்கட்டான நிலைமையினின்றும் தப்பிக்கவே, அந்நியர் ஒப்படைப்புச் சட்டங்கள் (Extradition Acts) இங்கிலாந்தில் ஏற்பட்டன. 1870 முதல் 1906-க்குள் ஏற்பட்ட இச் சட்டங்கள் கிரிமினல் குற்றவாளிகளையும் அல்லது கிரிமினல் குற்றம் சாட்டப்பட்டவர்களையும், பரஸ்பரம் பரிமாறிக் கொள்வதற்கெனப் பிற நாடுகளோடு உடன்பாடு செய்துகொள்ளும் அதிகாரத்தை அரசாங்கத்துக்கு வழங்கியுள்ளன. ஆனால், இவ் வதிகாரத்தை அரசாங்கமானது, பாராளுமன்றச் சட்டம் இசைவளிக்கும் அளவுக்குமேல் ஒரு சிறிதும் அதிகமாகச் செலுத்தமுடியாது. எனவே, இவ் வதிகாரமானது பாராளுமன்றத்தின் தயவால் செலுத்தப்படுவதொன்றேயாம். சட்டம், இவ் வதிகாரத்தின்மீது விதிக்கும் கட்டுப்பாடுகளால் அது செயல்படுவது பெரிதும் தடைப்படுகிறது. ஆகவேதான் சில சமயங்களில் அந்நிய நாட்டுக் குற்றவாளி ஒருவர், அமைச்சர் ஒருவரால் விடுக்கப்படும் பிடி ஆணையின்பேரில் கைதுசெய்யப்பட்டு, அவரது சொந்தநாட்டு அரசாங்கத்திடம் ஒப்படைக்கப்படும் நிலையிலிருக்கும்போதுகூட, அந்நியர் ஒப்படைப்புச் சட்டத்தின் ஏதோ ஒரு பிரிவின்படி, தம்மைப் புகலிடத்திலிருந்து அப்புறப்படுத்தல் சரியன்று என்று ஒருவர் கூறமுடிகிறது. அங்ஙனம் அறிவித்துவிட்டு உடலுரிமைக் கட்டளையொன்றை அவர் நீதிமன்றத்தாரிடம் வேண்டிப் பெற்றுக்கொள்ள முடியும். கட்டளை பிறப்பிக்கப்பட்டவுடன், குற்றவாளியானவர் நீதிமன்றத்தின் முன்னிலைக்குக்கொண்டு வரப்படுவார். நீதிமன்றமானது அவரது முறையீட்டின் எல்லாக் கூறுகளையும் நன்கு ஆராயும்[1] அந்நியர் ஒப்படைப்புச் சட்டத்திற்கேற்ப அவரை, அவர்தம் சொந்தநாட்டுக்கே அனுப்பிவிடுவது தகுமா அல்லது தகாதா என்பதைப் பரிசீலனை செய்யும். அப்படிப் பரிசீலனை செய்யும்போது அவரைக் கைதுசெய்வதும் அவரது நாட்டு அரசாங்கத்திடமே ஒப்படைப்பதும் சிறிதேனும் ஏதேனுமொரு வகையில் சரியன்று அல்லது முறையன்று என்பது நிலைநாட்டப்பட்டால், அவர் உடனே விடுதலை பெறலாம்.[2] இங்ஙனம் நீதிபதிகள் நாட்டின் சட்டங்களைக் கண்டிப்பானமுறையில் பாதுகாக்கிற நடவடிக்கைகள்மூலமாக. நிர்வாகத்தின் யதேச்சாதிகாரத்தைப் பெருமளவுக்குக் குறைக்கக்கூடும் என்பதை யாவரும் எளிதில் உணரலாம். இம்மாதிரியான நிலைமையால்தான் நாட்டின் பொது அமைதிக்கே அபாயம் வரும்போதுகூட, ஆங்கில அரசாங்கமானது, ஐரோப்பிய அரசாங்கங்களைப்போன்று, முன்னெச்சரிக்கையான ஏற்பாடுகளைச் செய்யமுடியாது தவிக்க நேர்ந்துவிடுகிறது. சான்றாக, ஒரு நிகழ்ச்சியை எடுத்துக்கொள்வோம். அரசாங்க ஒழிப்புக் கொள்கையினரின் (anarchists) கூட்டமொன்று, வெளிநாட்டிலிருந்து இங்கிலாந்து

[1] In re Bellencontre (1891) 2 Q. B. 122.

[2] In re Coppin (1866) L. R. 2. ch. App. 47; The Queen v. Wilson (1877) 3 Q. B. D. 42.

நாட்டிற்குள் வந்துவிடுவதாக வைத்துக்கொள்வோம். வந்தபின்னர், அவர்கள் பாராளுமன்றக் கட்டடங்களைத் தகர்த்தெறிவதற்கான சதி ஒன்றில் ஈடுபட்டிருப்பதாகப் போலீசுக்கு நம்பகமான துப்பு கிடைப்பதாகவும் வைத்துக்கொள்வோம். ஆனால், அதேசமயம் அவர்களது சதியை முழுவதுமாக நிரூபிக்கப் போதிய ஆதாரங்கள் கிடைக்கவில்லை என்றும் கொள்வோம். அத்தகைய நிலையில் ஆங்கில அமைச்சர் ஒருவரது நிலை, உண்மையிலேயே மிகவும் இக்கட்டானதாகப் போய்விடுகிறது. சதிகாரர்களை விசாரணைக்கு உட்படுத்துவதற்குமுன், அவர்களைச் சிறைசெய்யும் உரிமை அமைச்சருக்கும் கிடையாது. அவர்களை விசாரணை செய்தபின்னர்தான் நாட்டைவிட்டு வெளியேற்றவும் அவரால் இயலும்.[1] அமைச்சர் ஒருவர், ஐயப்பாட்டின்பேரில் அவர்களைக் கைது செய்தாலோ அல்லது சிறையில் தள்ளினாலோ, உடனே, அவர்கள் உடலுரிமைக் கட்டளையொன்றைக் கோரிப் பெற்றுவிடுவர். அதன்பின், அவர்கள் உயர்நீதிமன்றத்தின்முன் கொணர்ந்து நிறுத்தப்படுவர். அங்கே அவர்களைச் சிறைசெய்ததற்குச் சட்டரீதியான காரணங் காட்டப்படவில்லையானால், அவர்கள் அக் கணமே விடுதலை பெற்றுவிடுவர். அரசியல் காரணங்களுக்காக அல்லது வெளிநாடுகளில் கூறப்படுவதுபோல், ஆட்சித்துறைக் (administrative) காரணங்களுக்காக, அந்நியர் ஒருவரைக் கைதுசெய்வதும், நாடு கடத்துவதும் இன்றியமையாததாய்ப் போய்விட்டது என்று, அரசாங்கத்தார் கூறக்கூடிய கூற்றுகளுக்கு, ஆங்கில நீதிபதிகள் சிறிதும் செவிசாய்க்கமாட்டார்கள். அமைச்சர் ஒருவரது ஆணையின்பேரிலேயே அவர் கைதுசெய்யப்பட்டாரென்றும், அவர் சிறைவைக்கப்படுவது வெறும் நிர்வாக சம்பந்தமான சிறுசெயல் என்றும், பிரதமரும், உள்துறை அமைச்சரும் சேர்ந்து, நாட்டின் பொதுஅமைதியை முன்னிட்டு அவர் கைது செய்யப்படுவது இன்றியமையாததென வாக்குமூலம் கொடுக்கத் தயாரென்றும் அல்லது அவர்மீது எடுக்கப்படும் நடவடிக்கையானது, தேசியநலனை உட்கொண்ட பெருங்கொள்கையின்பாற்பட்டதென்று உறுதியளிக்கத் தயாரென்றும் கூறப்படுகிற மாற்றங்கள் எவையும், உடலுரிமைக் கட்டளையின்மூலம் வேண்டப்படும் விடுதலையைத் தவிர்க்க முடியாதவை. நீதிபதிகள் இவ் வாதங்களைக்கேட்டு, குற்றவாளி கோரும் உரிமையை மறுக்கத் துணியமாட்டார்கள். அவர்கள் விசாரிக்கக்கூடியவெல்லாம், என்னவெனில், அந்நியரொருவரின் உடல் உரிமையில் தலையிடுவதை நாட்டின் பொதுமைச் சட்டங்களோ (common law), அன்றிப் பாராளுமன்றச் சட்டங்களோ ஏதேனுமொரு வகையில் அனுமதிக்கிறதா என்பதுதானாகும். சட்டங்களின் எந்த

[1] விரும்பத்தகாத வெளிநாட்டினர் ஒருவரைப் பொதுநலனை முன்னிட்டு, நாட்டைவிட்டு வெளியேற்றும் அதிகாரம், உள்துறை அமைச்சருக்குக் (Home Secretary) கிடையாது; அந்நியர் தடைச்சட்டம் (Aliens Order). 1953, art 20 (1) & (2); வேடும் பிலிப்ஸூம் (Wade and Phillips) எழுதிய 'அரசியலமைப்புச் சட்டம்,' (Constitutional Law) 6ஆவது வெளியீடு, 1960, பக். 242-243 பார்க்கவும்.-பதிப்பாளர்.

விதியும், அத்தகைய தலையீட்டை அனுமதிக்காதென்று தெரிந்தால், குற்றவாளி எனக் கருதப்பட்டவர் விடுதலையளிக்கப்பெறுவரென்பது உறுதி. இதனால் நமக்குத் தெளிவாக விளங்குகின்ற உண்மை ஒன்று உண்டு. அதாவது, இங்ஙனம் நிர்வாக நடவடிக்கைகளைக் கட்டுப் படுத்த நீதிமன்றங்கள் பெற்றுள்ள அதிகாரமானது, நாளடைவில் அவ்வப்போது ஏற்படும் தேவையின் காரணமாகப் பயன்படுத்தப்பட்டு வருவதன் விளைவாக, இங்கு ஐரோப்பாவில் காணப்படுவதைப் போன்று 'ஆட்சித்துறைச் சட்டம்' (administrative law) என்ற தனிப்பட்டதொரு சட்டமுறை வளர இடமில்லாமல் போய்விட்டது என்பதேயாகும். இங்கு நிலவும் இம் முறையானது, ஆட்சித்துறைச் சட்டங்கள்பற்றிய கொள்கைகளின் அடிப்படையையே குலைத்துவிடு கிறது. 'அதிகாரப் பிரிவு' (separation of powers) என்ற கொள்கைக்கும் அது இடம் தருவதில்லை. ஃபிரான்ஸில் நிலவும் 'ஆட்சித்துறைச் சட்டம்' (droit administratif) என்ற சட்ட முறைமையானது, அதிகாரப் பிரிவு என்ற கொள்கையை அடிப்படையாகக் கொண்டதென்பதைப் பின்வரும் அத்தியாயமொன்றில்[1] காட்டப்படும். ஆனால், அத்தகைய சட்டமுறை மைக்கு இங்கு வழியில்லை இதன் விளைவாக அரசாங்கத்தின் அல்லது இன்று அரசாங்கமென்ற பொருளில் வழங்கப்பெறும் அமைச்சரவையின் யதேச் சாதிகாரம் அல்லது தான்தோன்றித்தனம் பெரிதும் தடைப்படுகிறது. சுருங்கக்கூறுமிடத்து, நீதிமன்றங்கள் உடலுரிமைக் கட்டளையை வெளியிடுவதன்மூலம் உண்மையில் செலுத்துகின்ற அல்லது செலுத்தக் கூடிய தலையீட்டு அதிகாரமானது, அரசாங்கத்தின் செயல்களைச் சட்டவரம்புக்குள்ளேயே கண்டிப்பானமுறையில் இயங்கும்படி செய்துவிடுகிறது எனலாம். அரசாங்கமானது கிரிமினல் குற்றங்களைத் தண்டிக்கத்தான் முடியுமேயன்றி, அவை நம்மிடையே நிகழாமல் தடுக்கமுடியாது.

## பதினேழாம் நூற்றாண்டில் நீதிபதிகளின் நிலைபற்றிய சச்சரவு

பதினேழாம் நூற்றாண்டில் ஏற்பட்ட அரசியல் சச்சரவுகளெல்லாம் ஏன், பெரும்பாலும் நீதிபதிகளின் நிலை என்ன என்பதுபற்றியே நிகழ்ந்து வந்திருக்கின்றன. ஏன்? அவை உடல் உரிமைக் கட்டளையால் விளையக்கூடிய சரியான பலன் என்ன[2] என்பனபோன்ற சட்ட நுணுக்கமான சிக்கல்களை மையமாகக்கொண்டு சுழலவேண்டும் என்பதற்குரிய காரணமெல்லாம் இப்போதுதான் நமக்குப் புரிகிறது. நமது நிறுவனங்களின் சீரும்சிறப்பும் செயல்முறையும், நீதிபதி களுக்குத் தரப்படும் சுதந்தரத்தையும் அதிகாரத்தையுமே பொறுத்து அமைவனவாகும். நீதிபதிகளின் சுதந்தரத்தைப்பற்றி இருவகையான

[1] அத்தியாயம் XII-ஐப் பார்க்கவும்.

[2] Darnel's Case (1627) 3 St. Tr. 1. K. & L. 49.

கருத்து நம் நாட்டில் அப்போது நிலவியது. ஒருபுறம் மன்னரது தனிச்சிறப்புரிமையை ஆதரிக்கும் கூட்டத்தார் இருந்தனர். அவர்கள் அத்தகைய சுதந்திரத்தைக் கண்டித்தனர். மறுபுறம் பாராளு மன்றத்தின் தலைமையை ஆதரிக்கும் கூட்டத்தார் இருந்தனர். அவர்கள் நீதிமன்றத்தின் சுயேச்சையை ஆதரித்தனர். மன்னரின் தனிச்சிறப்பதி காரங்களை ஆதரித்த பேகன் (Bacon) போன்ற அறிஞர்கள் ஓரளவு புதுமை விரும்பிகளாயும், சீர்திருத்த மனப்பான்மை உடையவர் களாயுமிருந்தனர். அவர்களுக்கு நீதிபதிகளின் சுதந்தரமென்பது நிர்வா கத்தின் பலவீனமாகத் தெரிந்தது. அதோடு சட்டமனப்பான்மை செறிந்த பழைமை விரும்பிகளின் நிரந்தர ஆதிக்கமானது, நாட்டில் வேரூன்றவே நீதிபதிகளின் சுதந்தரம் வகைசெய்யும் எனவும் அன்னார் நம்பினர். அத்தகைய பழைமை விரும்பிகளின் தனிப்பெரும் பிரதிநிதி யாகவே நீதிபதிகளின் சுதந்தரத்துக்காகப் பாடுபட்ட கோக் (Coke) போன்ற அறிஞர்கள் அவர்களுக்குக் காட்சியளித்தனர். ஆனால், பாராளுமன்றத்தின் தலைமையை ஆதரித்த தலைவர்கள் நீதிமன்றங் களுக்கு அளிக்கப்படும் சுதந்தரத்தில்தான், நாட்டின் பொதுமைச் சட்டத்தின் வாழ்வும் வளப்பமும் அடங்கியிருப்பதாகக் கருதினர். பொதுமைச் சட்டம் நன்கு நிலைநாட்டப்படவேண்டுமானால், அதற்குத் தக்க பாதுகாப்பு தேவை. அத்தகைய பாதுகாப்பு நாட்டில் தொன்றுதொட்டு வழங்கிவரும் மரபுகள் நன்கு பேணப்படுவதைப் பொறுத்தே அமையும். அம் மரபுகள் அவ்வப்போது தேவைக்கேற்ப பாராளுமன்றச் சட்டங்களால் ஒரு சிறிது மாற்றப்படலாம். இங்ஙனம் நாட்டில் நிலைபெற்றுள்ள மரபுகளைக் காத்துவரும் ஒரே நிறுவனம் நீதிமன்றமே என்பதை, பாராளுமன்றத்தலைவர்கள் அறிந்திருந்தனர். ஆகையால்தான் கோக் என்ற தலைவர், நீதிபதிகளின் சுதந்தரத்திற்கென்று ஓயாது பாடுபட்டார். நீதிபதிகளின் சுதந்தரத்துக்காக நடத்தப் படும் போராட்டமானது, நாட்டுமக்களின் உரிமைக்காக நடத்தப்படும் போராட்டமே என்று அவர் உணர்ந்தார். மேலும், இங்ஙனம் விடாப் பிடியாகச் சிறிதும் வளைந்துகொடாமல், சட்டத்தின் ஆதிக்கத்தை நிலை நாட்டுவதொன்றே பாராளுமன்றத்தின் இறைமையை[1] எய்துதற் குரிய சிறந்ததொரு பாதையாகும் என அவர்கள் நம்பியிருக்கக் கூடுமெனத் தெரிகிறது. ஆனால், அதை நாம் நிச்சயமாகச் சொல்லு வதற்கில்லை.

## உடலுரிமைச் சட்டம் நிறுத்திவைக்கப்படல்

கிரிமினல் குற்றம் சாட்டப்பட்டவர்கள், உடலுரிமைக் கட்டளை ஒன்றைக் கோரலாம் என்ற உரிமையும், அத்தகைய கட்டளையைக்

[1] *நீதிபதிகளின் நிலைபற்றிய* வெவ்வேறு கருத்துகளைப்பற்றிய கட்டுரையை *கார்டினர்* (Gardiner) *எழுதிய, 'இங்கிலாந்தின் வரலாறு'* (History of England) *தொகுதி* iii (1883) *அத்தியாயம்* xxii-ஐப் பார்க்கவும்.

கண்டிப்பாக வழங்கவேண்டியது நீதிமன்றங்களின் கடமை என்றும் இருக்கின்ற ஓரு நிலைமையானது, அரசியல் கிளர்ச்சி நடைபெறும் காலங்களில், அரசாங்கத்துக்கு ஓர் இக்கட்டான நிலையை உண்டாக்கி விடுகின்றன. கிளர்ச்சிகளை அடக்க வழியில்லாமல் அரசாங்கத்தின் கைகள் கட்டப்பட்டுவிடுகின்றன. இந்த இடர்ப்பாட்டை நீக்குவதற்காகவே, உடலுரிமை நிறுத்திவைப்புச் சட்டங்கள் (Habeas Corpus Suspension Acts) என்று பொதுவாக அழைக்கப்படும் பாராளுமன்றச் சட்டங்கள் ஏற்பட்டன. 'பொதுவாக அழைக்கப்படுகின்ற' என்ற சொற்றொடரை நான் ஏன் பயன்படுத்துகிறேன் என்றால், அத்தகைய சட்டங்களுக்கு ஒரு மாதிரியாக (type) மூன்றும் ஜார்ஜ் காலத்தில் ஏற்பட்ட ஒரு சட்டத்தை[1] (Act 34. Geo. IIIc 54) நீங்கள் எடுத்துக் கொள்வீர்களானால் (நீங்கள் எடுத்துக்கொள்ளக்கூடும்) அச் சட்டத்துக்கும், நாம் அதற்கு தற்போது சூட்டியுள்ள பெயருக்கும் எவ்விதமான பொருத்தமும் இல்லையென்பதை அறியலாம்.

[1] அச் சட்டத்தின் முதலாம் பிரிவு கீழ்க்கண்டவாறு கூறுகிறது: 'மேன்மை தங்கிய அரசரது ஒப்புதலை, இச் சட்டமானது பெறுகின்ற நாளில் அல்லது அதற்குப் பின்னர், தேசத்துரோகக் குற்றத்துக்காகவும் அல்லது தேசத்துரோக நடவடிக்கைகளில் ஈடுபட்டிருப்பதாக ஏற்பட்டுள்ள ஐயத்தின் காரணமாகவும், மேன்மைதங்கிய மன்னருடைய பெருமைமிக்க பிரிவி கவுன்சில் சபையால் வெளியிடப்பட்டதும், அக் கவுன்சில் உறுப்பினர்கள் ஆறுபேருடைய கையெழுத்து இடப்பட்டதுமான பிடியாணை (warrant) ஒன்றன்மூலமோ அல்லது மேன்மை தங்கிய அரசரது அமைச்சர்களில் ஒருவரால் கையெழுத்து இடப்பட்ட பிடியாணை ஒன்றன்மூலமோ, கிரேட் பிரிட்டன் நாட்டுச் சிறைகளில் வைக்கப்பட்டுள்ள ஒவ்வொரு நபரும் அல்லது நபர்களும், ஆயிரத்து எழுநூற்று தொண்ணூற்று ஐந்தாம் ஆண்டு, பிப்ரவரி மாதம், முதல்நாள் வரைக்கும் எவ்விதமான பிணையத்தாலும் வெளியிடப்படாமல், சிறையிலேயே காவலில் வைக்கப்படுபவராக, அங்ஙனம் சிறைவைக்கப்பட்ட நபர் அல்லது நபர்களை மேன்மைதங்கிய பிரிவி கவுன்சிலால் வெளியிடப்பட்டு, அக் கவுன்சிலில் உள்ள ஆறு உறுப்பினர்களால் கையெழுத்திடப்பட்ட கட்டளையொன்றினால் அன்றி, எந்த அமைதிகாண் நீதிபதியும் (justice of peace) அல்லது நீதிமன்ற நடுவரும் (judge) எவ்விதமான பிணையத்தின்பேரிலும் விடுதலை செய்யாமலும் விசாரணை செய்யாமலும் இருப்பாராக. 1795ஆம் ஆண்டு பிப்ரவரி முதல்நாள் வரை இவ் வாணையை நீதிபதிகள் மேற்கொள்வராக. அதுவரை இச் சட்டமானது இதற்குமாறான பொதுச்சட்டமோ, பாராளுமன்றச் சட்டமோ ஏற்கெனவே இருப்பினும் செல்லுபடியாகும்.

1794ஆம் ஆண்டு ஏற்பட்ட பாராளுமன்றச் சட்டத்தைப்போன்ற, உடல் உரிமை நிறுத்துச் சட்டங்களால் ஏற்படும் பயன்கள் உடல் உரிமைச் சட்டங்களை முழுவதுமாக ரத்து செய்துவிடுவதால் ஏற்படக்கூடிய பலன்களைவிட, சில சமயம் குறைவாகவும் சிலசமயம் அதிகமாகவும் இருப்பதைக் காணலாம். அச் சட்டம் நிறுத்திவைக்கப்பட்டுள்ள சமயத்தில், தேசத்துரோகக் குற்றம் சாட்டப்பட்டவர்களையும் அல்லது தேசத்துரோக நடவடிக்கையில் ஈடுபட்டதாக ஐயுறப்பட்டவர்களையும் கைதுசெய்வதற்கும் சிறையில் வைப்பதற்கும், அரசாங்கமானது அதிகாரத்தைப் பெறுகிறது. அதேசமயத்தில் தேசத்துரோக நடவடிக்கைகளில் ஈடுபட்டிருப்பதாக ஐயுறப்பெற்று, சிறையிடப்படாத ஏனைய நபர்களை உடல் உரிமை நிறுத்திவைப்புச் சட்டமானது, எவ்வகையிலும் பாதிப்பதில்லை. எனவே, சாதாரண குடிமக்களின் சுதந்தரத்திற்கு, அச் சமயத்தில் எவ்விதமான தீங்கும் நேரவழியில்லை. ஆனால், உடல் உரிமைச் சட்டங்கள் முழுவதுமாக ரத்து செய்யப்படுமானால், இங்கிலாந்திலுள்ள ஒவ்வொருவரும் முறையற்ற சிறை வைப்பினின்றும் பாதுகாப்பைப்பெற வழி இல்லாமல் போகும். அதே சமயத்தில் நீதிபதிகள் பொதுமைச் சட்டத்தின்படி, உடல் உரிமைக் கட்டளையை வெளியிட்டு, அதற்குக் கீழ்ப்படியும்படி யாவரையும் வற்புறுத்தக்கூடிய உரிமையை அப்படியே விட்டுவைத்துவிடும். எனவே, நீதிமன்றங்கள் தங்கள் கடமையை ஒழுங்காகச்

அச் சட்டத்தில் உடலுரிமைச் சட்டத்தின் பெயரே இடம் பெறவில்லை. அதைப்பற்றி ஒரு வார்த்தையும் கூறுமலேயே, அச் சட்டமானது உடல் உரிமையைப் பறிக்கும்வகையில் அமைந்துள்ளது. அதன்படி தேசத்துரோகக் குற்றத்துக்காகவும், தேசத்துரோக நடவடிக்கைகளில் ஈடுபட்டதாக ஐயுறப்பட்டதற்காகவும், அமைச்ச ரொருவரின் கையொப்பம்பெற்ற பிடியாணையின்பேரில் சிறையிடப் பட்ட ஒருவர், தம்மை விடுதலைசெய்யுமாறும் வற்புறுத்திக் கோர இயலாது. உடல் உரிமைச் சட்டங்களால் அளிக்கப்பெறுகின்ற உரிமையானது, இதனுல் பெரிதும் குறைக்கப்படுகிறதென்பதில் எட்டுணையும் ஐயமில்லை. ஆனுல் உடல் உரிமைச் சட்டங்கள் பொதுவாக முற்றிலும் நிறுத்திவைக்கப்படுவதால் ஏற்படக்கூடிய அத்தனைத் தீய விளைவுகள், மேற்சொன்ன சட்டத்தால் ஏற்படுவதில்லை எனக் கூறலாம். தேசத்துரோகக்குற்றம் சாட்டப்பட்டு சிறை வைக்கப்பட்டவர்களைத் தவிர, வேறு குடிமக்களின் சிறப்புரிமைகளை அது எவ்வாறேனும் பாதிப்பதில்லை. உடல் உரிமை நிறுத்திவைப்புச் சட்டமானது, சட்டசபையில் நிறைவேற்றப்படுவதற்கு முன்னர், கைது செய்யப்பட்டவர்களையும், சிறைசெய்யப்பட்டவர்களையும் பாதிக்காது. அங்ஙனம் அவர்கள் இன்னலுற்றது, சட்டப்படி முறைமையற்றதெனத் தெரிந்தால், அவர்கள் விடுதலைபெறுவதென்பது, உடலுரிமைச் சட்டம் நிறுத்திவைக்கப்பட்டுள்ளபோதுகூட, முடியக்கூடிய காரியமேயாகும். கிரிமினல் குற்றத்துக்காகவன்றி, வேறுவகையில் குற்றம் சாட்டப் பட்டுள்ள எந்த ஆணும், அல்லது பெண்ணும் அல்லது குழந்தையும், உடல் உரிமைக் கட்டளையொன்றைப் பெறுகின்ற உரிமையை, மேற் சொன்ன சட்டம் எள்ளளவும் குறைப்பதில்லை. மூன்றும் ஜார்ஜ் காலத்து ஏற்பட்ட குறிப்பிட்ட சட்டமும் (34 Geo. III c. 54) ஏனைய உடலுரிமை நிறுத்தச் சட்டங்களும் (நான் நம்புகிறபடி), ஆண்டு தோறும் நிறைவேற்றப்படவேண்டிய ஓராண்டுச் சட்டங்களாகும். எனவே, அவை தொடர்ந்து அமலிலிருக்க வேண்டுமானுல், ஆண்டுக் கொருமுறை அது புதுப்பிக்கப்படல் வேண்டும். உடல் உரிமைச் சட்டத்தை நிறுத்திவைப்பதால், அரசாங்கமானது சாதிக்கக்கூடிய ஒரே காரியம் என்னவெனில், அச் சட்டம் தொடர்ந்து நிறுத்தப்பட்டிருக் கின்ற காலம்வரைக்கும், தேசத்துரோக நடவடிக்கைகளுக்காகச் சிறைவைக்கப்பட்டவர்கள்மீது இருக்கின்ற வழக்குகளை விசாரணை செய்யாமல், ஒத்திப்போட்டுக்கொண்டே போகலாம் என்பதன்றி வேறன்று. இதனுல் நிர்வாகத்தினருக்குக் கிடைக்கக்கூடிய அதிகாரம்

செய்துவருமென்று கொள்வோமானுல், அரசாங்கத்தின் அதிகாரம் அதிகரித்து விடும் என்பதற்கு நியாயமில்லை. தன் விருப்பம்போல் அரசாங்கமானது, தேசத்துரோக நடவடிக்கைகளில் ஈடுபட்டதாக ஐயுறப்படும் நபர்களைச் சிறை வைக்க முடியாது. ஆகவே, ஆங்கில மக்களில் எந்த வகுப்பாரின் சுதந்தரமும் எவ்வாறேனும் தடைப்படவும் நியாயமில்லை. Cf. 3 B. L. Comm. 138. தற்கால நடவடிக்கைகளுக்கு வேட், பிலிப்ஸ் என்போர் எழுதிய நூலில், பக். 670-674-ஐப் பார்க்கவும்.

கொடுஞ்சநஞ்சமன்று. ஆனால், அது தற்காலிகமானதேயாகும். மேலும், அதனால் ஏற்படக்கூடிய விளைவானது, வெளிநாடுகளில் 'அரசியல் அமைப்பு நிவாரணங்கள் முற்றிலும் நிறுத்தப்படுவதால்' (general suspending of constitiutional guarantees) ஏற்படும் விளைவுகளைப் போலும், அல்லது ஃபிரான்ஸில் 'முற்றுகைநிலை அறிவிப்பால்'[1] (proclamation of a state of siege) ஏற்படும் பலன்களைப்போலும் அவ்வளவு தீமை பொருந்தியனவல்ல; உண்மையில், வெளிநாடுகளில் அடக்குமுறைச் சட்டங்கள் (coercion acts) என்று பேசப்படுகின்ற சட்டங்களால் அரசாங்கத்தின் யதேச்சாதிகாரமானது, அதிகரிக்கப்படும் அளவுக்கு மிகமிகக் குறைவாகவே மேற்சொன்ன சட்டத்தால் அவ் வதிகாரம் பெருக்கப்படுகிறது. இந்த உண்மையை, அண்மையில் ஐரிஷ் நாட்டில் ஏற்படுத்தப்பட்ட சில அடக்குமுறைச் சட்டங்களைப் பரிசீலனை செய்வதால் நன்கு அறியலாம். அவைகளின்மூலமாக ஐரிஷ் நிர்வாகத்துக்கு அளிக்கப்பட்டுள்ள தனிச் சிறப்பதிகாரங்களில் முக்கியமானவற்றைமட்டும் ஈண்டுக் குறிப்பிடுதல் போதுமானது. 1881 ஆம் ஆண்டுச் சட்டமானது ஐரிஷ் நிர்வாக அரசாங்கத்துக்கு நாட்டின் தற்காப்பைமுன்னிட்டு, எவரையும் கைதுசெய்தற்குரிய வரம்பிலா அதிகாரத்தை நல்குகிறது. ஐயம் காரணமாகக் கைதுசெய்யப் பட்டவரை, அச் சட்டம் அமலில் இருக்கும்வரை, சிறையிலடைத்து வைத்திருக்கும் அதிகாரத்தையும் அது அளிக்கின்றது. தேசத் துரோகச் செயல்களில் ஈடுபட்டதாகவும் நாட்டின் அமைதியையும் ஒழுங்கையும் கெடுக்கின்றமுறையில் நடந்துகொண்டதாகவும் ஐயம் ஏற்பட்டாலன்றி, எவரையும் ஐரிஷ் துணைத் தளபதிப் பிரபு (Lord Lieutenant) கைதுசெய்ய முடியாதென்பது உண்மை தான் இருப்பினும் ஒருவரைக் கைதுசெய்யும்படிப் பிடியாணை ஒன்றை வெளியிடும் பிரபுவேதான், கைது செய்யப்பட்டவர்மீது சுமத்தப்படும் குற்றங்கள் உண்மையா, இல்லையா என்பதை முடிவாகக் கூறவேண்டியவராயுமிருக்கின்றார், பிடியாணையில் கூறப்படும் செய்திகளுக்கு முடிவான அத்தாட்சி அப் பிடியாணையேயாகும் என்று அச் சட்டம் கூறுகிறது. எனவே, (மற்றவைகளுக்கிடையே) கைது செய்யப்பட்டவர் அல்லது 'ஐயுறப்பட்டவர்' உண்மையிலேயே தேசத்துரோக நடவடிக்கைகளுக்காக, ஐயுறத் தக்கவரா அல்லது கைதுசெய்யப்படத் தக்கவரா என்பதைப்பற்றியெல்லாம் அப் பிடியாணை கூறுவதே முடிவான கருத்தாகிவிடுகிறது. அதன் விளைவாகத் துணைத் தளபதிப் பிரபுவோ அல்லது அவரது ஆணையின்கீழ்ப் பணிபுரியும் எந்த அதிகாரியோ, ஒருவரைத் தவறாகக் கைதுசெய்துவிட்ட குற்றத் துக்குப் பொறுப்பேற்க வேண்டியில்லாமல் போய்விடுகிறது. சரியான

[1] டுகிட் (Duguit) என்பார் எழுதிய, Manuel de Droit Public francais Droit Constitutionnel (1907) para. 76. pp. 510-513; and article 'Etat de Siege' in Cheruel, Dictionnaire historique des Institutions de la Franre, (8th ed.. 1910) vol. i V° Etat de Siege, p. 375.

காரணமேதுமில்லாமலும், தீய நோக்கத்தோடும் ஒருவர் கைதுசெய்யப்பட்டிருப்பினும்கூட, கைதுசெய்யப்பட்டது சட்டத்தின் சொற்களுக்கும் முறைமைக்கும் ஏற்றதாயிருக்கும்வரை, கைதுசெய்தவர்களை ஒன்றும் செய்யமுடியாது. சட்டத்தின் போர்வையில் அநீதி இழைக்கப்பட இதனால் ஏதுவாகிறது. இச் சட்டத்தின் துணைகொண்டு, ஐரிஷ் அரசாங்கமானது, துணைத் தளபதிப் பிரபுவின் சொற்படி யாரை வேண்டுமானாலும் கைதுசெய்யலாம். கைதுசெய்யும்படிக் கட்டளையிடும் பிடியாணையானது, சட்டப்படி சரியானமுறையில் அமைந்திருக்க வேண்டும். சட்டத்தால் கோரப்படும் குற்றங்களைக் கைதாக்கப்பட்டவர், செய்ததாக அதில் கூறப்பட்டிருக்கவேண்டும். அவ்வளவு தான். 1882ஆம் ஆண்டில் ஏற்பட்ட கிரிமினல் குற்றததடுப்புச் சட்டமானது, பின்வரும் (மற்றவைகளுக்கிடையே) சிறப்பதிகாரங்களை ஐரிஷ் நிர்வாக அரசாங்கத்துக்குத் தருகிறது. ஒரு சில கிரிமினல் குற்றங்களைப்[1] பொறுத்தவரை, ஜூரிகளைக்கொண்டு விசாரணை நடைபெறுவதை அரசாங்கம் முற்றிலும் மறுத்துவிடலாம். ஐயுறத்தக்க சூழ்நிலையில் வீதிகளில் இரவில் வலம்வரும் அந்நியர்களை அது கைதுசெய்யலாம்.[3] தேசத் துரோகமான செயல்களையோ அல்லது[4] கலகங்களையோ தூண்டிவிடும்முறையில் செய்திகளை வெளியிடுவதாகத் துணைத் தளபதிப் பிரபு கருதினால், அக் கணமே அச் செய்தித்தாள்களைக் கைப்பற்றலாம். பொது அமைதிக்கும், பாதுகாப்புக்கும் ஊறுவிளைக்குமென அப் பிரபு கருதினால், ஒரு பொதுக்கூட்டத்தைத் தடைசெய்யலாம். 1882ஆம ஆண்டில் ஏற்பட்ட இக் கிரிமினல் குற்றத்தடுப்புச் சட்டமானது, மேற்சொன்ன அதிகாரங்களை ஐரிஷ் அரசாங்கத்துக்குத் தந்ததோடு, 1848ஆம் ஆண்டு ஏற்பட்ட அந்நியர் தடைச் சட்டத்தை (Aliens Act) மீண்டும் கொணர்ந்ததனமூலம (இது தற்செயலாகவே நிகழ்ந்தது) பிரிட்டிஷ் அமைச்சரவைக்கும் ஓர் அதிகாரததை அளித்தது. அதாவது, அச் சட்டம் ஏற்படுவதற்குமுன்னர் மூன்று ஆண்டுகளாவது, ஐக்கிய அரசில் (United Kingdom) அதாவது கிரேட் பிரிட்டனில் குடியிருந்திருக்காத அந்நியர் எவரையும், நாட்டைவிட்டு அப்புறப்படுத்தும் அதிகாரத்தைப் பிரிட்டிஷ் அமைச்சரவை பெற்றது.[5] இங்குக் கூறப்பட்ட சிறப்பதிகாரங்களில ஒன்றைக்கூட பிரிட்டிஷ் அரசாங்கமானது, உடல் உரிமைச் சட்டத்தை நிறுத்திவைப்பதனமூலம் பெற்றிருக்கமுடியாது. உடல் உரிமைச் சட்டத்தை நிறுத்திவைப்பதனமூலம், ஏற்படக்கூடிய பலன்கள் மிகமிக அற்பமானவையே என்பதற்கு ஒரு பெருஞ்சான்றாக விளங்குவது, உடல் உரிமை நிறுத்தச்

[1] அதாவது (a) தேசத் துரோகம் அல்லது தேசத்துரோகமான மாபாதகச் செயல் (b) கொலை அல்லது மனிதக் கொலை (c) கொலை செய்வதற்கான முயற்சி (d) ஓர் ஆளுக்கெதிராகச் செய்யப்படும் வன்முறைக் கடுங்குற்றம் (e) தீ வைத்தல், பொதுமைச் சட்டப்படி அல்லது பாராளுமன்றச் சட்டப்படி (f) குடியிருக்கும் வீட்டைத் தாக்கல்.

[2] பிரிவு 1. [3] பிரிவு 12. [4] பிரிவு 13. [5] பிரிவு 15.

சட்டம் காலாவதியாவதற்கு முன்னமேயே. அதற்கு முற்றிலும் மாறுபட்ட பண்பினைக்கொண்ட பொறுப்பு விலக்களிப்புச் சட்டமானது (Act of Indemnity) அதற்குத் துணையாக ஏற்படுத்தப்படுவதாகும்.

## பொறுப்பு விலக்களிப்புச் சட்டம்[1] (Act of Indemnity)

பாராளுமன்றத்தின் இறைமைக்குத் தலைசிறந்த ஓர் எடுத்துக்காட்டாக விளங்குவது, பொறுப்பு விலக்களிப்புச் சட்டம் என்பதை நாம் முன்பு ஒருமுறை குறிப்பிட்டுள்ளோம். இவை சென்ற காலத்துக்கும் செல்லுபடியாகுந்தன்மையன. இவை சட்டத்தை மீறியவர்களையும், அங்ஙனம் சட்டத்தைமீறிய பொறுப்பினின்றும் விடுவிக்கத்தக்கவை. அதன்விளைவாக, ஒரு சமயத்தில் அவை செய்யப்பட்டபோது, சட்ட விரோதமானதெனக் கருதப்பட்ட செயல்களைச் சட்ட முறைமையான வினைகளாக ஆக்கிவிடக்கூடியன. இதிலிருந்து பொறுப்பு விலக்களிப்புச் சட்டத்துக்கும், உடல் உரிமை நிறுத்தச் சட்டத்துக்கும் உள்ள நெருங்கிய தொடர்பை உணர்ந்துகொள்வது எளிது. நாம் ஏற்கெனவே குறிப்பிட்டுள்ளபடி, உடல் உரிமை நிறுத்தச் சட்டத்தின் மூலமாக, எந்த ஒரு நபரும் சட்டத்தைமீறிய குற்றத்திற்காக ஆளாக வேண்டிய, சிவில் அல்லது கிரிமினல் பொறுப்புகளினின்றும் தப்பித்துக் கொள்ளமுடியாது. உடலுரிமைச் சட்டம் நிறுத்திவைத்திருக்கப்பட்டுள்ள ஒரு நெருக்கடியான வேளையில், அமைச்சரோ அல்லது அவருக்குப்பட்ட அதிகாரிகளோ முற்றிலும் நிரபராதியான ஒரு மனிதரை, அக் குறிப்பிட்ட மனிதர்-சான்றாக வில்க்ஸ், ஃபாக்ஸ், ஓகானல் போன்ற செல்வாக்குமிக்க கட்சித்தலைவர் ஒருவர்-பொது அமைதிக்கு ஊறு விளைக்கக்கூடும் என்ற ஒரு பயம் காரணமாகவன்றி (அது ஒரு வேளை உண்மையாயிருக்கலாம்) வேறு தக்க காரணம் எதுவுமின்றிச் சிறைவைத்துவிடுவதாகக் கொள்வோம். அப்படிச் சிறைவைக்கப்பட்ட மனிதரை வெளியே விட்டுவைப்பதால், தமது செல்வாக்கின் காரணமாக அவர் அமைதிக்குப் பங்கம் விளைவிக்கக்கூடுமாதலால், பொது நன்மையையும் பாதுகாப்பையும் முன்னிட்டு, அவர் சிறையில் வைக்கப்பட்டிருப்பதே உசிதம் என, அதிகாரிகள் உண்மையிலேயே நம்புவதாகவும் வைத்துக்கொள்வோம். அந் நம்பிக்கையின் விளைவாக அமைச்சர் விடுத்த ஆணைப்படி, அக் குறிப்பிட்ட மனிதர் கைதுசெய்யப்பட்டபோது, தனிப்பட்டோரின் வீட்டுக்குள் சட்ட முறைமையின்றிப் பூட்டை உடைத்து நுழைதல், தனிப்பட்டோரின் சொந்தச் சொத்தைச் சூறையாடல்போன்ற சட்டத்துக்குப்புறம்பான செயல்கள் நிகழ்ந்துவிட்டதாகவும் வைத்துக்கொள்வோம். இம்மாதிரி சூழ்நிலை ஒவ்வொன்றிலும், இன்னும் இதுபோல் நம்மால் எளிதில் கற்பனை செய்யக்கூடிய வேறு பல சூழ்நிலைகளிலும், ஒருவரைக் கைதுசெய்யும்படி ஆணையிடுகின்ற அமைச்சரும், அந்த ஆணையை நிறைவேற்றுகிற ஏனைய

[1] 1920ஆம் ஆண்டு இழப்பிட்டுச் சட்டத்தைப் பார்க்கவும். முன்பே சொல்லப்பட்ட வேட், பிலிப்ஸ் என்போர் எழுதிய நூலில், 380-382 பக்கங்களைப் பார்க்க.

அதிகாரிகளும் சட்டத்தை மீறிய குற்றத்துக்கு ஆளாகிவிடுவார்கள் என்பது திண்ணம். நாட்டில் ஒழுங்கும் அமைதியும் ஏற்படுத்தப்பட அவர்கள் அங்ஙனம் நடந்துகொண்டது இன்றியமையாததே என்ற அசைக்கமுடியாத நம்பிக்கையும் நல்லெண்ணமும் அவர்கள் கொண்டிருந்தவர்களாயிருப்பினும், அவர்களது செய்கை சட்டத்துக்கு முரணானதென்பதில் ஐயமில்லை. உடல் உரிமைச் சட்டமானது, நிறுத்திவைக்கப்பட்டிருப்பினும் அல்லது அமலிலிருப்பினும் அவர்கள் செய்துவிட்ட குற்றத்துக்கான, சிவில் அல்லது கிரிமினல் பொறுப்புகளுக்கு ஆளாகாமல் தப்பிக்கமுடியாது. உடல் உரிமைச் சட்டமானது நிறுத்திவைக்கப்பட்டிருக்கும்போது, கைதுசெய்யப்பட்ட ஒருவர், தம்மைக் கைது செய்யும்படி ஆணையிட்ட அமைச்சர்மீதோ அல்லது அவரது ஆணையை நிறைவேற்றிய அதிகாரிகள்மீதோ, அப்போதைக்கு எந்த விதமான நடவடிக்கையையும் எடுக்கமுடியாது என்பதென்னவோ உண்மைதான். ஏனென்றால், சிறைத் துன்பத்தில் வாடும் ஒருவர், அநேகமாக தேசத்துரோகக் குற்றத்துக்காகவோ, அன்றி தேசத்துரோகக் குற்றம் செய்ததாக ஐயுறப்பட்டதற்காகவோதான் கைது செய்யப்பட்டிருப்பாராதலால், அத்தகையோரைச் சிறையிலேயே வைத்திருக்கவேண்டுமென்ற நோக்கத்துடன் ஏற்படுத்தப்படும் உரிமை நிறுத்தச் சட்டம் அமலில் இருக்கும்போது, அன்னார் விடுதலை பெறுதலென்பது முயற்கொம்பேயாகும். ஆனால், உடலுரிமை நிறுத்தச் சட்டம் காலாவதியாகின்ற அக் கணத்திலேயே, அத்தகையோர் உடல் உரிமைக் கட்டளை ஒன்றைக் கோரலாம். அதன்மூலம் விடுதலைபெற்று, விசாரணைக்குக் கொண்டு வரப்படலாம். அல்லது சிறையினின்றும் நிரந்தரமாகவே விடுதலைபெறினும் பெறலாம். நாம் சான்றாக எடுத்துக்கொண்ட வழக்கில் சிறையிடப்பட்டவர் சட்டப்படி எந்த விதமான குற்றமும் செய்யாதவர். உண்மையில் குற்றம் செய்தவர்கள் அமைச்சரும் அவர்தம் துணையதிகாரிகளுமேயாவார். எனவே, உடலுரிமைச் சட்ட நிறுத்தம் காலாவதியான உடனே, கைதியானவர் அவ் வதிகாரிகள்மீது சட்டத்தைமீறிய குற்றம்சுமத்தவும் வழக்குதொடரவும் வழியுண்டு. சட்டமுறைமையன்றி மேற்சொல்லப்பட்டவர் கைதுசெய்யப்பட்டபோது, உடலுரிமைச் சட்டம் ஓரளவேனும் வழக்காற்றிலில்லை எனக் கூறி, அதிகாரிகள் யாரும் தப்பித்துவிடமுடியாது. அது எப்படியாயினும், உடலுரிமைச் சட்டம் நிறுத்திவைக்கப்பட்டுள்ளபோது, ஐயத்துக்கிடமான ஆட்களை எல்லாம் பிடித்துச் சிறையில் தள்ள அரசாங்கத்துக்கு அதிகாரமுண்டு என்ற நிலைமையானது நீடிக்கும்போது, சட்டவிரோதமான செயல்கள் ஒரு சிலவேனும் அல்லது பலவேனும் நடைபெறுவது சாதாரணமாய் எதிர்பார்க்கக் கூடிய தொன்றேயாகும். அத்தகைய சட்டவிரோதமான செய்கைகளை அமைச்சர்கள் செய்யாவிடினும், அவர்களின் பதிலாட்கள் (Agents) கண்டிப்பாய்ச் செய்திருப்பரென்பது திண்ணம். இன்னும் ஒரு படி

மேலே சென்று, சொல்லப்புகுவோமேயானால், உடல் உரிமைச் சட்டம் நிறுத்திவைக்கப்பட்டுள்ளபோது, அரசாங்கத்தார் அரசியல் கண்ணோட்டத்தில் உசிதமானவை என நினைத்துச்செய்யும் காரியங்கள், பின்னர்ச் சற்றுக் கண்டிப்பாகப்பார்க்கும்போது, சட்டமுறைமைக் கொவ்வாதனவாகவும் இருக்கக்கூடும் எனலாம். எனவே, தனிமனித சுதந்தரத்தின் மிகமுக்கியமானதோர் உத்தரவாதத்தை அழிக்க முன்வரும் பாராளுமன்றமானது, தனிநபர்களின் உரிமைகள் நாட்டின் நலனை முன்னிட்டு ஒத்திப்போடப்படவேண்டிய, ஒரு நெருக்கடியான காலம் வந்துவிட்டதென்பதை, விவேகத்தோடோ அல்லது விவேகமின்றியோ வற்புறுத்திக் கூறவேண்டும். அதிகாரிகள் அத்தகைய ஒரு நம்பிக்கையின் விளைவாகவே, மக்களின் உரிமைகளை நிறுத்திவைக்கிறார்கள் என்பது மக்களுக்குத் தெரியாவிடில், உரிமை நிறுத்தச் சட்டத்தின் நோக்கமே பாழாய்விடும். அதோடு அச் சட்டத்தை அமல்நடத்தும் அதிகாரிகள், தங்கள் பணியிலீடுபடும்போது, தீய எண்ணங்களுக்கும் ஊழலான நோக்கங்களுக்கும் இடங்கொடாதிருக்கும்வரை, அரசாங்கத்தின் உயர் கொள்கை ஒன்றை நடைமுறையில் நடத்திவைப்பவர்களாவர் என்பதை நன்கு உணரவேண்டும். தாங்கள் செயலாக்கிவரும் சட்டமானது, அரசாங்கக் கொள்கையொன்றின் உருவகமேயன்றி வேறன்று என்பதை அவர்கள் அறியவேண்டும். அக் கொள்கையைச் செயலாக்கும்போது, அவர்கள் நடந்துகொள்கின்ற விதமானது, சட்டத்தை மீறுவதுபோல் தோன்றலாம். சட்டவியல்படிப் பார்த்தால் அது தவறாகவும் இருக்கலாம். இருப்பினும், பொதுநலனை முன்னிட்டு அரசாங்கம் கைக்கொள்ள முன்வந்துள்ள சிறப்பதிகாரங்களையே, தாங்கள் ஒரு கருவியாக நின்று செலுத்துவதாக அவர்கள் நன்கு உணரவேண்டும். பொது நன்மையை முன்னிட்டே அத்தகைய யதேச்சாதிகாரங்களை உடலுரிமைச் சட்டநிறுத்தமானது, நிர்வாக அரசாங்கத்துக்கு வழங்கியுள்ளதென்பதையும், அச் சட்டத்தை அமல் செய்யும்போது, வெளிப்பார்வைக்குச் சட்ட விரோதமாகக் காட்சியளிக்கும் காரியங்களைத் தாங்கள் செய்யநேர்ந்தாலும், சட்டத்தைமீறிய குற்றத்துக்காகத் தாங்கள் தண்டிக்கப்பட நேராது என்ற உறுதிமொழியை, அரசாங்கம் அவ் வதிகாரிகளுக்கு அளிக்கவேண்டும். அத்தகைய உத்தரவாதத்தையே, நிர்வாக அதிகாரிகள், பொறுப்பு விலக்களிப்புச் சட்டத்தின்மூலம் எதிர்பார்க்கிறார்கள். அதுவும் உரிமை நிறுத்தச் சட்டம் காலாவதியாவதற்கு முன்னமேயே, அச் சட்டமானது, அரசாங்கத்துக்கு அளிக்கும் சிறப்பதிகாரங்களின் துணைகொண்டு செயலாற்றிய அல்லது செயலாற்ற எண்ணிக்கொண்டுள்ள அதிகாரிகளனைவரையும், அத்தகைய செயல்களால் அவர்களுக்கு நேரக்கூடிய எவ்வித ஆபத்துகளினின்றும் பாதுகாக்கப்படுவாரென்ற உறுதியளிக்கக்கூடிய பொறுப்பு விலக்களிப்புச் சட்டத்தைப் பாராளுமன்றம் இயற்றிவிட வேண்டுமென நிர்வாகிகள் அனைவரும் எதிர்பார்க்கிறார்கள். அவர்கள் அங்ஙனம் எதிர்

பார்த்ததில் ஏமாற்றம் எதுவும் எப்போதும் ஏற்பட்டதில்லை. ஏனெனில், உடல் உரிமைச் சட்டமானது நீண்டநாட்களுக்கு நிறுத்தி வைக்கப் படும்போதெல்லாம், அதைத் தொடர்ந்து பொறுப்பு விலக்களிப்புச் சட்டமொன்றைப் பாராளுமன்றமானது உடனுக்குடன் இயற்றிவிடுவது வழக்கமாகிவிட்டது. நாம் மேலே குறிப்பிட்ட மூன்றும் ஜார்ஜ் காலத்திய சட்டமானது (34 Geo. III C. 54) 1794ஆம் ஆண்டுமுதல் 1801ஆம் ஆண்டுவரை ஆண்டுக்கொருமுறை மீண்டும் புதுப்பிக்கப் பட்டுவந்தது. இங்ஙனம் அது சுமார் ஏழு ஆண்டுகளுக்கு நாட்டில் அமல் செய்யப்பட்டது. இறுதியாகச் சொல்லப்பட்ட ஆண்டில், இன்னொரு சட்டமானது ஏற்பட்டு (41 Geo. III C. 66,) அதன்மூலம் 1793ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் முதல்நாளிலிருந்து தேசத் துரோகக் குற்றத்துக்காகவும் அல்லது தேசத் துரோக நடவடிக்கைகளில் ஈடுபட்டதாக ஐயுறப்பட்டதற்காகவும் எவரையேனும் கைப்பற்றியவர் களும் சிறைசெய்தவர்களும் அல்லது காவலில் வைத்தவர்களும் அங்ஙனம் செய்ததற்காக ஏற்கவேண்டிய சட்டப் பொறுப்புகளி னின்றும் விடுவிக்கப்பட்டனர், உடலுரிமை நிறுத்தச் சட்டமும் அதைத்தொடர்ந்து ஏற்படக்கூடிய பொறுப்பு விலக்களிப்புச் சட்டமும் சேர்ந்து, உண்மையில் மக்களுடைய உடலுரிமையில் பெருமளவுக்குத் தலையிடுகின்றன என்பதை ஒவ்வொருவரும் நன்கு அறிவர். தேசத் துரோகக் குற்றம் சாட்டப்பட்டவர்கள், தங்களை விரைவில் விசாரணைக்குக் கொண்டுவரவேண்டும் என்று கூறுகிற ஓர் உரிமையை நிறுத்திவைத்தல், என்ற சிறிய அளவில்மட்டுமே, மேற்சொன்ன சட்டங்கள் தனி மனித உரிமைகளில் தலையிடுகின்றன என்று கருதுவதற்கில்லை இன்னும் மிகப் பெரிய அளவில் அவை மக்களின் உரிமைகளில் தலையிடுவதைக் காணலாம். இவ் விரு சட்டங்களும் சேர்ந்து நிர்வாக அரசாங்கத்துக்கு ஏராளமான சிறப்பதிகாரங்களைத் தந்துவிடுகின்றன. இருப்பினும், நடை முறையில் பொறுப்பு விலக்களிப்புச் சட்டத்தினால் ஏற்படும் பயன்களைக் கட்டுப்படுத்தக்கூடிய ஓரிரு சூழ்நிலைகளும் நமது கவனத்திற்குரியன. முதலாவதாக, அச் சட்டமானது எதிர்காலத்தில்மட்டுமே பயனளிக்கக் கூடியது என்பதையும், அப் பயனும் நிச்சயமாக ஏற்படும் என்று நம்ப முடியாது என்பதையும் நாம் அறியவேண்டும். அதிகாரிகள் தங்கள் அதிகாரங்களைத் தவறான வழிகளில் பயன்படுத்திவிட்டார்கள் என்று பொதுமக்களிடையே ஒரு சிறு ஐயம் ஏற்பட்டுவிட்டாலும்கூட, உடல் உரிமைச் சட்டமானது நிறுத்திவைக்கப்பட்டிருக்கும்பொழுது செய்யப் பட்ட காரியங்கள் அனைத்துக்கும், ஏற்கவேண்டிய பொறுப்புகளி னின்றும் பாராளுமன்றமானது, விலக்களிக்க முடியாது என்பதையும் அறியவேண்டும். மேலும், இச் சட்டம் அளிக்கும் பாதுகாப்பானது, சட்டத்தில் வருகின்ற நிபந்தனைகளைப் பொறுத்தே அமைவன. சட்டத்துக்கு விரோதமாகவும், முறையில்லாமலும், கொடுமையாகவும் அல்லது கடுமையாகவும் நடந்துகொண்ட மனிதர்கள், இச் சட்டத்தின்

மூலம் பெறுகின்ற பாதுகாப்பானது. இதில்வரும் நிபந்தனைகள் அல்லது கூறுபாடுகள், எவ்வளவு விரிவாகவும் அல்லது குறுகலாகவும் பொருள் படுத்தப்பட முடியும் என்பதைப்பொறுத்தே அமைவன. சான்றாக 1801ஆம் ஆண்டுச் சட்டமானது. தீங்கிழைத்த அதிகாரிகளுக்கு மிகச் சிறிய அளவிலேயே பாதுகாப்பை வழங்குகிறது. தேசத் துரோகத்திற் காகவும் தேசத் துரோகக் காரியங்களில் ஈடுபட்டதற்காகவும் குற்றம் சாட்டப்பட்ட ஒருவரை, கிரேட் பிரிட்டன் நாட்டில் கைப்பற்றவும், சிறையிடவும், காவலில் வைக்கவும்கோரி, கட்டளையிடுதல், ஆணை யிடுதல், வழிகாட்டல், ஆலோசனை கூறல் போன்ற செயல்களில் ஈடுபட்ட அதிகாரிகளை மேற்சொன்ன சட்டமானது, அச் செயல்களைச் செய்தற் காக, அவர்கள்மீது எந்த நடவடிக்கையும் எடுக்கப்படாதவாறு பாது காக்கிறது என்பது உண்மையே. சட்டத்தைப் பெயரளவில் மீறியவர் களுக்கும் முறைதவறி நடந்துகொண்டவர்களுக்கும் இச் சட்டம் பாது காப்பு அளிக்கிறது என்பதில் ஐயமில்லை. ஆனால், பழிவாங்கும் எண்ணத் தோடோ அல்லது பலவந்தமாகப் பொருள்பறிக்கும் எண்ணத்தோடோ, செய்யப்பட்ட காரியத்தினின்றும், மேற்சொன்ன சட்டத்தின்மூலமாக எவ்விதப் பாதுகாப்பையும் எவரும் பெறமுடியாது. உடலுரிமை நிறுத்தச் சட்டம் என்கிற போர்வையுள் நுழைந்துகொண்டு, மேற் சொன்ன காரியங்களில் ஈடுபடுவோர்கள், சட்டத்தை மீறிய குற்றத்துக்காக நடவடிக்கை எடுக்கப்படத் தக்கவர்கள். பொறுப்பு விலக்களிப்புச் சட்டத்தைக் காட்டி, அதிகாரிகள் எவரும் தாங்கள் செய்த தீங்குகளுக்காக நியாமாக ஏற்கவேண்டிய பொறுப்பு களினின்றும் தப்பித்துக் கொள்ள முடியாது. 1793ஆம் ஆண்டு முதல் 1801ஆம் ஆண்டுக்குள் வரைதுறையின்றிச் சிறைக்கைதி ஒருவரை வதைத்தவர்கள், மனம்போனபடி தண்டித்தவர்கள், அரசியல் கைதி ஒருவரைச் சிரச்சேதம் செய்தவர்கள் யாவரும் மேற்சொன்ன சட்டம் அமலில் இருக்கும்போதுகூட, அவரவர் செய்த குற்றத்துக்கேற்ற தண்டனையைப் பெற்றிருப்பார்கள் என்பதில் ஐயமில்லை, இறைமை வாய்ந்த பாராளுமன்றத்தால் ஏற்படுத்தப்படும், பொறுப்பு விலக்களிப்புச் சட்டத்தின் கடுமையற்ற, மிதமான தன்மையை உணர்ந்து போற்ற விழைவோர், 1801ஆம் ஆண்டுப் பொறுப்பு விலக்களிப்புச் சட்டத்தை ஜமெய்க்கா தீவின் சட்டசபையால் 1865ஆம் ஆண்டில் ஏற்படுத்தப் பட்ட ஒரு சட்டத்தோடு ஒப்பிட்டுப் பார்க்கவேண்டும். அச் சட்ட மானது, அத் தீவின் ஆளுநரான ஐரி (Eyre) என்பவர் கலகமொன்றை அடக்குவதற்காக எடுத்த நடவடிக்கைகளனைத்தையும் சட்டரீதியா னவை என அறிவிக்கிறது. சட்டத்துக்கு விரோதமாக அவர்செய்த அத்தனை செயல்களுக்காகவும், ஏற்கவேண்டிய எல்லாப் பொறுப்புகளி னின்றும் அவர் விலக்களிக்கப்படுகிறார். பொறுப்பு விலக்களிப்புச் சட்ட மானது சட்டமுறைமைக்கொவ்வாத செய்கைகளைச் சட்ட முறைமைக் கொத்த செயல்களாக மாற்றும் தன்மையது என்றாலும், அதுவும் ஒரு

சட்டமே என்பதைக் குறிப்பாக நினைவில் வைத்துக்கொள்ளவேண்டும். அதன் விளைவால், நாட்டில் ஏற்படும் யதேச்சாதிகாரமானது, வேறு நாடுகளில் நெருக்கடி காலத்தில் ஏற்படும் அரசாங்க யதேச்சாதிகாரத்தினின்றும் அடிப்படையிலேயே வேறுபட்டதொன்றாகும். இராணுவச் சட்டத்தைப் பிரகடனம் செய்வதாலும், முற்றுகை நிலை ஏற்பட்டு விட்டதாகச் செய்யப்படும் அறிவிப்புகளாலும் நிர்வாக அரசாங்கமானது, நாட்டின் சட்டங்களை இயங்கவிடாமல் தடுக்கின்ற செயலுக்கும், மேற்சொன்ன விலக்களிப்புச் சட்டம்மூலமாக அரசாங்கம் தன்னிச்சையாகச் செயல்படுவதற்கும் அடிப்படையிலேயே வேறுபாடு உள்ளது. விலக்களிப்புச் சட்டத்தின் துணைகொண்டு, அரசாங்கம் யதேச்சையான இறையதிகாரத்தைச் செலுத்துகின்றது என்றாலும், அவ் விறையதிகாரமானது பார்ளுமன்றத்தைச் சேர்ந்ததாகும். நாட்டில் சட்டப்படி நிலவும் இறைமையானது, பாராளுமன்ற இறைமையாகத் திகழும் வரை, அரசின் செய்கைகளனைத்தும் முறையான சட்டங்களின் தன்மையைப் பெற்றுவிடுகின்றன. சட்டத்தின் இறைமையானது, வெளிப் பார்வைக்கு மட்டுமன்றி, உண்மையிலேயும் நாட்டில் நன்கு நிலவி வருகிறதென்பதற்கு, இதைவிடச் சிறந்த சான்று வேறொன்று வேண்டுவதில்லை எனலாம்.

# 6. கருத்து வெளியீட்டு உரிமை[1]

## (The Right to Freedom of Discussion)

### கருத்து வெளியீட்டு உரிமை

'மனிதனின் உரிமைகள்பற்றிய அறிவிப்பும்',[2] 1791ஆம் ஆண்டுப் 'ஃபிரெஞ்சு அரசியலமைப்புத் திட்டமும்' (Constitution) கருத்து வெளியீட்டுரிமைபற்றியும் பிரசுர உரிமைபற்றியும் (liberty of the Press) பெரிதும் பறைசாற்றுகின்றன. ஃபிரெஞ்சு நீதிமுறைச் சட்டவியலின் (jurisprudence) சிறந்த கோட்பாடுகள் என, அவை இன்றும் ஃபிரெஞ்சுப் பாடப்புத்தகங்களில் மேற்கோள்களாகக் காட்டப்படுகின்றன.[3]

### பிறநாட்டு அரசியல் அமைப்புத் திட்டங்களில் காணப்படும் கொள்கைகள்

தன் கருத்துகளையும். சிந்தனைகளையும் மற்றவர்களுக்கு எடுத்துக்கூறவும் வெளியிடவும் இருக்கின்ற உரிமையானது, ஒரு மனிதனுக்குள்ள உரிமைகளிலெல்லாம் தலைசிறந்தது எனலாம். எனவே, இங்கு ஒவ்வொரு குடிமகனும் விருப்பம்போல் தன் கருத்துகளைப் பேசவும், எழுதவும், பிரசுரிக்கவும் உரிமை உண்டு. சட்டத்தை மீறுகின்றமுறையில் மட்டுமே அவ் வுரிமையைக் கையாள இயலாது.[4]

இது ஒவ்வொருவருக்குமுள்ள இயற்கையான சிவில் உரிமை என்று அரசியலமைப்பில் உத்தரவாதமளிக்கப்பெறுகிறது. ... ஒவ்வொரு மனிதனும் இதன்மூலம் தான் நினைத்ததைப் பேசலாம்; எழுதலாம்; நூல்

[1] வேட், பிலிப்ஸ் (Wade and Phillips) என்ற இருவர் எழுதிய, முன்பே கூறப்பட்ட நூல், Pt. viii அத். 3-ஐப் பார்க்கவும்.

[2] Duguit et Monnier, Les Constitutions et les principles lois politiques de la France depuis 1789 (1898) Constitution du 3 செப்டம்பர் (1791) பக். 1.

[3] Bourguignon, Elements generaux de Legislation francaise (1873) பக். 468.

[4] Declaration des droits art. II, Plouard Les Constitutions francaises (1881-1876) பக். 16; Duguit et Monnier, op. cit. பக். 1.

வடிவில் பிரசுரிக்கலாம். இங்ஙனம் கருத்துகளை வெளியிடுகின்ற போது, முன்பாகவே தணிக்கை செய்யப்படுவதென்பது இங்குக் கிடையாது.[1]

பெல்ஜியம் நாட்டுச் சட்டத்திலும், பிரசுர உரிமையானது அரசியல் அமைப்பின் அடிப்படையானதொரு சட்டமாகப் பேசப்படுகிறது.

**18ஆவது விதி:** இங்கு அச்சகங்கள் உரிமையுடன் விளங்குகின்றன. எழுத்தாளர்கள், நூல் வெளியிடுவோர், அச்சகத்தார் யாவர்மீதும் எந்த விதமான கட்டுப்பாடும் நிர்ப்பந்தமும் கிடையாது. ஆசிரியர் ஒருவர் பெல்ஜியவாசியாக இருப்பாரேயானால், அவரது கருத்தைப் பிரசுரிப்பவர்களும், அச்சகத்தாரும், விநியோகஸ்தர்களும் எவ்விதமான நீதிமன்ற நடவடிக்கைகளுக்கும் உட்படுத்தப்படமாட்டார்கள்.[2]

### கருத்து வெளியீட்டு உரிமையானது, ஆங்கிலச் சட்டத்தில் காணப் படாததொரு கொள்கை

கருத்து வெளியீட்டுரிமை, பிரசுர உரிமை ஆகிய இவைபற்றிய கருத்துகளைப் ஃபிரெஞ்சுப் புரட்சியாளர்களும், பெல்ஜிய அரசியல் அமைப்பாளர்களும் இங்கிலாந்திலிருந்தே கடன் வாங்கியுள்ளனர். எனினும், அந் நாடுகளில் அவை அரசியலமைப்பில் அமைக்கப்பட்டுள்ள வகைக்கும், இங்கிலாந்தின் அரசியலமைப்பில் அவை காணப்படுகிற முறைக்கும் பெரியதொரு வேறுபாடு உள்ளது. இதைப் பலபேர் உணர்வதில்லை. ஆங்கிலச் சட்டங்களில் இவை எங்ஙனம் அமைந்துள்ளன என்பதுபற்றி, பலருக்குத் திட்டவட்டமான கருத்து கிடையாது. ஏதோ அரைகுறையாகவே அதைப்பற்றிப் பலர் அறிந்து உள்ளதாகத் தெரிகிறது. ஏன், ஆங்கிலேயர்களுக்குக்கூட அதுபற்றி ஒரு தெளிவான அறிவு இல்லை என்றே கூறலாம். மேற்கூறப்பட்ட இரு உரிமைகளும் ஃபிரெஞ்சு நாட்டில் 1791ஆம் ஆண்டு தோன்றி நின்றழிந்த (ephemeral) அரசியல் அமைப்பிலும், பெல்ஜிய அரசியலமைப்பிலும் காணப்பட்டவாறே, இங்கிலாந்திலும் அதன் அரசியலமைப்பின் ஒரு பிரிக்கமுடியாத பகுதியாகவும், அதன் அடிப்படைக் கொள்கையாகவும் திகழ்வதாகப் பலர் கருதுகின்றனர். மேலும், இங்கு வாழும் ஒவ்வொருவரும் எதை வேண்டுமானாலும் அவரவர் விருப்பம்போல் பேசவும் எழுதவும் உரிமை பெற்றவர்கள் என்றும், அவ் வுரிமையை நீதி மன்றங்கள் ஒப்புக்கொள்கின்றன என்றும் பலர் நினைக்கின்றனர். அதுவும், சிறப்பாக நாட்டின் அரசியல், சமுதாய, சமயத் தலைப்புகளை யொட்டி, யாவரும் அவரவர் பிரியம்போல் பேசலாம் அல்லது எழுதலாம் என்ற உரிமையை, நீதிமன்றங்கள் ஏற்றுக்கொள்கின்றன என அவர்கள்

[1] Op. cit ; p. 18 ; op. cit., P. 4.

[2] Constitution de la Belgique, art. 18.

எண்ணுகின்றனர். இந்த எண்ணமானது ஓரளவு நியாயமே. எனினும், அடிப்படையில் அது தவருன தொன்றேயாகும். ஆங்கிலேயரின் நவீன வாழ்க்கைமுறையில் காணப்படும் ஒருசில பழக்கங்களைப் பார்க்கும் போது, இவ் வெண்ணம் சரியானதுபோல் ஒருவருக்குத் தோன்றலாம். ஆனல், உண்மையை அது ஓரளவு மறைக்கின்றது. அதன் விளைவாக ஆங்கிலச் சட்டங்களின் இயல்பை, உள்ளவாறே அறிய விரும்பும் மாணவர்கள், அச் சட்டம் உண்மையிலேயே எத்தகைய கண்ணேட்டத் துடன், 'கருத்து உரிமையையும்' இன்னும் சரியாகக் கூறப்போனல், 'கட்டற்ற கருத்து வெளியீட்டு உரிமையை'யும் மதிக்கிறது என்பதைச் சரிவர அறியமுடியாமற் போய்விடுகிறது. ஒவ்வொரு வழக்குரைஞ ருக்கும் நன்கு தெரிந்துள்ளபடி, 'கருத்து வெளியீட்டு உரிமை', 'பிரசுர உரிமை' போன்ற சொற்ருெடர்கள், ஆங்கிலப் பாராளுமன்றச் சட்ட நூல்களில் காணப்படாதவையாகும். அதேபோன்று பொதுமைச் சட்டத்தின்[1] முக்கியக் கோட்பாடுகளாகவும் அவை விளங்குவதில்லை. அப்படிப்பட்ட கலைச் சொற்கள் நம் நீதிபதிகளால் முற்றிலும் அறியப் படாதவை எனலாம். கருத்துரிமை, பேச்சுரிமை இவைபற்றிய பேரறி விப்புகள், நம் நாட்டில் எப்பொழுதுமே வெளியிடப்பட்டதில்லை. இங்குள்ள உண்மைநிலை என்ன என்பதை அறிய விரும்புவோர், அவதூறுச் சட்டம் (law of libel) பற்றி எழுதப்பட்டுள்ள சிறந்ததொரு கட்டுரையில் அதைக் காணலாம். இங்குள்ள நிலைமையை அப்படியே படம்பிடித்துக் காட்டுவதில், அக் கட்டுரைக்கு நிகர் வேறென்றில்லை எனலாம். அக் கட்டுரை கூறுவதாவது :

**ஒருவர் தமது கூற்றின்மூலம் சட்டத்தை மீறியதாகத் திட்டமாக நிரூபிக்கப்பட்டாலொழிய, எவரையும் எவ்விதமான தண்டனைக்கும் உட்படுத்தமுடியாதவாறு ஆங்கிலச் சட்டம் பாதுகாப்பளிக்கிறது.**

ஒருவர் தாம் எண்ணியதை எண்ணியாங்கு, விருப்பம்போலப் பேசவும், எழுதவும், வெளியிடவும் இன்றைய சட்டமானது இசைவளிக்கிறது. ஆனல், இவ் வுரிமையைத் தவருனமுறையில் பயன்படுத்துவோர் தண்டனைக்குள்ளாவது உறுதி. ஒருவர் இன்னெரு வரை அநியாயமாகத் தாக்கிப்பேசுவதால், அவரது புகழுக்கு மாசு ஏற்படுத்துவாரேயானல், அங்ஙனம் மாசு கற்பிக்கப்பட்டவர் தம் நற்பெயரைக் கெடுத்த மனிதர்மீது, மான இழப்பீடு கோரி வழக் கொன்றைத் தொடுக்கலாம். அல்லது ஒருவர் இன்னெருவரைத் தாக்கிப் பேசிய சொற்கள், எழுதப்பட்டோ அல்லது அச்சிடப்பட்டோ வெளி யிடப்படுமானல் அதுவும், அவை நெறியின்மையையும், தேசத்துரோ கத்தையும் உட்கொண்டிருக்குமானல், அவர்மீது எவருமே வழக்கு தொடர உரிமையுண்டு. வழக்கு தொடரப்பட்டாலும் அல்லது செய்தி

[1] இருப்பினும் கேம்ப்பல் பிரபுவின் அவதூறுச் சட்டத்தின் (1843) முகப் புரையில் இவை காணப்படுகின்றன.

அறிவிக்கப்பட்டாலும், நீதி மன்றங்கள் அத்தகையவரை ஒழுங்கு தவறிய குற்றத்துக்காக (misdemeanour) விசாரணை செய்யலாம்.'[1]

எனவே, இந் நாட்டில் ஒருவர் எதைவேண்டுமானாலும் அவரது விருப்பப்படி பேசவும், எழுதவும் உரிமை உண்டென்பதும், ஆனால், அதேசமயத்தில் ஒருவர் சட்டத்துக்கு முரணான கூற்றுகளை வெளியிட்டால் (வாய்ச்சொல் மூலமாகவோ அல்லது எழுத்துமூலமாகவோ அன்றி அச்சு மூலமாகவோ) அவர் கடுந்தண்டனைக்கு ஆளாவார் என்பதும் நன்கு பெறப்படுகின்றன. ஒருவர் சட்டத்துக்கு ஒத்த முறையில் வெளியிடக்கூடிய கூற்றுகள் எவ்வகையின என்பதுபற்றி இங்கிலாந்தில் கொள்கையளவில் நிலைநாட்டப்படுவதும், நடைமுறையில் அமல் நடத்தப்படுவதுமான கட்டுதிட்டங்களை உற்று நோக்குவோமானால், அவை பேச்சுரிமைக்கோ அல்லது எழுத்துரிமைக்கோ தனிப்பட்டமுறையில் எதுவும் சாதகமாயில்லை என்பதை அறியலாம். எல்லாவற்றுக்கும் மேலாக, பிரசுர உரிமைக்குத் தனிப்பட்ட சலுகை என்பது நம் நாட்டில் எப்போதுமே இருந்தது இல்லை. பிரசுர உரிமை என்று பேசும்போது, நாம் குறிப்பிட்ட தவணைகளில் வெளியிடப்படும் எல்லா ஏடுகளையும், சிறப்பாகச் செய்தித்தாள்களை வெளியிடுகின்ற உரிமை, நம் நாட்டில் ஒரு தனிப்பட்ட உரிமையாக மதிக்கப்படுவதில்லை. அவ் வுரிமையைப் பாதுகாக்க 'பிரசுரச் சட்டம்'[2] (press law) என்ற தனிப்பட்ட சட்டமெதுவும் நம் சட்ட நூல்களில் இடம் பெறவில்லை. தற்போது நாட்டில் இருக்கின்ற பிரசுரச் சட்டமானது, அவதூறுச்

[1] ஆட்ஜர்ஸ் (Odgers) என்பார் எழுதிய, '*நிலைத்த அவதூறும், நிலையாப் பழி தூற்றலும்*' (Libel and Slander) என்ற நூலின் முகவுரையைப் பார்க்க (3ஆவது வெளியீடு, 1896) பக்கம் 12.

[2] *இதற்கு விதிவிலக்குகள் சில உள்ளன. சான்றாக 1843ஆம் ஆண்டு ஏற்பட்ட அவதூறுச் சட்டம்,* (Libel Act) 1881ஆம் ஆண்டில் ஏற்பட்ட '*செய்தித்தாள் பதிவுச் சட்டமும், அவதூறுச் சட்டமும்*' (Newspaper Libel and Registration Act) என்ற சட்டங்களைக் காட்டலாம். ஒரு திறனாய்வாளர் சுட்டிக்காட்டியுள்ளபடி, பிரசுரச் சட்டம் என்ற தனிப்பட்ட சட்டமானது, இங்குக் கொஞ்சம் கொஞ்சமாக உருவாகி வருகின்றது. [ஃபிசரும், ஸ்டிராஹாமும் எழுதிய, பிரசுரச் சட்டம் என்ற நூலைப் பார்க்க. (Frisher and Straham, The Law of the Press (2ஆவது வெளியீடு, (1898) பக். iii] அண்மையில் ஏற்பட்ட பிரசுரச் சட்டங்கள் செய்தித்தாள் சொந்தக்காரர்களுக்கு ஓரளவு சலுகை காண்பிக்கின்றன. பொதுக் கூட்டங்களிலும் அல்லது அதுபோன்ற வேறு இடங்களிலும், ஒருவரைப்பற்றி இழிவாகப் பேசப்பட்ட கூற்றுகளை, நல்லெண்ணத்துடனேயே (bona fide) வெளியிட்டுவிடுகின்ற ஏனைய பிரசுரகர்த்தர்கள், அங்ஙனம் அவர்கள் செய்த செய்கைக்கேற்ற முழுப்பொறுப்பையும் ஏற்க வேண்டியவர்களாயிருக்க, செய்தித்தாள் சொந்தக்காரர்கள்மட்டும், ஓரளவு பொறுப்பையே ஏற்கவேண்டியவர்கள் என மேற்சொன்ன சட்டங்கள் கூறுகின்றன. [சிறப்பாக 1952ஆம் ஆண்டு அவமதிப்புச் சட்டத்தைப் பார்க்கவும். (Defamation Act 1952, ss. 4 and 7 and Schedule.] வேண்டுமென்றே இல்லாது தவறித் தற்செயலாக, ஒருவரது புகழுக்கு மாசு கற்பிக்கும்முறையில் வெளியிடப்பட்ட செய்திக்காக, ஒருவர் மன்னிப்புக் கேட்டுக்கொள்வாரேயானால், அவர் இழப்பீட்டுத் தொகை செலுத்தாமல் தப்பிக்க வழியுண்டு. பொது நன்மையை முன்னிட்டு வெளியிடப்படும் பலப்பல செய்திகளைப்பொறுத்து, செய்தித்தாள்களுக்கும் சஞ்சிகைகளுக்கும், நிபந்தனைக்குட்பட்ட சிறப்புரிமைகள் பல தற்போது வழங்குப்பட்டுள்ளன.
—பதிப்பாசிரியர்.

சட்டத்தின் ஒரு பகுதியாகவே விளங்குகிறது. எனவே, அவதூறுச் சட்டமானது, 'பிரசுர உரிமையின்' (freedom of the press) மீது என்னென்ன கட்டுப்பாடுகளை விதிக்கிறது என்பதை விழிப்புடன் ஆராய்வது, பெரிதும் பயனுடைத்தாகுமென்பதில் ஐயமில்லை. 'பிரசுர உரிமை' என்று நான் சொல்லும்போது, ஒருவர் தம் கருத்துகளை விருப்பம்போல் நூல்கள்மூலமாகவும், செய்தித்தாள்கள்வாயிலாகவும் வெளியிடுதற்கான உரிமையையே குறிப்பிடுகின்றேன்.

### தனிப்பட்டவர்களைப்பற்றிய அவதூறு

தனிப்பட்ட நபர்களைப்பற்றி, அச்சின்வாயிலாகவும், எழுத்தின் மூலமாகவும், எவராலும் வெளிப்படுத்தப்படத்தகாத தகவல்கள் நிறைய உண்டு. அத்தகைய தகவல்களை வெளியிடுவது சட்டப்படி குற்றமாகும். எனவே, ஒருவரது புகழுக்கோ, பண்புக்கோ அல்லது நலன்களுக்கோ ஊறுவிளைக்கும் நோக்கத்துடன் உண்மைக்குமாறான கூற்றுகளை வெளியிடுவதே (பொதுவாகப் பேசுமிடத்து) அவதூறு எனப்படும். அத்தகைய கூற்றினை ஒருவன் நேரடியாகவோ அல்லது மறைமுகமாகவோ விளம்பரமாக்கும்போது அல்லது சட்டவியல் கலைச் சொல்லில் சொல்வோமானால், 'வெளியிடும்போது' (publishes), அவன் அவதூறு ஒன்றை மக்களிடையே உலவவிடுகிற குற்றத்துக்கு ஆளாகிறான். எனவே, அக் குற்றத்தால் ஏற்படக்கூடிய எல்லாவித இழப்புகளுக்கும் ஏற்ற ஈட்டினைக்கோரி, அவர்மீது வழக்கு தொடரப்பட நியாயமுண்டு. தனிப்பட்ட நபர் ஒருவரது புகழுக்கு மாசுகற்பிக்கும் கூற்றுகளைக் கூறியவரும், அக் கூற்றுகளை நூல்வடிவில் எழுதியவரும், அங்ஙனம் எழுதப்பட்டதை நாடறிய வெளியிடுவதற்கு இசைவு தந்தவரும், அதை வெளியிட்டு விற்பனைக்குக் கொண்டுவரும் நூற் பதிப்பாளரும், அவற்றை அச்சிட்ட அச்சகத்தாரும், விற்பனைசெய்த வியாபாரியும் ஆகிய அனைவரும் அவதூறு ஒன்றை வெளியிட்ட குற்றத்துக்கு ஆளாகக்கூடியவர்களேயாம். எனவே, அவர்கள் ஒவ்வொருவர்மீதும் தனித்தனியே வழக்குத் தொடரப்படுதற்கு நியாயமுண்டு. ஒருவரைப் பற்றிக் கேவலமாய்ப் பொய்யாக எழுதுவது, சட்டப்படிக் குற்றமானதாகாது. அங்ஙனம் எழுதியதைப் பலரும் அறிய விளம்பரப்படுத்துவது தான் சட்டப்படி குற்றமாகும். ஒருவர்மீது பொய்யான வதந்தியை நாடறியத் தூற்றுவதே அவதூறு என்பதன் சாரமான பொருளாகும். இந்தப் பொருளில் பார்க்கும்போது, ஒருவரைப்பற்றிய பழிச்சொல்லை வேண்டுமென்றே யாவருமறிய உரக்கப் படிப்பவன்கூட, அவதூறு செய்த குற்றத்துக்கு ஆளாகிறான். அவன்மீதுகூட வழக்குத் தொடரப்படலாம். இங்ஙனம் ஒருவருக்கு ஒரு தீங்கு இழைக்கப்படுமானால், அதில் பங்குகொண்ட அனைவரும், அதனால் விளையும் பலன்களுக்குப் பொறுப்பேற்கவேண்டியவர்கள் என்பது, நாம் முன்பே குறிப்பிட்டுள்ளபடி நம் நாட்டுச் சட்டங்களின் தனிப் பண்பாகும். அவதூறு

ஒன்றை வெளியிட்டுவிட்ட ஒருவர், தாம் அதை உண்மையான நம்பிக்கையோடும், நல்லெண்ணங்களோடுமே வெளியிட்டதாகக் கூறி விடுவதால்மட்டுமே, அவரது செய்கைக்கேற்ற சட்டப்பொறுப்பை அவர் தட்டிக்கழிக்க முடியாது. தாம் வெளியிட்ட பொய்யான கூற்றை, உண்மை எனத் தாம் எண்ணிவிட்டதற்குப் போதிய காரணங்களுண்டு என்பதை எடுத்துக்காட்டுவதாலும், அவர் தமது பொறுப்பினின்றும் நழுவிக்கொள்ள முடியாது. தாம் உண்மை என்று நம்பிய பொய்க்கூற்று ஒன்றைப் பொய்யென்று தெரியாமலேயே நாடறியப் பறைசாற்றிவிட்ட பலபேர், பெரும் இழப்பீட்டுத் தொகைகளைப் பின்னர்ச் செலுத்தவேண்டி நேர்ந்துள்ளது. சான்றாக, மாபெருங் குற்றமொன்றுக்காகத் (Felony) தண்டிக்கப்பட்ட ஒருவர், அத் தண்டனையை அனுபவித்து முடிந்தபின், யாரேனுமொருவர் அவரைப்பற்றி 'தண்டிக்கப்பட்ட மாபெருங் குற்றவாளி' என எழுதினால், அதுபெரும் அவதூறாகும். A என்பாரின் பாங்கியானது பணம் பட்டுவாடா செய்வதை நிறுத்திவிட்டது என, X என்பவர் எழுதிவிட்டதாக வைத்துக்கொள்வோம். B என்பவர் அங்ஙனம் X இடம் கூறியதாகவும், X என்பவர் அதை உண்மையென்றே நம்பிவிட்டதாகவும் கொள்வோம். எனினும், X எழுதியது பொய்யாகப் போய்விடும்பொழுது, அவதூறுசெய்த குற்றத்துக்கு அவர் ஆளாகின்றார். B சொன்னதைத் தாம் உண்மையென நம்பிவிட்டதாகக் கூறுவதால், தாம் செய்த குற்றத்துக்குப் பொறுப்பு ஏற்க வேண்டியதினின்றும் அவர் தப்பிக்கமுடியாது. மேலும், ஒருவருக்குத் தீங்கு விளைவிக்கக்கூடிய கருத்து எதுவாக இருப்பினும், அதனை வெளியிடுபவர் சட்ட நடவடிக்கைகளுக்கு ஆளாகாமல் தப்ப முடியாது. திறனாய்வாளர்கள் தாங்கள் உண்மை என்று எதை நினைக்கின்றார்களோ, அதை வெளியிடுவது தவறன்று என்ற கருத்து பலரிடையே காணப்படுகின்றது. நியாயமான குறைகூறல் என்பது அவதூறன்று என்று பலர் கருதுகின்றனர். ஆனால், திறனாய்வாளர்கள் செய்தித்தாள் மூலமாகவோ வேறு வழிகளிலோ மனம்போனபடியெல்லாம் குறைகூறிக்கொண்டிருக்கலாம் என்பது தவறு. ஒவ்வொருவருக்கும் பிறரைப் பற்றி நியாயமான, உண்மையான குறைகளை எடுத்தெழுதுகின்ற உரிமையுண்டு. ஆனால், ஒரு திறனாய்வாளர், திறனாய்வு ஒன்றையே கருத்தில்கொண்டு குறைகளை எடுத்துக்காட்ட வேண்டும். ஒரு நூலை எழுதியவர்மீது திறனாய்வாளருக்கு இருக்கக்கூடிய வெறுப்பின் அடிப்படையில் திறனாய்வு அமையக்கூடாது. திறனாய்வு என்பது வெறும் தனிப்பட்ட குறைகூறலாக மாறிவிடக்கூடாது. நூலாசிரியர்மீது இருக்கின்ற கோபம் காரணமாக, அவரைப் புறங்கூறத் திறனாய்வை ஒரு கருவியாகப் பயன்படுத்திவிடக்கூடாது. அதோடு தமக்கு எவரையும் கண்டிக்கின்ற ஆற்றல் உள்ளது என்பதைக் காட்டிக்கொள்வதில் இருக்கின்ற ஆர்வம் காரணமாக, அளவுகடந்து சற்றும் தகாதமுறையில் ஒருவரைத் தாக்க

ஆரம்பித்துவிடக்கூடாது.[1] ஓர் எழுத்தாளரையோ, ஒரு கலைஞரையோ அன்றி ஒரு "நடிகரையோபற்றித் திறனாய்வு செய்கின்றவர்கள், எது தனிப்பட்ட குறைகூறல் என்பதை நன்கு வரையறுத்துக்கொள்ள வேண்டும். ஆனால், இந்த வரையறுப்பானது ஒவ்வொருவருக்கும் வெவ் வேறாகத் தெரியக்கூடும். ஒருவரைத் தாக்கியவரும் தாக்கி எழுதப் பட்டவரும் இதுபற்றி வெவ்வேறாகக் கருதுவார்களானால், அவர்கள் கருத்தில் எது உண்மை என்பதையும், எது நியாயமான திறனாய்வு என்பதையும் தீர்மானிக்கும் உரிமை, ஜூரி என்ற நடுவர் குழுவிற்கே உண்டு. ஜூரிகள் பார்த்து அவர்களின் தீர்ப்பின்மூலம், கருத்து வெளி யீட்டு உரிமையைப் பெரிதும் குறைக்க வழியுண்டு. வெளியிடப்பட்ட கூற்று ஒன்று 'உண்மையானது' என்பதால்மட்டுமே, ஒருவன் அதை வெளியிடுவதால் விளைக்கூடிய தண்டனையினின்றும் தப்பமுடியாது. தான் வெளியிட்டது உண்மையெனச் சாதிப்பதன்மூலம் அவன் தன் மீது சுமத்தப்பட்ட அவதூறு குற்றத்துக்கு ஏற்ற ஒரு பதிலைத்தரலாம், ஆனால், வெளியிடப்பட்ட தகவலானது முற்றிலும் உண்மையாகவே இருப்பினும்கூட, அதை வெளியிடுவதால் பொதுமக்களுக்கு யாதொரு நன்மையும் இல்லையென்பதோடு, கூறப்பட்டவருக்குத் தீங்கு செய்த தாகவும் அமைந்துவிட்டால், அங்ஙனம் கூறியவர் கிரிமினல் குற்றம் ஒன்றைச் செய்ததாகக் கருதப்பட்டுத் தண்டிக்கப்படலாம். X என்ற எழுத்தாளர் A என்பவர், முன்பு எப்போதோ செய்த ஒழுக்கங்கெட்ட செயல்களைப்பற்றி வெளியிடுவதாக வைத்துக்கொள்வோம். அச் செயல்கள் உண்மையிலேயே செய்யப்பட்டவையென்றாலும் கூட, A என்பவர் X என்பவர்மீது கிரிமினல் நடவடிக்கைகளை எடுக்கலாம். விசாரணையின்போது, X என்பவர் A என்பவர்மீது சுமத்திய பழி எல்லாம் உண்மையானவை என்பதை நிரூபிப்பதோடு மட்டுமன்றி A-யின் கெட்ட நடத்தையைப்பற்றிப் பொதுமக்கள் அறிந்துகொள்ள வேண்டிய அவசியம் உள்ளது என்பதையும் நிரூபிக்கவேண்டும். X என்பவரால் அங்ஙனம் நிரூபிக்க முடியவில்லை என்றால், அவர் ஒழுங்கு தவறிய குற்றத்துக்காகத் (misodemeanour) தண்டிக்கப்பட்டுச் சிறை யில் தள்ளப்படுவார். கருத்து வெளியீட்டு உரிமை, பிரசுர உரிமை இவைகளை ஒரு காரணமாகக்காட்டி, X என்பவர் தமக்குரிய தண்டனை யினின்றும் தப்பிக்க முடியாது. ஆங்கில நீதிபதிகள், ஒருவர் மேற் சொன்ன உரிமைகளின் அடிப்படையில் செய்யப்படும் எதிர்வாதங் களுக்கு ஒருசிறிதும் செவிசாய்க்கமாட்டார்கள்.

## அரசாங்கத்தைப்பற்றிய அவதூறு

தனிப்பட்ட மனிதர்களின் ஒழுக்கத்தைப்பற்றி விருப்பம்போல் கருத்துகளை வெளியிடும் உரிமையை அவதூறுச் சட்டமானது,

[1] Whistler v. Ruskin (1878), டைம்ஸ் பத்திரிகை, நவம்பர் 27. பக். 11, per Huddleston, B.

எவ்வளவுதூரம் கட்டுப்படுத்துகிறது என்பதை, இதுகாறும் பொதுவான முறையில் ஆராய்ந்தோம். இனி அரசாங்கத்தின் நடத்தையைக் கண்டிக்கும் உரிமையை, மேற்கூறிய அவதூறுச் சட்டமானது, எத்தகையமுறையில் கட்டுப்படுத்துகிறது என்பதைக் கொள்கை அளவிலேனும் ஆராயமுற்படுவோம்.

தேசத்துரோக எண்ணத்தோடுகூடிய சொற்களையோ அல்லது ஒரு கட்டுரையையோ ஒருவன் (வாய்மூலமாகவோ அல்லது வேறு வகையிலோ) வெளியிடுவானுனல், அவன் ஒழுங்குதவறிய குற்றமொன்றைச் (misdemeanour) செய்தவனுகக் கருதப்படுவான். தேசத்துரோக எண்ணம் என்பது யாதெனில், அரசர்மீதோ அல்லது அரசாங்கத்தின்மீதோ அன்றிச் சட்டப்படி அமைந்துள்ள பாராளுமன்றம், அரசியலமைப்பு இவைகளின்மீதோ அல்லது நீதி வழங்கப்படும் முறையின்மீதோ, குடிமக்களிடையே ஒரு காழ்ப்புணர்ச்சியைத் தூண்டிவிடும் எண்ணமென்று கூறலாம். மேலும், சட்டப்படி அமைந்துள்ள அரசினையும் திருச்சபையையும் சட்டரீதியான முறைகளிலன்றி வேறு வழிகளில் மாற்றியமைக்கும்வண்ணம், பிரிட்டிஷ் மக்களைத் தூண்டுகின்ற எண்ணமென்றும், நாட்டில் வெவ்வேறு வகுப்பாரிடையே மனக்கசப்பையும் பகைமையையும் வளர்க்க முற்படும் உள்நோக்கமென்றும் அதற்குப் பொருள் கொள்ளலாம்.[1] இத்தகைய உள்நோக்கத்துடன் வெளியிடப்பட்ட ஒரு செய்தியானது, எழுதப்பட்ட அல்லது அச்சிடப்பட்ட ஏடு ஒன்றில் அடங்கியிருக்குமானுல், அதை வெளியிட்டவர் தேசத்துரோக அவதூறு (seditious libel) என்ற குற்றத்துக்கு ஆளாகி விடுகின்றூர். ஆனுல், தேசத் துரோக அவதூறு எனக் கருதப்படாத கூற்றுகள் பல உள்ளன. அவற்றை வெளியிடச் சட்டம் இசைவு தருகின்றது. சான்ருக, அரசாங்கமானது தவருன பாதையில் இழுத்துச் செல்லப்பட்டுவிட்டது என்றும், இனியும் அது ஏமாறக்கூடாது எனவும் ஒருவர் எச்சரிக்கை விடுக்கலாம். அரசாங்கம் செய்ய நேர்ந்துவிட்ட தவறுகளை எடுத்துக்காட்டி, அவற்றைத் திருத்திக் கொள்ளுமாறு ஆலோசனை கூறலாம். அரசியலமைப்பில் இருக்கின்ற குறைதளைச் சுட்டிக்காட்டலாம். திருச்சபையிலும், அரசிலும் வேண்டத்தக்க மாறுதல்களை எடுத்துக்காட்டலாம். சுருங்கக் கூறப்போனுல், நாட்டில் இருக்கின்ற நிறுவனங்கள் சட்டத்துக்கேற்றமுறையில் சீர்திருத்தி அமைக்கப்படுவதற்கான உருப்படியான யோசனைகளைக் கூறுமுகத்தான், நல்லெண்ணத்துடன் வெளியிடப்படும் கண்டனங்களை எல்லாம் சட்டம் அனுமதிக்கிறது எனலாம். எனினும், 'தேசத்துரோக

[1] ஸ்டீபன் என்பார் (Stephen) எழுதிய, 'கிரிமினல் சட்டத்திரட்டு' (Digest of the Criminal Law, (6ஆவது வெளியீடு. 1904) விதிகள் 96, 97, 98-ஐப் பார்க்கவும். ஒருவரைத் தண்டனைக்குட்படுத்த வேண்டுமானுல், அவர் வன்முறைச் செயலைத் தூண்டிவிட்டதாக நிரூபிக்கப்படவேண்டும். The King v. Aldred (1909) 22 Cox. 1. The King v, Caunt (1937) குறிப்பேடுகளில் குறிப்பிடப்படாதது.—பதிப்பாளர்.

அவதூறு' என்றால் என்ன என்பதைப்பற்றிய சட்டபூர்வமான வரையறுப்பைப் பயன்படுத்தி, அரசாங்கமானது சாதாரணமாக இசை வளிக்கப்படும் பல கருத்து வெளியீட்டுரிமைகளைக் கட்டுப்படுத்த முடியும் என்பதை எவரும் எளிதில் கண்டுகொள்ளலாம். அவ் வரையறுப்பைக் கண்டிப்பானமுறையில் அமல்செய்தால், தற்போது சட்டத்துக் கொத்தவைகளாகக் கருதப்பட்டுவரும் அரசியல் கிளர்ச்சிகள் எல்லாம், சட்டத்துக்கு முரணானவை எனக் கருதப்பட்டு அடக்கியொடுக்கப்படலாம் என்றும் யாவரும் நன்கு உணர்ந்து கொள்ளலாகும்.

## சமயம், அறநெறி இவைபற்றிய சிக்கல்களைத் தீர்க்கக் கருத்து வெளியீட்டுரிமையைப் பயன்படுத்தல்

சமயம் அல்லது அறநெறிபற்றிய சிக்கல்களுக்குத் தீர்வுகாணவென்று வெளியிடப்படும் கருத்துகளின்மீதும் மேற்சொன்னவாறே கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டுள்ளன.[1] சென்ற சில ஆண்டுகளாகவே, நம்மால் மறக்கப்பட்டுப்போன தெய்வநிந்தனைச் (Law of blasphemy) சட்டத்தை நினைவுகூற வேண்டிய சூழ்நிலைகள் பல ஏற்பட்டுவருகின்றன. தெய்வநிந்தனை (blasphemy) என்றால் என்ன என்பதுபற்றிய கேள்விக்குச் சட்டத்தில் இருவகையான விடைகள் கிடைப்பது குறித்துப் பலர் பெரிதும் வியப்படைக்கின்றனர். சட்டத்தின் ஒருவகை நோக்குப்படிப் பார்க்கும்போது, பொதுவானமுறையில் கிறித்தவ சமயத்தையே மறுப்பவர்களும் அல்லது கடவுளின் இருப்பையே மறுப்பவர்களும் தெய்வநிந்தனை செய்தவர்களாகின்றனர். அங்ஙனம் மறுப்பவர்களின் வாதங்கள் நாகரிகமானமுறையில் அமைந்திருப்பினும் அல்லது பண்பில்லாமுறையில் இருப்பினும் அவற்றை வெளியிடுகின்றவர், தெய்வநிந்தனையான அவதூறு ஒன்றைக் (blasphemous libel) கிளப்பிவிட்ட குற்றத்துக்கு ஆளாக்கிவிடுவர் என்பதில் சிறிதும் ஐயமில்லை. ஒழுங்குதவறிய குற்றத்துக்காக அத்தகையோர் சிறையிடப்படலாம். சட்டத்தின் இன்னொரு நோக்குப்படிப் பார்க்கும்போது, கடவுள், இயேசுகிறித்து ஆகியோர்பற்றியும் பொது ஜெபப்புத்தகம் (Book of Common Prayer) பற்றியும் எழுதுகின்றபோது, மாந்தரின் மனங்கள் புண்படும்படி எழுதி வெளியிடுபவர்களும், நாட்டில் நிலைபெற்றுள்ள திருச்சபையின்மீது வெறுப்பை வளர்க்கும்முறையில் எழுதுகின்றவர்களும், மக்களின் ஒழுக்கத்தைக் கெடுக்கும்முறையில் கருத்துகளை வெளியிடுகின்றவர்களும், தெய்வநிந்தனையான அவதூறுசெய்த குற்றத்துக்கு ஆளாகின்றார்கள். மக்களின் மனம் புண்ணாகும்படி செய்கின்ற அத்தகைய வெளியீடுகள், அவற்றின் ஆசிரியர்கள் அவற்றை உண்மையென்றே நம்பி, அவற்றை

[1] அடிக்குறிப்பு 11-ல் சொல்லப்பட்ட நூலில் விதிகள், 178-183-ஐப் பார்க்கவும்.

உலகெங்கும் பரப்பும் நல்லெண்ணத்தோடேயே வெளியிட்டார்கள் என்ற காரணத்துக்காக, எவ்வளவுதூரம் தெய்வநிந்தனைக் குற்றத்தினின்றும் விலக்களிக்கப்படலாம் என்பது, இன்னும் பெரிதும் ஐயப்பாட்டிற்குரியதாகவே உள்ளது.[1] மேலும், கிறித்தவ சமயத்தின் உண்மையையும், தெய்வநெறி நூல்களின் (Scriptures) வாய்மையையும் மறுத்து 'எழுதியும், அச்சடித்தும், போதித்தும், ஆலோசனைகூறியும்' வருகின்ற ஒருவர், இங்கிலாந்தில் கல்வி கற்றவராயும், கிறித்தவ சமயத்தை இங்கிலாந்தில் ஒப்புக்கொண்டவராயுமிருந்தால், பாராளுமன்றச் சட்டப்படி, கிரிமினல் குற்றத்துக்கு ஆளாகநேரும் என்பதையும், அதற்காகக் கடுமையான தண்டனைக்கு உட்பட நேரும் என்பதையும் அறிந்து சிலர் பெரிதும் வியப்படையலாம்.[2] இருப்பினும், ஃபிரான்சில் கடந்த இருநூறு ஆண்டுகளுக்குமுன்பு, மனிதரின் உரிமைகளில் எல்லாம் தலையாயதோர் உரிமையாகப் பறைசாற்றப்பட்ட கருத்து உரிமை, சிந்தனை உரிமை, இயற்கையாகக் கருத்துகளை ஒருவருக்கொருவர் பரிமாறிக்கொள்ளும் உரிமை ஆகியவற்றைக் கொண்டாடிவந்ததுபோன்று, இங்கிலாந்தில் அவை கொண்டாடப்படுவதில்லை என்பதை ஆங்கில அரசியல் அமைப்பின் இயல்பை அறிந்தோர் நன்கு புரிந்துகொள்வர். பொதுமைச் சட்டத்தின் கோட்பாடுகளையும், பாராளுமன்றச் சட்டங்களின் ஆற்றலையும் உண்மையில் உணர்ந்து போற்றுகின்ற எவரும், இங்கிலாந்தின் சட்டத்தில் மேற்சொன்ன உரிமைகள், ஃபிரெஞ்சு நாட்டுச் சட்டங்களில் இடம் பெற்று உள்ளதுபோல், தனியிடம் பெறவில்லை என்பதை ஒப்புக்கொள்வர் என்பது உறுதி, மேலும், ஒரு குறிப்பிட்ட வெளியீடானது, அவதூறு இலக்கியமா; இல்லையா என்பதைத் தீர்மானிப்பது யாவர் என்ற கேள்விக்குக் கிடைக்கக்கூடிய விடையைப்பொறுத்தே, தனிமனிதரைப்பற்றியும், பொதுக்காரியங்கள்பற்றியும், பொதுக் கோட்பாடுகள்பற்றியும் வெளியிடப்படும் கருத்துகளை ஆங்கிலச் சட்டமானது, எவ்வகையில் பாதிக்கிறது என்ற கேள்விக்குரிய விடை கிடைக்குமென்பதை நாம் தெளிவாக உணரலாம். ஒரு குறிப்பிட்ட வெளியீடு அவதூறு இல்லையா என்பதைத் தீர்மானிக்கின்ற பொறுப்பை (நாம் ஏற்கெனவே குறிப்பிட்டுள்ளபடி) ஒரு ஜூரி அல்லது நடுவர் குழுவினரின் தீர்ப்புக்கே விட்டு விடுவது சாலச் சிறந்ததாகும். ஒரு குறிப்பிட்ட அவதூறு வழக்கில்

[1] ஆனால், The Queen v. Ramsay and Foote (1883) 48. L. T. 733 and Bowman v. Secular Society Ltd. (1914) A. C. 406 என்ற வழக்குகளைப் பார்க்க. அங்கே பிரபுக்கள் சபையானது, கிறித்தவ சமயத்திற்கு விரோதமான கொள்கைகளைப் பரப்புவதானது, தெய்வநிந்தனையென்பது தவிர, மற்றபடி சட்டத்திற்கு முரணான குற்றமாகாது எனத் தீர்ப்புக் கூறியுள்ளது என்பதைக் கவனிக்க.—பதிப்பாசிரியர்.

[2] மூன்றும் வில்லியம் காலத்து சட்டத்தையும் (9 & 10 Will. III c. 35) அதன் திருத்தமான மூன்றும் ஜார்ஜ் சட்டத்தையும் (53 Geo. III. C. 160) பார்க்க அதோடு, Stephen, op cit., art. 181. cf. Attorney-General Bradlaugh (1885) 14 Q.B.D. 667, at p. 719, per Lindley, L. J.

ஒரு குறிப்பிட்ட மனிதர் அவதூறுசெய்த குற்றத்துக்காகத் தண்டிக்கப்பட வேண்டுமா, இல்லையா என்பதை அத்தகைய தீர்ப்பையே முழுவதும் பொறுத்துள்ளது. வெளியிடப்பட்ட ஒரு கூற்றில் எது உண்மை, எது நியாயம், எது அதன் உட்கருத்து என்பனபோன்ற சட்ட சம்பந்தமான பல சிக்கல்களுக்கு விடையளிக்கக்கூடியவர்கள் அந் நடுவர்களே யாவர்.[1]

எனவே, இங்கிலாந்தில் கருத்து வெளியீட்டு உரிமை என்பது பனிரெண்டு பொது மனிதர்கள் அடங்கிய, நடுநிலையாளர் குழு அல்லது ஜூரி ஒன்று, எதுஎதைச் சொல்லலாம் அல்லது எழுதலாம் என்று கருதுகிறதோ அவற்றைமட்டுமே எழுதவும் சொல்லவும் இருக்கின்ற உரிமையேயன்றி வேறன்று. இத்தகைய உரிமையானது, காலத்துக்கு ஏற்ப மாறுபடுவதொன்றாகும். ஜூரிகள் கருத்துக்கு ஏற்ப, சில சமயங்களில் கட்டுப்பாடுகள் மிகக்கண்டிப்பாக இருக்கும். சில சமயங்களில் அது கட்டற்ற தாராள உரிமையாகவும் விளங்கும். சென்ற இரண்டு நூற்றாண்டுக்கால இங்கிலாந்து வரலாற்று அனுபவத்தைக்கொண்டு பார்ப்போமானால், அவதூறு சட்டத்தின்கீழ் அனுமதிக்கப்படுகிற கருத்து வெளியீட்டு உரிமையின் அளவானது, உண்மையில் பெரும்பான்மையான மக்களின் விருப்பத்திற்கேற்ப மாறிக்கொண்டே வந்துள்ளது என்பதை நன்கு அறியலாம். சமீபகாலம் வரையில் பிரசுர உரிமைக்குத் தனிப்பட்ட சலுகை எதையும் சட்டம் அனுமதித்ததாகத் தெரியவில்லை. தெய்வநிந்தனையாகவோ அல்லது அவதூறாகவோ கூறப்பட்ட ஒரு கூற்றினை, ஒரு கடிதத்திலோ அல்லது ஒரு துண்டுக் காகிதத்திலோ எழுதி வெளியிட்டாலும் அல்லது ஒரு செய்தித்தாள் மூலமாகவோ, நூல்வடிவிலோ எழுதி வெளியிட்டாலும் இரண்டும் இங்கிலாந்தின் சட்டப்படி ஒன்றாகவே கருதப்படும். பெல்ஜிய அரசியல் அமைப்பில் செய்தித்தாள் வெளியிடுவோர் அல்லது விற்பனைசெய்வோர் ஆகிய அனைவருக்கும் தனிப்பட்ட சிறப்புரிமைகளும் அதற்கான பாதுகாப்பும் வழங்கப்பட்டுள்ளன. ஆனால், செய்தித்தாள்களோடு சம்பந்தப்பட்டவர்களுக்குத் தனிப்பட்ட உரிமைகள் வழங்குவதென்பது, ஆங்கிலச் சட்டத்தின் பொதுக் கோட்பாட்டுக்குச் சிறிதும் ஒவ்வாததாகும். இந்த நோக்கில் பார்க்கும்போது, பிரசுர உரிமையானது இங்கிலாந்தில் இன்னும் ஒத்துக் கொள்ளப்படவில்லை என்று சொல்வது சிறிதும் மிகையாகாது.

[1] 'இதில் காணப்படும் உண்மை மிக எளிமையானதாகும். வெறும் சொல் அலங்காரங்களையெல்லாம் உதறிவிட்டுச் சாரமான உண்மையைமட்டும் சாதாரணப் பொது அறிவின் துணைகொண்டு பார்க்கின்றவர்களுக்கு, அது மிக எளிதில் புரியக்கூடிய உண்மையாகும். தனது நாட்டைச்சேர்ந்த பனிரெண்டு குடிமக்கள் அதாவது, ஜூரிகள் குற்றமற்றதென நினைக்கின்ற எதையும் ஒருவர் வெளியிடலாம். அவர்கள் குற்றம் உள்ளதென நினைக்கும் எதையும் ஒருவர் வெளியிட முடியாது. வெளியிட்டால் தண்டனைக்குள்ளாவர். இதுவே, இதுகாறும் சொல்லப்பட்டதன் சாரம் ஆகும். சாதாரண பொது அறிவுக்கும் புலப்படுவது இதுவே'—The King v. Cuthell (1799) 27 St. Tr. 642. at p. 675.

**பிரசுரஉரிமை என்பது, இங்கிலாந்துக்கே உரிய தனிச் சிறப்பாக விளங்குவது ஏன்?**

பிரசுர உரிமையானது பின் ஏன் ஆங்கில நிறுவனங்களுக்கே உரிய தனிச்சிறப்பியல்பாகக் கருதப்படுகிறது என்ற வினா இயல்பாகவே எழுகின்றது.

இக் கேள்விக்குரிய விடையைக் காணவேண்டுமானால், அரசாங்கத்துக்கும் அச்சகத்துக்கும் உள்ள தொடர்பை நாம் நன்கு கவனிக்க வேண்டும். ஏறத்தாழ இரண்டு நூற்றாண்டுகளாகவே அரசாங்கத்துக்கும் அச்சகத்தாருக்கும் இடையே இருந்துவரும் தொடர்பை நன்கு ஆராய்வோமானால், அதில் சட்டத்தின் 'ஆட்சி' அல்லது 'இறைமை' என்று நாம் கூறிவருவதில் அடங்கியுள்ள அத்தனைச் சிறப்பியல்புகளும் மிளிர்வதைக் காணலாம். இந்த ஒரு காரணத்தாற்றான் அச்சக வெளியீடுகள், சிறப்பாகச் செய்தித்தாள் வெளியீடுகள் சமீபகாலம்வரையில், ஐரோப்பிய நாடு எதிலும் காணப்படாததோர் உரிமையை நடைமுறையில் அனுபவித்து வந்துள்ளன எனலாம். மற்றபடி கருத்து வெளியீட்டு உரிமைக்கு இங்கிலாந்தின் சட்டமானது அளித்துள்ள தனிச்சலுகையின் காரணமாக, அத்தகைய உரிமை கிட்டியது எனக் கருதுவது தவறாகும். இவ்வாறு கூறுவது எவ்வளவு உண்மையானது என்பது இன்றைய இங்கிலாந்தில் பிரசுரங்கள் இருக்கும்நிலையை நன்கு விழிப்போடு பரிசோதனைசெய்து, பின்னர் அதைப் ஃபிரெஞ்சு நாட்டுப் பிரசுரச் சட்டத்தோடு பொருத்திப்பார்ப்பதாலும் அல்லது பதினாறு, பதினேழாம் நூற்றாண்டுகளில் இங்கிலாந்தில் பிரசுரங்கள் இருந்த நிலையோடு அதனை ஒப்பிட்டுப்பார்ப்பதாலும் எவரும் நன்கு உணர்ந்துகொள்ளலாம்.

பிரசுசுர உரிமையானது இன்றைக்கு இங்கிலாந்தில் இருக்கும் நிலையில் அதில் காணப்படும் தனிச்சிறப்புகள் இரண்டாகும். அவை பின்வருமாறு:

**இங்கிலாந்தின் தற்காலத்தே பிரசுர உரிமை இருக்கும்நிலை— தணிக்கை இல்லாமை**

முதலாவதாக: மான்ஸ்ஃபீல்டு பிரபு (Lord Mansfield) கூறுவதாவது, 'பிரசுர உரிமை என்பது ஏற்கெனவே அனுமதி எதுவும் பெறாமல், கருத்துகளை அச்சிடுவதும் அதன்பின் அதனால் விளையக்கூடிய பலன்களை ஏற்றுக்கொள்ளுவதும் ஆகும்.'[1] எல்லன்பரோ பிரபு (Lord Ellenborough) கூறுவதாவது, 'இங்கிலாந்தின் சட்டம் என்பது சுதந்தரத்தின் சட்டமாகும். இச் சுதந்தரத்திற்கேற்ப எதையும் வெளியிடுமுன், அரசாங்கத்தின் அனுமதியைப் பெறுவதென்பது இங்கு இல்லை. ஆனால், செய்தித்தாளை வெளியிடுகின்ற ஒருவர் சட்டவிரோதமாக

[1] The King v. Dean of St Asaph (1784) 3 T. R. 428 (note).

எதையேனும் வெளியிட்டுவிடின் சட்டத்தை மீறிய ஏனையோர்கள் தண்டிக்கப்படுவதுபோன்றே தண்டிக்கப்படுவர்.[1]

இந்த மேற்கோள்கள் எல்லாம் நமக்கு எதைக் காட்டுகின்றன என்றால், சட்டத்தை ஒருவன் திட்டவட்டமாக மீறினாலன்றி, அவன் எவ்விதமான தண்டனைக்கும் ஆளாகமுடியாது என்ற பொதுக் கோட்பாடானது, அச்சக வெளியீட்டுத்துறையில் நடைமுறையில் அமல் செய்யப்படுவதையே குறிக்கின்றதன்றி வேறன்று என்பதையே யாம்.[2] ஒரு மனிதன் தான் சரியென்று கருதுவதை எழுத்துமூலமாகவோ அன்றி அச்சகத்தின் வாயிலாகவோ வெளியிடுவதைத் தடை செய்யக்கூடிய இசைவுச்சீட்டு வழங்கல், தணிக்கைசெய்தல் போன்ற முறைகள் எல்லாம், மேற்சொன்ன கோட்பாட்டுக்கு முற்றிலும் முரணானவையாகும். மற்றும் அவதூறு இலக்கியம் வெளியிட்ட ஒருவரை அங்ஙனம் அவர் வெளியிட்டதற்காக அவர்மீது யாரேனுமொருவரால் வழக்கு தொடுக்கப்படுமுன்னர், அத்தகைய இலக்கியத்தை வெளியிடுவதையும், வெளியிட்டுப் பலருக்கு வழங்குவதையும் தடுக்க நீதிமன்றங்கள் உரிமைபெற்றுள்ளன என்று கூறப்படுவதும் மேற்சொன்ன கோட்பாட்டுக்கு ஒவ்வாததாகும். அதுபோன்றே செய்தித்தாள்களை வெளியிடுவோர், தக்க பெறுமானம் உள்ளவர்களாக இருக்கவேண்டும் என்பதற்காகவும், அவதூறுகளை ஒருவேளை அவர் வெளியிட்டுவிட்டால், அதற்கு ஏற்ற இழப்பீட்டை அவரிடம் இருந்து திட்டமாகப் பெறுதற்காகவும், செய்தித்தாள் உரிமையாளரிடம் இருந்து ஒரு வைப்புத் தொகையை (deposit) முன்கூட்டியே வாங்கிட வேண்டும் என்ற கருத்தும் கூட அக்கோட்பாட்டுக்கு முரணானதேயாம். செய்தித்தாள் சொந்தக்காரரை வைப்புத்தொகையைச் செலுத்தும்படி கட்டாயப்படுத்துவதும் அல்லது சஞ்சிகைகளை வெளியிடும் உரிமையின்மீது, பல கட்டுதிட்டங்களை விதிப்பதும் நியாயமற்றதென்றோ, உசிதமற்றதென்றோ அறிவுடைய மனிதர் எவரும் வாதிக்கமாட்டார்கள். பின், இங்கே வற்புறுத்தப்படுவது என்னவெனில், அத்தகைய கட்டுப்பாடுகளும் தடுப்புமுறைகளும் ஆங்கிலச் சட்டத்தில் விரவிக்கிடக்கும் ஒரு கொள்கைக்கு முரணானது என்பதேயாம், அக்கொள்கையானது, ஒருவர் சட்டத்தை மீறக்கூடும் அல்லது மீறமுடியும் என்பதற்காக அவரை அரசாங்கம் தண்டிக்க முடியாதென்பதும், சட்டத்தை மீறிய குற்றமானது திட்டவட்டமாகத் தெரிந்தால்மட்டுமே அவரது உரிமையில் தலையிடவும் அவரைத் தண்டிக்கவும் அரசாங்கத்தால் முடியும் என்பதே ஆகும். எனவே, ஒரேஒரு விதிவிலக்கைத் தவிர[3] நம்மிடையே அச்சிடுவதற்கு

[1] The King v. Cobbett (1804) 29 St. Tr. 1.

[2] முன்பு கூறப்பட்ட பக்கம் பார்க்கவும்.

[3] நாடகமேடைகளில் நாடகங்களை நடத்தப் பெற்றாகவேண்டிய அனுமதியை செம்பர்லேய்ன் பிரபு வற்புறுத்தியதை அறிய, 'நாடகக் கொட்டகைச் சட்டம்', 1843. பிரிவு 12-ஐப் பார்க்கவும்.

அனுமதிச் சீட்டு பெறவேண்டுமென்பதும் அல்லது அச்சிடப்பட்ட செய்தித்தாள்களும் பிறவும் தணிக்கை செய்யப்படவேண்டும் என்பதும் காணப்படாதவையாகும். அந்த ஒரு விதிவிலக்கும்கூட, நம்முடைய சட்டமுறைக்கு முற்றிலும் மாறுபாடான ஒருமுறையின் எச்சமே அன்றி வேறன்று. தனது கருத்துப்படி ஒரு புத்தக வெளியீட்டாரிடம் இருக்கின்ற நூல்களும், சஞ்சிகைகளும், ஏனைய தாள்களும் தேசத் துரோகமான அல்லது அவதூறான கருத்துகளை உட்கொண்டு உள்ளன என அறிவித்து, அவரது கையிருப்பைக் கைப்பற்றவும் அல்லது அழித்து விடவும் அரசாங்கத்துக்கு யாதொரு உரிமையும் இல்லை. நீதிமன்றங்கள் கூட, ஓர் அவதூறான செய்தியானது, வெளியிடப்படுவதையோ அல்லது விற்பனை செய்யப்படுவதையோ அல்லது மீண்டும் வெளியிடப்படு வதையோ தன் விருப்பம்போல் தடுத்து நிறுத்திவிடமுடியாது. அச் செய்தி வெளியிடப்படுவதால், ஒரு மனிதருக்கு ஏற்படக்கூடிய தீங்கி னின்றும் அவரைக் காப்பாற்றுவதற்கும்கூட, நீதிமன்றங்கள் அவ்விதம் தடை விதிக்க இயலாது. நீதிமன்றங்கள் அவ்விதம் தடுக்குமுன், அவ் வெளியீடானது ஜூரிகளின் முன் சமர்ப்பிக்கப்பட்டு அவதூறான செய்திகளை அது உட்கொண்டது என அவர்களால் தீர்ப்பளிக்கப்பட வேண்டும்.[1] சுருங்கக் கூறுமிடத்துச் செய்தித்தாள்களில் எழுதுகின்ற எழுத்தாளர்களும், ஏனைய மனிதர்களைப்போன்றே நாட்டின் பொதுச் சட்டங்களுக்குக் கட்டுப்பட்டவராவர். அரசாங்கமோ அன்றி நீதி மன்றங்களோ (பொதுவாகப் பேசுமிடத்து) ஒருவர் கைப்பட எழுதிய கடிதம் ஒன்றை எம் முறையில் கட்டுப்படுத்தமுடியுமோ அம் முறையில் தான், ஒரு செய்தித்தாளின் வெளியீட்டையும் தடுக்கவோ அல்லது தணிக்கைசெய்யவோ முடியும். செய்தித்தாள்களில் எழுதுகின்ற எழுத் தாளர்களின் நிலைமையும் கடிதம் எழுதுகின்றவர்களின் நிலைமையும், சட்டப்படி ஒன்றே என்று கூறிவிடலாம். வாசற்கதவு ஒன்றின்மீது தெய்வநிந்தனையான கருத்துகளைக் கிறுக்குகின்ற ஒருவனும்[2] செய்தித் தாளிலோ அல்லது ஒரு நூலிலோ தெய்வநிந்தனையான கருத்துகளை அச்சடித்து வெளியிடுவோரும் ஒரே வகையான குற்றவாளிகளாகவே இங்கிலாந்தில் கருதப்படுவர். ஒரே வகையான கொள்கைகளின் அடிப்படையிலேயே அவர்கள்மீது நடவடிக்கை எடுக்கப்படும். எனவே தான் செய்தித்தாள் உரிமையாளர்களுக்கும் அதில் எழுதுகின்ற எழுத் தாளர்களுக்கும் தனிப்பட்ட சிறப்புரிமைகள் எதுவும் இங்கிலாந்தில் கொடுக்கப்படவில்லை என்கிறோம். அவர்கள் செய்த குற்றத்திற்கான

[1] ஆட்ஜர்ஸ் (Odgers) எழுதிய, 'நிலைத்த அவதூறும் நிலையாப் பழிதூற்றலும்' என்ற நூலை (6ஆவது வெளியீடு 1929) அத். XIV பார்க்கவும். அதை அதே நூல் முதலாம் வெளியீடு (1881) பக். 13-16ல் கூறப்பட்டதோடு ஒப்பிடவும்.

[2] The Queen v. Pooley, (1857); ஸ்டீபனின் நூலில் மேற்கோளாகக் காட்டப்படுவது, Digest of the Criminal Law (7ஆவது வெளியீடு 1926) பக். 160 குறிப்பு 2.

பொறுப்பினின்றும் அவர்களை விடுவிக்கக்கூடிய எந்தவிதமான சிறப்புரிமையும் அவர்களுக்கு இங்குக் கிடையாது.[1] எந்தக் கோணத்தில் இருந்து பார்த்தாலும் பிரசுர உரிமை என்பது (இது செய்தித்தாள்களிலும் நூல்களிலும் எழுதுகின்றவர்களின் உரிமையைக் குறிக்கும்) இங்கிலாந்து நாட்டின் சாதாரண சட்டத்திற்கே கட்டுப்பட்டதென்பது நன்கு பெறப்படும் என்க.

### பிரசுர சம்பந்தமான குற்றங்கள் சாதாரண நீதிமன்றங்களிலேயே விசாரிக்கப்படுதல்

இரண்டாவதாக, பிரசுரக்குற்றங்கள் என்பன ஆங்கிலச் சட்டத்தின்படி, நாட்டின் சாதாரன நீதிமன்றங்களாலேயே அதாவது ஒரு நீதிபதியாலும் ஜூரியாலும் மட்டுமே விசாரிக்கப்படவும் தண்டிக்கப்படவும் தக்கவை என்பதாகும்.[2] முன்னிலை மீட்சிக்குப்பின்னர்[3] செய்தித்தாள்கள் மூலமாகச் செய்யப்பெற்ற குற்றங்களுக்காக அல்லது அவமதிப்பாகவோ அல்லது தெய்வநிந்தனையாகவோ செய்திகளை வெளியிட்ட குற்றங்களுக்காகத் தனிப்பட்ட நீதிமன்றங்களில் எவரும் விசாரிக்கப்பட்டதாகத் தெரியவில்லை. இது சர்வசாதாரணமாக நடைபெறும் ஒரு வழக்கமாகவே ஆங்கிலேயர்களுக்குத் தெரிகிறது. ஆனால், பிரசுர உரிமைக்கு உண்மையாகத் துணைசெய்த நடவடிக்கைகளில் இதுவே தலையாயதெனலாம். ஒரு குறிப்பிட்ட வெளியீடானது அவதூறானதா இல்லையா என்பதைத் தீர்மானிக்கும் பொறுப்பு, ஒரு ஜூரியின் தீர்ப்புக்கு விடப்பட்டிருக்கும்வரை, அதாவது பன்னிரு குடிமக்கள் அடங்கிய குழு ஒன்று எதைக் குற்றமற்றதெனக் கருதுகிறதோ அதை எவரும் வெளிடலாம் என்ற உரிமை இருக்கும்வரை, நிர்வாக நிறுவனமோ அல்லது அமைச்சரவையோ பிரசுர உரிமையைக் கட்டுப்படுத்த முயற்சி எதுவும் எடுக்கமுடியாது எனலாம். அரசாங்கத்தை மக்கள் குறை கூறும்போதுகூட, பெரும்பான்மையான குடிமக்கள் அங்ஙனம்

[1] இந்தக் கூற்றானது, 1843 ஆம் ஆண்டு ஏற்பட்ட அவதூறுகள் சட்டப்படியும், 1881 ஆம் ஆண்டில் ஏற்பட்ட செய்தித்தாள் பதிவு அவதூறுபற்றிய சட்டப்படியும், 1952-ல் ஏற்பட்ட அவதூறு சட்டப்படியும் (பக்கம் 240 குறிப்பு 2) s.7 பெரிதும் மாறுபடுத்தப்பட்டுள்ளது.

[2] செய்தி அறிப்புமூலம் கிரிமினல் வழக்குகளை விசாரிக்கும்முறையும், உண்மை என்று தெரிந்தால்மட்டும் ஒருவர் தப்பிக்க இயலாது என்ற முறையும் சேர்ந்து, 18 ஆம் நூற்றாண்டில் தேசத்துரோகமான அவதூறு வழக்கைப் பிரசுரக் குற்றத்தின் நிலைமைக்கு உயர்த்திவிட்டது. ஃபாக்ஸ் என்பவரின் அவதூறுச் சட்டம் 1792 ஆம் ஆண்டில் ஏற்படும்வரை, தேசத்துரோகமான அவதூறு வழக்குகளில் வழங்கப்படும் தீர்ப்புகளை, ஏனைய பொதுக் காரியங்களில் வழங்கப்படும் தீர்ப்புகளினின்றும் வேறுபடுத்தியே வழங்கிவந்தனர். அவதூறானது சட்டத்துக்கு உட்பட்டதா, இல்லையா என்பதைத் தீர்மானிக்கும் உரிமை நீதிபதிக்கே இருந்துவந்தது.

[3] காமன்வெல்த் நாடுகளில் பிரசுர உரிமை இருக்கும் நிலையைஅறய மேசன் (Masson) என்பார் எழுதிய, 'மில்டனின் வரலாறு' (1873) தொகுதி 3 பக்கம் 265-297 பிரசுர சம்பந்தமான குற்றங்களைத் தனிப்பட்ட நீதிமன்றங்களில் விசாரிக்கும் முறையானது, 1641 ஆம் ஆண்டில் ஏற்பட்ட விண்மீன் மண்டப நீதிமன்ற ஒழிப்புச் சட்டத்தால் நின்றுபோயிற்று. 1641 ஆம் ஆண்டு விண்மீன் மண்டப நீதிமன்ற ஒழிப்புச் சட்டத்தைப் பார்க்கவும்.

அரசாங்கம் குறைகூறப்படுவது தவறு என்று கருதினுலொழிய (உண்மை யில் சில சமயங்களில் அப்படி நடக்கக்கூடும்) அரசாங்கம் தன்னைக் கண்டித்தவர்கள்மீது, எவ்வித நடவடிக்கையையும் எடுக்க இயலாது என்பதும் இதனுல் பெறப்படும். சாதாரணமாகப் பொது எழுத் தாளர்களின் மிகைபட்ட செயல்களைக் கண்டிக்க அரசாங்கம் விரும்பு வது எப்போதெனில், அரசாங்கத்திற்கு விரோதமாக ஒரு வெறுப் புணர்ச்சியானது பரவலாகப் பெரும்பான்மையோரிடம் காணப்படும் போதேயாகும். ஆனுல், அத்தகைய சூழ்நிலையில், நடுவர்குழு ஒன்று, அவதூறுசெய்ததாக அரசாங்கத்தால் குற்றம்சாட்டப்பட்ட ஒருவர் பற்றித் தனது தீர்ப்பைக் கூறும்படி வற்புறுத்தப்படுமானுல், இயல் பாகவே குற்றம்சாட்டப்பட்டவர்மீது. அனுதாபம் கொள்ளுமென் பதில் ஐயமில்லை. எனவே, குற்றம்சாட்டப்பட்டவர் எழுதியுள்ள வாசகங்கள் தண்டனைக்குரிய அளவு அவ்வளவு கடுமையானவை அல்லவென்றும், அரசாங்கத்தின் குறைகளை நியாயமாக எடுத்துக் கூறும் அளவிலேயே அவை அமைந்துள்ளனவென்றும், அக் குழு தீர்ப்பளித்துவிடுமாயின், அதில் நாம் வியப்படைதற்கில்லை. இங்ஙனம் அரசாங்கத்தால் தேசத்துரோகமான அவதூறு (seditious libels) எனக் கருதப்படும் வெளியீடுகளை ஜூரி ஒன்று பார்த்து, அதிகாரிகளை நியாய மானமுறையில் குறைகூறும் ஏடுகளென அறிவிக்கக்கூடும். ஒரு நூற்றுண்டுக்கு முன்னர், ஜூரிகள் இம் முறையில்தான் அரசாங்கத்தின் கருத்துக்கு நேர்மாறு நடந்துகொண்டு, பொதுமக்களின் உரிமைகளைப் பாதுகாத்தனர். ஏனெனில், அக் காலத்தே ஜூரிகள் எவ் வகுப்பாரி டையேயிருந்து பொறுக்கப்பட்டனரோ, அவ் வகுப்பார் அரசாங்கத்தின் கருத்துகளுக்கு முற்றிலும் மாறுன உணர்ச்சிகளில் ஊறிக்கிடத்தனர். எனவே, அவர்கள் மக்களின் கருத்து வெளியீட்டுரிமைக்கோர் அரணுக அன்று விளங்கினர். அதுபோன்றே இன்றும் அவர்கள் விளங்குகின்றுர்களா என்பது கேள்விக்குரியதேயாகும். பன்னிரு பொதுமக்கள் அடங்கிய ஒரு குழுவின் தீர்ப்பானது, மறைமுகமான முறையில் கருத்து வெளியீட்டுரிமையை வேண்டிய அளவுக்குமட்டுமே கட்டுப்படுத்திவருகின்ற இவ் வழக்கமானது, இன்றைக்கும் குடி மக்களின் கருத்து வெளியீட்டுரிமையைப் பாதுகாத்து வருகின்றதா என்பது ஆராய்ச்சிக்குரியதொரு தலைப்பாகும். சுவையாக இருக்கக் கூடிய அத்தகைய சிந்தனையில் நான் இப்போது இறங்கத் தயாராயில்லை. ஆனுல், இதனுலெல்லாம் நமக்கு நிச்சயமாகத் தெரிகின்ற உண்மை யாதெனில், நம் நாட்டில் 'பிரசுரக் குற்றங்கள்' (press offences) என் பவை, ஏனைய அவதூறுக் குற்றங்கள்போன்றே, ஜூரிகளைக்கொண்டு விசாரிக்கப்படுகின்ற காரணத்தாற்றுன், இங்கிலாந்தில் பிரசுர உரிமை யானது, நடைமுறையில் பெருமளவுக்குப் பெறப்படுகின்றது என்பதே யாகும்.

ஏனவே, சட்டமானது நாடெங்கும் பொதுவான முறையில் எல்லாத் துறைகளிலும் செலுத்திவருகின்ற தனி ஆதிக்கத்தின் ஒரு விளைவே, இங்கிலாந்தில் பிரசுர உரிமையாகத் திகழ்கிறது எனத் துணிந்து கூறலாம். 'பிரசுர உரிமை', 'பிரசுரக் குற்றம்,' 'பிரசுரத் தணிக்கை' (liberty of the press', 'Press offences', 'censorship of the press') போன்ற சொற்றொடர்கள் எல்லாம், ஆங்கில வழக்குரைஞர்கள் அறியாதன வாகும். ஏனெனில், பிரசுரத்தின்வாயிலாக இயற்றப்படும் குற்றங்கள் ஒரு வகை அவதூறு எனக் கருதப்பட்டு, அவமதிப்புச் சட்டம் (law of defamation) மூலமாக விசாரணை செய்யப்பட்டுவிடுகின்றன.

இவையெல்லாம் இன்று நமக்குச் சர்வசாதாரணமாகவும் இயற்கை யாகவும் தோற்றமளிக்கின்றன. எனவே, இதன் இருப்பைப்பற்றிக்கூட நாம் மறந்துவிடுகின்றோம். எனினும், ஆங்கில அரசியலமைப்பின் ஒவ்வொரு பகுதியிலும் விரவிக்கிடக்கும் சட்ட அமைதியை நாம் நன்கு உணர்ந்து போற்றுவதற்கு, செய்தித்தாள்கள்மூலம் இயற்றப்படும் குற்றங்கள் எங்ஙனம் நவீன இங்கிலாந்தில் நடத்தப்படுகின்றன என்பதைப் பற்றி அறிந்து கொள்வது, பெரிதும் துணைசெய்யக் கூடுமென்பதில் ஐயமில்லை. அத்தகைய குற்றங்கள் இங்கிலாந்தில் இன்று விசாரிக்கப்படும் முறையானது, நம் நாட்டில் சட்டமானது எல்லாத்துறை களிலும் செலுத்திவரும் செல்வாக்குக்கு ஒரு தனிப்பெருஞ் சான்றாக அமையக்கூடும். அது எங்ஙனம் முடியுமென்பதை நிரூபிக்கவேண்டு மானால், நாம் இன்று இங்கு நிலவும் பிரசுர உரிமையைப் ஃபிரெஞ்சுப் புரட்சிக்காலத்துக்கு முன்னும்பின்னும் அந் நாட்டில் நிலவிய பிரசுர உரிமையோடு ஒப்பிட்டுப் பார்க்கவேண்டும். அதோடு ஏறத்தாழப் பதினேழாம் நூற்றாண்டின் இறுதிவரை இங்கிலாந்தில் நிலவிய பிரசுர உரிமையோடும் அதை ஒப்பிட்டுப்பார்த்தல் நலம். எனவே, புரட்சிக் காலத்துக்கு முன்னும்பின்னும் ஃபிரான்சிலும், 17ஆம் நூற்றாண்டின் இறுதிவரை இங்கிலாந்திலும் செய்தித்தாள்கள் எத்தகைய நிலையில் இருந்தன என்பதை மேலெழுந்தவாரியாக நோக்குவோமாக.

### ஃபிரெஞ்சுப் பிரசுரச் சட்டத்தோடு ஒப்பீடு

ஃபிரெஞ்சுச் சட்டமூலங்களை ஆராய்கின்ற ஆங்கிலேயர் ஒருவரை, வியப்புக் கடலில் ஆழ்த்தக்கூடிய இரு உண்மைகள் உண்டு. பிரசுரச் சட்டம் [1] என்பது ஃபிரெஞ்சுச் சட்டமியற்றும் நிறுவனத்தின் ஒரு

[1] பிரசுரங்கள் அல்லது அச்சக வெளியீடுகள் பிரான்ஸில், Loi sur la libarte de la presse, 29-30 Juill. 1881 என்ற சட்டத்தால் கட்டுப்படுத்தப்படுகின்றன. இந்தச் சட்டமானது, இப் பொருள்பற்றி ஏற்கெனவே இருந்த ஆணைகளையும், கட்டளைகளையும், சட்டங்களையும், அவசரச் சட்டங்களையும் ரத்து செய்தது. இந்தச் சட்டம் இயற்றப்படுவதற்கு, சற்று முன்னர், ஃபிரெஞ்சு பிரசுரத்தை முப்பதுக்கும் மேற்பட்ட பாராளுமன்றச் சட்டங்கள் கட்டுப்படுத்திக்கொண்டும், பிரசுரமூலமாகக் குற்றங்கள் செய்த எழுத்தாளர்களுக்குத் தண்டனை வழங்கிக்கொண்டும் இருந்தன. பிரசுரச் சட்டங்கள்பற்றி, டல்லாஸ் (Dalloz) என்பவர் எழுதியுள்ள நூலில் வருகின்ற 300-க்கு மேற்பட்ட பக்கங்களில் ஃபிரெஞ்சுக் குடியரசில் வழக்காற்றி

தனிப்பட்ட துறையாகவே நெடுநாட்களாக இருந்துவருகிறது இன்றும் அதே நிலைதான் காணப்படுகிறது. பிரசுரக் குற்றங்கள் ஃபிரான்சில் ஆண்டுவந்த பல்வேறு அரசாங்கத்தாரின் ஆட்சியிலும் தனித் பட்ட ஒருவகைக் குற்றங்களாகவே, ஏறக்குறைய மதிக்கப்பட்டு வந் துள்ளன. பிரசுர உரிமையைப்பற்றி இங்கிலாந்தில் முதலாம் எலிசபெத் இராணியார் காலந்தொட்டு இயற்றப்பட்டுள்ள சட்டங்களின் எண்ணிக் கையானது, அதேகாலத்தில் அதே பொருளைப்பற்றிப் ஃபிரான்ஸில் ஏற்பட்ட சட்டங்களின் எண்ணிக்கையில், பத்தில் ஒரு பங்கு அல்லது இருபதில் ஒரு பங்குகூட இருக்காதெனலாம். இரு நாடுகளிலும், 18ஆம் நூற்றாண்டிலிருந்து நிலவிவரும் நிலைமைகளை ஒப்பிடுவோமானால், அவைகளுக்கிடையே உள்ள வேற்றுமைகள் இன்னும் மிகத் தெளிவாக விளங்கும். (மிகைபடக் கூறுவதைத் தடுப்பதற்காக) அந்தத் தேதியி லிருந்து 1881 ஆம் ஆண்டுவரை ஃபிரான்சில் இயற்றப்பட்டு அமல் செய்யப்பட்டுவந்த ஒவ்வொரு சட்டத்தையும், இங்கிலாந்தில் 1700 ஆம் ஆண்டிலிருந்து இயற்றப்பட்ட ஒவ்வொரு சட்டத்தோடும் ஒப்பிடு வோமானால், இருநாடுகளுக்கும் இத் துறையில் காணப்படும் வேற்று மைகள் இன்னும் தெளிவாகுமென்பதுறுதி. அங்ஙனம் பார்க்கும்போது, ஃபிரான்சில் இன்றையக் குடியரசு ஏற்படுத்தப்பட்ட சிலகாலம்வரையி லும், சுமார் முப்பதுக்கும் மேற்பட்ட பிரசுரச் சட்டங்கள் ஏற்படுத்தப் பட்டன என்பதையும், அதேசமயம் சென்ற நூற்றாண்டின் ஆரம் பத்திலிருந்து இங்கிலாந்தில் இயற்றப்பட்ட பிரசுரச் சட்டங்கள் பனிரண்டுக்குமேல் இல்லை என்பதையும் அறியலாம். மேலும், இங் கிலாந்தில் ஏற்பட்ட சட்டங்கள், எழுத்தாளர்களின் சுதந்தரத்தில் அவ் வளவாகத் தலையிடவில்லை என்பதையும் அறியலாம்.

இந்த வேறுபாட்டுக்கான காரணம் என்னவெனில், அரசாங்கத் துக்கும் இலக்கியத்துக்கும் இருக்கவேண்டிய தொடர்பைப்பற்றி அல்லது இன்னும் சரிவரச் சொல்லப்போனால், அச்சின் வாயிலாக ஏற்படும் கருத்துவெளியீட்டுக்கும் அரசாங்கத்துக்கும் இருக்க

---

விருந்த பிரசுரச் சட்டங்கள், குடியரசு ஏற்படுவதற்குமுன்பு இருந்துவந்த சட்டங்களைவிட, எண்ணிக்கையில் மிகக் குறைந்தன என்பதை எடுத்துக்காட்டு கிறார். அச்சுக்கலை கண்டுபிடிக்கப்பட்ட காலத்திலிருந்து, 1881 ஆம் ஆண்டுவரை சிந்தனை உரிமையையும், எழுத்து உரிமையையும் கருத்து வெளியீட்டு உரிமை யையும் கட்டுப்படுத்துவதற்காக, மன்னர்களால் வெளியிடப்பட்ட ஆணைகளும், சட்டங்களும், அவசரச் சட்டங்களும், கட்டுப்பாடுகளும் ஏராளமானவை என்பதை, அவரது நூலிலிருந்து நன்கு தெரிந்துகொள்ளலாம். பின்வருவன வற்றைப் பார்க்கவும்.

Dalloz, Repertoire de Legislation et de Jurisprudence vol. XXXVI (1856) O$^{0}$ presse pp. 384-776, special; tit. i, ch. i pp 386-394 and tit ie ch. iv pp. 445-491. Cf. Supplement au Repertoire, vol. XIII (1893) V$^{0}$ pressi pp. 247-262. and pp. 271-308 cf. vol. ii 1929 v$^{0}$ presse, pp. 569, 571; Additions au Repertoire, 1988 v$^{0}$ presse p. 651. Roger et Sorel, Codes et Lois usuelles (1832), v$^{0}$ presse pp 637-652; Duguit, Manuel de Droit Public francais; Droit Constitutionnel (1907), par a 86, pp. 575-582.

வேண்டிய தொடர்ப்புபற்றி இரு நாடுகளிலும் முற்றிலும் முரணான கருத்து நிலவுவதேயாகும் எனலாம்.

1700 ஆம் ஆண்டிலிருந்தே, இங்கிலாந்திய கருத்துகளை உருவாக்கும் பணிக்கும், அரசாங்கத்துக்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை என்ற கொள்கை நிலவிவந்துள்ளது. எழுத்தாலும் அச்சிட்ட நூலாலும் வெளியிடப்படுகின்ற எல்லாவகையான அவதூறுகளையும் தண்டிப்பதொன்றே, அரசாங்கத்தின் தலையாய கடமை என்று இங்குக் கருதப்பட்டு வந்தது. எனவே, அரசாங்கமானது (பொதுவாகப் பேசும் இடத்து) இலக்கியத்தின்மீது எவ்விதமான தனிப்பட்ட கட்டுப்பாடு எதையும் இங்கு விதிப்பதில்லை. பிரசுரச் சட்டம் என்ற ஒன்று இங்கிலாந்தில் இருப்பதாகச் சொல்லவேண்டும் என்றால், அது அவதூறுச் சட்டத்தின் ஒரு பகுதியேயன்றி வேறில்லை எனலாம், அல்லது அவதூறுச் சட்டத்தின் செயலாக்கமே பிரசுரச்சட்டமாகும் என்று கூறலாம்.

ஃபிரெஞ்சு நாட்டில் பல நூற்றாண்டுகளாகவே, இலக்கியமானது அரசாங்கத்தின் கட்டுப்பாட்டுக்குள் அடங்கி வளர்ந்துவந்துள்ளது. இலக்கியத்தை ஆதரிப்பதும் கட்டுப்படுத்துவதும் அரசாங்கத்தின் மிக முக்கியமான கடமைகளில் ஒன்றாக அங்குக் கருதப்பட்டு வந்தது. இன்று, ஃபிரான்ஸில் நிலவுகின்ற சட்டங்களிலிருந்து நாம் அறிந்து கொள்ளக்கூடியவை என்னவெனில், அரசாங்கமே பலவகையிலும் கருத்து வெளியீட்டைக் கட்டுப்படுத்தியும் உருவாக்கியும் வருகின்ற தென்பதாகும். பிறரை அவமதித்தும், அவதூறுசெய்தும், தெய்வ நிந்தனைசெய்தும் எழுதப்படுகின்ற இலக்கியங்களைக் கண்டித்தும், அவற்றை எழுதியவர்களைத் தண்டித்தும் தனது கடமையைச் செய்வதோடு, அரசாங்கமானது பொதுமக்கள் கருத்தை உருவாக்குவதையும் தனது கடமையாகக் கொள்கிறது. அரசாங்கத்துக்கு விரோதமாக அபாயகரமான கருத்துகள் நாட்டில் பரவவிடாமல் தடுப்பதையும் அரசாங்கம் தனது கடமை என்று கருதுகிறது. அதனால்தான் ஃபிரான்ஸில் தனிப்பட்ட அச்சக அடக்குமுறைச் சட்டங்கள் ஏராளமாக ஏற்பட்டுள்ளன.

ஃபிரெஞ்சுப் புரட்சி ஆரம்பித்த காலம்வரையில், ஃபிரான்ஸில் இலக்கியம் அனைத்தும் உண்மையில் ஃபிரெஞ்சு அரசாங்கத்தின் கட்டுப்பாட்டுக்குள்ளேயே அடங்கிக்கிடந்தது. நூலை அச்சிடுகின்ற உரிமையும் அச்சிடப்பட்ட நூல்களையும் இதர வெளியீடுகளையும் விற்பனை செய்கின்ற உரிமையும், ஒருசில நூலகங்களுக்கே உரிய தனிப்பட்ட சிறப்புரிமையாக அல்லது தனி உரிமையாகவோ (monopoly) தான் ஃபிரான்ஸில் கருதப்பட்டு வந்தது. 1723 ஆம் ஆண்டில் ஏற்பட்ட ஒருசில பிரசுரக் கட்டுப்பாடுகளும், (reglements) இவற்றில் சில பகுதிகள் ஏறக்குறைய சமீபகாலம்வரையில் அமலில்

இருந்தன.)[1] 1767 ஆம் ஆண்டில் ஏற்பட்ட கட்டுப்பாட்டு விதிகளும் நூல்களை அச்சிட்டு வெளியிடுகிற உரிமையை, ஒரு சில அரசாங்க இசைவு பெற்ற நூலகத்தாருக்கே வழங்கின.[2] இசைவு பெற்றவர்களன்றி வேறு எவரும் நூல்களை வெளியிட்டால், அவர்களைக் கடுமையான தண்டனைகளுக்கும் மேற்கூறிய சட்டங்கள் உட்படுத்தின. மேலும், நூல்களை வெளியிடும் உரிமையானது, மிகக் கடுமையான தணிக்கைக்கு உட்படுத்தப்பட்டு வந்தது. பல்கலைக் கழகமும் (அது அக் காலத்தே சமயச்சார்புடைய ஒரு நிறுவனமாகவே இருந்தது), பாராளுமன்றங் களும், நிர்வாக அரசாங்கமும் தங்களை இழித்துக் கூறியவர்களைத் தனித் தனியே ஓரளவு கட்டுப்படுத்திவந்தனர். அரசாங்கத்தால் தடுக்கப் பட்ட நூல்களை வெளியிட்டவர்களும், அவற்றை விற்பனை செய்தவர் களும் மரண தண்டனைக்கு உட்படுத்தப்பட்டனர். கப்பலில் சிறை வைக்கப்படுதல், மரச்சட்டங்களில் பிணைத்துச் சித்திரவதை செய்யப் படுதல் (Pillory) போன்ற தண்டனைகளுக்கும் அவர்கள் சிலசமயம் உட்படுத்தப்பட்டனர். இத் தண்டனைகளினின்றும் பலர், பல தடவைகளில் தப்பித்துக்கொள்வது வழக்கம். ஆனால், ஃபிரெஞ்சுப் புரட்சியானது ஆரம்பிப்பதற்குச் சற்று முன்பு வரையிலும் இத்தகைய தண்டனைகள் நடைமுறையில் இருந்துகொண்டே வந்தன. எனவே, எழுத்தாளர்கள் பலர் உயிருக்கு அஞ்சி வெளிநாடு களுக்கு ஓடிவிட்டனர். புகழ்பெற்ற ஃபிரெஞ்சு நூல்கள் பல வெளி நாடுகளில் உருவானவையேயாகும். மாண்டெஸ்க்யூ (Montesquieu) என்பாரின் 'Esprit des Lois' என்னும் நூலானது, ஜெனீவா நகரத்தில் தோன்றியதொன்றாகும். வால்டேர் எழுதிய, 'Henriade' என்னும் நூலானது இங்கிலாந்தில் அச்சிடப்பட்டதொன்றாகும். வால்டேர், ரூஸோ (Rousseau) ஆகிய இருவரும் எழுதிய மிகச்சிறந்த நூல்களில் பல இலண்டன், ஜெனீவா, ஆம்ஸ்டர்டேம் போன்ற நகரங்களில் இருந்து தான் வெளியிடப்பட்டன. 'Philosophie de La Nature' என்ற நூலானது 1775 ஆம் ஆண்டில் பாரீஸ் உயர்நீதிமன்ற ஆணைப்படி அழிக்கப்பட்டது. அதன் ஆசிரியர் தெய்வத்துக்கும். மனிதனுக்கும் விரோதமாகத் துரோகக் குற்றம் செய்வதாக நீதிமன்றம் தீர்ப்பளித்தது. ஒருவேளை அவர் கைதுசெய்யப்பட்டிருந்தால், அனேகமாக உயிரோடு கொளுத்தப்பட்டிருப்பார். 1781 ஆம் ஆண்டில் அதாவது, ஃபிரெஞ்சு சட்டசபையான முப்பேராயம் கூடுவதற்கு எட்டு ஆண்டுகளுக்கு முன்பு, 'Histoire des Indes'[3] என்ற நூலை எழுதியதற்காக, ராயினல்

[1] See Dalloz, Repertorie de Legislation, vol. xxxvi (1856), v[0] presse, tit. i, ch. i. Cf. Roger et Sorel, Codes et Lois usuelles (1882, v[0] presse, pp. 637-652.

[2] Ibid.

[3] See Dalloz, Reprtoire de Legislation, vol. xxxvi (1856), v[0] presse, tit. i, ch. i. p. 386. Cf. Roger et Sorel, Codes et Lois usuelles (1882), v[0] presse, pp. 637-652.

(Raynal) என்பவர்மீது, தெய்வநிந்தனைக் குற்றம்சாட்டப்பட்டது. இதையெல்லாம் நாம் குறிப்பிடும்போது, ஃபிரெஞ்சுப் பழைய ஆட்சி முறையில் (Ancien Regime) தவறான நம்பிக்கைகளையும் கொள்கைகளையும் அடக்கி ஒடுக்குவதற்காக, எத்தகைய கடுமையான நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன என்பதைக் காட்டுவதற்காக அன்று. பின் என்னவெனில் 1789 ஆம் ஆண்டுவரையில் ஃபிரெஞ்சு அரசாங்கமானது நாட்டின் இலக்கிய வெளியீட்டைக் கட்டுப்படுத்துவது தனது உரிமையும் கடமையும் ஆகும் என எங்ஙனம் கருதிவந்தது என்பதை வலியுறுத்துவதே ஈண்டு நாம் குறிப்பிடவந்த முக்கியக் கருத்தாகும். மேலும், நாம் கவனிக்கவேண்டுவது இன்னொன்றுண்டு. அதாவது, 1789 ஆம் ஆண்டுவரையில் அரசாங்கமானது நிலையான இலக்கியத்திற்கும் அவ்வப்போது குறிப்பிட்ட தவணைகளில் வெளியிடப்படுகின்ற இலக்கியங்களுக்கும் (periodicals) வேறுபாடு சிறிதும் கற்பிக்காமல் அவற்றை ஒரே மாதிரியாகவே நடத்தி வந்ததென்பதாகும். 'Lettres Philosophiques' என்ற நூலானது கொளுத்தப்படவும், 'Henriade' என்ற நூலும், 'Encyclopedie' என்ற கலைக்களஞ்சியமும் மன்னரது தயவைப்பொறுத்தே வெளியிடப்படவும் நேர்ந்தனவென்று, செய்தித்தாள்களைக் கட்டுப்படுத்த என்று தனிப்பட்ட சட்டங்கள் தேவையில்லை என்றே கூறலாம். ஆதோடு அக் காலத்தே அதாவது, ஃபிரெஞ்சுச் சட்டசபையானது கூடுவதற்குமுன்பு தினத்தாள், வார ஏடு போன்ற செய்தித்தாள்கள் ஃபிரெஞ்சு நாட்டில் இருக்கவில்லை.[1]

ஃபிரெஞ்சுப் புரட்சியானது, (நாம் எதிர்பார்க்கக்கூடியபடி) அச்சக வெளியீடுகள்மீது விதிக்கப்பட்டிருந்த கட்டுப்பாடுகளையெல்லாம் நீக்கிவிட்டது. மனிதனின் உரிமைகள்பற்றிய அறிவிப்பின்மூலம் ஒவ்வொரு குடிமகனும் தன் கருத்துகளை விருப்பம்போல் அச்சிட்டு வெளியிடும் உரிமையைப் புரட்சியானது பறையறிவித்தது. அந்த அறிவிப்பில் காணப்படும் சொற்களையே, 1791 ஆம் ஆண்டு அரசியல் அமைப்பானது அப்படியே எடுத்துக் கையாண்டுள்ளது.[2] ஒவ்வொரு மனிதனும் தன் எண்ணங்களைப் பேச்சுமூலமாகவும் அச்சுமூலமாகவும் வெளியிடுவதற்கான உரிமையானது, இயற்கையிலேயே அமைந்த ஓர் உரிமை என்றும், அவற்றை வெளியிடுமுன் யாரும் அவற்றைப் பரிசோதிப்பதும் தணிக்கைசெய்வதும் தகாதகாரியம் என்றும் அவ் வரசியல் அமைப்பு கூறுகின்றது. ஆனால், அந்த உரிமைகளைப்பற்றிய அறிவிப்பும், அதனால் உத்தரவாதம் அளிக்கப்பட்ட உரிமைகளும் நடைமுறையில் ஒன்றும் பயனின்றிப் போயின. ஃபிரெஞ்சு அரசாங்கமானது, பல

[1] See Rocquain, L'Esprit revolutionnaire avant la Revolution (1878), for a complete list of 'Livres Condamnes' from 1715 to 1789 ராக்குவின் என்பவரின் நூலானது, 15 ஆம் லூயி, 16 ஆம் லூயி ஆகிய இரு மன்னர்களின் காலத்தே, அரசாங்கம் செலுத்திவந்த எதேச்சாதிகாரத்தைப்பற்றி நிறையச் செய்திகளைத் தொகுத்துக் கூறுகின்றது.

[2] முன்னால் பக்கம் (209)ஐப் பார்க்கவும்.

ஆண்டுகளாகவே நடைமுறையில் கடைப்பிடித்துவந்த ஒரு கொள்கைக்கு முற்றிலும் மாறுபட்டதொரு கோட்பாட்டையே அவ் வறிவிப்பு வெளியிட்டது எனலாம்.

கன்வென்ஷன் (Convention) சபையானது தணிக்கைமுறை எதையும் ஏற்படுத்தவில்லை. எனினும், தேசத் துரோகமான வெளியீடுகளைத் தடுப்பதாகக் கூறிக்கொண்டு, 1793 ஆம் ஆண்டு மார்ச் மாதம் 29 ஆம் தேதி அது ஓர் அடக்குமுறைச் சட்டத்தை ஏற்படுத்தி, அதன்மூலம் கருத்துவெளியீட்டு உரிமையை முற்றிலுமாகத் தடுத்துவிட்டது. அதன்பின்வந்த இயக்குனர் குழு (Directory) என்ற நிர்வாக சபையும் கன்வென்ஷன் சபையையே பின்பற்றியது. முதற் பேரரசு (First Empire) ஏற்பட்டபோது, செய்தித்தாள்கள் யாவும் அரசாங்கத்தின் சொத்தாக மாறிவிட்டன. அவற்றின் அச்சீடு, வெளியீடு, விற்பனை ஆகிய அனைத்தும் பேரரசு அரசாங்கத்தின் கட்டுப்பாட்டுக்கும் தணிக்கைக்கும்[1] உட்பட்டன.

1789 ஆம் ஆண்டிலிருந்து 1815ஆம் ஆண்டுவரை ஃபிரான்சில் புரட்சி சகாப்தம் நிலவியதாகக் கூறலாம். எனவே, அரசாங்கமானது என்றுமில்லாதமுறையில் மக்களின் வாழ்வில் தலையிடுவது தவிர்க்க முடியாததாகிவிட்டது என்று கூற இடமுண்டு. ஆனால், ஃபிரெஞ்சு அரசாங்கமானது, மேற்சொன்ன காலத்துக்குப் பின்னும் கருத்து வெளியீட்டைத் தொடர்ந்து கட்டுபடுத்திவந்ததைக் காண்கிறோம். தேசிய இலக்கியத்தை என்றும் தனது கட்டுப்பாட்டுக்குள் வைத்திருக்க வேண்டுமென்ற விருப்பமானது, ஃபிரெஞ்சுப் பழக்கவழக்கங்களிலும் சட்டத்திலும் நிறைந்து கிடப்பதாகவே தெரிகிறது. இதை நாம் நான்கு அறியவேண்டுமானால், முன்னிலை மீட்சிக் காலத்திலிருந்து (restoration) இன்றுவரை அங்கு ஏற்பட்ட சட்டங்களின் போக்கை நன்கு ஊன்றிக் கவனிப்பதொன்றே போதுமானது. நூல்களின் வெளியீட்டைத் தடுக்கின்ற முயற்சியானது, படிப்படியாகக் கைவிடப்பட்டதேயென்றாலும் செய்தித்தாள்களைக் கட்டுப்படுத்தும் முயற்சியில் அரசாங்கங்கள் ஒன்றன்பின் ஒன்றாய் இறங்க ஆரம்பித்தன. ஆரம்பத்தில் செய்தித்தாள் உரிமையை அறிவிப்பதும் அதன்பின் அவைகளைப் பலவகையிலும் கட்டுப்படுத்துவதும் ஒவ்வோர் அரசாங்கத்தின் வழக்கமாகப் போய்விட்டது. 1814 ஆம் ஆண்டிலிருந்து 1830 ஆம் ஆண்டுக்குள் செய்தித்தாள் தணிக்கை முறையானது, ஃபிரான்சில் நன்கு நடைமுறையில் ஏற்பட்டுவிட்டது. 1814 ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 21 ஆம் தேதி தணிக்கை முறையானது ஓரளவு ஒழிக்கப்பட்டது. 1819-ல் அது முற்றிலும் ஒழிக்கப்பட்டது. 1850 ஆம் ஆண்டில் அது மீண்டும் கொண்டுவரப்பட்டதோடு மேலும் விரிவாக்கப்பட்டது. 1828 ஆம்

[1] Dalloz, Repertoire de Legislation, vol. xxxvi (185 6), v° presse, tit. ch. i, p. 386.

ஆண்டில் அது மீண்டும் ஒழிக்கப்பட்டது.[1] 1830 ஆம் ஆண்டு ஜுலை மாதப் புரட்சி ஏற்பட்டதையொட்டி, அரசாங்கம் பிரசுர உரிமையைக் குலைக்க முயன்றது. அதன்பின் ஏற்பட்ட உரிமைப் பட்டயமானது (Charter) தணிக்கைமுறையை ஒழித்துப் பிரசுர உரிமையை அரசியல் அமைப்பின் ஒரு பகுதியாக ஆக்கிவிட்டது. அன்றிலிருந்து இன்றுவரை பிரசுரக் கட்டுப்பாட்டுமுறையானது மீண்டும் கொண்டு வரப்படவில்லை. ஆனால், அங்ஙனம் கொண்டுவரப்படாதது வெறும் பெயரளவில் மட்டுமேயாம். செய்தித்தாள்களைப் பொறுத்தவரை, 1852 ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் 17 ஆம் தேதி ஏற்பட்ட ஒரு புகழ் பெற்ற கட்டளையானது, மிகக் கடுமையான கட்டுத்திட்டங்களை ஏற்படுத்தியது. முதலாம் நெப்போலியனின் வீழ்ச்சிக்குப்பிறகு, ஏற்பட்ட செய்தித்தாள் கட்டுப்பாட்டுச் சட்டங்கள் எதுவும் மேற்சொன்ன சட்டத்தைப்போல், அவ்வளவு கடுமையானமுறையில் செய்தித்தாள் வெளியீட்டுச் சுதந்திரத்தை நசுக்கியதில்லை என்றே கூறலாம். இச் சட்டத்தின்கீழ் அரசாங்கத்துக்கு ஏற்கெனவே இருந்த சில சிறப்பதிகாரங்களோடு எவ்வித காரணமும் காட்டாமல், ஒரு செய்தித்தாளைத் தடைசெய்கின்ற அதிகாரமும் கிடைத்தது. இதன்படி செய்தித்தாள் உரிமையாளர்மீதோ அல்லது அதில் எழுதும் எழுத்தாளர்மீதோ எவ்விதமான கிரிமினல் குற்றத்தையும் சுமத்தாமலும் நிரூபிக்காமலுமே அரசாங்கம் அவற்றைத் தடைசெய்யும் உரிமையைப்பெற்றது.[2] இந்தக் கட்டளையின்படி அரசாங்கத்தின் இசைவின்றி எந்தச் செய்தித்தாளையும் எவரும் ஆரம்பிக்க முடியாது. வெவ்வேறு வகையான தணிக்கை முறைகள்மட்டும்தான் கருத்து வெளியீட்டு உரிமையைப் ஃபிரான்சில் கட்டுப்படுத்தி வந்தன என்று கூறமுடியாது. 1848 ஆம் ஆண்டில் ஏற்பட்ட, ஃபிரெஞ்சுக் குடியரசின் காலத்திலும் பேரரசின் காலத்திலும் ஏற்பட்ட சட்டங்கள் கூட்டாகச் செயல்பட ஆரம்பித்தபோது, இன்னும் பல்வேறுவகைகளில் கருத்து வெளியீட்டு உரிமையானது கட்டுப்படுத்தப்பட்டது. அச் சட்டங்களின்படி (அவற்றுள் சிலவற்றைச் சொல்லவேண்டுமானால்) செய்தித்தாள்களில் வெளிவரும் கட்டுரைகளில், அக் கட்டுரைகள் ஆசிரியர்களின் கையெழுத்துகள் பொறிக்கப்படுவது கட்டாயமாக்கப்பட்டது.[3] செய்தித்தாளை ஆரம்பிக்கின்ற ஒருவர், பெருந்தொகை ஒன்றை இருப்புத் தொகையாக (deposit) வைக்கவேண்டுமென்பதும் கட்டாயமாக்கப் பட்டது.[4] மேலும், பிரசுரக் குற்றங்கள் ஜுரிகளின் முன்னிலையின்

[1] See Duguit, Traite de Droit constitutionnel (2nd ed., vol. v, 1925). ch iii, para. 35, pp. 414, 415.

[2] Decrcet, 17 Fevrier, 1852, see. 32; Roger et Sorel, Codes et Lois usuelles (1882), v[0] presse, p. 646.

[3] Roger et Sorel, op. cit. (1882), v[0] etat de siege, p. 436, loi du 16 Juillet, 1850.

[4] Roger et Sorel, op. cit. (1882), v[0] presse, p. 646, loi du 16 Juillet 1850.

விசாரிக்கப்படுவதும் நிறுத்தப்பட்டது.[1] 1723ஆம் ஆண்டில் ஏற்பட்ட செய்தித்தாள் கட்டுப்பாட்டுச் சட்டத்தின் (Reglement) ஒரு பகுதி யானது, மீண்டும் உயிர்ப்பிக்கப்பட்டு அதன்மூலம் அரசாங்க இசைவின்றி எவரும் நூலகத்தையோ பதிப்பகத்தையோ ஏற்படுத்த முடியாதவாறு தடுக்கப்பட்டனர். 1789ஆம் ஆண்டுக்கு முன்னர்ப் பலவகையான இலக் கியங்கள் எவ்வாறு கட்டுப்படுத்தப்பட்டனவோ, அதேமுறையிலேயே 1852ஆண்டிலிருந்து 1870ஆம் ஆண்டுவரை செய்தித்தாள்கள் கட்டுப் படுத்தப்பட்டன என்று உறுதியாகக் கூறமுடியும். மற்றும் இரண்டாம் பேரரசுக் காலத்தில் ஃபிரெஞ்சுப் புரட்சிக்கு முற்பட்ட காலத்தில் இருந்து வந்த கொடுங்கோன்மைக் கொள்கைகள் மீண்டும் தலையெடுத்தன என்றும் கூறலாம். ஆனால், குடியரசு[2] ஏற்பட்டபோது பேரரசுக் காலத்துக்கு முன்னும்பின்னும் பிரசுர உரிமையின்மீது சுமத்தப்பட்ட கட்டுப்பாடுகள் யாவும் ஒழிக்கப்பட்டன என்பது உண்மையேயாகும். கடந்த இருபத்தேழு ஆண்டுகளாகவே, ஃபிரஞ்சு ஆட்சிப் பொறுப்பில் உள்ளவர்கள், செய்தித்தாள் உரிமையைப் பெரிதும் ஆதரித்து வந்துள்ளார்கள். எனினும், சமீப காலம்வரையில் அங்கு பிரசுர சம்பந்தமான குற்றங்கள் யாவும் தனிப்பட்ட ஒருவகைக் குற்றங்களாக மதிக்கப்பட்டு, அவைகள் தனிப்பட்டமுறையில் விசாரிக்கப்பட்டுத் தண்டிக்கப்பட வேண்டும் என்ற கொள்கையானது, பல்வேறு கட்சி களுக்கும் உடன்பாடானதாக விளங்கிவந்துள்ளது என்பது மிகத் தெளிவாகப் புலப்படுகிறது. இந்த உண்மையானது

[1] Lois, 31 Dec., 1851.

[2] இதிலிருந்து நமக்கு ஒன்று தெளிவாக தெரிகின்றது. அது நன்கு கவனிக்கத்தக்கது. 1881ஆம் ஆண்டுவரை, இன்றைய ஃபிரெஞ்சு குடியரசின் சட்டங்கள் பேரரசு காலத்தும் முன்னிலை மீட்சிக் காலத்தும் இருந்த சட்டங்களைப் போன்றே, பிரசுர உரிமையைத் தனிப்பட்டமுறையில் கட்டுப்படுத்திவந்தது. 1881ஆம் ஆண்டுக்குப் பின்னர்த்தான் பிரசுர உரிமைபற்றி இங்கிலாந்தில் நிலவும் கொள்கையின் அடிப்படையில் ஃபிரெஞ்சு பிரசுரஉரிமைச் சட்டங்கள் ஏற்பட்டன. அதுவரை பேரரசுச் சட்டமானது, ஃபிரெஞ்சுச் சட்டத்தின் ஒரு தனிப்பட்ட துறை யாகவே கருதப்பட்டு வந்தது. பிரசுரக் குற்றங்கள் தனிப்பட்ட ஒருவகைக் குற்றங் களாகவே கருதப்பட்டன. ஃபிரெஞ்சு சட்டங்களில் காணப்பட்ட பல சட்டங்கள் அல்லது குறைந்தது இரண்டு சட்டங்களாவது, இங்கிலாந்தில் இருக்கின்ற பிரசுர உரிமைக் கொள்கைக்கு முரணான கொள்கையைத் தெரிவிக்கின்றன. குடியரசு காலத்தில் ஏற்பட்ட ஒரு சட்டமானது, (6th July 1871 Roger et Sorel op. cit, p. 652) செய்தித்தாள் உரிமையாளர்கள், ஒரு பெரிய இருப்புத் தொகையை வைக்க வேண்டும் என்ற நிபந்தனையை மீண்டும் கொண்டுவந்தது. செய்தித்தாள் நடத்தப்படும்போது, ஏற்படக்கூடிய இழப்புகளுக்கு ஈடுகட்டவும் அபராதம் விதிக்கப்பட்டால், அதைச் செலுத்தவும் அத் தொகை தேவை என்று கூறப் பட்டது. இன்னும் பின்னால் ஏற்பட்ட ஒரு சட்டமானது (29th Dec. 1875 s.5. Roger et Sorel op. cit., p. 652), ஒருசில பிரசுரக் குற்றங்களை ஜூரிகள் முன் விசாரிக்கப்பட இசைவளித்தாலும், வேறுசில குற்றங்களை ஜூரிகள் இல்லாத நீதிமன்றங்களில் விசாரிக்கப்படச் செய்தது. இறுதியாக 1881ஆம் ஆண்டு ஜூலை மாதம் 29ஆம் தேதி ஏற்பட்ட சட்டம்தான், பிரசுர உரிமையை நாட்டில் நன்கு நிலைநாட்டியது. அதன் பின்னர் ஏற்பட்ட சட்டங்கள் எல்லாம் பிரசுர உரிமையைக் கட்டுப்படுத்தும் எந்த முயற்சியையும் தடுக்கவே எத்தனித்தன என்பதில் சிறிதும் ஐயமில்லை. ஆனால், அவ் வுரிமையைப் பெற முயற்சிகள் எடுக்கப்பட்டதாலேயே, ஃபிரான்சில் பிரசுரவாயிலாகச் செய்யப்பட்ட குற்றங்கள் தனிப்பட்டமுறையில் நடத்தப்படவேண்டும் என்பதை வற்புறுத்துவதுபோல் ஆகிவிட்டது.

கொள்கையளவில் பெரிதும் முக்கியத்துவம் வாய்ந்தது. சட்டத்தை மீறிய செயல் ஒவ்வொன்றும். அது எதுவாயிருப்பினும் நாட்டின் சாதாரண சட்டங்களுக்கு ஏற்பவே விசாரிக்கப்படவேண்டும் என்ற கருத்தானது, ஃபிரெஞ்சுக்காரர்களுக்கு எவ்வளவு புதுமையானது என்பதை அது காட்டுகிறது. இலக்கியங்களைப் பொறுத்தவரை ஃபிரான்ஸில் ஏற்பட்ட சட்டங்களை நாம் மேற்போக்கா ஆராய்வோமானால், (இந்தச் சொற்பொழிவுகளில் அதைவிட அதிகமாக ஒன்றும் செய்யமுடியாது) கீழ்க்கண்ட உண்மைகள் புலப்படும். பிரசுரங்கள் நாட்டில் ஏற்பட்ட காலந்தொட்டு இன்றுவரை கருத்து வெளியீட்டினை அரசாங்கமானது கட்டுப்படுத்தவேண்டும் என்ற கருத்து நாட்டில் நன்கு வேரூன்றி இருந்துவந்துள்ளது. இந்தக் கட்டுப்பாடுகள் அதிகாரபூர்வமான தணிக்கைமுறைகளால் செயலாக்கப்பட்டுள்ளன. அதாவது, நூல்கள் அச்சிடப்படுவதும் விற்பனை செய்யப்படுவதும் அதிகாரிகளால் ஒழுங்குசெய்யப்பட்டுள்ளன. மேலும், பிரசுர சம்பந்தமான குற்றங்கள் தனிப்பட்ட சட்டங்களுக்கு உட்பட்டு வந்துள்ளன. இடையிடையே கட்டுப்பாடுகள் தளர்த்தப்பட்டன என்பது, முக்கியமாகக் கவனிக்கப்படத் தக்கதே. ஆனால், அக் கட்டுப்பாடுகள் தற்காலிகமாக ஒழிக்கப்பட்டபின் மீண்டும்மீண்டும் பழையபடி புதுப்பிக்கப்பட்டதென்பது இன்னும் அதைவிட முக்கியத்துவம் வாய்ந்ததாகும்.[1]

## பதினேழாம் நூற்றாண்டில் இங்கிலாந்தில் பிரசுர உரிமை இருந்த நிலைமையோடு ஒப்பிட்டு வேறுபாட்டை உணர்த்தல்

இனி, பதினாறு, பதினேழாம் நூற்றாண்டுகளில் இங்கிலாந்தில் பிரசுர நிலைமையானது எவ்வாறு இருந்தது என்பதை நோக்குவோமாக.

ஆதியில் அச்சகங்கள் யாவும் அரசாங்கத்தின் கைப்பிடிக்குள்ளேயே அடங்கியிருந்தன. அரசாங்கத்தின் தனிப்பட்ட இசைவினைப் பெற்றவர்களன்றி, வேறெவரும் எதையும் அச்சிடக்கூடாத நிலையிலிருந்தனர். விண்மீன் மண்டப நீதிமன்றமென்னும் மன்னரது யதேச்சாதிகார

[1] அச்சகத்தார் தம் உரிமையைத் தவறான வழிகளில் பயன்படுத்துவதைத் தடுக்கப் பல சட்டங்கள், 1881ஆம் ஆண்டுமுதல் ஃபிரான்சில் ஏற்பட்டுள்ளன. சான்றாக, 1882ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 2ஆம் தேதி ஏற்பட்ட சட்டத்தையும், அதைத் திருத்தி முற்றுப்பெறச்செய்த 1898ஆம் ஆண்டு மார்ச் மாதம் 16ஆம் தேதி ஏற்பட்ட ஒரு சட்டத்தையும் குறிப்பிடலாம். பிரசுரங்கள்மூலமாக ஒழுக்கக்கேடான கொள்கைகளைப் பரப்புவதைத் தடுக்க மேற்சொன்ன சட்டம் இயற்றப்பட்டது. (outrages aux bonnes moeurs), 1894 ஆம் ஆண்டு ஜூலை மாதம் 28ஆம் தேதி ஏற்பட்ட சட்டமானது, செய்தித்தாள்மூலமாக அரசாங்க ஒழிப்புக் கொள்கையை (anarchism) பரப்புவதைத் தடுத்தது. 1893ஆம் ஆண்டு மார்ச் மாதம் 16ஆம் தேதி ஏற்பட்ட ஒரு சட்டமானது, வெளிநாட்டுச் செய்தித்தாள்களையும், பிறமொழிகளில் வெளியிடப்படும் செய்தித்தாள்களையும் கட்டுப்படுத்துவதற்குரிய தனிச் சிறப்பு அதிகாரங்களை அரசாங்கத்திற்கு அளிக்கிறது. Cf. Duguit Manuel de Droit Public francais; Dorit Constitutionel (1907), para. 36. p. 582.

சிறுவனமானது, மன்னரின் சிறப்பதிகாரங்களைப் பயன்படுத்தி அவ்வப்போது வெளியிட்ட கட்டுத்திட்டங்களுக்கு எற்பவே அச்சகங்கள் யாவும் இயங்கிவந்தன. அச்சிடுதல் என்ற சிறப்புரிமையானது, இலண்டனிலிருந்த 97 வெளியீட்டதிபர்கள் அடங்கிய கம்பெனியிடமே (Stationers' Company) முடங்கிக் கிடந்தது. அவர்கள் அதைப் பரம்பரையாக அனுபவித்துவந்தனர். அன்னார் ஒரு வாணிபக் குழுவைப் போன்று (guild) அமைத்துக்கொண்டு, அவர்களையன்றி வேறெவராலும் வெளியிடப்பட்ட நூல்களைக் கைப்பற்றிப் பறிமுதல்செய்யும் அதிகாரம் பெற்றிருந்தனர். இறுதியில் விண்மீன் மண்டப நீதிமன்றத்தின் ஆணையொன்றின்படி, இவ் வதிகாரத்தை அவர்கள் பல்கலைக் கழகத்தாருக்கு விட்டுக்கொடுத்தனர்.

அச்சிடுதல்மீது விதிக்கப்பட்டுவந்த இக் கட்டுப்பாடுகளோடு—நாளடைவில் அவை மறைந்து போனதாகவே தோன்றுகிறது— அனுமதிச் சீட்டு வழங்கும்முறை ஒன்றும் இணையாக வளர்ந்துகொண்டுவந்தது. அதுவே, உண்மையில் தணிக்கைமுறையாக மாறிவிட்டதென்று கூறலாம்.[1]

பிரசுர சம்மந்தமான குற்றங்கள் யாவும், அப்போது தனிப்பட்ட ஒருவகைக் கிரிமினல் குற்றங்களாகவே கருதப்பட்டன. அவை விண்மீன் மண்டப நீதிமன்றமென்னும், தனிப்பட்ட நீதிமன்றங்களாலேயே விசாரிக்கப்படும் தகுதியைப் பெற்றிருந்தன. அந் நீதிமன்றமானது ஜூரிகளின் உதவியின்றியே நடைபெற்றன. கடுமையான தண்டனைகளை[2] வழங்கும் அதிகாரத்தையும் அவை பெற்றிருந்தன. 1641 ஆம் ஆண்டில் விண்மீன் மண்டப நீதிமன்றமானது வீழ்ச்சியுற்றது. பிறகு அது மீண்டும் உயிர்ப்பிக்கப்படவே இல்லை. ஆனல், தணிக்கைமுறைமட்டும் தொடர்ந்து நீடித்துவந்தது. பொதுநல ஆட்சியும் (Commonwealth) முன்னிலை மீட்சியும் (Restoration) 1662— ஏற்பட்ட பின்னும் அது நீடித்தது. 1662 ஆம் ஆண்டில் பத்திரிகைக் கட்டுப்பாடானது, சட்டத்தின் அடிப்படையில் அமைக்கப்பட்டு இசைவளிப்புச் சட்டமாக (Licencing Act of 1662) வடிவெடுத்தது.

[1] 1695ஆம் ஆண்டுவரை பிரசுரங்கள்மீது அரசாங்கம் விதித்துவந்த கட்டுப்பாடுகளைப்பற்றி அறிய, ஆட்ஜர்ஸ்(Opders)என்பார் எழுதிய,'நிலைத்தஅவதூறும் நிலையாப் பழிதூற்றலும்' (Libel and Slander) என்ற நூலை (6ஆவது வெளியீடு, 1929) பக். 10-12-ஐப் பார்க்க. ஹோல்ட்ஸ்வொர்த் (Holdsworth) எழுதிய 'ஆங்கிலச் சட்ட' வரலாறு (History of English Law) என்ற நூலைப் பார்க்கவும். vol. vi (1924), pp. 360-379; vol. x (1938) பக். 28, 29.

[2] கார்டினர் (Gardiner) எழுதிய, 'இங்கிலாந்தின் வரலாறு' (History of England) என்ற நூலைப் பார்க்கவும். vol. viii (1884) பக். 225, 234; முன்பே சொல்லப்பட்ட, ஹோல்ட்ஸ்வொர்த் என்பாரின் நூலையும் (vol. vi: 1924 பக். 367-370.

பின்னுல் இயற்றப்பட்ட பல பாராளுமன்றச் சட்டங்கள்மூலம் அது 1695 ஆம் ஆண்டுவரை அமலில் இருந்துவந்தது.[1]

### இங்கிலாந்திலும் ஃபிரான்சிலும், இருந்துவந்த பிரசுரச் சட்டங்களிடையே ஆரம்பத்தில் ஒற்றுமையும், பின்னர் நாளடைவில் வேற்றுமையும் காணப்படல்

சுருங்கக் கூறப்போனுல், பிரசுரங்களைக் கட்டுப்படுத்தவேண்டிப் பதினுறு, பதினேழாம் நூற்ருண்டுகளில் இங்கிலாந்தில் கையாளப்பெற்ற முறைகள் ஒவ்வொன்றும், அதே காலத்தில் ஃபிரான்ஸில் கையாளப் பெற்று, அதன்பின் ஏறக்குறைய இன்றுவரை நடைமுறையிலுள்ள முறைகளையே ஒத்திருந்தன எனலாம். இங்கிலாந்தில் அப்போது ஐரோப்பாக் கண்டத்தில் இருந்ததுபோன்றே, புத்தக வியாபாரமானது ஒரு சிலரின் தனி உரிமையாகவே விளங்கிவந்தது. பிரசுரங்களைத் தணிக்கை செய்யும்முறையும் மிகவும் கடுமையாய் இருந்தது. நூலாசிரியர்களும் அச்சக முதலாளிகளும் செய்த குற்றங்கள் தனிப்பட்ட கிரிமினல் குற்றங்களாகக் கருதப்பட்டுத் தனிப்பட்ட நீதிமன்றங்களால் மிகவும் கடுமையானமுறையில் தண்டிக்கப்பட்டுவந்தன. இலக்கியத் துறை எவ்வாறு நடத்தப்பட வேண்டுமென்பதுபற்றி, அக் காலத்தே ஆங்கில அரசாங்கமும் ஃபிரெஞ்சு அரசாங்கமும் ஒரே மாதிரியான கொள்கைகளைக் கொண்டிருந்ததைப் பார்க்கும்போது, நாம் உண்மையிலேயே பெரும் வியப்பையே எய்துகின்ருேம். அதேபோல் நாளடைவில் இரு நாடுகளின் சட்டங்களும் வெவ்வேறுபோக்கில் போக ஆரம்பித்ததைப் பார்க்கும்போதும் நாம் இன்னும் பெரிய அளவில் வியப்படைகின்ருேம். ஃபிரான்ஸில் (நாம் ஏற்கெனவே பார்த்துள்ளபடி) பிரசுரத் தணிக்கையானது அடிக்கடி நீக்கப்பட்டாலும், அதேவேகத்தில் அது மீண்டும் மீண்டும் உயிர்ப்பிக்கப்பட்டதென்றும் அறிகிருேம். இங்கிலாந்தில் செய்தித்தாள்களுக்கு இசைவுச்சீட்டு வழங்குகின்ற வழக்கம் இருந்துவந்தது. தணிக்கைமுறையின் வேறுவடிவமே அதுவன்றி வேறன்று. ஆனுல், அதுவும் 1695 ஆம் ஆண்டில் ஒழிக்கப்பட்டது. இசைவு அளிப்புச் சட்டத்தைத் தொடர்ந்து நீட்டிக்க விரும்பாத பொது மக்கள் மன்றமானது, உண்மையாகவே கருத்துரிமையில் ஏதோ நிலைத்த ஆர்வத்தைக் கொண்டிருந்தது என்று சொல்வதற்கில்லை. 1695 ஆம் ஆண்டளவில் இங்கிலாந்தில் வாழ்ந்துவந்த அரசியல் விற்பன்னர்கள், 'சிந்தனைகளும் கருத்துகளும் கட்டற்றமுறையில் மக்களிடையே பரிமாறிக் கொள்ளப்படுவதென்பது, மாந்தரின் தலையாய உரிமைகளில் ஒன்று'[2] என்ற கொள்கையில் ஆழ்ந்த ஊட்டமோ

[1] மெக்காலே எழுதிய, 'இங்கிலாந்தின் வரலாறு,' vol.iv (1858) ch. xix, xxi-ஐப் பார்க்கவும்.

[2] 'மனிதனின் உரிமைகள்பற்றிய அறிவிப்பை'ப் பார்க்கவும். விதி. 11 பக். 234.

அல்லது நாட்டமோ கொண்டிருந்ததாகக் கூற இயலாது. இசைவளிப்புச் சட்டத்தை மீண்டும் உயிர்ப்பிக்க அவர்கள் மறுத்தபோது. அவர்கள் தாங்கள் செய்வது இன்னதென்றறியாமலேயே பிரசுர உரிமையை நாட்டில் நிலைநாட்டிவிட்டனர். இங்ஙனம் கூறுவது கற்பனையன்று. அது முக்காலும் உண்மை என்பதையும் நாம் அறுதியிட்டுக் கூறமுடியும் என்பதைப் பொதுமக்கள் சபையினர், அச் சட்டத்தைப் புதுபிக்காததற்கான காரணங்களைப் பிரபுக்கள் சபைக்கு விளக்கும் பத்திரமொன்றைப் பரிசீலனை செய்வதால் நன்கு அறியலாம்.

அப் பத்திரமானது, பொதுமக்கள் சபையார் நிறைவேற்றிய தீர்மானம் சரி என வாதிக்கிறது. அதே சமயம் அவர்கள் எத்தகைய முக்கியமான காரியத்தைச் செய்கிறோம், எத்தகைய புரட்சியொன்றைத் தோற்றுவித்துக் கொண்டிருக்கிறோம். எத்தகைய சக்தி ஒன்றை உருவாக்கிக் கொண்டு இருக்கிறோம் என்பதைச் சற்றும் உணரவில்லை என்பதையும். அது தெற்றென நமக்கு உணர்த்துகிறது ; காலாவதியாகும் தருவாயிலிருந்த ஒரு பாராளுமன்றச் சட்டத்தின் முட்டாள்தனத்தையும், கொடுமையையும், மிகத் திட்டவட்டமாயும், தெளிவாயும், ஆணித்தரமாயும், சில சமயங்களில் சற்றே கடுமையான வஞ்சப் புகழ்ச்சியோடும் அவர்கள் எடுத்துக்காட்டுகிறார்கள். ஆனால், அவர்களின் கண்டனங்கள் எல்லாம் வெறும் விவரங்களைப்பற்றியனவாகவே இருப்பதைப் பார்க்கலாம். அதன் அடிப்படையான கொள்கைபற்றி அவர்கள் ஒரு வார்த்தை கூடச் சொல்லவில்லை. அதாவது இசைவின்றியே அச்சடித்து வெளியிடும் உரிமையானது. மொத்தத்தில் சமுதாயத்துக்கு நன்மை பயக்கக் கூடியதா அல்லது ஒரு சாபத்தீடு போன்றதா என்ற கேள்விக்கேற்ற பதிலைப்பற்றி அவர்கள் ஒன்றுமே அப் பத்திரத்தில் கூறவில்லை. அனுமதியளிப்புச் சட்டமானது கண்டிக்கப்பட்டது. அது அடிப்படையிலேயே தீமைவாய்ந்தது என்பதற்காகவன்று. அச் சட்டத்தால் விளையக்கூடிய அற்பமான சில குறைகளை நிவர்த்திக்கவே அவர்கள் விரும்பினர். அச் சட்டத்தின் துணைகொண்டு, அரசாங்க அதிகாரிகள் பலவந்தமாக வரிகளை வசூலித்தல், லஞ்சம் வாங்கல், வாணிபக் கட்டுப்பாடுகளை ஏற்படுத்தல், வீடுகளில் புகுந்து சோதனை நடத்தல்போன்ற தீய நடவடிக்கைகளில் இறங்குவதைத் தடுப்பதே அவர்களின் முக்கிய நோக்கமாக இருந்தது. வெளியீட்டதிபர்கள் கம்பெனியானது, தனிப்பட்ட வெளியிடுவோரிடமிருந்து பொருளைப் பலவந்தமாகக் கறப்பதற்கு அச் சட்டம் வழி செய்ததென்பதாலும், பொதுப் பிடியாணைகள் மூலம் (general warrants) அரசாங்கப் பதிலாட்கள் (agent) வந்து, தனிப்பட்டோரின் வீடுகளைச் சோதனைபோட அனுமதியளிப்பதாலும். வெளிநாட்டுப் புத்தக வியாபாரத்தை இலண்டன் நகரத் துறைமுகத்தோடு அது நிறுத்திவிடுவதாலும், உயர்ந்த மதிப்புள்ள நூல்களை அவைகள் காளான்பூக்கும்வரை, சுங்கச் சாவடிகளிலிருந்து வெளிவரா வண்ணம்

தடுப்பதாலும் இன்னபிற காரணங்கலாலுமே தீமை நிறைந்ததொன்றாகக் கருதப்பட்டதேயன்றி வேறன்று. அனுமதியளிப்போர் வசூலிக்கின்ற கட்டணம் ஒரேமாதிரியாயில்லை என்று பொதுமக்கள் சபையினர் அதில் முறையிடுகின்றனர், அச்சகத் தணிக்கையதிகாரி ஒருவரது முன்னிலையி லன்றி, சுங்கச் சாவடி அதிகாரி ஒருவர், வெளிநாட்டுப் புத்தகங்கள் அடங்கிய பெட்டியொன்றைத் திறப்பது குற்றம் என, அச் சட்டம் கருது வதைப்பற்றி அவர்கள் குறைகூறுகின்றனர். 'பெட்டியைத் திறப் பதற்கு முன்பே அதில் புத்தகங்கள் இருப்பது எப்படி ஓர் அதிகாரிக்குத் தெரிந்திருக்கமுடியும்' என்ற அறிவுக்குகந்த வினா ஒன்றை எழுப்பு கின்றனர். இப்படிக் குறிப்பிட்ட சில குறைகளைக் களைவதையே பொதுமக்கள் சபையினர் தங்கள் நோக்கமாகக்கொண்டு அனுமதி யளிப்புச் சட்டத்தை ஒழித்துள்ளனர். இவற்றைப்பற்றிய வாதங்களைக் கொண்டே, மில்டன் பெருமகனாரின் 'Areopagitica' என்ற நூலால் செய்ய இயலாததொரு காரியத்தைப் பாராளுமன்றம் செய்து முடித் துள்ளது.[1]

பிரசுர உரிமைபற்றிய எண்ணமானது, ஆங்கிலேயரின் மனத்தில் நன்கு வேருன்றவில்லை. அவ் வுரிமையின்மீது இருந்த கட்டுப்பாடுகளை மேற்கூறப்பட்ட சட்டத்தின்மூலம் உடைத்தெறிந்த ஆங்கில அரசியல் விற்பன்னர்கள், அது நடைபெற்ற இரண்டே ஆண்டுக்குள், இசைவு இன்றி வெளியிடப்படும் செய்திகளைத் தடைசெய்கின்ற மசோதா ஒன்றைப் (ஆனால், அது நிறைவேறவில்லை) பாராளுமன்றத்தில் கொண்டு வரப்பட இடமளித்தனர். இதிலிருந்து பிரசுர உரிமை வேட்கையானது, எவ்வளவு இலேசாக ஆங்கிலேய அரசியலறிஞர்களின் இதயங்களை வவ்விக் கொண்டிருந்தது என்பதை எளிதில் அறியலாம்.[2] எனினும், 1695ஆம் ஆண்டில் ஆங்கிலப் பாராளுமன்றமானது இசைவு அளிப்புச் சட்டத்தை (Licensing Act) மீண்டும் உயிர்ப்பிக்க மறுத்துவிட்ட நேரத்திலிருந்து, பிரசுர உரிமையானது இங்கு நன்கு நிலைநாட்டப் பட்டதை நாம் அறிகிறோம். அதே சமயத்தில், ஃபிரான்ஸில் 1789ஆம் ஆண்டிலேயே கருத்து வெளியீட்டுரிமையானது, உலகறியப் பறை சாற்றப்பட்டிருந்தபோதும்கூட, அது அங்குச் சிந்தனைக்குரிய ஒரு கோட் பாடாக விளங்கியதேயன்றி, நடைமுறையில் நன்கு கடைப்பிடிக்கப்பட வில்லை. அவ்வப்போது அது ஓரளவு செல்வாக்குப் பெற்றிருந்தாலும் அடிக்கடி, நிலவரச் சட்டங்களால் (statute) மீறப்பட்டு வந்தது. எனவே, அவ் வுரிமையானது ஃபிரான்ஸில் இருந்துமில்லாத நிலையிலேயே காணப்பட்டு வந்தது. ஆனால், இங்கிலாந்திலோவெனின் 1695ஆம் ஆண்டிலிருந்து அவ் வுரிமை நிலையாக வாழ்ந்துவருகிறது. அவ் வாண்

[1] மெக்காலேயின் நூல்; முன்பே கூறப்பட்டது, vol. iv (1858) பக். 543 பார்க்கவும்.

[2] மெக்காலேயின் நூல்; முன்பே கூறப்பட்டது. பக். 774, 775.

டிற்குப் பின்னர், சுமார் ஐம்பது ஆண்டுக் காலம்வரைக்கும், இங்கிலாந்தில் புரட்சியும் பூசலும் நிறைந்து, அமைதி என்பதே மருந்துக்கும் காணப் படாத நிலைமை காணப்பட்டது. ஃபிரான்ஸில் முன்னிலை மீட்சி ஏற்பட்ட காலத்தை அது பெரிதும் ஒத்திருந்தது. எனினும், இங்கிலாந்தில் ஒரு முறை நீக்கப்பட்ட பிரசுரக் கட்டுப்பாடுகள், மீண்டும் உயிர்ப்பிக்கப் படவே இல்லை. அவதூறுச் சட்டத்தில்வரும் கட்டுப்பாடுகளைக் கொண்டன்றி, வேறு வழிகளில் கருத்து வெளியீட்டுரிமையைத் தடை செய்யும்முறை, ஆங்கிலேயர்கள் நெடுநாட்களாகவே அறியாத தொன்றாகும், இலக்கியமானது, அரசாங்கத்தால் கட்டுப்படுத்தத் தக்கது என்ற கொள்கையானது நம்நாட்டின் சட்டங்களில் ஓரோவழி காணப் படுமாயின், அது பலருக்கு விளங்காத புதிராகவே தென்படக்கூடும். அத்தகைய கொள்கை, நாட்டில் சகித்துக் கொள்ளப்படுவதற்குக் காரணம், அதனால் யாதோர் இடையூறும் மக்களுக்கு ஏற்படாததும், அது இருப்பதே பலருக்கு மறந்துபோயிருப்பதுமே யாகும்.

**ஃபிரான்ஸிலும் இங்கிலாந்திலும் இருக்கின்ற பிரசுரச் சட்டங்கள் ஆரம்பத்தில் ஒன்றாகவும், இறுதியில் வேறாகவும் இருப்பதால் இயல்பாக எழக்கூடிய வினாக்கள்.**

பிரசுர உரிமையின் வரலாற்றை ஃபிரான்ஸிலும் இங்கிலாந்திலும் மேலெழுந்தவாரியாக ஆராயமுற்படும் மாணவரொருவரின் மனத்தில் இயல்பாகவே எழக்கூடிய வினாக்கள் இரண்டாகும். முதலாவதாக, பதினேழாம் நூற்றாண்டின் இறுதிவரையிலும் இரு நாடுகளிலும், பிரசுரச் சட்டங்கள்பற்றி அடிப்படையில் ஒரே வகையான கோட் பாடுகளை அரசாங்கங்கள் ஆதரிக்கக் காரணமென்ன என்ற கேள்வி பிறக்கிறது. இரண்டாவதாக, பதினெட்டாம் நூற்றாண்டின் தொடக் கத்திலிருந்து இன்றுவரை, அவ் வுரிமைபற்றிய சட்டங்கள் இருநாடு களிலும் அடிப்படையிலேயே வேவ்வேறாகக் காட்சியளிப்பதற்குக் காரணமென்ன என்ற வினா எழுகின்றது. ஒரு பொருள்பற்றிய இரு நாடுகளின் சட்டங்களில் இங்ஙனம் ஒற்றுமையும் வேற்றுமையும் ஒருங்கே காணப்படுவது, ஒருவர்க்குத் திகைப்பை உண்டாக்கக்கூடும். எனினும், இந்த இரு வினாக்களுக்குரிய விளக்கம் தேவைப்படுகிறது. வெளிப்பார்வைக்கு முன்னுக்குப்பின் முரணாகத் தோன்றுகின்ற இப் புதிருக்குரிய விடை காணவேண்டியது இன்றியமையாததாகும். ஏனெனில், இச் சொற்பொழிவின் சாரமான பொருளுக்கும் அவ் விடைக்கும் நெருங்கிய தொடர்பு உள்ளது. அதாவது அவ் விடையைக் கொண்டு, நம் நாட்டு அரசியலமைப்பின் சிறப்பியல்பாகத் திகழ்கின்ற சட்ட உணர்வின் தனித் தலைமை அல்லது சட்டத்தின் இறைமையை ஒவ்வொருவரும் நன்கு விளங்கிக்கொள்ளலாம் என்பதாகும்.

## ஆரம்பத்தில் இருந்த ஒற்றுமைக்குக் காரணங்கள்

இரு நாடுகளின் பிரசுரச் சட்டங்களும் ஆரம்பத்தில் அதாவது, பதினாறும் நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்து, பதினெட்டாம் நூற்றாண்டின் துவக்கம்வரை ஒன்றாகவே காணப்பட்டன. இரு நாடுகளின் அரசாங்கங்களும் பிரசுர உரிமைபற்றி ஒரே கொள்கையுடையனவாய் இருந்ததுவே இவ் வொற்றுமைக்குக் காரணமெனலாம். இருநாட்டு மக்களைவிட, அரசாங்கங்களிடையே கருத்தொற்றுமை அப்போது காணப்பட்டது. தனிப்பட்ட நபர்களுக்கும் அரசாங்கத்துக்குமிடையே நிலவவேண்டிய உறவுபற்றி அவைகள் கொண்டிருந்த கொள்கைகளும், நடைமுறையில் நடாத்திய கோட்பாடுகளும் ஒன்றாகவே இருந்தன; மன்னரே மக்களின் மத நம்பிக்கைகளைப் பாதுகாக்கவேண்டியவர் என்ற கருத்தானது, ஐரோப்பிய நாடுகளில் காணப்பட்டதுபோன்றே இங்கிலாந்திலும் மக்கள் மனத்தில் ஆழமாய்ப் பதிந்துகிடந்தது. இக் கருத்தின் விளைவாகவே, மன்னர்கள் தனிப்பட்ட நபர்களின் கருத்து உரிமையில் தலையிட நேர்ந்தது. ஏனெனில், அத்தகைய தலையீடின்றி, மக்களை நெறிப்படுத்துவதும், அவர்களின் கருத்துகளை ஒருவழிப் படுத்துவதும் இயலாத காரியமாகும். எனவே, மக்களின் மதக் கொள்கைகளில் ஒருமையை உருவாக்கவேண்டி, மன்னர்கள் குடிகளின் கருத்துரிமையிலும் கருத்து, வெளியீட்டுரிமையிலும் தலையிட வேண்டியது இன்றியமையாததாகிவிட்டது. மக்களின் மனதை மாற்றக் கூடிய கருத்துகள், அவர்களிடையே பரப்பப்படுவதற்குக் காரணமாயிருப்பவை அச்சகத்தின்மூலம் வெளிவரும் பிரசுரங்களேயாதலால், அப் பிரசுரங்களைக் கட்டுப்படுத்தவேண்டிய கட்டாயமும் மன்னர்களுக்கு ஏற்பட்டுவிட்டது. இங்ஙனம், மக்கள் சட்டக் கோட்பாடுகளுக்குட்பட்டுத் தம் விருப்பம்போல், அச்சிட்ட பிரசுரங்கள்மூலம் தங்கள் கருத்துகளைப் பரப்புவதற்கான ஓர் உரிமையில், அதாவது பிரசுர உரிமையில் தலையிடுவது, அரசாங்கத்தின் தவிர்க்கமுடியாத கடமையாகிவிட்டது. சுருங்கக்கூறின் பதினாறு, பதினேழாம் நூற்றாண்டுகளில் ஃபிரெஞ்சு அரசாங்கத்தைப்போலவே, ஆங்கில அரசாங்கமும் தன் ஆட்சித்துறை அதிகாரங்களைப் பெரிதும் பெருக்கிக் கொண்டது. இலக்கியங்களைக் கட்டுப்படுத்தவேண்டியது அரசாங்கத்தின் பொறுப்பு என்ற கருத்து, இரு நாடுகளிலும் நிலவியது. பொது மக்களும் அதை ஆதரித்தனர். எனவே, இரு நாடுகளிலும்ஒரேவிதமான சூழ்நிலைகள் பதினாறு, பதினேழாம் நூற்றாண்டுகளில் நிலவிய காரணத்தாலேயே, ஒரேவிதமான விளைவுகள் ஏற்பட்டன. ஒரேமாதிரியான கொள்கைகள் இரு நாடுகளிலும் கடைப்பிடிக்கப்பட்டன. எனவே, பிரசுரங்களும் ஒரேமுறையில் இரு நாடுகளிலும் நடத்தப்பட வேண்டி நேர்ந்துவிட்டது.

**பிற்காலத்தே அவற்றிடையே ஏற்பட்ட வேறுபாட்டுக்குக் காரணங்கள்**

பிற்காலத்தே, ஏறக்குறைய இரண்டு நூற்றாண்டுகளாகப் ஃபிரெஞ்சுப் பிரசுரங்கள், இங்கிலாந்தில் ஒப்புக்கொள்ளப்பட்ட பிரசுரக் கொள்கைகளுக்கு முற்றிலும் முரணுனமுறையில் நடத்தப்பட்டது ஏன், என்ற கேள்விக்கு விடைகாணவேண்டுமானல், நாம் இரு நாட்டு மக்களின் பழக்கவழக்கங்களையும் நன்கு ஆராய்தல்வேண்டும். பிரசுரச் சட்டங்களின் தன்மையில் இரு நாடுகளிலும் காணப்படும் வேற்றுமைக்குக் காரணம், அந் நாடுகளின் பழக்கவழக்கக்கள், சட்டம் ஆகியவற்றில் ஊடுருவிநிற்கும் உணர்வுகளில் காணப்படும் வேற்றுமையேயாகும் எனலாம்.

ஃபிரெஞ்சு நாட்டில் எப்போதுமே, அரசாங்கத்தாரும் தனி நபர்களும் வெவ்வேறுவகையான உரிமைகளை உடையவர்கள் என்ற கொள்கையானது, செழித்தோங்கி வளர்ந்துவந்துள்ளது. அதோடு, அரசாங்கத்தின் உரிமைகள், தனிப்பட்ட மனிதர்களின் உரிமைகளைக்காட்டிலும் சற்று உயர்ந்தவை என்ற எண்ணமும், அவைகள் தனிப்பட்டமுறையில் நடத்தப்படவேண்டுமென்ற கருத்தும் அங்கு உலவி வந்துள்ளன. அரசாங்கமானது, கோனுட்சியாயிருப்பினும் குடியாட்சியாயிருப்பினும் அல்லது பேரரசாட்சியாயிருப்பினும் அதன் அதிகாரங்களும் உரிமைகளும் தனிப்பட்டவை என்றும், அவை சாதாரண குடிமக்களைக் கட்டுப்படுத்தும் சாதாரண சட்டங்களுக்கு உட்படாதவை என்றும் அங்குக் கருதப்படுவது வழக்கமாக நிகழ்வ தொன்றுகும். இத்தகைய எண்ணத்தின் அடிப்படையில் தோன்றியதே 'ஆட்சித் துறைச்சட்டம்'[1] (droit Administratif) எனும் தனிப்பட்ட சட்டமாகும். இது ஆங்கியலேயர்களுக்கு நன்கு புரிந்து கொள்ள இயலாததொரு சட்டமாகும். மேலும், ஃபிரெஞ்சுக்காரர்கள் ஃபிரெஞ்சுப் புரட்சிக்கு முன்னும்பின்னும் மன்னர்களின் அதிகாரங்கள் பெருக்கப்படுவதை விரும்பி வரவேற்றுர்கள். ஏனெனில், அதன்மூலமாகக் குடிமக்களை வாட்டிவந்த பல துன்பங்களைப் போக்கிக்கொள்ளலா மென அவர்கள் உண்மையாகவே நம்பினுர்கள். இத்தகைய கருத்தே, பதினுரும் நூற்றுண்டில் இங்கிலாந்திலும் நிலவியது; அக் காலத்தே ஆங்கிலேயர்கள் மன்னரின் தனிச் சிறப்பதிகாரங்களை (prerogatives) ஃபிரெஞ்சுக்காரர்கள்போன்றே விரும்பி வரவேற்றனர். ஆனுல், நாளடைவில் அவர்கள் அச் சிறப்பதிகாரங்களைக் கண்டிக்கலாயினர். அதன் விளைவாக மக்களின் உரிமைகள் மலர்ந்தன. அரசாங்கத்தின் அதிகாரங்கள் சுருங்கின. ஆனுல், ஃபிரான்சிலோ வெனின் அரசாங்கத்தின் அதிகாரங்கள் பெருக்கப்படுவதற்கு

[1] பிற்சேர்க்கை (Appendix) 1-ஐப் பார்க்கவும்.

மக்களிடையே தொடர்ந்து ஆதரவு இருந்துகொண்டே வந்தது. எனவே, நிர்வாக அரசாங்கமானது, இலக்கிய வெளியீடுகள்மீது விதித்துவந்த் கட்டுப்பாடுகள் எல்லாம், ஏனைய ஃபிரெஞ்சு நிறுவனங்களின் தன்மைக்குப் பெரிதும் ஒத்தனவாயிருந்தன, ஃபிரெஞ்சு நிர்வாக நிறுவனமானது மிக விரிவானதொன்ருயிருந்தது. அதன் செய்கைகள், சாதாரண நீதிமன்றங்களின் அதிகார வரம்புக்கு உட்படாதவைகளாயிருந்தன. இந்த நிலைமையானது, ஃபிரான்ஸில் தனித் தலைமை செலுத்திவந்த ஆட்சியாளர் எவராயிருப்பினும், அவர்கள் கைகளில் இலக்கியத்தை அடக்கியொடுக்குவதற்கான சாதனங்களைத் தந்துவிட்டது. எனவே, பிரசுரத் தணிக்கைமுறை என்பது (பிரசுர உரிமையைக் கட்டுப்படுத்தும் வேறுபல முறைகளில் ஒன்றைப்பற்றியும் கூருமல் விட்டுவிடும்போது) ஃபிரெஞ்சு அரசாங்கத்தின் பொதுவான செயல்முறைக்குப் பெரிதும் ஒத்ததாகவே அமைந்திருந்தது. நாட்டு மக்களிடையே நிலவிவந்த பொதுவான மனப்பான்மைக்கும் அவ்விதக் கட்டுப்பாடுகள் ஏற்புடைத்தாகவே இருந்தன. அதேசமயத்தில் அக் கட்டுப்பாடுகளை நடைமுறையில் அமல் செய்விக்கத் தேவையான நிர்வாக சாதனங்களுக்கும் ஃபிரான்சில் என்றும் குறைவில்லாமலிருந்து வந்தது.

செய்தித்தாள் தணிக்கைமுறையை எதிர்த்து, அவ்வப்போது 18 ஆம் நூற்ருண்டு முழுவதிலும் கண்டனக் குரல்கள் கிளம்பிக் கொண்டேயிருந்தன என்பதில் ஐயமொன்றுமில்லை. அதற்குப் பின்னும் கண்டனக்குரல்கள் ஒலித்துக்கொண்டே வருவதை நாம் கேட்கிருேம். பிரசுரக் கட்டுப்பாடுகளையன்றி வேறு பல அரசாங்கக் கட்டுப்பாடுகளையும் எதிர்த்துக் கண்டனக்குரல் எழுப்பப்பட்டுத்தான் வருகின்றன. பெரும்புரட்சியானது (Great Revolution) தோன்றிய காலத்தும், அதன்பின்னும் கட்டற்ற கருத்து வெளியீட்டு உரிமையைப் பெறுவதற்கான முயற்சியும் நடைபெற்றுக்கொண்டே வந்துள்ளன, அதன் விளைவாகத்தான் பிரசுரக் கட்டுப்பாடுகள் யாவும் ஒழிக்கப் பட்டன; அதனுல் அரசாங்கத்தின் ஒரு குறிப்பிட்ட துறைமட்டுமே பாதிக்கப்பட்டது. இங்ஙனம் அரசாங்கத்தின் அதிகாரங்களை, ஒரு குறிப்பிட்ட துறையில்மட்டுமே கட்டுப்படுத்த எடுத்த முயற்சிகள் எல்லாம் தக்கபலன் அளிக்கவில்லை. ஏனெனில், அத்தகைய முயற்சியானது, அரசின் தலைமை அதிகாரத்துக்கு மக்களிடம் பொதுவாக ஏற்பட்டிருந்த நன்மதிப்புக்கு ஒருவாற்ருனும் பொருந்தாத தொன்ருக இருந்தது. ஃபிரெஞ்சு ஆட்சித்துறையின் அமைப்புமுறையானது முழுவதுமாக மாற்றப்படாதவரையில் ஏதோ ஒரு குறிப்பிட்ட துறையில்கூட, அரசாங்கத்தைக் கட்டுப்படுத்துவது இயலாத காரியமாக இருந்தது. அரசாங்கமானது, யார் கையில் இருந்தபோதிலும் அவர்கள் பிரசுரங்களைக் கட்டுப்படுத்தும் உரிமையைப் பெற்றவர்களாகவே விளங்கினர், பொதுமக்களும் அதை ஆதரித்தனர், பேச்சுரிமையானது

கட்டுப்படுத்தப்படவேண்டும் என்பதைப் பொதுமக்கள் விரும்புகிறார்கள் என்பது ஒரு சிறிதே தெரிந்தாலும், அரசாங்கமானது கருத்து வெளியீட்டு உரிமையைக் கட்டுப்படுத்த முனைந்தது. எனவேதான் ஃபிரெஞ்சு நாட்டில் அடிக்கடி பிரசுரக் கட்டுப்பாடுகள் ஒழிக்கப்படுவதும், பின் மீண்டும்மீண்டும் அவை உயிர்ப்பிக்கப்படுவதும் வழக்கமாகிவிட்டன. இங்ஙனம் உயிர்ப்பிக்கப்பட்ட பிரசுரக் கட்டுப்பாடுகள் மக்களால் வெறுக்கப்படும் லா ஸென்யூர் (la. censure) என்ற பெயரில் அழைக்கப்படாவிட்டாலும் இசைவளிப்புச் சட்டத்தைவிட, மிகக் கடுமையானவை என்பதில் ஐயமில்லை. சுருங்கக்கூறுமிடத்து பிரசுர உரிமையின்மீது விதிக்கப்பட்ட கட்டுப்பாடுகள் என்று ஆங்கிலேயர்கள் எதை நினைக்கின்றார்களோ, அத்தகைய உரிமைத்தடைகள் ஃபிரான்சில் இன்னும் இருந்துவருகின்றன. ஏனெனில், நிர்வாக அரசாங்கமானது, தற்காப்புக்காக யதேச்சதிகாரம் செலுத்தலாம் என்ற கொள்கையானது, ஃபிரெஞ்சுச் சட்டத்தின் பொதுவியல்புக்கு முற்றிலும் ஒத்ததாகவே உள்ளது. அவ் வியல்பின் புறத்தோற்றமாய் விளங்கக்கூடிய ஆட்சித் துறை நிறுவனமும், மேற்கூறப்பட்ட யதேச்சதிகாரத்தை நடைமுறையில் செலுத்துவதற்கு ஏற்ற சாதனங்களை நிர்வாகத்தினரின் கைகளில் எப்போதும் (இப்போதும்கூட) தந்துவந்துள்ளது.

ஆனால், இங்கிலாந்திலோவெனில் பதினாறு, பதினேழாம் நூற்றாண்டுகளில் அரசாங்கத்தின் யதேச்சாதிகாரத்தைப் பெருக்கச் செய்யப்பட்ட முயற்சிகலெல்லாம் நாளடைவில் தோல்வியுற்றதைக் காண்கின்றோம். அரசாங்கமானது, ஒரு வலிமையான மத்திய அரசாங்கத்தை உருவாக்கச்செய்த முயற்சிகள் எல்லாம், ஆரம்பத்தில் இங்கிலாந்தில் வெற்றியையே அடைந்தன. ஏனெனில், அக் காலத்துக்கு அத்தகைய வலிமைபொருந்திய அரசாங்கம் தேவையானதொன்றாக இருந்தது. ஆகவே, மக்கள் மன்னரின் அதிகாரப் பெருக்கைக் காலத்தின் தேவைக்கேற்ப தற்காலிகமாக விரும்பினார்கள். அன்றி நிரந்தரமாக அதை விரும்பவில்லை. அவர்களுடைய பழக்கவழக்கங்களுக்கும் மரபுகளுக்கும், வல்லரசு என்பது ஒரு சிறிதும் ஒவ்வாததொன்றாக இருந்தது. அரசாங்கத்தின் அதிகாரம் பெருகவேண்டியது அவசியம் என்று அவர்கள் கருதியிருந்த ஒரு காலத்திலுங்கூட, அரசாங்கமானது தனது வன்மையை வெளிப்படுத்தக் கையாண்டமுறைகளை, அவர்கள் ஒருபோதும் ஆதரித்தது இல்லை.

சமயப்பொறையை வெறுக்கின்றவர்களும் பேச்சுரிமைபற்றிச் சிறிதும் கவலைப்படாதவர்களுமான, நூற்றுக்கணக்கான ஆங்கிலேயர்கள் அரசாங்கத்தின் யதேச்சாதிகாரத்தின்மீது, எப்போதுமே ஒரு தனி வெறுப்பைக் காட்டிவந்துள்ளனர். அதோடு மன்னர்களின் தன்னிச்சைப்படியன்றி, நாட்டில் நிலவும் சட்டத்தின் போக்குக்கு ஏற்பவே தாங்கள் ஆளப்படவேண்டும் என்ற உறுதியானது, ஆங்கிலேயர்பால்

எப்போதுமே மிளிர்ந்து வந்துள்ளது.[1] அவர்களின் இந்த உணர்வே விண்மீன் மண்டப நீதிமன்றத்தை, 1641 ஆம் ஆண்டில் ஒழித்துக் கட்டியது. அதனுற்முன் இராஜவிசுவாசம் கரைபுரண்டோடிய 1690 ஆம் ஆண்டில் கூட, அவ் வெறுக்கத்தக்க நீதிமன்றம் மீண்டும் உயிர்ப்பிக்கப் படுவது முடியாமல்போயிற்று விண்மீன் மண்டப நீதிமன்ற ஒழிப் பானது, ஏதோ ஒரு வெறுக்கத்தக்க நீதிமன்றமானது ஒழிந்தது என்பதை மட்டும் குறிப்பிடுவதாகக் கொள்ளக்கூடாது. அந் நிகழ்ச்சியில் காணக் கிடக்கும் உண்மை ஒன்றுண்டு. அந் நீதிமன்ற ஒழிப்பானது, ட்யூடர்கள் காலத்தில் அமைக்கப்பட்டு, ஸ்டூவர்ட்டுகளால் மேலும் விரிவாகக்கப் பட்ட ஓர் ஆட்சித்துறைக் கட்டுக்கோப்பானது, அடியோடு குலைந்து போனதையே அல்லது வேருேடு வீழ்ச்சியுற்றதையே குறிக்கும் எனலாம். ஆங்கிலேயர்களின் சட்டப் பழக்கவழக்கங்களுக்கு முற்றிலும் முரணுன, ஓர் ஆட்சித்துறையானது இங்ஙனம் வீழ்ச்சி அடைந்ததற்கும், கட்டற்ற கருத்து வெளியீட்டிற்கும் நேர்முகமான தொடர்பு ஒன்றும் இல்லை. விண்மீன் மண்டப நீதிமன்றம் அல்லது உயர் ஆணை நீதிமன்றம் (Star Chamber of the Court of High Commission) போன்ற எதேச்சாதிகார நிறுவனங்களை உயிர்ப்பிக்க விரும்பாத ஒரு பாராளுமன்றம், பிரசுர உரிமையைக் கட்டுப்படுத்தக் கூடிய இசைவளிப்புச் சட்டத்தை இயற்றியதைப் பார்க்கின்ருேம். அச் சட்டமானது, புகழ்பெற்ற புரட்சி நடைபெற்றுச் சில ஆண்டுகள் வரை, இங்கிலாந்தில் தொடர்ந்து அமலில் இருந்துகொண்டு வந்தது. இச் சட்டமானது பாராளுமன்றத்தில் நிறைவேறியது, சமயப் பொறைக்கு ஒரு வெற்றி என்று கருதப்படத்தகாததே. சட்டமுறை மைக்கு ஏற்பட்டதொரு வெற்றியாக அதைக் கருதலாம். ஏனெனில், அச் சட்டம் ஏற்பட்டதன் விளைவாக இசைவளிக்கும் அதிகாரமானது, அரசாங்கத்துக்கு இயல்பாகவே இருக்கின்ற ஓர் ஆதிக்கத்தின் விளைவு என்பது மாறி, அது பாராளுமன்றச் சட்டமொன்றைச்சார்ந்த ஓர் அதிகாரமாக விளங்க ஆரம்பித்தது. இசைவளிக்கும் உரிமையானது, பாராளுமன்ற, சட்டமொன்றுக்குக் கட்டுப்பட்டே இயங்கவேண்டி இருந்தது. அதற்கும் மேலாக, அச் சட்டத்தை மீறிய குற்றவாளிகள், சாதாரண நீதிமன்றங்களின் நடவடிக்கைகளினுலேயே தண்டிக்கப் பட்டனர் என்பதும் ஈண்டுக் குறிப்பிடத்தக்கது. விண்மீன் மண்டப நீதிமன்ற ஒழிப்பின் விளைவாக, அரசாங்கமானது தன்னிச்சைப்படி அதிகாரத்தைச் செலுத்துவதற்கான ஒரு சாதனத்தை இழந்தது.[2]

[1] விண்மீன் மண்டப நீதிமன்றத்தின் ஆணைகள் சட்டத்துக்குப் புறம் பானவை என்பதுபற்றி செல்டன் (Selden) என்பார் கூறியுள்ளவைகளை அறிய, கார்டினர் (Gardiner) என்பார் எழுதிய 'இங்கிலாந்தின் வரலாறு' என்ற நூலைப் பார்க்க. (History of England, vol. vii (1884), p. 51.

[2] முன்னிலை மீட்சிக்குப்பின்பு, மன்னர் மன்றமானது (Council) ஏராளமான ஆட்சித்துறை அதிகாரங்களைச் செலுத்த ஆரம்பித்தது. தற்காலத்து விளங்கும் அரசாங்கத்தில் பல்வேறு துறைகள் எல்லாம் தோன்றத் தொடங் கியது அதிலிருந்துதான் எனலாம்.—பதிப்பாசிரியர்.

எனவே, 1695ஆம் ஆண்டின் பொதுமக்கள் சபையானது, இசைவு அளிப்புச் சட்டத்தைத் (Lincensing Act) தொடர்ந்து நீடிக்க மறுத்த போது, தற்செயலாக ஏற்பட்ட பிரசுர உரிமையானது, ஃபிரெஞ்சு நாட்டில் காணப்படும் பிரசுர உரிமையின் தன்மைக்கு முற்றிலும் மாறு பட்டது. 1695 ஆம் ஆண்டுச் சட்டம் பிரசுர உரிமையைத் தனிப்பட்ட முறையில் வழங்கிய ஒரு சட்டமன்று; அச் சட்டத்துக்கும், பிரசுரக் கட்டுப்பாடுகளை ஃபிரான்சில் ஒழித்த சட்டங்களுக்கும் பெரிதும் வேறுபாடு உண்டு. அதே போன்று அச்சட்டத்தின்மூலமாகப் பெறப் பட்ட உரிமைக்கும், ஃபிரெஞ்சு உரிமைகள்பற்றிய அறிவிப்பால் (French Declaration of Rights) தெரிவிக்கப்பட்ட கருத் துரிமைக்கும் பெரிதும் வேறுபாடு உண்டு. இங்கிலாந்தில் அரசாங்க மானது, பிரசுரக் கட்டுப்பாட்டு அதிகாரத்தைத் தடுப்பதென்பது அதற்கு இருக்கின்ற ஒரு தனிப்பட்ட அதிகாரத்தை ஒழிப்பதாகுமே அன்றி வேறன்று. அதாவது, சட்டத்தின் பொதுவான போக்குக்கு முரணான அரசாங்கத்தின் செய்கை ஒன்றை அது ஒழிப்பதாகக் கொள்ளலாம். இங்ஙனம் ஒருமுறை ஒழிக்கப்பட்ட நிர்வாக அதிகாரமானது மீண்டும் புதுப்பிக்கப்படுவதென்பது, இங்கிலாந்தில் முடியாத காரியமாகும். ஏனெனில், கருத்துகளைக் கட்டுப்படுத்துகின்ற அதிகாரத்தை இழப் பதன்மூலம், அதை நடைமுறையில் செலுத்தப் பயன்பட்டுவந்த ஒரு சாதனத்தையும் நிர்வாகமானது அத்துடன் இழந்துவிடுகிறது.

இங்குக் கூறப்பட்ட அனைத்தையும் தொகுத்துக் கூறுவோமானால், பின்வரும் சாரமான பொருள் புலப்படும். ஃபிரெஞ்சு நாட்டில் பிரசுரத் தடைகள் அடிக்கடி ஒழிக்கப்பட்டாலும், மீண்டும் அதேவேகத்தில் அவை உயிர்ப்பிக்கப்பட்டுவிடுகின்றன. காரணமென்னவெனில், அரசாங்கத்தின் யதேச்சாதிகாரமானது, ஃபிரெஞ்சுச் சட்டங்களுக்கும் நிறுவனங்களுக்கும் உடந்தையானதொன்றாய் இருக்கின்றதேயாம். இன்றைக்கும்கூட, அரசாங்கம் தன்னிச்சையாக அதிகாரங்களைச் செலுத்தலாம் என்பது, ஃபிரெஞ்சு மனப்பான்மைக்கு ஏற்றதாகவே இருப்பதைக் காணலாம். ஆனால், இங்கிலாந்திலோவெனில் அரசாங் கத்தின் தன்னிச்சா அதிகாரமானது, ஆட்சித்துறையின் பொதுவான அமைப்புமுறைக்கும் ஆங்கிலச் சட்டக் கருத்துகளுக்கும்[1] சிறிதும் ஒவ்வாததொன்றாய்க் கருதப்படுகிறது, அதனால்தான் இங்கு ஒருமுறை ஒழிக்கப்பட்ட பிரசுரக் கட்டுப்பாடுகள், மீண்டும் உயிர்ப்பிக்கப்படவே இல்லை. இங்கிலாந்து, ஃபிரான்சு ஆகிய இரு நாடுகளுக்கும் உள்ள அடிப்படை வேற்றுமையை, பிரசுர உரிமைபற்றி இருநாட்டு அரசியல் வீற்பன்னர்களும் வெவ்வேறு கருத்துகொண்டு, வெவ்வேறுமுறையில்

[1] உரிமைகள் மசோதாவானது, அரசாங்கத்தின் தன்னிச்சா அதிகாரங்களை ஒழிக்கவில்லை. 17ஆம் நூற்றுண்டில் அரசாங்கமானது தனிச்சிறப்பதிகாரம் என்ற போர்வையில் அத்துமீறிக் கொண்டாடிய உரிமைகளையே அது கடுமை யான முறையில் குறைத்துள்ளது.

அவ் வுரிமையை அணுகுவதைக் கொண்டும், இன்னும் தெளிவான முறையில் உணர்ந்து கொள்ளலாம். கருத்து வெளியீட்டுரிமைபற்றி இரு நாட்டு அரசியல் அறிஞர்களும் கொண்டிருந்த கருத்தும், அக் கருத்தால் ஏற்பட்ட விளைவும், உண்மையில் முன்னுக்குப்பின் முரணாக அமைந்துள்ளதை எளிதில் காணலாம். ஃபிரஞ்சு அரசியல் விற்பன்னர்கள் கருத்து வெளியீட்டுரிமையை மனதார விரும்பியவர்கள். அது நாட்டில் நன்கு நிலைபெறவேண்டுமென்ற எண்ணத்தோடேயே அவர்கள் அதைப் பறைசாற்றினார்கள். ஆனால், நடைமுறையில் அவர்களது முயற்சி பலிக்காமற்போயிற்று. ஆங்கில அரசியல் வித்தகர்களோவெனின் கட்டற்ற கருத்து வெளியீட்டுரிமையை அவ்வளவாக ஆதரிக்காதவர்கள். சமயப்பொறை (toleration), கருத்து வெளியீட்டுரிமை இவைபற்றி அவர்கள் கொண்டிருந்த கொள்கைகள், ஃபிரெஞ்சு அறிஞர்களின் கோட்பாடுகளுக்குப் பெரிதும் இளைத்தவை என்றே கூறலாம். அப்படியிருந்தும் அவர்கள் அனுமதியளிப்புச் சட்டத்தை நிறுத்தியதன் மூலம், இங்கிலாந்தில் நிலையாகவே பிரசுர உரிமையை நிலைநாட்டி விட்டனர். ஃபிரெஞ்சுக்காரர்களின் நோக்கம் பெரிதாயிருந்தது. ஆனால், வெற்றி சிறிதாகப்போயிற்று. ஆங்கிலேயரின் நோக்கம் சற்றுச் சிறியதாயிருந்தது. ஆனால், வெற்றி பெரிதாக அமைந்துவிட்டது. இதற்குக் காரணம் இரு நாடுகளின் சட்டமுறைகளில் காணப்படும் அடிப்படை வேற்றுமையேயாகும். இவ் வேற்றுமையானது, யாவரையும் வியப்பில் ஆழ்த்துவதோடு மட்டுமன்றி, சட்டத்தின் இறைமைபற்றி ஆங்கிலேயர்கள் கொண்டுள்ள கருத்துகளுக்குத் தக்கதோர் எடுத்துக் காட்டாகவும் திகழ்கின்றது.

## 7. பொதுக்கூட்ட உரிமை
## (The Right of Public Meeting)

**பொதுக்கூட்ட உரிமை**

பொதுக்கூட்ட உரிமைபற்றிய பெல்ஜியச் சட்டமானது[2] பெல்ஜிய அரசியலமைப்பின் பத்தொன்பதாவது விதியில் (article) அடங்கியுள்ளது. இங்கிலாந்தில் அவ் வுரிமைபற்றி எழுந்துள்ள சட்டங்களை ஒட்டியே பெரும்பாலும் பெல்ஜியச் சட்டமும் அமைக்கப்பட்டிருக்கக் கூடுமெனத் தோன்றுகிறது. அச் சட்டம் வருமாறு :

**19ஆவது விதி:** சட்டத்துக்கேற்ற வகையில் அமைதியாகக் கூட்டங்கூடி ஆலோசிக்கும் உரிமை பெல்ஜியர்களுக்குண்டு. அங்ஙனம் கூட்டங் கூடுவதற்கு முன்னதாகவே அரசாங்கத்திடமிருந்து அனுமதி பெறவேண்டிய அவசியமில்லை. அமைதிக்குப் பங்கம் ஏற்படும்வகையில், ஆயுதம் தாங்கியவண்ணம் மக்கள் ஓரிடத்தில் கூடினால்மட்டுமே, அதை ஓரளவு ஒழுங்குபடுத்தும் உரிமை அதிகாரிகளுக்குண்டு.

இந்த நியதியானது திறந்தவெளியில் கூட்டப்படும் கூட்டங்களுக்கு இல்லை அத்தகைய கூட்டங்கள் சாதாரணக் காவல் அமைதிச் சட்டங்களால் (police laws) மட்டுமே கட்டுப்படுத்தத் தக்கனவாகும்.[3]

[1] ஆசிரியர் பின்வரும் நூல்களைக் குறிப்பிட்டுக் காட்டுகிறார். ஸ்டீபன் (Stephen) என்பார் எழுதிய, 'பேருரைகள்' (Commentaries)—14ஆவது வெளியீடு 1903; தொகுதி iv பக். 174-178, கென்னி (Kenny, எழுதிய 'கிரிமினல் சட்டப் பொது நோக்கு', (Outlines of Criminal Law) 3ஆவது வெளியீடு, 1907 பக். 280-286; முன்பே கூறப்பட்டுள்ள வேட், பிலிப்ஸ் என்போர் எழுதிய நூலைப் (By Wade and Phillips, op cit) பார்க்க. பக். 396-401.—பதிப்பாசிரியர்.

[2] 'காலாண்டு சட்டச் சஞ்சிகை' (Law Quarterly Review) தொகுதி iv (1888) பக். 159-ஐப் பார்க்க. இத்தாலியில் பொதுக்கூட்ட உரிமையானது இருக்கும் நிலையை அறிய. அதே நூலில் பக். 78-ஐப் பார்க்கவும். ஃபிரான்சில் அது எங்ஙனமிருக்கிறதெனபதை அறிய, அதே நூலில் பக். 165-ஐயும், ஸ்விட்சர்லாந்து, அமெரிக்க ஐக்கிய நாடுகள் ஆகிய இடங்களில் காணப்படும் அவ் வுரிமையின் நிலைபற்றி அறிய, அதே நூலில் பக். 169, 257-ஐ முறையே பார்க்கவும். ஃபிரான்சில் பொதுக்கூட்ட உரிமைபற்றிய வரலாற்றை அறிய விரும்புவோர், டூகிட் (Duguit) என்பார் எழுதிய, 'Droit Constitutionnel' (1907) என்ற நூலைப் பார்க்கவும். பத்தி. 83. பக். 554-559.

[3] Constiution de la Belgique, art. 19.

## பொதுக்கூட்ட உரிமைபற்றிய ஆங்கிலச் சட்டக் கோட்பாடுகள்

பொதுக்கூட்டங்களைக் கூட்டுவதற்கான உரிமையை வழங்கக் கூடிய, தனிப்பட்ட சட்டமெதுவும் இங்கிலாந்தில் இல்லை. திறந்த வெளிகளில் கூடுகின்ற கூட்டங்களைத் தடைசெய்யவும் ஆங்கிலப் போலீசாருக்குத் தனிப்பட்ட அதிகாரம் எதுவுமில்லை. இதைப் பார்க்கும்போதுதான், பொதுக்கூட்டங்களைக் கூட்டுகின்ற வழக்கத்தின்மீது. பெல்ஜியத்தில் ஏற்படுத்தப்பட்டுள்ள தடைகள், இங்கிலாந்திலிருப்பதைவிடக் கடுமையாக இருப்பதுபோல், வெளிப் பார்வைக்குத் தோன்றுகிறது. ஆனால், உண்மை அதுவன்று. பொதுக்கூட்டங்களைக் கூட்டுதற்கான உரிமையும், அவ் வுரிமையின்மீது விதிக்கப்படும் தடைகளும் ஏறக் குறைய இரு நாடுகளிலும் ஒன்றுதான். ஆனால், அவை இரு நாடுகளிலும் கடைப்பிடிக்கப்படும் முறைகள்தான் வெவ்வேறாகும். பெல்ஜியத்தில் அவை அரசியலமைப்புச் சட்டத்திலேயே இடம்பெற்றுள்ளன. ஆனால், இங்கிலாந்திலோவெனின் அது அப்படியன்று. பிரசுர உரிமை என்றதொரு தனிப்பட்ட உரிமையை வழங்குகின்ற தனிப்பட்ட சட்டமானது, எங்ஙனம் ஆங்கில அரசியலமைப்பில் இடம்பெறவில்லையோ, அதே போலத்தான் பொதுக்கூட்ட உரிமையை வழங்குவதற்கென்றும் தனியே சட்டம் எதுவும் அதில் காணப்படவில்லை. எனினும், ஒருவர் எங்கு வேண்டுமானாலும் விருப்பம்போல் செல்லவும், எதை வேண்டுமானாலும் சட்டப்படிப் பேசவும் பெற்றிருக்கின்ற உரிமைகளிலிருந்து, ஆங்கிலேயர்கள் பொதுக்கூட்ட உரிமையையும் இயல்பாகவே பெற்று விடுகின்றனர். தனிப்பட்ட நபர்களின் உடலுரிமை, பேச்சு உரிமை இவைபற்றி நீதிபதிகள் வழங்கியுள்ள தீர்ப்புகளின் அடிப்படையிலேயே, பொதுக்கூட்ட உரிமையும் இங்கிலாந்தில் தீர்மானிக்கப்படுகிறது. அவ் வுரிமைக்கு ஏற்படக்கூடிய தடைகளும்,மேற்படி உரிமைகள்பற்றிய நீதிமன்றத் தீர்ப்புகளையொட்டியே விதிக்கப்படுகின்றன.

இங்ஙனம் தனிப்பட்ட நபர்களின் உரிமைகளைப்பற்றி நீதிபதிகள் வெளியிட்டுள்ள கருத்துகளின் வடிவில்தான் பொதுக்கூட்ட உரிமையும் ஏனைய உரிமைகளைப்போலவே இங்கிலாந்தில் அமைந்துள்ளது. ஆங்கில அரசியலமைப்பானது, தனி மனிதர்களின் உரிமைகள் என்னும் கற்களால் கட்டப்பட்டதொரு கட்டடம் என்பதற்குப் பொதுக்கூட்ட உரிமைபற்றி அதில் காணப்படும் விதிகளே போதிய சான்றாகுமெனலாம். தனிப்பட்டவர்களின் உடலுரிமை, பேச்சுரிமையிலிருந்து பொதுக்கூட்ட உரிமையானது, இங்கிலாந்தில் எங்ஙனம் பெறப்படுகிறதென்பதைச் சற்றே ஆராய்வோம். A, B, C, D, E, போன்ற ஏராளமானபேர் ஓரிடத்தில்கூடி, பொதுக்கூட்டமொன்றை நடத்துவதற்கு இசைவுதரும் தனிப்பட்ட சட்டம் எதுவும் இங்கிலாந்திலில்லை என்பது உண்மையே. எனினும், A, என்பவர் தம் விருப்பப்படி எங்கு

வேண்டுமானாலும் போகவும், B என்பாரைச் சந்தித்துத் தன் கருத்தை வெளியிடவும் சட்டப்படி உரிமைபெற்றவர். அவர் அங்ஙனம் போகும்போது, வேறொருவரது நிலத்தில் அத்துமீறி நுழைந்துவிடக் கூடாதென்பது, (trespass) B-யிடம் பேசும்போது அவதூறாகவும் (libellous) தேசத்துரோகமாகவும் (seditious) பேசிவிடக்கூடா தென்பதுமே, அவருடைய மேற்சொன்ன உரிமைகளுக்கு ஏற்பட்டுள்ள தடைகளாகும். இந் நிபந்தனைகளுக்குட்பட்டு, A என்பவரிடம் தம் கருத்துகளை வெளியிடுகின்ற உரிமையுடையவராயிருப்பது போலவே, B என்பவரும் அப் பொது இடத்துக்குச் செல்லவும், தம் கருத்தை C என்பாரிடம் வெளியிடவும் உரிமை பெற்றவர் இதே உரிமையை C, D, E, F ஆகியோரும் இன்னும் அவர்போன்ற எல்லையற்ற பிறரும் பெற்றவர்களாவர். எனவே, A, B, C, D ஆகியோரும் இன்னும் ஆயிரக் கணக்கான நபர்களும் ஒரு பொது இடத்தில் சட்டத்திற்கொத்த நோக்கத்துடன், சட்டரீதியானமுறையில் கூடலாம்; (பொதுவாகப் பேசுமிடத்து)[1] கூடிப்பேசலாம் என்பது பெறப்படுகின்றது. A என்ப வருக்கு இங்கிலாந்தின் நெடுஞ்சாலை ஒன்றினூடே நடந்துசெல்லும் உரிமை உண்டென்பது சொல்லாமலே பெறப்படும். அங்ஙனம் அவர், நடந்து தம் வீட்டுக்குப்போகவோ அல்லது ஒரு பொது இடத்துக்குப் போகவோ உரிமையுடையவர். அதேபோன்று, B என்பாருக்கும் அவர் நண்பர்களான C, D ஆகியோருக்கும் சாலையினூடே நடந்து சென்று, குறிப்பிட்ட பொது இடத்தை அடைகின்ற உரிமையுண்டு. இங்ஙனம் A,B,C,D ஆகியோரும் இன்னும் பத்தாயிரம் பேர்களும் சேர்ந்து, பொதுக்கூட்டமொன்றைக் கூட்டும் உரிமையுடையவர்களா கின்றனர். அங்ஙனம் கூடியபின் A என்பார், பிரபுக்கள் சபையை ஒழிக்க ஒரு சட்டம் ஏற்படுவது நாட்டில் இன்றியமையாதது என்றும், அங்ஙனம் சட்டமேற்படுவதைப் பிரபுக்கள் சபையார் கண்டிப்பாய் எதிர்ப்பார்களென்றும், தமது கருத்தை B என்பாருக்குக் கூறும் உரிமை உண்டு. அதேபோல் B என்பார் C-க்கும், C என்பார் D-க்கும் தத்தம் கருத்துகளை வெளியிடும் உரிமை உடையவர்கள். எனவே, A என்பாரும் இன்னும் பத்தாயிரம் பேர்களும் சேர்ந்து அரசாங்கத்தை ஆதரிப்பதற்கோ, அன்றிப் பிரபுக்கள் சபையின் கண்டனத்தைக் கிளறு தற்கோ, பொதுக்கூட்டமொன்றைக் கூட்டலாமென்பது தானாகவே பெறப்படுகின்றது. இம் முறையில்தான், அரசியல் காரியங்களுக்காகவும், இன்னும் ஏனைய காரியங்களுக்காகவும் பொதுக்கூட்டம் போடுகிற உரிமையானது, இங்கிலாந்தில் ஏற்பட்டுள்ளது. இதையே பிறநாட்டில் மிகப் பெரியதாகப் பேசிவருகின்றனர். அங்கெல் லாம் இவ் வுரிமையானது, ஒரு தனிப்பட்ட சிறப்புரிமையாகக்

[1] A, B, C ஆகியோர் சில நேரங்களில் ஏதோ ஒரு சதியில் ஈடுபடும் நோக்கத்துடன், அவர்களுக்குள் ஓர் ஒப்பந்தம் செய்துகொள்ளவேண்டி ஒன்று கூடலாம். அத்தகைய கூட்டங்களைப்பற்றி இங்கு எவ்விதமான கருத்தும் தெரிவிக்கப்படவில்லை.

(privilege) கருதப்படுகின்றது. மிக உன்னிப்பாகப் போடப்பட்டுள்ள தடைகளுக்குட்பட்டே, அவ் வுரிமையை மக்கள் நுகர்ந்து வருகின்றனர். அதேசமயம் இங்கிலாந்தில் அவ் வுரிமையை நுகர்வதில் தடை ஒன்று மில்லை என்று கருதிவிடக்கூடாது. விருப்பப்படி மக்கள் எங்கும் போக லாம்; எதையும் பேசலாம் என்ற உரிமைகளின் அடிப்படையில் அமைந்த, பொதுக்கூட்ட உரிமையை மக்கள் சட்டத்துக்கு முரணான முறையில் பயன்படுத்திவிட முடியாது. பெருங்குற்றமொன்றை வன் முறையில் வெளிப்படையாகச் செய்வதை நோக்கமாகக் கொண்டோ அல்லது வேறு ஏதாவதொருவகையில் அமைதிக்கு ஊறுவிளைக்கும் நோக்கத்துடனேயோ பொதுக்கூட்டமொன்று கூட்டப்பட்டால், அப்படிப்பட்ட கூட்டங்கள், சட்டவிரோதமான கூட்டங்களாகவே மதிக்கப்படத்தக்கவை. அல்லது பொதுக்கூட்டத்தைக் கூட்டுகின்ற முறையானது, அக் கூட்டத்தைக் கூட்டுவோர் அமைதிக்கு ஊறு விளைக்கக்கூடும் என்ற பீதியைப் பொதுமக்களிடையே நியாயமாகவே உண்டாக்குமானால், அவ் வச்சத்தை விளைக்கும் பொதுக்கூட்டமும் சட்டத்துக்கு முரணானதேயாம். இங்ஙனம் பொது அமைதியைக் குலைக்கும் நோக்கத்துடன் கூட்டப்படுகிற அல்லது அமைதிக்கு ஊறு விளைக்கும் என அஞ்சப்படுகிற கூட்டங்களைக் கூட்டுகின்றவர்கள் சட்டவிரோதமான காரியத்தில் ஈடுபடுவதாகவே கருதப்படுவார்கள். சட்டத்தைமீறிய செயலுக்காக அத்தகையோர் கைது செய்யப்பட லாம்; கிரிமினல் குற்றம் சுமத்தப்பட்டு விசாரிக்கப்படலாம், விசாரணையின்பின் தக்கவாறு தண்டிக்கப்படலாம்.[1]

## சட்டத்துக்கு முரணான எதிர்ப்பைத் தூண்டிவிடக்கூடும் என்பதற் காக ஒரு கூட்டமானது சட்டவிரோதமெனக் கருதப்படக் கூடா தென்பது

பொதுக்கூட்டமொன்றைக் கூட்டுகின்றவர்கள் அமைதிக்கு ஊறுவிளைக்கும் வகையில் அல்லது ஊறுவிளையும் என மக்கள் அஞ்சும் வகையில் நேர்முகமாக நடந்துகொண்டால்மட்டுமே, அவர்கள் சட்ட விரோதமான காரியத்தில் ஈடுபட்டதாகக் கருதப்படுவார்கள். சான்றாக, அவர்கள் போர்க்கருவிகளைக் கைகளில் ஏந்திக்கொண்டு, ஊர்வலம் செல்வதன்மூலமும், அல்லது அவர்கள் தங்கள் எதிரிகளை வன்முறைச் செயல்களில் ஈடுபடும்படி தூண்டுகின்ற நோக்கமுடையவர்களெனக் காட்டிக்கொள்வதாலும், அமைதிக்குப் பங்கம் ஏற்படலாமென்ற[2] பீதி

[1] சட்டவிரோதமான கூட்டங்களைக் கூட்டுகின்ற, குற்றமானது தற்காலத்தே கருத்து வெளியீட்டுரிமையை அவ்வளவாகக் கட்டுப்படுத்துவதில்லை. சான்றாகப் பாஸிஸ்டுகளுக்கும், கம்யூனிஸ்டுகளுக்கும் ஏற்படக்கூடிய சச்சரவுகளை அது தடுப்பதில்லை. 1936ஆம் ஆண்டில் ஏற்பட்ட பொது அமைதிச் சட்டத்தைப் பார்க்க.

[2] Cf. O'Kelly v. Harvey (1883) 14 L. R. Ir. 105. Humphries v. Connor (1864) 17. Ir. C. L. R. 1. at pp. 8. 9. per, Fitzgerald, J.

யானது, மக்கள் மனதில் நியாயமாகவே தோற்றுவிக்கப்படலாம். இத்தகையமுறையில் நடந்துகொள்ளாமல், மற்றபடி சட்டத்துக்கு உட்பட்டமுறையில் நடத்தப்படும் பொதுக்கூட்டமொன்று, அவர்களது எதிரிகளை ஒருவேளை கிளர்ச்சியில் ஈடும்படித் தூண்டிவிட்டு, அதன்மூலம் மறைமுகமாக அமைதிக்கு ஊறுவிளைக்கலாமென்ற காரணத்துக்காக மட்டுமே, சட்ட விரோதமானதொரு கூட்டமாகக் கருதப்படமுடியாது[1] சான்றாக சால்வேஷன் படையைச் சேர்ந்தவர்கள் (S.l ation Army) ஆக்ஸ்ஃபோர்டு நகருக்கருகில், ஒரு பொதுக் கூட்டத்தை ஏற்பாடு செய்வதாக வைத்துக்கொள்வோம். அதேசமயம் அவர்களின் எதிரிகளான ஸ்கெலிடன் படையினர் (Skeleton Army) சிலர், தாங்கள் அக் கூட்டத்தை எப்படியும் நடக்க விடப்போவதில்லை என்றும், மீறி நடைபெற்றால், கூட்டத்தைத் தாக்கி அதை, கலைக்கப்போவதாகவும் அறிவிப்பதாகக் கொள்வோம். இதை அறிந்த ஆக்ஸ்ஃபோர்டு மக்கள், கூட்டம் நடைபெற்றால், இருதரப்பாரும் மோதிக்கொண்டு அமைதியைக் குலைக்கக்கூடுமென அஞ்சி, அக் கூட்டத்தைத் தடைசெய்யும்படி மாஜிஸ்திரேட்டை வேண்டிக் கொள்வதாகவும் வைத்துக்கொள்வோம். இம் மாதிரியான சூழ்நிலையில் மாஜிஸ்திரேட்டின் நிலை சற்று சங்கடமானதுதான். குடிமக்களின் அச்சம் நியாயமானதுதான் என்று தெரிந்தாலும், அவர் சட்டப்படி கூட்டத்தைத் தடைசெய்ய இயலாது.[2] சட்டத்துறை இன்றைக்கு இருக்கின்றநிலையில், அவர் குடிமக்களின் நியாயமான கோரிக்கையை நிறைவேற்றமாட்டார். அவரது செய்கை சரியானதே என்பது சற்றே சிந்தித்தால் தெளிவாகும். அதை ஓர் உதாரணத்தால் விளக்கலாம். A என்பவர் நெடுஞ்சாலையூடே நடந்து செல்ல விரும்புவதாக வைத்துக்கொள்வோம். அவர் அங்ஙனம் விரும்புவதும், விருப்பத்தை நிறைவேற்றிக்கொள்வதும் அவரது சொந்த உரிமை. சட்டப்படி அது சரியானதே. ஆனால், அவர் அங்ஙனம் நடந்துசென்றால், அவரைத் தாக்கி வீழ்த்தப்போவதாக, X என்பார் பயமுறுத்துவாரானால், அவர் அங்ஙனம் பயமுறுத்துவதன்மூலம் A-ன் உரிமையை ஒருநாளும் பறித்துவிடமுடியாது.[3] A என்பவர் அவ்வித

[1] இக் கூற்றைப் பின்னால் சொல்லப்போகும் இருவித விதிவிலக்குகளுடன் சேர்த்துப் படிக்கவேண்டும்.

[2] சால்வேஷன் படையினர் சட்டத்துக்குட்பட்ட ஒரு காரியத்துக்காக அமைதியானமுறையில் கூடுகிறார்கள் என்பதும், அமைதியைக் குலைக்கவேண்டுமென்பதோ அல்லது அமைதியைக் குலைக்குமாறு மற்றவர்களைத் தூண்டவேண்டுமென்பதோ, அவர்கள் நோக்கமன்று என்பதும் உண்மை என்றுதான் பொதுவாக நம்பப்படுகிறது. எது எப்படியிருப்பினும், மாஜிஸ்டிரேட்டுகள் சால்வேஷன் படையினரிடமிருந்தும், ஏன் ஸ்கெலிடன் படையினரிடமிருந்தும் கூட, அமைதிக்கு அவர்கள் ஊறுவிளைவிக்கப்போவதில்லை என்பதற்கும் நன்னடத்தைக்கும் பிணையம் தரும்படி கேட்கலாம். கிரிமினல் சட்டப் பொது நோக்கு 3ஆவது வெளியீடு Cf. Kenny, Outlines of Criminal Law (1907) பக். 282, 486., Wise v. Dunning (1902) 1. K. B. 167 ; K. & L. 409.

[3] முன்னால் கூறப்பட்ட, Humphries V. Connor வழக்கையும் பார்க்கவும்.

பயமுறுத்தலுக்குப் பின்னும் நெடுஞ்சாலையினூடே நடந்துசெல்வாரானல், அதனல் அமைதிக்குப் பங்கம் ஏற்படக்கூடுமென்பது உண்மை தான். எனினும், அவர் தம் உரிமைவழி அங்ஙனம் நடந்துசெல்வதால் அமைதியைக் கெடுக்கக் காரணமாயிருக்கிருர் என்று சொல்வது, கடிகாரமொன்றைத் திருட்டுக்கொடுத்த ஒருவரைப்பார்த்து, அவர் அக் கடிகாரத்தைக் கையில் கட்டிக்கொண்டிருந்ததாலேயே களவு ஏற்பட்டதால், அத் திருட்டுக்கு அவரே காரணம் என்று சொல்வதைப் போன்றதாகும். A என்பவர் சட்டத்தை மீறியவரல்லர். சட்டம் மீறப்பட்டதால் ஏற்பட்ட விளைவுக்கு ஆளானவர். ஆகவே, A என்பாரது உரிமை, X என்பாரின் பயமுறுத்தலால் தடுக்கப்பட நியாயமில்லை. அதே போல, A, B, C போன்ற பலரும் நெடுஞ்சாலையினூடே ஊர்வலமாக நடந்துசெல்கின்ற உரிமையை, X, Y, Z போன்றவர்கள் அவர்களது ஊர்வலத்தைத் தடுக்கப்போவதாக அச்சுறுத்துவதால், பறித்துக் கொள்ளமுடியாது. இப்போது ABC ஆகியோர் சால்வேஷன் படையினர் என்றும், XYZ என்பவர்கள் ஸ்கெலிடன் படையினர் என்றும் அழைக்கப்படுவதால், நிலைமை மாறிவிடப் போவதில்லை. இதில் உட்கொள்ளப்பட்டுள்ள தெளிவான கொள்கை என்னவென்ருல், A என்பவர் நெடுஞ்சாலையினூடே நடந்துசெல்லல் என்ற சட்டரீதியான உரிமை ஒன்றை, அவரைத் தாக்கி வீழ்த்தப்போவதாக அச்சுறுத்தும் X என்பவரின் சட்டவிரோதமான செயல் ஒன்றினல், எவ்வாற்றேனும் குறைத்துவிட முடியாது என்பதேயாம். இக் கொள்கையானது. Beatty v. Gillbanks என்ற வழக்கில் நன்கு நிலைநாட்டப்படுகிறது.[1] சால்வேஷன் படையினர் வெஸ்ட்டன் சூப்பர் மார் (Weston-Super-Mare) என்னுமிடத்தில் ஒரு கூட்டம்போட்டனர். ஸ்கெலிடன் படையினர் அதை எதிர்ப்பார்கள் என்று தெரிந்தும், அவர்கள் அக் கூட்டத்தை ஏற்பாடுசெய்தனர். இரு தரப்பாரும் மோதிக்கொள்வதைத் தடுக்க எண்ணிய மாஜிஸ்திரேட்டுகள், சால்வேஷன் படையினர் கூட்டம் போடக்கூடாதெனை ஓர் எச்சரிக்கை விடுத்தனர். சால்வேஷன் படையினர் அவ் வெச்செரிக்கையைக் கவனியாதவர்கள்போன்று கூட்டத்தைக் கூட்டிவிட்டனர். அச் சமயம் போலீசார் வந்து மாஜிஸ்திரேட்டுகளின் கட்டளைக்குக் கீழ்ப்படியுமாறு அனைவரையும் வற்புறுத்தினர். கூட்டத்தில் இருந்த, X என்ற ஒருவர் அக் கட்டளைக்குக் கீழ்ப்படிய மறுத்தார். எனவே, அவரைப் போலீசார் கைதுசெய்தனர். பின்னர், பொது இடத்தில் அமைதிக்கு ஊறுவிளைக்கும்முறையில் சட்ட விரோதமாகக் கூடியதற்காக அவர்மீது வழக்கு தொடரப்பட்டது. சட்ட விரோதமாக நடந்துகொண்டதாக அவர்மீதும் அவரைச்சார்ந்த

[1] (1882) 9 Q.B.D. 308; K. & L. 406. Cf. Duncan v. Jones (1936) 1. K.B. 218., K. & L. 411. இவைகளிலிருந்து நமக்குத் தெரிவது என்னவெனில், போலீசார் ஒருவர், கூட்டத்தினர் ஒருவரைக் கூட்டம்நடக்கும் இடத்திலிருந்து அகலும்படி உத்தரவிட்டால், அங்ஙனம் செய்வது அமைதியைக் காக்க அவசியம் என்றும் அவர் கருதினல், அவரது ஆணைக்குக் கீழ்ப்படிய மறுப்பது குற்றமாகும்.—பதிப்பாளர்.

அனைவர்மீதும் மொத்தமாகக் குற்றம்சாட்டப்பட்டு, அவ்வாறே தீர்ப்பு வழங்கப்பட்டது. அமைதியைக் காக்கும்படி அவர்கள் அனைவரிடமும் உறுதிமொழி வாங்கப்பட்டது. சால்வேஷன் படையினர் கூட்டம் கூடினால், அதை ஸ்கெல்டன் படையினர் தாக்குவர் என்பதும், அதன் மூலம் அமைதி குலையுமென்பதும் ஐயத்துக்கு இடமின்றி யாவருக்கும் நன்கு தெரிந்திருந்தது. எனினும், X என்பாரின் மேல்முறையீட்டின் பேரில், இராணியாரின் உயர்தர நீதிமன்றத்தார் (Queen's Bench Division) அவரது வழக்கில், மாஜிஸ்திரேட்டுகள் ஏற்கெனவே வழங்கிய தீர்ப்பைத் தள்ளுபடி செய்துவிட்டனர்.

ஃபீல்ட், ஜே. (Field. J) என்பார் இதுபற்றிக் கூறுவதாவது: 'இந் நிகழ்ச்சியில் ஸ்கெலிடன் படையினர் என்ற ஒரு சட்டவிரோதக் கும்பலானது, மேல் முறையீடு செய்துகொண்டவர்களையும் பிறரையும், சட்டத்துக்குட்பட்டமுறையில் கூட்டம் நடத்தவிடாமல் தடுக்கும் உரிமையைத் தானாகவே வரித்துக்கொண்டுள்ளது. இதில் மாஜிஸ்திரேட்டுகள் வழங்கியுள்ள தீர்ப்பைப்பார்த்தால், சட்டத்துக்குட்பட்ட ஒரு காரியத்தைச் செய்யமுற்படும் ஒருவர், அங்ஙனம் அக் காரியத்தில் ஈடுபடுவதால், அவர் இன்னொரு சட்ட விரோதமான காரியத்தைத் தூண்டிவிடக்கூடும் என்பதை அறிந்திருப்பாரானால், அவர் குற்றவாளி எனக் கருதப்படத் தக்கவர் என்று ஆகிறது. இப்படிப்பட்ட கோட்பாடு ஒன்றுக்கு ஆதாரம் எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை.[1]

ஐரிஷ் நீதிபதி ஒருவர், இங்ஙனம் மேலே வற்புறுத்தப்பட்ட கொள்கையை, ஒரு வழக்கில் தீர்ப்பளிக்கும்போது வெளியிடுகின்றார். அவரது கொள்கையை அரச உயர்நீதி மன்றத்தாரும் சரி என ஏற்றுக் கொண்டுள்ளனர்.[2] அவர் மேலும் கூறியுள்ளதாவது:

'பியாட்டி, ஜில்பாங்க்ஸ் (Beatty, v. Gillbanks) என்பாரிடையே ஏற்பட்ட வழக்கைப்பற்றி, இருதரப்பாரும் பல வாதங்களை எடுத்துக் கூறியுள்ளனர். அக் குறிப்பிட்ட வழக்கில் நான் நீதிபதியாக இருந்திருந்தால், அதில் ஒப்புக்கொள்ளப்பட்ட உண்மைகளை நான் அப்படியே

[1] Beatty V. Gillbanks, ante, at p. 314. Beaty V. Glenister (1884) W. N. 93. The Queen V. Justieas of Londonderry. (1891) 28 L.R.Ir. 440. இவ் வழக்குகளோடு பின்வரும் வழக்குகளை ஒப்பிட்டு வேறுபாடுகளைக் காண்க. Wise v. Dunning (1902) 1. K.B. 167; K. & L. 409; ஐரிஷ் வழக்குகளான Humphries v. Connor (1864) 17 Ir. C.L.R. 1. The Queen v. M'Naughten (1881) 14 Cox. C. G. 576; O'Kelly v. Harvey (1883) 14 L. R, Ir. 105.

Wise V. Dunning வழக்கில் அரச உயர்நீதிமன்றத்தால் தமது தீர்ப்பை அளிக்கும்போது, Beatty v. Gillbanks என்ற வழக்கிலளிக்கப்பட்ட தீர்ப்பை மறுத்ததாகக் கொள்ளக்கூடாது. The Queen v. Justices of Londonderry என்ற வழக்கில் வழங்கப்பட்ட தீர்ப்பை ஒட்டியே அத் தீர்ப்பு வழங்கப்பட்டதென்பது ஈண்டு நோக்கற்பாற்று.

[2] See The Queen v. Justices of Londonderry, ante, and Wise v. Dunnin ante, at p. 179, per Darling, J.

ஏற்றுக் கொண்டிருக்க முடியுமா என்பதை நிச்சயமாகக் கூறமுடியாது. எனினும், நீதிபதிகள் அவ் வழக்கில் கையாண்ட சட்டத்தையும், அதை அவ் வழக்கின் உண்மைகளுக்குப் பொருத்திப் பயன்படுத்திய முறையையும் நான் ஏற்றுக்கொள்கிறேன். அத் தீர்ப்பின் அடிப்படையாக உள்ள கொள்கையை நான் ஒப்புக்கொள்கிறேன். ஒருவன் தன் கடமையை ஆற்றும்போதும், வாணிபத்தில் ஈடுபடும்போதும், சட்டத்துக்கொத்த பொழுதுபோக்குகளை நுகரும்போதும் அல்லது பொதுவாக ஒரு சட்டரீதியான உரிமையை நுகரும்போதும், அதையொட்டியே ஒரு குற்றமற்ற காரியத்தில், குற்றமற்ற நோக்கத்துடன் ஈடுபடும்போது, ஒருவேளை அவன் செய்கையானது, வேறுசில நபர்களை அமைதிக்கு ஊறுவிளைக்கும்படி தூண்டக்கூடும் அல்லது சட்ட விரோதமான காரியங்களில் இறங்கும்படி கிளறிவிடக்கூடும் என்பதனால் அச் செய்கை கிரிமினல் குற்றம் பொருந்தியதாக மாறிவிடாது என்பதே அக் கொள்கையாகும்[1].

சால்வேஷன் படையினர் சட்டப்படி கூட்டங்கூடும் உரிமையைக் கொண்டாடியபோது, அவர்கள் அங்ஙனம் கூடுவதால், ஒருசிலர் அமைதியைக் குலைக்குமாறு தூண்டிவிடப்படுவராதலால், அவர்களது உரிமையைத் தடுப்பதொன்றே அமைதியைக் காத்தற்குரிய எளிமையான வழி எனச் சிலர் வாதிக்கக்கூடும். அவர்களின் இத்தகைய வாதமானது, சால்வேஷன் படையினர் எழுப்பும் உரிமைக்குரலுக்கு ஒரு மாற்றமாகாது. 'ஏனெனில், சட்டரீதியான உரிமைகளை மக்கள் கடைப்பிடிக்க முன்வரும்போது அமைதிக்கு ஊறுவிளையக்கூடுமானல், அதற்கு நிவாரணம், மக்கள் அவ் வுரிமையை நுகர்வதைக் கண்டிப்பதால் ஏற்படாது. அங்ஙனம் அமைதிக்கு ஊறுவிளைவதைத் தடுப்பதற்கான அதிகாரத்தைச் சேமித்துக்கொள்வதொன்றே, அதற்குரிய நிவாரணமாகும். சட்டரீதியான உரிமைகள் நுகரப்படுவதைக் கண்டிப்பதற்குப் பதிலாக, அங்ஙனம் அவை நுகரப்படுவதைத் தடுக்கக்கூடியவர்களைத் தண்டிப்பதே அரசாங்கத்தின் கடமையாகும்.'[2]

இதனாலெல்லாம் வற்புறுத்தப்படும் கொள்கை வருமாறு: மற்ற எல்லாவகையிலும் சட்டத்துக்குட்பட்டமுறையில் அமைதியாக நடத்தப்படும் ஒரு பொதுக்கூட்டமானது, அக் கூட்டத்தை எப்படியும் நடக்கவிடக்கூடாது என்று தீர்மானித்துள்ள வேறொரு கூட்டமொன்றின் முறையற்ற தீய நடத்தையால் சட்ட விரோதமான

[1] The Queen v. Justices of Londonderry ante, at P. 461, Per Hofmes J.

[2] முன்னால் சொல்லப்பட்ட அதே வழக்குரையைப் பார்க்கவும். பக். 450. Per O'Brien, J.

கூட்டமாகக் கருதப்படமாட்டாது.[1] எனவே, மற்ற எல்லாவகையிலும் சட்டத்துக்குட்பட்ட முறையில் பொதுகூட்டமொன்றைச் சிலர் நடத்த முன்வரும்போது, அக் கூட்டம் நடத்தப்படுவதைத் தடுக்க இன்னொரு கூட்டத்தார் முயன்று, அதன்மூலம் ஒருவேளை அமைதிக்கு ஊறு விளைக்கக்கூடும் என்ற ஒரே சிறிய காரணத்துக்காகமட்டுமே, மாஜிஸ்திரேட்டுகள் அக் கூட்டத்தைத் தடைசெய்வதும் கலைத்து விடுவதும் தகாது.

இக் கொள்கையை நடைமுறையில் பயன்படுத்துவதில் ஒரு சில விதிவிலக்குகள் அல்லது வரையறைகள் (limitations) உள்ளன.

## (1) கலகத்தைத் தூண்டுகின்ற சட்ட விரோதக் கூட்டம்

முதலாம் விதிவிலக்கு: பொதுக்கூட்டமொன்றைக் கூட்டுகின்றவர்களும், அதில் சொற்பொழிவாற்றுபவர்களும் சில சமயம் அவர்களது எதிரிகளிடையே கலகத்தைத் தூண்டுகின்றமுறையில் நடந்துகொள்ளக் கூடும். அப்படி வேண்டுமென்றே அவர்கள் நடந்துகொண்டு, அதன் மூலம் அவர்களின் எதிரிகள் ஆத்திரமூட்டப்பெற்றுக் கலகத்தில் இறங்குவார்களானல், அங்ஙனம் ஒரு கலகத்தைக் கிளப்பிவிட்ட பொதுக்கூட்டமானது, சட்டத்துக்கு முரணனதெனக் கருதப்படத்தக்கது. அதனைப் போலீசார் கலைக்கவும் தடுக்கவும் அதிகாரமுண்டு. சான்றாகக் கத்தோலிக்கர்கள் பெரும்பான்மையாக வசிக்கும் இடமொன்றில், பிராட்டெஸ்டெண்ட் மறுப்பாளர்கள் பலர் சேர்ந்துகொண்டு, ஒரு பொது இடத்தில்கூடிக் கத்தோலிக்கர்களை வாய்க்குவந்தபடி எல்லாம் திட்டி அவர்களை வம்புக்கிழுப்பதாக வைத்துக்கொள்வோம். உள்ளூர் சட்டத்துக்கு மாறாகப் பொழியப்பட்ட வசைமாரியையும், சொல்லம்புகளையும்

[1] Wise v. Dunning முன்னல் குறிப்பிடப்பட்டது. (ante) பொதுக்கூட்டம் ஒன்றை நடத்துபவர்கள், அவர்களைப் பொறுத்தவரை சட்டத்துக்கு உட்பட்ட முறையிலும் அமைதியானமுறையிலும் நடந்துகொண்டாலும்கூட, அதன் விளைவாக, இயல்பாகவே அவர்களின் எதிரிகள்மூலமாக ஒரு சட்டவிரோதமான நிகழ்ச்சி ஏற்படவும், அந் நிகழ்ச்சியால் அமைதிக்கு ஊறு ஏற்படவும் இடமுண்டு என்ற ஒரே காரணத்தால், அப்பொதுக்கூட்டமானது, சட்டத்துக்கு முரணனதாக ஆகிவிடுகிறது என்னும் கொள்கைக்கு, மேற்படி வழக்கில் கூறப்பட்டுள்ள தீர்ப்பின் சில வாசகங்கள் மேற்கோள்களாக எடுத்துக்காட்டப்படுகின்றன. (பக். 175, 178 per Alverstone. C J. பக். 178, per Darling J ; பக். 179, 180, per Channell J.,) ஆனல், இதில் உற்றுக் கவனிக்கவேண்டியது ஒன்றுண்டு. Wise v. Dunning வழக்கானது எந்தச் சூழ்நிலையில் ஒரு செயலானது, சட்ட விரோதமானதாக ஆகிவிடுகிறது என்பதைப் பற்றியதன்று அதனல் ஆயப்பட்ட சிக்கல் உண்மையில் அதனினும் மாறுபட்டது. எந்தச் சூழ்நிலையில் ஒருவர் நன்னடத்தைக்காகப் பிணையம் அல்லது ஜாமீன் தரவேண்டும் என்பதைப் பற்றியதே அவ் வழக்காகும். வைஸ் (Wise) என்பவர் கூட்டமொன்றில் பேசியபோது, காரசாரமான சொற்களைப் பயன்படுத்தினரென்றும், அதற்கு எதிராக ஒரு பெருங்கூட்டமானது கூடிவிட்டதென்றும், எதிரிகளை வன்முறைச் செயலுக்குத் தூண்டும்முறையில் அவரது பேச்சு அமைந்திருந்ததென்றும் நீதிபதி கூறுகின்ருர். உண்மையில் அவருக்கு எதிராக ஒரு பெருங்கூட்டமானது கூடிக் கலகத்திலிறங்கும் நிலையிலிருந்தது என்றும், போலீசார் தலையிட்டுக் கலகம் ஏற்படாமல் தடுத்தனர் என்றும் தெரியவருகிறது ; பக்கம் 178.

தாங்காது. கத்தோலிக்கக் கூட்டமொன்று பிராட்டெஸ்டெண்டுகளை எதிர்த்துக் கலகத்திலிறங்குவதாகவும் கொள்வோம். அத்தகைய சூழ்நிலையில் போலீசார் பிராட்டெஸ்டெண்டுகளின் கூட்டத்தைச் சட்ட விரோதமானதெனக் கருதிக் கலைப்பதைத்தவிர, வேறு வழியில்லை. கூட்டமானது, அமைதியைக் குலைக்கும்முறையில் நடத்தப்படாமலிருப்பினும், அது கூட்டப்பட்ட நோக்கமானது, சட்டவிரோதமானதாகவும் அதன்மூலம் எதிரிகளிடையே கலகத்தைத் தூண்டிவிடுவதாயுமிருக்கக் கூடுமானால், அத்தகைய கூட்டம் சட்டத்துக்கு முரணானதென்றே கருதப்படும்.[1]

## (2) சட்டத்துக்கொத்த கூட்டமாயிருப்பினும், அதைக் கலைத்தாலொழிய அமைதியைக் காக்கமுடியாத நிலை

இரண்டாம் விதிவிலக்கு: சில சமயங்களில், கூட்டமொன்றைக் கூட்டுகின்றவர்களின் நோக்கமும் செய்கையும் இரண்டுமே சட்டத்துக்கொத்தமுறையில் அமைந்திருந்தபோதிலும், அதனால் தூண்டிவிடப்பட்ட கலகமானது, பெருங்கலகமாக மாறிக் கூட்டத்தைக் கலைத்தாலொழிய அமைதியை நிலைநாட்ட இயலாத, ஒ இக்கட்டான நிலையை உண்டாக்கிவிடக்கூடும். அத்தகைய சூழ்நிலையில் மாஜிஸ்திரேட்டுகளும், தாணைக்காரர்களும் (constables) மற்றும் அதிகாரத்திலுள்ள பிறரும் அமைதியை நிலைநாட்டவேண்டிக் கூட்டத்தினரைக் கலைந்து போகும்படி கேட்டுக்கொள்ளக்கூடும். அங்ஙனம் வேண்டிக்கொள்ளப்பட்ட பின்பும் அவர்கள் கலையமறுத்தால், அக் கூட்டத்தைச் சட்டவிரோதமானதென அறிவித்து, அதற்கேற்ற நடவடிக்கைகளை எடுக்க அதிகாரிகளுக்கு உரிமை உண்டு.[2] சான்றாக மேலே சொல்லப்பட்ட சால்வேஷன் படையினர், ஆக்ஸ்ஃபோர்டு நகரில் அமைதியாகக் கூட்டமொன்றை நடத்துவதாக வைத்துக்கொள்வோம். அதேசமயம் அக் கூட்டத்தை நடைபெறவொட்டாமல் தடுக்கவேண்டுமென்று கங்கணங் கட்டிக்கொண்டு, ஸ்கெலிடன் படையினர் கூட்டமொன்றும் ஆக்ஸ்ஃபோர்டுக்கு வந்திருப்பதாக வைத்துக்கொள்வோம். தொடர்ந்து கூட்டம் நடைபெறுமானால், அதனால் இருதரப்பாரும் கைகலக்கவும், அமைதிக்கு ஊறு நேரவும் கூடுமென அதிகாரிகள் நம்பினால், அக் கூட்டமானது முற்றிலும் சட்டத்துக்குட்பட்டதாக இருப்பினும், அதைக் கலைந்துபோகும்படி கூற அதிகாரிகளுக்கு உரிமை உண்டு. ஏனெனில், அப்போதைக்கு அமைதியைக் காக்கவேண்டுவது அவர்கள் கடமை. அமைதியைக் காக்கக் கூட்டத்தைக் கலைப்பதைத்தவிர, வேறுவழியில்லை எனத் தெரிந்தால், அதிகாரிகள் அங்ஙனம் செய்யத் தயங்கமாட்டார்கள். சால்வேஷன் படையினர் செய்யவிரும்பும் காரியம், சட்டப்படி நியாயமானதென்பதும்

[1] Cf. Wise v. Dunning, ante, and O'Kelly v. Harvey, ante.

[2] முன்பே குறிப்பிடப்பட்டுள்ள, O'Kelly v. Harvey என்ற வழக்கைச் சிறப்பாகப் பார்க்கவும்.

ஸ்கெலிடன் படையினர் செய்யவிரும்பும் வினை, சட்டபடி குற்ற மானது என்பதும் மாஜிஸ்திரேட்டுகளுக்குத் தெரிந்திருக்கலாம். இருப் பினும், அமைதியைக்காக்க. உடனடியாக வேறுவழி புலப்படாதபோது, அவர்கள் சால்வேஷன் படையினரைக் கலைந்துபோகும்படி கேட்டுக் கொள்வார்களென்பது உறுதி. அங்ஙனம் கேட்டுக்கொண்ட பின்பும், சால்வேஷன் படையினர், பிடிவாதமாகக் கூட்டத்தை நடத்தியே தீருவ தென்று அதை ஆரம்பிப்பார்களானால், மாஜிஸ்திரேட்டுகள் உடனே அதைச் சட்டவிரோதமான கூட்டம் என அறிவித்துவிடுவார்கள். ஸ்கெல்டன் படையினர், சால்வேஷன் படையினரைத் தாக்கப் போவதைத் தடைசெய்ய வேறுவழியில்லை எனத் தெரிந்தால், அக் கூட்டத்தை மாஜிஸ்திரேட்டுகள் தடைசெய்ய ஆணை பிறப்பிக்கலாம்.[1] ஆனால், இவையெல்லாம் சூழ்நிலையையும் அவசி யத்தையும் பொறுத்து இன்றியமையாதவை எனத் தெரிந்தாலன்றி, சால்வேஷன் படையினர் சட்டப்படி நுகர முன்வரும் ஓர் உரிமை யைத் தடுக்க மாஜிஸ்திரேட்டுகளுக்கு அதிகாரமில்லை. எனவே, முதலில் அவர்கள் வேறு வழிகளில் அமைதியைக் காக்க முயற்சி செய்ய வேண்டும். ஒருவேளை தீங்குவிளைக்க முன்வரும் ஸ்கெலிடன் படை யினரைக் கைதுசெய்வதால், கூட்டம் இனிது நடைபெறக்கூடுமானால், அவர்கள் அங்ஙனம் செய்வதே முறை.[2] தீய நோக்கமுள்ளவர்களைக் கைதுசெய்து நன்னோக்கமுள்ளவர்களின் நல்லுரிமையைக் காக்க வேண்டுவதே, அதிகாரிகளின் கடமை. வேறுவழிகளில அமைதியை நிலை நாட்ட முடியாதென உறுதியாகத் தெரிந்தால்மட்டுமே, போலீசாரும் மாஜிஸ்திரேட்டுகளும் சட்டமுறைமையான ஒரு கூட்டத்தைக் கலைக்க உரிமை உண்டு.

இன்னொரு மிக முக்கியமான உண்மை ஒன்றையும் ஈண்டு நாம் சிறப்பாகக் குறிப்பிட வேண்டுவது இன்றியமையாதது. ஏனெனில், எளிதில் அவ் வுண்மை புறக்கணிக்கப்படக்கூடியது.

## பொதுக்கூட்ட உரிமைமீது விதிக்கப்படும் தடைகள், தனிநபர் உரிமைமீது விதிக்கப்படும் தடைகளேயன்றி வேறன்று

நாட்டின் அமைதியைக் காக்கவேண்டிப் பொதுக்கூட்ட உரிமை யின்மீது, இன்றியமையாது விதிக்கப்படும் தடைகள் அல்லது கட்டுப்

[1] சட்டப்படி நடத்தப்படும் ஒரு கூட்டத்தை, அமைதியைக் காப்பான்வேண்டி, மாஜிஸ்திரேட்டுகள் கலைக்கலாம் என்ற உரிமையானது, O'Kelly v. Harvey என்ற வழக்கில் அத்துமீறி கொண்டாடப்பட்டுள்ளது ஈண்டுக் குறிப்பாக நோக்கற் பாற்று. அதில் X என்ற மாஜிஸ்டிரேட்மீது கூட்டத்தாரைத் தாக்க முன்வந்த குற்றம் (assault) சாட்டப்பட்டு நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளது. ஆனால், அவர், கூட்டத்தைக் கலைப்பதொன்றைத் தவிர, அமைதியை நிலைநாட்டத் தமக்கு அப்போது வேறுவழி தெரியவில்லை என்று கூறித் தமது உரிமையை வற்புறுத்தியுள்ளார். (அதே புத்தகத்தில் பக். 109 பார்க்கவும். Per Law L. C.)

[2] இவ் வுண்மை, O'Kelly v. Harvey வழக்கில் நன்கு புலப்படுத்தப்படுகிறது.

பாடுகள் எந்த அளவுக்கு இருந்தாலும்—எந்த அளவுக்கு அவை இருக்க வேண்டுமென்பதுபற்றிய திட்டமான கருத்து இன்னும் உருவாகவில்லை என்றே சொல்லவேண்டும் — அவை உண்மையிலேயே அமைதியைக் காப்பான்வேண்டித் தனி நபர்களுடைய சாதாரண உரிமையின்மீது ஏற்படுத்தப்பெறும் கட்டுப்பாடுகளேயன்றி வேறல்ல.

சான்ருக, A என்ற மறுப்பாளர் (religious controversialist) ஒருவர் லிவர்ப்பூல் நகரத் தெருக்களில் தனிப்பட்டமுறையில், வேறு ஆதரவாளர் எவரது துணையுமின்றி, அவதூருன சொற்களைப் பேசிக் கொண்டு செல்வதாக வைத்துக்கொள்வோம். அல்லது உள்ளூர் சட்டங்களால், வீதிகளில் பேசத் தகாதவை என அறிவிக்கப்பட்ட ஆபாசமான சொற்களை, அவர் பொதுமக்களிடையே பேசுவதாகவும் வைத்துக்கொள்வோம். அவர் தமது சொல்வன்மையால் எதிரிகளுக்கு ஆத்திரமூட்டி, அவர்களைக் கலகத்தில் இறங்கும்படி தூண்டிவிட்டுவிடு வாரேயானுல், அவர் சட்டத்தை மீறியவராகவே கருதப்படுவார். கலகத்தைத் தூண்டவேண்டுமென்ற நோக்கம் கிஞ்சிற்றுமின்றியே A என்பார் கூட்டத்தில் பேசி இருக்கலாம். நேரிடையாக அவர் கலகத்திலிறங்கவும் இல்லை. இருப்பினும், அவர் சொற்கள் கலகத் துக்குக் காரணமாயிருந்தன என்பதை யாரும் மறுக்கமுடியாது. தெரிந்தோ, தெரியாமலோ அவர் கலகத்துக்குக் காரணமாகிவிடுகிருர். எனவே, மாஜிஸ்திரேட்டுகள் அவரை நன்னடத்தை ஜாமீன் அல்லது பிணையம் தரும்படி வற்புறுத்தலாம். அல்லது மேற்கொண்டு பேச வொட்டாதபடி, அவரைப் போலீசார் தடைசெய்யலாம். அமைதிக்கு ஊறுநேரலாம் என்ற ஐயுறவின் காரணமாக எழுந்த பல வழக்குகளைப் பரிசீலனைசெய்து பார்ப்போமாருல், வசைபாடுதல், ஏளனம்பேசல், கேவலமாக நடத்துதல் போன்ற செயல்களால், கலகங்கள் தூண்டப் பெறக்கூடுமென்பதையும், அதைத் தடுக்கவேண்டுவது அவசியமென் பதையும் சட்டம் ஒப்புக்கொள்வதாகவே தெரிகிறது. அங்ஙனம் மக்கள் கிளர்ந்தெழுவது சட்டத்துக்கு முரணானதேயெனினும், அது மனிதனின் இயல்பான பலவீனங்களில் ஒன்றெனவே சட்டம் கருதுவதாகத் தெரி கிறது.

சில சமயங்களில் தனிப்பட்ட நபர் ஒருவர், சட்டத்துக்குட்பட்ட முறையில் நடந்துகொள்ளும்போதுகூட, அமைதிக்கு ஊறு விளைவிக்கக் கூடும். அத்தகைய சூழ்நிலையில் வேறுவழிகளில் அமைதியைக் காக்க இயலவில்லையானுல், போலீசார் அத் தனிநபரின் சட்டரீதியான உரிமையில் தலையிட நேரிடுகிறது. சான்ருகப் பிராட்டெஸ்டண்ட் சீமாட்டி ஒருத்தி, தனது சமயச் சின்னமான ஆரஞ்சு லில்லிப் பூ ஒன்றைத் தனது ஆடையில் அணிந்துகொண்டு, கத்தோலிக்கர்கள் நிறைந்த கூட்ட மொன்றில் நுழைந்து, அமைதியாக நடந்துசெல்வதாக வைத்துக்

[1] Wise v. Dunning (1902) 1. K. B. 167, pp. 179, 180, per Channell, J.

கொள்வோம். தனக்கு விருப்பமான பூவை அணிந்துசெல்வது அச் சீமாட்டியின் உரிமை என்பதை யாரும் மறுக்கமுடியாது. அவள் அதை அணிந்துகொண்டு கத்தோலிக்கரிடையே சென்றபோது, அவர்களைக் கிளர்ச்சியில் ஈடுபடும்படித் தூண்டிவிடக்கூடும் என்ற எண்ணம் சிறிதும் இல்லாமலேயே அவள் சென்றிருக்கக்கூடும். அப்படியிருந்தும் உண்மையாகவே அங்கு, கத்தோலிக்கரிடையே ஒரு சலசலப்பு ஏற்படக்கூடும். ஒருசில கத்தோலிக்கர் அச் சீமாட்டியை ஏளனம்செய்யலாம்; வேறு சிலர் ஆத்திரத்துடன் கொதித்தெழுந்து, அவள்மீது பாயக்கூடும். இங்ஙனம் தனிப்பட்ட மாது ஒருத்தி, சட்டரீதியாக ஓர் உரிமையைக் கடைப்பிடிக்கும்போது, பொதுமக்களின் ஏளனத்துக்கும் தாக்குதலுக்கும் உட்படுவாரேயானால், எப்படியாவது அமைதியைக் காக்கவேண்டுவது போலீசாரின் கடமையாகிவிடுகிறது. மேற்சொன்ன நிகழ்ச்சியில், அப்படி ஒரு கலகம் ஏற்பட்டுவிடுவதாக வைத்துக்கொள்வோம், X என்ற தாணுக்காரர் (constable) A ஐ வேறுவகையில் காக்க வழியின்றி நேரே சென்று, அமைதியைக் காக்கவேண்டிய இன்றியமையாமையை முன்னிட்டு, லில்லிப் பூவை அகற்றிவிடும்படி அம் மாதரசியைக் கேட்டுக்கொள்வதாக வைத்துக்கொள்வோம். அங்ஙனம் கேட்டுக்கொள்ளப் பட்டபின்பும், அச் சீமாட்டி விடாப்பிடியாக லில்லிப் பூவை அணிந்து கொண்டு இருப்பாரேயானால், அதனால் ஏற்படக்கூடிய வன்முறைச் செயல்களைத் தடுக்கும் நோக்கத்துடன், அத் தாணுக்காரர் அப் பூவைத் தாமாகவே, அச் சீமாட்டியின் உடையிலிருந்து பறித்து எறிந்துவிடக் கூடும். X என்ற தாணுக்காரரது செயல் வெளிப்பார்வைக்குச் சட்ட முறைக்குட்பட்டதாகவே தோன்றுகிறது. X என்பார் தம்மைத் தாக்க முனைந்ததாக, A-என்பார் அவர்மீது வழக்குத் தொடுக்கக் காரணமில்லை. ஆனால், X என்பார் தாம்செய்த காரியம் நியாயமானதே என வாதாடும்போது, A என்பவர் தீங்கிழைத்தவர் என்றோ, கலகம் செய்தவர்கள் உரிமையின்பாற்பட்ட செயலிலேயே ஈடுபட்டார்கள் என்றோ கூறமுடியாது. அமைதியைக் காக்க வேறு வழியில்லாத காரணத்தாலேயேதான், பலவந்தமாக லில்லிப் பூவை A-விடமிருந்து அகற்ற நேர்ந்தது என்று அவர் கூறுவதொன்றே சட்டப்படி ஒப்புக் கொள்ளத்தக்க வாதமாகும். இங்ஙனம் A–ன் சுதந்தரத்தில் X தலையிட்டது சாதாரணமாகச் சட்டப்படி தவறு என்றாலும், அமைதியைக் காக்கவேண்டி அங்ஙனம் தலையிடுவதைச் சட்டம் ஒப்புக்கொள்கிறது.[1]

[1] Humphires v. Connor (1864) 17 Ir. C.L.R. 1. இவ் வழக்கு குறிப்பிடத் தக்கதொன்றாகும். A-ன் சட்டரீதியான நடவடிக்கையில், அமைதியைக் காக்க வேண்டியதினிமித்தமாக, X என்பவர் தலையிட்டது நியாயமென இதில் வாதாடப் படுகிறது. அப்படி வாதாடுவதானது, தனிநபர் சுதந்தரத்தில் தலையிடும் உரிமையை மாஜிஸ்திரேட்டுகளும், போலீசாரும் அளவுக்குமீறிக் கொண்டாடுவதையே எடுத்துக்காட்டுகிறது. இன்றியமையாது எனப்பட்டாலன்றி, அத்தகைய தலையீட்டை நியாயமானதெனக் கருதுவதற்கில்லை. இக் குறிப்பிட்ட வழக்கில், போலீசார் தம் உரிமையை அளவுக்கு மீறிக்கொண்டாடியதாகவே ஐரிஷ் நீதிபதி ஒருவர் கருதுகிறார். (Fitzgerald, J , 17. Ir. C.L.R. at pp. 8, 9) அவர் கூறுவதாவது: 'தலையீட்டின் எல்லைக்கோட்டை எங்கே வரையறுப்பது என்பது

**ஒரு கூட்டம் சட்டவிரோதமானதென அதிகாரிகளால் அறிவிக்கப் ப்டுவதால், அது சட்டத்துக்கு முரணானதெனக் கருதப்படக் கூடாமை.**

வேறு எவ் வகையாலும் சட்டத்துக்கு முரணில்லாத (தனிப்பட்ட ஒரு பாராளுமன்றச் சட்டத்தால் அங்ஙனம் சட்டவிரோதமானதென அறிவிக்கப்பட்டாலன்றி) ஒரு கூட்டமானது, அமைச்சராலேயோ அல்லது மாஜிஸ்திரேட்டாலேயோ அன்றி வேறோர் அதிகாரியாலேயோ, சட்டவிரோதமானதென அறிவிக்கப்படுவதால்மட்டுமே, சட்டத்துக்கு ஒவ்வாததாக மாறிவிடாது. சான்றாக, சால்வேஷன் படையினர், ஆக்ஸ்ஃபோர்டு நகருக்கருகில் வாடகைக்கு அமர்த்தப்பட்ட திறந்த வெளி ஒன்றில், தொழுகைக் கூட்டமொன்றை நடத்தப்போவதாகவும், ஸெயிண்ட் கைல்ஸ் (St. Giles) என்னுமிடத்தில் கூட்டமாகச் செல்லப் போவதாகவும், அங்ஙனம் செல்லும்போது கொடிகளைப் பறக்கவிட்டுக் கொண்டும், பாண்டு வாத்தியங்களை முழக்கிக்கொண்டும் நடந்து போகப்போவதாயும் நகரமெங்கும் பறையறிவிப்பதாக வைத்துக்கொள் வோம். அத்தகைய பிரசாரக் கூட்டம் (campaign) நடப்பதை ஏதேனுமொரு காரணத்தை முன்னிட்டு, விரும்பாத உள்நாட்டு அமைச்சர், அக் கூட்ட நிர்வாகிகளுக்கும் ஏனைய உறுப்பினர்களுக்கும் கூட்டத்தை நடத்தக்கூடாதென ஓர் எச்சரிக்கையை விடுப்பதாகவும் வைத்துக்கொள்வோம். அங்ஙனம் ஓர் எச்சரிக்கையை விடுப்பதால் மட்டுமே மேற்சொல்லப்பட்ட கூட்டமானது, சட்டவிரோதமானதாகி விடாது. வேறு எவ் வழியிலாவது அது சட்டவிரோதமானதாயிருந்தால் மட்டுமே, அத்தகைய எச்சரிக்கையைப் படித்தபின்பும் அதில் கலந்து கொள்கிற சால்வேஷன் படையினர், சட்டத்தைமீறிய குற்றத்துக்கு ஆளாவார்கள்.[1] அதற்கான பொறுப்பையும் அப்போதே அவர்கள்

1 The King v. Fursey (1833) 6 Car. & P. 81.

---

எனக்குத் தெரியவில்லை. A என்பவர் லில்லிப் பூவை அணிந்திருப்பதால், அது பிடிக்காத வேறு சிலர் அமைதியைக் குலைக்க முனையக்கூடுமென்பதற்காக, X எனும் அதிகாரி A-ன் உடலிலிருந்து அப் பூவைப் பறித்துவிடலாமென்றால், அது எங்குப்போய் நிற்குமென்பதை எண்ணிப் பார்க்கவேண்டும். தனிநபர் உரிமையில் அதிகாரிகள் தலையிடுவதை, இப்படி ஒப்புக்கொண்டே போனால், எங்கேதான் அதை நிறுத்துவது? இங்கே நாம் தலையீட்டை ஒப்புக்கொள்வதால், நாட்டின் சட்டத்தை ஆக்குகிறோமில்லை. அதற்குப்பதிலாகக் கட்டுக்கடங்காக் கும்பல் சட்டத்துக்கே (law of the mob) நாம் இறைமையை வழங்குகிறோம். அமைதியைக் காக்கவேண்டிப் போலீசார் குடிமக்களின் உரிமைகளில் தலையிடு வதை இப்படியே விட்டுக்கொண்டு செல்வோமானால், அரசியலமைப்புக்கே ஆபத்து ஏற்பட்டுவிடுமென்பது உறுதி. ஒருவேளை அந்தச் சீமாட்டி அமைதியைக் குலைக்கும் எண்ணத்தோடேயே, அப் பூவை அணிந்து வந்தார் என்பதை நிரூபிக்க முடியுமானால் அப்போதுதான் அவர் குற்றவாளியாகக் கருதப்படத்தக்கவர். அவரது உரிமையில் அப்போதுதான் போலீசார் தலையிடக்கூடும்'—பின்வரும் வழக்குகளோடும் ஒப்பிடுக. Duncan v. Jones (1936) 1. K B 218., K. & L. 411 and E. C. S. Wade in Cambridge Law Journal (கேம்பிரிட்ஜ் சட்டச் சஞ்சிகை) 1937. தொகுதி, vi. 'போலீசாரின் அதிகாரங்களும் பொதுக்கூட்டங் களும்' (Police Powers and Public Meetings) என்ற பகுதியில் பக். 175-ஐப் பார்க்க.

ஏற்கவேண்டியவர்களாவர், எச்சரிக்கை விடுத்தாலன்றி, வேறு வகையில் சட்டத்துக்கு முரண்பாடில்லாத கூட்டமானது, அமைச்சரொருவரால் தடுக்கப்படுவதால்மட்டுமே சட்டத்துக்கொவ்வாததாக மாறிவிடாது. பேராணை (proclamation) மூலமாகச் சட்டரீதியான ஒரு கூட்டத்தைக் கூடக்கூடாதென அமைச்சர் தடுப்பதும், சாலையில் நடந்துசெல்லக்கூடாதென என்னையோ அல்லது வேறொரு மனிதரையோ அமைச்சர் தடுப்பதும் ஒன்றேயாகும். சட்டப்படி இரண்டும் செல்லாதவைகளே. எனவே, மற்றெல்லாவகையிலும் சட்டத்துக்குட்பட்ட ஒரு கூட்டத்தைத் தடுக்கும் அதிகாரமானது, அரசாங்கத்துக்குச் சிறிதேனும் இல்லை என்பது இதனால் நன்கு பெறப்படுகிறது. கூட்டம் நடத்தப்படும் முறையானது, கலகத்தைத் தூண்டி அதன்மூலம் அதைச் சட்டவிரோதமானதாக மாற்றிவிடக்கூடுமென அறிந்திருந்தாலும் கூட, அதைத் தடுக்க அரசாங்கத்துக்கு அதிகாரமில்லை. கலகம் தூண்டப்பட்ட பின்னரே, அரசாங்கம் அதைக் கலைக்கமுடியும். குற்றம் ஒன்று நடைபெற்றபின்னரே, அதைத் தண்டிக்கும் உரிமையை அரசாங்கம் பெற்றுள்ளதே தவிர, குற்றம் ஏற்படுமுன்னரே அதை ஊகித்துத் தடுத்துநிறுத்தும் அதிகாரம் அதற்கில்லை. தன் இச்சைக்கு உகந்தமுறையில் சமயோசிதமாகத் தனது அதிகாரத்தை முன்னெச்சரிக்கையாகப் பயன்படுத்தி, அமைதியைக் காக்கும் உரிமையில்லாமல், அரசாங்கம் தடுமாறுவதற்கு இதை ஒரு சிறந்த சான்றாகக்கொள்ளலாம்.

### கூட்டம் நடைபெறுவது பொதுநலனுக்கு விரோதமாயிருப்பினும் சட்டத்துக்குட்பட்டதாக இருக்கக்கூடும்

அறிவுள்ள அல்லது பொதுநலனில் அக்கறைகொண்டுள்ள எவரும் கூட்டுதற்குத் தயங்கக்கூடிய ஒரு கூட்டம்கூடச் சிலசமயம் சட்டத்துக் கொத்ததாகக் கருதப்படலாம் என்பதே, நான் இறுதியாகக் கூற விரும்புவதாகும். A, B, C ஆகிய சிலர் பொதுக்கூட்டமொன்றைக் கூட்ட உரிமைபெற்றவர்கள். அன்னார் கூட்டப்போகும் கூட்டமானது, அவர்களின் எதிரிகளைத்தூண்டி, அடிதடி, கொலை போன்ற வன்முறைச் செயல்களில் ஈடுபடுமாறு செய்யக்கூடுமென்றும், அதனால் இரத்தம் சிந்தப்பெறக்கூடுமென்றும் தெரிந்தாலும்கூட, அக் கூட்டம் சட்ட வரம்புக்குட்பட்டதேயாகும். சான்றாக, பிராட்டஸ்டெண்ட் மத வெறியர் ஒருவர், ரோமன் கத்தோலிக்க ஏழைகள் பெரும்பான்மையாக வாழும் நகர்ப்பகுதியில் பொதுக்கூட்டமொன்றைப் போட்டு, பாவ மன்னிப்புக் கொள்கைபோன்ற கத்தோலிக்க மதக் கொள்கைகளைப் பலமாகத் தாக்கிப்பேச விரும்புகிறார் என வைத்துக்கொள்வோம். சட்டப்படி அத்தகைய கூட்டமானது நியாயமானதே. எனினும், அது கூட்டப்படுவதால் எதிரிகள் வன்முறைச் செயல்களில் இறங்குமாறு கண்டிப்பாகத் தூண்டப்படுவாரென்பதை எவரும் எளிதில் புரிந்து

கொள்ளலாம். இருப்பினும், அரசாங்கமோ அல்லது மாஜிஸ்திரேட்டு களோ அக் கூட்டம் நடைபெறுவதைத் தடுப்பதற்கு உரிமையில்லை (என்று சொல்லப்படுகிறது). கலகம் விளைக்கக்கூடிய சட்டவிரோதமான அவதூறு மொழிகளைப் பயன்படுத்தும் நோக்கத்துடனேயே, அக் கூட்டம் கூட்டப்படுகிறதென்பது நன்கு தெரிந்தால்மட்டுமே, அதை அரசாங்கம் கலைக்கமுடியும். அல்லது கூட்டத்தைத் தடைசெய்வ தாலன்றி, வேறுவகையில் அமைதியை நிலைநாட்ட முடியாது என்ற சூழ்நிலை ஏற்பட்டாலும் அரசாங்கம் அதைத் தடைசெய்யலாம்.[1] ஆனால், சட்டத்துக்குட்பட்ட கூட்டமொன்றை நாட்டு விசுவாசமுள்ள குடிமக்கள், அமைதியானமுறையில் நடத்த முன்வரும்போது, அத்தகைய கூட்டமானது, தீங்கு விளைப்போரைத் தூண்டி அமைதிக்கு ஊறு ஏற்படுத்தலாம் என்ற ஒரே காரணத்துக்காக, அரசாங்கமோ அல்லது மாஜிஸ்திரேட்டுகளோ அவர்களைத் தடுத்துநிறுத்த முடியாது. ஒரு சிலர் தங்கள் உரிமைகளை விவேகமற்றமுறையில் கடைப்பிடிக்க அடாது முன்வருவதன்மூலமாக ஏற்படக்கூடிய தீங்குகளை விலக்க, முன்னெச்சரிக்கையாக அரசாங்கம் சில நடவடிக்கைகளை எடுத்துக் கொள்வது நியாயமா தவறா என்ற கேள்விக்கு இங்கே இடமில்லை; அதற்குப் பதில் கூறுவதும் ஈண்டு அவசியமில்லை. இங்கு முக்கியமாகக் கூர்ந்து கவனிக்கப்படவேண்டுவது யாதெனின், பொதுக்கூட்ட உரிமை பற்றி நாட்டில் வழங்கப்படும் விதிகளும் சட்டங்களும், நாட்டின் நிறுவனங்களில் விரவிசிற்கும் சட்ட உணர்வை எங்ஙனம் தெள்ளிதின் புலப்படுத்துகின்றன என்பதும், தனி நபர்களின் உரிமைகள் பற்றி நீதிமன்றங்கள் அவ்வப்போது வழங்கும் தீர்ப்புகளும், எடுக்கும் முடிபுகளும் எங்ஙனம் பொதுக்கூட்ட உரிமையை, அரசியலமைப்பின் ஒரு பிரிக்கமுடியாத பகுதியாக ஆக்கிவிட்டன என்பதுமேயாகும்.

[1] முன்பே சொல்லப்பட்டதைப் பார்க்கவும். O'Kelly v. Harvey (1883) 14 L. R. Ir. 105, என்ற வழக்கை, The Queen v. Justies of Londonderry (1891) 28 L. R. Ir. 440 என்ற வழக்கோடும், Wise v. Dunning (1902) 1. K. B. 167; K. & L. 409 with Beatty Gillbanks (1882) 9 Q. B. D. 308; K. & L. 406 என்ற வழக்குடனும் ஒப்பிட்டு நோக்கவும். கூட்டத்தை ஏற்பாடு செய்தவர்களை நன் நடத்தை ஜாமீன் வழங்கும்படி மாஜிஸ்திரேட்டுகள் கேட்கலாம். ஜாமீனுடனோ அல்லது ஜாமீன் இல்லாமலேயோ ஒரு நபரை அல்லது நபர்களை அமைதியைக் காக்குமாறும், நன்னடத்தையோடிருக்குமாறும் உறுதியளிக்கும்படி வற்புறுத்த, மாஜிஸ்ரேட்டுகளுக்கு நிறைய அதிகாரம் வழங்கப்பட்டுள்ளது. ஒருவன் அமை திக்கு ஊறு விளைவிக்கக்கூடுமெனவும், சட்டத்துக்கு முரணான காரியத்திலீடுபடக் கூடுமெனவும், முன்கூட்டியே தெரிந்தால், அவரை அமைதிகாக்கும் வண்ணம், கட்டுப்படுத்த மாஜிஸ்திரேட்டுகளுக்கு உரிமை உண்டு. Lansbury v. Riley 1914) 3 K. B. 229; Wade & Phillips, op. cit., pp. 398-399.

# கலைச்சொற்கள்

## (ஆங்கிலம் - தமிழ்)

### A

Ancian Regime ... பழைய ஆட்சிமுறை (ஃபிரான்சில்)
Appeal ... மேல்முறையீடு
Article ... விதி

### B

Bail ... பிணையம்
Bulletin des Louis ... ஃபிரஞ்சுச் சட்ட வெளியீட்டிதழ்
Blasphemy ... தெய்வநிந்தனை
Book of Common prayer ... பொது ஜெபப் புத்தகம்
Burden of proof ... சான்றுகாட்டும் பொறுப்பு
By-laws ... உபசட்டங்கள்

### C

Cabinet ... அமைச்சுக் குழு
Charter ... பட்டயம்
Civil court ... சிவில் நீதிமன்றம் அல்லது உரிமை வழக்கு நீதி மன்றம்
Commonwealth ... பொதுநல ஆட்சி
Constables ... தாணுக்காரர்கள் (காவலர்)
Coup d' etat ... திடீர்ப்புரட்சி
Checks and balances ... தடைகள், சமநிலைகள் அடங்கிய கோட்பாடு
Confederacy ... இணைப்பரசு
Constitution ... அரசியல் அமைப்பு
Constitutionalism ... அரசியல் அமைப்புச் சட்டவியல்

## D

Defamation ... அவமதிப்பு
Delegation ... ஒப்படைப்பு, ஆட்பேர் உரிமை
Dependency ... சார்பு நாடு
Directory ... இயக்குநர் குழு
Discretionary powers ... தன்னிச்சா அதிகாரம், சமயோசித அதிகாரம்
Distribution of powers ... அதிகாரப் பகிர்வு
Divorce ... மணமுறிவு
Documents ... பத்திரங்கள்

## E

Ethics ... அறநூல், ஒழுக்க விதிகள்
Executive ... நிருவாகம்
Extradition of criminals ... நாடுகடத்தப்பட்டுவந்த குற்றவாளிகளைத் திருப்பி ஒப்படைத்தல்
Extradition Acts ... ஒப்படைப்புச் சட்டங்கள்

## F

Federalism ... கூட்டரசுக் கோட்பாடு
Federation ... கூட்டாட்சிமுறை
Federal court ... கூட்டரசு நீதிமன்றம்
Felonies ... மாபெருங் குற்றங்கள்
Flexibility ... நெகிழுந்தன்மை
Free Trade Policy ... தடையற்ற வாணிபமுறைக் கொள்கை
Freedom of Conscience ... மனச் சான்றுரிமை
,, Discussion ... கருத்து வெளியீட்டுரிமை
,, Speech ... பேச்சுரிமை
,, Worship ... வழிபாட்டுரிமை

## G

Governor ... ஆளுநர்
Grand Monarque ... பெருமைமிக்க மன்னர்

## H

Habeaus Corpus Act ... உடலுரிமைச் சட்டம், ஹெபியாஸ் கார்ப்பஸ் சட்டம்
Heirs Apparent ... மரபுரிமையாளர்

| | |
|---|---|
| Home Government | ... தாயக அரசாங்கம் |
| House of Commons | ... பொதுமக்கள் சபை (மன்றம்) |
| House of Lords | ... பெருமக்கள்மன்றம், பிரபுக்கள்சபை |

## J

| | |
|---|---|
| Judiciary | ... நீதித்துறை |
| Jury | ... தீர்ப்புச் சான்றுளர் குழு; ஜூரி |
| Jurist | ... சட்டவல்லுநர் |
| Jurisdiction | ... அதிகார வரம்பு |

## L

| | |
|---|---|
| Law of Nature | ... இயற்கைச் சட்டம் |
| Legislation | ... சட்டமியற்றல் |
| Legalism | ... சட்ட மனப்பான்மை |
| Legal warrant | ... பிடியாணை |
| Legislature | ... சட்டப்பேரவை |
| Legislative Council | ... சட்டமன்றம், மேல் சட்டசபை |
| Legislative Assembly | ... சட்டசபை |
| Letters patent | ... முத்திரைக் கடிதம் |
| Libel | ... அவதூறு |
| Libel Act | ... அவதூறுச் சட்டம் |
| Liberty of the Press | ... பிரசுர உரிமை, கருத்து வெளியீட்டு உரிமை |
| Liberty of the conscience | ... மனச்சான்றுரிமை |
| Limitations | ... வரையறைகள் |
| Limitation, Actual | ... நடைமுறை வரம்பு |
| ,, External | ... புறவரம்பு |
| ,, Internal | ... உள்வரம்பு |
| Local Government | ... தல ஆட்சி |

## M

| | |
|---|---|
| Magna carta | ... பேருரிமைப்பட்டயம்; மகாசாசனம் |
| Misdemeanours | ... ஒழுங்குதவறிய சிறு குற்றங்கள் |
| Moral Sanctions | ... ஒழுக்கச்சார்பான கட்டுப்பாடு |

## N

| | |
|---|---|
| National Assembly | ... தேசியச் சட்டமன்றம் |
| Nationalism | ... தேசியம் |

## O

| | |
|---|---|
| Ordinances | ... ஆணைகள், அவசரச் சட்டங்கள் |

## P

Personal Liberty ... உடலுரிமை, தன்னுரிமை
Pillory ... சித்திரவதை செய்யும்முறை
Preamble ... முகப்புரை, முன்னுரை
President ... குடியரசுத் தலைவர், ஜனாதிபதி
Prerogatives ... தனிச்சிறப்பதிகாரங்கள்
Privileges ... சிறப்புரிமைகள்
Proclamations ... பிரகடனங்கள், தனியாணைப் பேரறிவிப்புகள்
Provisions ... சட்டப்பகுதிகள்

## R

Redress ... நிவாரணம்
Representation ... பகராண்மை, பிரதிநிதித்துவம்
Restoration ... முன்னிலைமீட்சி
Right to public Meeting ... பொதுக்கூட்ட உரிமை
Rigidity ... நெகிழ்ந்துகொடாமை, இறுக்கம்
Representative Government ... பிரதிநிதித்துவ ஆட்சிமுறை, சார்பாளர் ஆட்சிமுறை

## S

State ... நாடு, அரசு
States General ... முப்பேராயம் (ஃபிரெஞ்சுச் சட்ட சபை)

## T

Technicalities ... விதிமுறை நுட்பங்கள்
Trespass ... அத்துமீறல்
Treason ... தேசத்துரோகம்
Tribunaux Administraty ... ஆட்சித்துறைச் சட்ட நீதிமன்றங்கள்

## U

Union ... ஐக்கியநாடு, ஒன்றியம்

## V

Validity ... செல்லுபடியாகும் தன்மை
Veto ... தள்ளுரிமை, அதிகாரம், ரத்ததிகாரம்

## W

Writ of Habeaus Corpus ... உடலுரிமைக் கட்டளை

## சட்டங்களின் அட்டவணை

### அ



### ஆ



### இ

## வழக்குகளின் அட்டவணை

# பொருட்குறிப்பு அகரவரிசை

## பா



## பி



## பெ

## ஹா



## ஹெ



## ஹே



## ஹ்



## ஜா



## ஜெ



## ஸ்